ஆளவந்தார் ஆதீனக் கச்சாலையர் இயற்றிய

# காஞ்சிப் புராணம்

## (கம்பர் புராணம்)

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்
திருவான்மியூர், சென்னை-600 041
1963

ஆளவந்தார் ஆதீனக் கச்சாலையர் இயற்றிய

# காஞ்சிப் புராணம்

## (கம்பர் புராணம்)

பதிப்பாசிரியர்

S. K. இராமராஜன்

(கம்பராமன்)

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

திருவான்மியூர், சென்னை-600 041

1983

# உள்ளுறை

# காஞ்சிப் புராணம்

## முன்னுரை

உலகுடைய நாயகியாகிய உமையன்னை சிவபெருமானை ஆகம முறைப்படி பூசனை செய்யத்தாமே விழைந்து வந்து வணங்கித் தழுவக்குழைந்த தலம்; இந்திய நாட்டில் பொன் எழுத்தில் வரையப்படவேண்டிய புண்ணிய தலம்; பல்வேறு சமயத்தினரும் நிறைந்து நிறை வாழ்வு பெற்றதலம்; பல்லவர் முதலான பல புகழ்ப் பேரரசர் ஆண்ட தலைநகர் காஞ்சியம்பதி. சுமார் 2000 ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழகத்தில் தலையாய நகராகத் திகழ்ந்த இந்நகரின் பெருமைகளை மரபு வழியில் பாடிய பல புராணங்கள் 'காஞ்சிப் புராணம்' என்னும் பெயரில் உண்டு. சில காஞ்சிப் புராணங்கள் வெளிவந்துள்ளன. 'பழைய காஞ்சிப் புராணம்' என்று சிலரால் அழைக்கப்பெறும் இந்நூல் இதுகாறும் அச்சில் வரவில்லை. முன்னர் இதை அச்சிட முயற்சி நடந்துள்ளது என்றும் அது ஏனோ முடிவுறவில்லை எனவும் அறிகிறோம். இந்நூல் டாக்டர் உ. வே. சா, அவர்கள் சேமித்த நூல்களில் ஒன்று. மேலை நாட்டு அறிஞர் தமிழின்பால் அன்பு கொண்டு தமிழறிய விரும்பியபோது இந்நூலை அங்கு அனுப்பிப் பின்னர் திரும்பப் பெற்ற பெருமை வாய்ந்தது. 'கடல் கடந்த தமிழ்' எனத் தமிழ்த் தாத்தாவால் பெயர் சூட்டப்பட்ட சுவடி இது. இந்நூலை எழுதியவர் கச்சாலையார் என்று அழைக்கப்படுகிறார். அவருக்குக் 'கச்சாலை அகளங்கர்' என்றும், 'பூரண லட்சண கச்சாலை போதர்' என்றும் பெயர் இருந்தமை அறிகிறோம். காழிவள்ளல் சந்தானத்துச் சோமானனன் என்ற பெரியாரின் சீடர் அவர் என்று அறிகிறோம். இந்நூலை "காமாட்சி ஏகம்பவாணர் புராணம்" என்றும், "ஏகம்பர் புராணம்" என்றும், 'கம்பர் புராணம்' என்றும் அழைத்துள்ளனர். கணபதி காப்பில் இதைக் 'காஞ்சியம் புராணம்' என ஆசிரியர் அழைக்கிறார். இந்நூல் தவிர இவ்வாசிரியர் கச்சிக்கோவை என்னும் நூலும், பாரதமும் இயற்றியுள்ளார். இந்நூல் 12 சருக்கங்களையும் 1272 விருத்தங்களையும் உடையது.

இந்நூலுக்குத் தமிழ்க்கடல் திரு இராமராஜன் நூல் ஆராய்ச்சியுரையும் மிகச் சிறந்த உரையும் எழுதியுள்ளார்.

திரு இராமராஜன் அவர்கள் தமிழ்ப் புலமையில் திளைத் தவர். பண்புள்ளமும் உயர்ந்த இலக்கிய ரசனையும் மிக்கவர். ஆசு கவி. கம்பராமாயணத்திலும், சீவகசிந்தாமணியிலும், ஆழ்வார் பாசுரங்களிலும் ஆழ்ந்த புலமையும் அளவற்ற ஈடு பாடும் கொண்டவர். கம்பன் அடிப்பொடி காரைக்குடி சா. கணேசன் அவர்களாலும், பிற தமிழ் மூதறிஞர்களாலும் பாராட்டப் பெற்றவர். தமிழ்த்தாத்தா உ. வே. சா. அவர்களை தமிழ்த் தெய்வ அம்சமாகப் போற்றி வணங்கு பவர். அவர் எனது வேண்டுகோளை ஏற்று இந்நூலுக்குச் சொல் நயமும் பொருள் நயமும் நிறைந்த உரை எழுதியுள்ள மைக்கு எனது நன்றி.

இந்நூல் காகிதப்படியாகத்தான் உ. வே. சா, அவர் களுக்குக் கிடைத்துள்ளது. காகிதச்சுவடி 143ஆக உ.வே.சா நூலகத்தில் பாதுகாக்கப்படுகிறது. இதைப் பண்டிதர் அ. ராஜப்பா அச்சேறும் வகையில் திருத்திய படி தயாரித் துள்ளார். தமிழ்ப் புலவர் சீனிவாசன் அவர்கள் அச்சுப் பிழைகளைத் திருத்தி இந்நூல் வர உதவியுள்ளார். அவர் களுக்கும் நூல் அச்சிட்டுத்தந்த ராஜன் கம்பெனியாருக்கும் எமது நன்றி.

உ. வே. சாமிநாதையர் அவர்கள் இந்நூலை அச்சிட வேண்டும் எனப் பெரிதும் விரும்பியது இப்பொழுது நிறை வேறியுள்ளது எமக்கு மகிழ்வை அளிக்கிறது.

இரா. நாகசாமி

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

**திருவாசகம்.**

ஏகம் பத்துறை எந்தாய்! போற்றி!
பாகம் பெண்ணுரு வானாய்! போற்றி!

**தேவாரம்.**

திங்கள் தங்கிய சடையுடை யானைத்
தேவ தேவனைச் செழுங்கடல் வளரும்
சங்க வெண்குழைக் காதுடை யானைச்
சாம வேதம் பெரிதுகப் பானை
மங்கை நங்கை மலைமகள் கண்டு
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
கங்கை யாளனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

பாரத நாட்டின் பண்பாட்டிற்கும், கர்ம ஞானபக்தி யோகங்களுக்கும், மூல ஊற்றாகப் பொலிபவை, நான்கு வேதங்களும், அவற்றின் அங்கங்களும் (சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம்) மீமாம்சையும், நியாய நூலும், இதிகாச புராணங்களும், அறநூல்களும் ஆகும். இவற்றை வித்தியா ஸ்தானங்கள் என்பர். ஆயுர் வேதமும், தனுர்வேதமும், காந்தர்வமும் (இசை) அர்த்த சாஸ்திரமும் உபவித்தைகள் என்று கூறப்படும். புராணரத்தினம் (விஷ்ணு புராணம்),

அங்கம்ஓர் ஆறும், மறைகள்ஓர் நான்கும்
அரியமீ மாம்சையும் நியாயம்
தங்கிய நூலி னோடிதி காச
புராணமும் தரும சாத்திரத்தோடு
இங்கிவை ஈரேழ் வித்தை என்று உரைக்க
இயைந்திடும்: இவைகளை அன்றிச்
சங்கையில் ஆயுள் வேதங் காந்தருவம்
தனுமறை என்றிவை மூன்றும்

அரசர்கள் நீதி அறைந்திடற் குரிய
அத்தசாத் திரமொடிந் நான்கும்
விரவியே பதினெண் வித்தைகள் என்ப.

என்று தெளிவாகக் கூறியுள்ளது.

வேதத்தை விளக்கத் தோன்றிய புராணங்கள் பதினெட்டும் வியாசரால் இயற்றப்பட்டவையே. இவற்றை நைமிசாரணிய முனிவர்களுக்கு எடுத்துக்கூறியவர் சூத புராணிகர்.

எது புதுமைக்குப் புதுமையாகவும், பழமைக்குப் பழமையாகவும் உள்ளதோ அது புராணம் ஆகும் (புரா+நவம்). இப்புராணங்களைப்பயிலாதவனைக் கண்டு வேதங்கள் அச்சம் அடைவதாகச் சான்றோர் பகர்வர்.

இப்புராணங்கட்கு உரிய மூலங்களை, வேதங்களிலும் சதபதப் பிராமணங்களிலும் காணலாம். மூலக்கதைகள், புராணிகர்களால் தங்கள் மனோபாவங்களுக்கு ஏற்ப மாறுபாட்டுடனும் வேறுபாட்டுடனும் விரிக்கப்பட்டன. அக் கதைகளின் மூலக்கருத்தை உணரும் திறனும் பண்பும் பெருந்தன்மையும் சமயவாதிகள்பால் இல்லாமற்போயின. அந்தோ! அதனால் வைதிக சமயம் ஒளி மழுங்கி விட்டது.

தமிழ்ப் புலவர்கள் பதினெண் புராணங்களில் சிலவற்றையே மொழிபெயர்த்தனர். மற்றைய புராணங்கள் யாவும் (சமய வாதங்கட்கு வித்துக்களை வழங்கும்) ஸ்தல புராணங்களே.

ஆதியில் ஸ்தல புராணங்கள் கதைகளைக் கூறுவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தன. அவற்றில் சுவை மிகக் குறைவாகவே இருக்கும். பின்னர் (சுமார் 15ஆம் நூற்றூண்டு) தோன்றிய புராணங்கள் காவிய ரசம் பெற்று ஒளி வீசத் தொடங்கின.

கவியரசர், பரஞ்சோதி முனிவர், கவிச்சக்கரவர்த்தி திருக்குருகைப் பெருமாள் கவிராயர், சவிசார்வபௌமர் சிவப்பிரகாசர், மாதவச்சிவஞான யோகிகள், கவிராட்சசர்

கச்சியப்ப முனிவர், ரசிக சக்ரவர்த்தி திரிகூடராசப்பக் கவிராயர், திவ்யகவி எல்லப்பநாவலர் ஐயரவர்களின் ஆசிரியர் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் முதலான சான்றோர்கள் திருவாய்மலர்ந்த புராணங்கள் காவிய ரசமும் கற்பனை வளமும் நிரம்பிப் பெருங்காப்பிய நெறியில் இயங்கிச் சிரஞ்சீவியாக மிளிர்கின்றன. இனியும் பொலியும்.

தல புராணங்கள், சருக்கம், (சிருஷ்டி) பிரதி சர்க்கம், (மீளத்தோன்றல்) வம்சம், மன்வந்தரம், அரசர்கள் வரலாறு முதலானவற்றைக் கூறுது மூர்த்தி, தலம், தீர்த்தம் முதலானவற்றையே சிறப்பித்துக் கூறும்.

பழங்காலத்தில் புராணம் ஐந்து இலக்கணம் (சர்க்கம் முதலானவை) பெற்றிருக்கவேண்டும் என்பதைத் தல புராணங்கள் ஒதுக்கிவிட்டன. சுதந்திரத்துடன் இயங்கத் தொடங்கின. இதன் நுட்பத்தை நன்குணர்ந்த கவிச் சக்ரவர்த்தி பாரதியார் தம் கட்டுரை ஒன்றில்

"வேதக் கல்வியும், வேத ஞானமும் குன்றிப் போயின. வேத ஆராய்ச்சி சூன்யமாய் விட்டது. புராணங்களில் வேறு வேறு மூர்த்திகளுக்கு ஆதிக்யம் சொல்லப்பட்டிருப் பதை ஒட்டி மத பேதங்கள் கட்சி பேதங்களாய் முடிந்தன. இதனுல் வைதிக மதமாகிய ஹிந்து மதம் பல பிரிவுகளுடைத்தாய் விட்டது. தத்தம் மூர்த்திகளை உயர் வாகக் கூறுவதின் உண்மைப் பொருளை மறந்து இந்த மதஸ்தர்கள் மிகப் பெரிய அஞ்ஞானத்தில் ஆழ்ந்து வேதத்திற் காட்டிய இந்த மூர்த்திகளை இழிவுபடுத்திப் பேசினர். எனவே, வேதத்தின் முக்கிய மூர்த்திகளாகிய வாயு, வருணன், சூரியன், இந்திரன் முதலியவர்களைப் பிற்காலத்துப் புராணங்கள் தூஷணை செய்யத் தொடங்கி விட்டன.

புராணம் என்னும் கற்பக விருட்சத்தில் இலைகளும் உள்ளன. மலர்களும் உள்ளன. காய்களும் உள்ளன. கனிகளும் உள்ளன. சாரமானவற்றை ஏற்றுப் பயன் பெறுவது அறிஞர் கடன். தின்பதற்கு வழங்கப்பட்ட கரும்பால் பிறருடைய விழிகளுக்குத் தீங்கு வராதபடி கவன மாக இருக்கவேண்டும் அல்லவா?

பாரத நாட்டின் கலைகள் யாவற்றிற்கும் மூலமாக இருந்தது காஞ்சிபுரம் ஆகும். இப்பதியில் சைவம் வளர்ந் தது. வைணவம் செழித்தது. பௌத்தம் பொலிந்தது. சமணம் ஒளி வீசிற்று.

இத்தலத்துக்கு வைணவப் பெருமக்களும், சைவச் சான்றோர்களும் புராணங்கள் இயற்றினர். மும்மொழிப் புலமை (வட மொழி, தென் மொழி, பாகதம்) பெற்ற வேதாந்த தேசிகர் 'மெய்விரதமான்மியம்' என்னும் சந்தச் செழிப்புடைய பிரபந்தத்தைத் திருவாய் மலர்ந்தருளினார்.

சைவச் சான்றோர்கள் இப்பதிக்குச் சூட்டிய புராணங்கள் பல. அவற்றுள் முதலில் தோன்றியது வள்ள லார் ஆதீனத்துக் கச்சாலையர் இயற்றிய காஞ்சிப் புராணமே.

இந்தப் புராணம் ஆடம்பரச் செருக்கு இல்லாமல் தென்றல்போல் மென்மையாக இயங்குகின்றது. நடை இயல்பாக அமைந்துள்ளது. புராணங்கள் காவிய வடிவம் பெறுவதற்கு முன் தோன்றியது இது. ஆகையால் இப்புராணத்தில் நாட்டுப் படலமும், நகரப் படலமும் இல்லை (இருந்து அழிந்து விட்டதோ என்று சிலருக்கு ஐயம் தோன்றலாம் அதற்கு ஆதாரம் இல்லை).

இந்நூல் 12 சருக்கங்களையும் 1272 பாடல்களையும் கொண்டது. இறுதியில் சிறப்புப் பாயிரம் ஆக 5 பாடல் கள் உள்ளன.

இப்புராணம் மற்றைய புராணங்களில் காணாத புதுமையைத் தன்னகத்தே கொண்டுள்ளது. வைணவத் தல புராணங்கள் அங்குள்ள சிவதலத்தைப் பற்றி மூச்சு விடாது. சைவத்தல புராணங்களும் அங்குள்ள வைணவ தலத்தைப் பேசாது. ஆனால் இப்புராணம், அரிதிருமுற்றச் சருக்கத்தில் அத்திகிரி அருளாளன் வரலாற்றைக் கூறுகிறது.

பௌராணிகர்கள் இவர் நெறியைப் பின்பற்றி இருந் தால் நம் சமயம் ஒன்றுபட்டு உலக சமயமாக மாறி ஒளி வீசி

இருக்கும். இனியேனும் இந்நெறி ஓங்க 'அறுசமய முதல் தழுவக்குழைந்த கம்பன் திருவருள் புரியப் பிரார்த்திக் கின்றேன்.

காஞ்சிபுரம் பாரத நாட்டிற்குக் கலைகளை உதவிய நகரம் ஆகும். இந்நகரைப் பற்றிக் கவிச்சக்ரவர்த்தி காளி தாசர், 'நகரேஷு காஞ்சி' என்று போற்றிய பண்பும் வேதாந்த தேசிகர், முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சி. என்று திருவாய்மலர்ந்தருளிய திறமும் உலகம் அறியும்.

பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பெரிய புராணத்தை வடித்துத்தந்த சிவஞானச்செல்வர் சேக்கிழார், திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்தில் தொண்டை நாட்டைப் பரவசப்பட்டு 110 பாசுரங்களால் பாடக் காரண மாக இருந்தது காஞ்சிபுரந்தான் என்னும் உண்மையைத் தமிழ் உலகம் நன்கறியும். இந்த 110 பாசுரங்களையும் காஞ்சிப் புராணத்திற்கு மூலவித்தென்றே கருதுகிறேன்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்த 'ஆலம்தான் உகந்து அமுதுசெய்தானை' என்ற பதிகத்தின் அனுசந்தான முதிர்ச்சியே சேக்கிழார் பெருமானுக்குப் பேருணர்வை வழங்கி இருத்தல் வேண்டும்.

சேக்கிழார் பெருமான், பிராட்டி தழுவக்குழைந்த பிரான்வரலாற்றை நயமுறப் பாடிப் பிற்காலத் தலபுராணங் கட்கு வழிகாட்டியாக உள்ளார். சேக்கிழார் பெருமான், பிராட்டி தவறுசெய்து கழுவாய்க்காகப் பூசை புரிந்தாள் என்று கூறவில்லை.

பிராட்டி எம்பெருமானைப் பூசனை புரிந்த வரலாற்றைச் சுந்தரமூர்த்தி நாயனார் ஒரு பதிகத்தில் (ஆலம்தான்) பன் முறை பாடிப்பாடி உருகுகின்றார். பிராட்டி தழுவப் பிரான் குழைந்ததைச் சேக்கிழார்

மலைக் குலக்கொடி பரிவுறு பயத்தால்
மாவின் மேவிய வேத நாயகரை
முலைக் குவட்டொடு வளைக்கையால் நெருக்கி
முறுகு காதலால் இறுகிடத் தழுவச்

சிலைத் தனித்திரு நுதல்திரு முலைக்கும்
செந்தளிர்க் கரங்களுக்கும் மெத்தெனவே
கொலைக் களிற்றுரி புனைந்ததம் மேனி
குழைந்து காட்டினார் விழைந்தகொள் கையினார்

என்று பாடிப் பரவசர் ஆகின்றார்.

காஞ்சிபுரம் சைவ சமய குரவர் நால்வராலும் பாடிப் பரவும் பெரும்பேறு பெற்ற பதியாகும். மூவர் முதலிகளும் இப் பழம்பெரும் பதிக்குப் பதினேழு பதிகங்கள் பாடியுள்ளனர். அப்பதிகங்கள் யாவும் ஒப்புயர்வற்றவை. வாகீசப் பெருந்தகை வழங்கிய தாண்டகப் பதிகங்கள் இரண்டும் வேதங்களிலும் மேலானவை. காழிப்பிள்ளையார் திருவாய் மலர்ந்த திருவியமகப் பாடல்கள் 'அந்தமில் பொருள் கொண்டு' நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. சுந்தரர் தோழமை உணர்வால் பேசிய 'நெய்யும்பாலும்' (பதிகம்) பாடும் நாவில் அமுதூறச் செய்கின்றது. அப் பாவணத் தமிழைப் பாடாத நா நாவன்று. அது பதியாத நெஞ்சு நெஞ்சன்று.

மணிவாசகர் கச்சி ஏகம்பனைச் சில பாடல்களாலும், சில அடிகளாலும் போற்றினாலும் அவை அற்புதமானவை. அவர் வழங்கும் திருப்பொற் சுண்ணம்பூசி, திருப்பூவல்லி சூடி, திருவுந்தியாகும் பேறு பெற்றவர்கள் சிவானுபூதி அடைவார்கள்.

பாரனைத்தும் பொய் என்று நீத்த பட்டினத்தடிகள் பாடிய திருவேகம்பமுடையார் திருவந்தாதி இலக்கியச் சுரங்கம். காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பிரானை அருணகிரிநாதர் 46 திருப்புகழ் பாடித் தமிழ்மொழி வீறு மிக்கது என்பதைப் பறைசாற்றி உள்ளார்.

இதுவரை எழுதியவை முற்றும் தோத்திரங்களைப் பற்றியே. இப்பதிக்கு அமைந்த சிற்றிலக்கியங்கள் கணக்கற்றன. அவற்றுள் தலை சிறந்தது முத்தமிழ் வீரகன் வீரராகவப் பிரான் திருவாய் மலர்ந்த ஏகாம்பரநாதர் உலா, அது சுவையால் அமுதை வெல்லும். ஒளியால் சூரியனையே நாணமுறச் செய்யும்.

இங்கனம் சான்ருேர்கள் பாடிப் பாடிப் பரவசம் ஆவதற்குக் காரணமாக இருந்த ஏகம்பர் புகழை விரித் துரைக்கும் புராணங்கள் வடமொழியில் முதலில் தோன்றின.

மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரும், மெய்கண்ட சித்தாந்த சாத்திரப் பிரசாரகரும் (வண்ணச்சரபம் தண்ட பாணிஸ்வாமிகளால்) வண்ணக்களஞ்சியம் எனப் புகழப் பெற்றவரும், ஆகிய காஞ்சி நாகலிங்கமுதலியார் தாம் பதிப்பித்த காஞ்சிப் புராணமுன்னுரையில் வரைந்த குறிப்புக்கள் இன்றியமையாதவை. அவற்றைக் கீழே காணுங்கள்.

,இக்காஞ்சி மஹா க்ஷேத்திர பிரபாவம், வடமொழியில் ஸ்காந்தபுராணம் சனத்குமாரசம்ஹிதை காளிகா காண்டத் தில் தீர்த்த மான்மியத்தில்-கூறப்பட்டுள்ளன, ஐம்பத் தைந்து அத்தியாயம் ஆகிய பஞ்சாசத் என்ற நூலிலும், சிவபுராணம் பிரமாண்ட புராணம் முதலிய பல புராணங் களிலிருந்தும் திரட்டப்பட்டுள்ள நூறு அத்தியாயம் ஆகிய சதாத்தியாயம் என்கிற நூலிலும், மார்க்கண்டேயபுராணம் வித்தியா காண்டத்தில் பேசப்பட்டுள்ள பதினன்கு அத்தி யாயம் ஆகிய காமாக்ஷிவிலாசம் என்ற நூலிலும் விஸ்தரிக் கப்பட்டுள்ளது.

இதனுள் பஞ்சாசத் என்ற நூல் சிவமூர்த்தங்களுடைய கெளரவப் பிரபாவங்களையும், சதாத்தியாயம் என்கிற நூல் தலம் தீர்த்தம் என்கிற இரண்டின் கெளரவப் பிரபாவங் களையும், காமாட்சி விலாசம் என்கிற நூல் மஹாதேவியி னுடைய கெளரவப் பிரபாவங்களையும் எடுத்துக்கூறும்.

இம் மூன்றனுள் பஞ்சாசத் என்ற நூலைத் திருக்கைலாய பரம்பரைத் திருவாடுதுறை ஆதீனத்துத் திராவிட மஹா பாஷ்ய கர்த்தராகிய சிவஞான யோகிகள் தென்மொழியிலே காஞ்சிப்புராணம் முதற்காண்டம் என்னும் பெயரினுல் செய்தருளினுர். சதாத்தியாயம் என்கிற நூலை மேற்படி சிவஞான யோகிகள் மாணுக்கருள்ளே சிறந்த கச்சியப்ப முனிவரர் காஞ்சிப்புராணம் இரண்டாம் காண்டம் என்னும் பெயரினுல் தமிழிலே செய்தருளினுர்.

காமாக்ஷிவிலாசம் என்கிற நூல்......திருவேகம்ப நாதர் பூஜகரும், எனது ஞானாசாரியரும் ஆகிய ஸ்ரீமத் முத்துகச்ச பேச்வர சிவாசார்ய சுவாமிகள் கட்டளையின்படி காமக் கோட்ட புராணம் என்னும் பெயரினுல் பாடிக்கொண்டு வருகின்றேன்: சீக்கிரமே முகிந்து அச்சு வாகனம் ஏறி வெளிவரக்கூடும்.

இஃதன்றித் தென்மொழியில் கலித்துறை காஞ்சிப் புரா ணம் என ஒன்றும், பண்டைய காஞ்சிப் புராணம் என ஒன்றும் காணப்படுகின்றன. இவ்விரண்டும் சொற்சுவை பொருட்சுவைகளில் தனக்குத் தானே ஒப்பானவை. முறையே இதன் ஆசிரியர் பிள்ளையார்பாளையம் ஆளவந்த தேசிகர் ஆதீனத்துச் சிதம்பர தேசிகர் என்றும், வாவியூர் பிரதாப முதலியார் என்றும் கூறுகின்றனர். இப்புராணம் இரண்டனுள்ளும் கூறப்பட்டுள்ள சரித்திரம் வேறு என்று மயங்க வேண்டாம். முதல் இரண்டு காண்டம் அடங்கிய காஞ்சிப் புராணத்துள் கூறப்பட்ட சரித்திரங்களேயாம்.

இவ்விரண்டு புராணத்தையும் தக்கோலம் ஐயா செல்லப்ப நாகமணி முதலியார் அவர்கள் குமாரர் ஆகிய இராமசாமி முதலியார் இராமகிருஷ்ண முதலியார் என்னும் வித்வஜன பரிபாலகர் வேண்டுகோளின்படி அவர்கள் செலவில் பலகையெழுத்துப் பிரதிகள் கொண்டு செவ்வை யாகப் பரிசோதித்து அரும்பத உரையுடன் அச்சிடலாம் என்று முயன்று வருகின்றேன்.''

கச்சி அடிகள் நாகலிங்க முனிவரரின் எண்ணம் நிறை வேருமற் போயிற்று. ஆனுல் காஞ்சிப்புராணக்கலித்துறை அச்சில் வெளிவந்ததாகத் தெரிகிறது. மயிலைத் தொல்காப் பியர் பன்மொழிப் புலவர் அமரர் திரு வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் (முனிவர் முத்துவிழா மலரில்) தம் வாழ்த்தில்,

'அன்பு அமைதி அடக்கம் மேன்மை முதலிய குணங்கள் பல ஒருங்கு ஒருருவெடுத்து வந்தால் அன்ன தோற்றத்தினை உடைய முனிவரைக் காணும்போதெல்லாம் எனக்கு உண் டாகிய அன்பு நாளடைவில் பக்தி ஆயிற்று. முனிவரும்

என்மாட்டு அருளுடையர். தாங்கள் பதிப்பித்த பழைய காஞ்சிப் புராணத்தை (காஞ்சிப் புராணக் கலித்துறை) எனக்கு அருளினர்:—என்று வரைந்ததை நோக்கி உண்மை உணர்ந்தேன்.

தமிழ்த்தெய்வம் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நினைவு மஞ்சரியில் (முதற்பாகம்) 'கடல் கடந்த தமிழ்' என்னும் தலைப்பில் வரைந்த கட்டுரையில் பழைய காஞ்சிப் புராணம் பற்றி எழுதி உள்ளனர்.

ஐயர் அவர்கள் பால் பேரன்பு கொண்ட பிரஞ்சு நாட்டு வின்ஸோன் துரை தம் மாணுக்கரான பொண்டெனூ என்பவரை ஐயர் அவர்களைக்கண்டு பேசி வரும்படி அனுப்பி யிருந்தனர். அவர் பல வித இடையூறுகட்கு ஆளாகி இறுதி யில் ஐயர் அவர்களைக் காணவந்தனர். அவரைப் பற்றி ஐயர் அவர்கள் குறிப்பிட்டதைக் கீழே குறிப்பிடுகின்றேன்.

'அவரோடு நெடுநேரம் பேசினேன். தாம் போகும் மகா சபையில் ஏதேனும் ஒரு பழைய தமிழ் நூலைப் பற்றிய கட்டுரை ஒன்றைத் தாம் வாசிக்க விரும்புவதாகவும், அதற் கேற்ற பழைய நூற்பிரதி ஒன்று உதவினுல் நலமாக இருக் கும் என்றும் கூறினுர். வெளிப்படாமல் இருந்த பழைய காஞ்சிப் புராணத்தை நான் தருவதாக ஒப்புக்கொண்டேன். அவர் தம் செலவில் அதன் பிரதி ஒன்றை எழுதச் செய்து கொடுத்தால் அனுகூலமாக இருக்கும் என்று சொன்னுர். அப்படியே .செய்வதாக நான் கூறினேன். அப்பால் அவர் தஞ்சை சென்று அங்கிருந்து எனக்கு ஒரு கடிதம் எழுதினுர். அது வருமாறு:

தஞ்சாவூர்,
6, அக்டோபர் 1902.

ம-ா-ா-ஸ்ரீ. சாமிநாதய்யர் அவர்களுக்கு அனேக வந்தனம்......

ம-ா-ா-ஸ்ரீ. கலெக்டர் வீட்டில் நான் விருந்துண்ணும் போது உங்களைக் கீர்த்தியால் அறிந்து அதிக மதிப்பு

வைத்திருக்கும் கலெக்டர் துரை அவர்களைத் தாங்கள் எனக்குக் காட்டிய பழைய காஞ்சிப் புராணத்தை என்னுடைய செலவில் காபி எடுக்கத் தங்களைக் கேட்கும்படி பிரார்த்தித்துக் கொண்டேன். நான் அந்தப் புராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்தமாட்டேன் என்கிற நம்பிக்கை தங்களுக்கு இருக்கலாம்.

அதன் சாராம்சத்தை அறிந்து கீழ்நாட்டுப் பாஷைகளை ஆதரிக்கும் சங்கத்துக்கு எழுத எண்ணமே தவிர வேறு எண்ணம் கிடையாது. இந்த அருமையான அச்சிடாத புஸ்தகத்தைத் தாங்கள் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்திருத்தீர்கள் என்றும் அதின் அசல் தங்களிடத்தில் இருக்கிறதாகவும் வெளிப்படுத்துவேன்.

நான், தங்கள் சினேகிதரும் என் உபாத்தியாயரும்ஆகிய ம-ா-ா-ஸ்ரீ வின்சோன் துரை பேரைச் சொல்லித் தங்களைப் பார்க்க வந்தபோது என்னை எவ்வளவு அன்பாய் அங்கீகரித்தீர்கள்! என்றால் தங்களை யான் கேட்கும் புராணத்தின் காபியைத் தருவீர்கள் என்று நம்புகிறேன். . . .

நான் மதுரை இராமேசுவரம் போய்த் திரும்புகையில் கும்பகோணம் வருகிறேன். தாங்கள் எனக்கு எழுதவேண்டும் ஆனால் புதுச்சேரிக்குக் கடிதம் எழுதவும். அங்கிருந்து எனக்கு வந்து சேரும்.

அவர் விரும்பியபடி பழைய காஞ்சிப் புராணத்தைப் பிரதி செய்ய இயலவில்லை. ஆதலின் என்னிடம் உள்ள காகிதப் பிரதியையே அனுப்பினேன். அவர் அதனை உபயோகித்துக்கொண்டு எனக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். (இந்நூல் கடல் கடந்து வந்துள்ளது).

அவர் வந்து என்னைப் பார்த்ததையும், காஞ்சிப் புராணம் பெற்றது முதலியவற்றையும், தம்முடைய ஆசிரியராகிய வின்சோன் துரைக்கு எழுதியிருந்தார். அவற்றை அறிந்த அவ்வாசிரியர் எனக்குத் தம் மாணுக்கரைப்பற்றி எழுதினார்.

ஸ்ரீ பொண்டெனு தம் கடிதத்தில் 'உங்களைக் கீர்த்தியால் அறிந்து மதிப்பு வைத்திருக்கும் கலெக்டர் துரை அவர்கள்' என்று குறிப்பித்திருந்தார். அதை நான் முதலில் நன்ருகக் கவனிக்கவில்லை. ஆனுல் இரண்டு மாதங்களுக்குப் பிறகு 1903ஆம் வருடம் ஜனவரி மாதம் தஞ்சாவூர் கலெக்டரிடம் இருந்து ஏழாம் எட்வர்டு மன்னர் முடிசூட்டு விழாவின் சம்பந்தமாக நடக்கும் தர்பாருக்கு வரும்படி எனக்கு அழைப்புக் கடிதம் வந்தது. நான் போனேன். அப்போது அரசாங்கத்தார் நான் பழைய ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து வருவதை நன்கு மதித்து ஒரு நன்மதிப்புப் பத்திரம் அளித்தனர், அதனைக் கலெக்டர் துரை வழங்கினுர். பொண்டெனு என்னைப்பற்றிச் சிறப்பித்துப் பேசியதன் விளைவென்றே நான் அதனைக் கருதினேன். எனக்கு அரசாங்கத்தார் முதன் முறையாகத் தந்த அந்தச் சிறப்பை நன்றியறிவுடன் ஏற்றுக்கொண்டேன்.

எதிர்பாராதபடி இவ்விரண்டு பிரெஞ்சு நண்பர்களுடைய நட்பு எனக்குக் கிடைத்தது. அவர்களிடம் இருந்து 1910ஆம் வருஷத்திற்குப் பின் எனக்குக் கடிதம் கிடைக்கவில்லை. அவர்களைப்பற்றி அறிந்துகொள்ளவும் இயலவில்லை. ஆனுலும், வில்லைப் புராணத்தையும், பழைய காஞ்சிப் புராணத்தையும் பார்க்கும்போதெல்லாம் பிரெஞ்சு தேசத்துத் தமிழாசிரியரையும் தமிழ் மாணவரையும் நினைக்கிறேன். அவ்விரண்டு நூல்களுள் காஞ்சிப் புராணம் இன்னும் வெளிப்படவில்லை.

ஜூலியன் வின்ஸோன் இப்பொழுது இருந்தால் அதனை வெளிப்படுத்த வேண்டும் என்று நூறு கடிதங்களாவது எழுதியிருப்பார். அவர் இல்லை. ஆனுல் அவர் அன்போடு எழுதிய கடிதங்கள் இருக்கின்றன."

தமிழ்த் தெய்வம் ஐயர் அவர்கள் பழைய காஞ்சிப் புராணத்தைப் பற்றி வரைந்த பகுதியை நினைக்கும்போது-பிரெஞ்சுநாட்டுப் பெருமகனுக்கு இருந்த தமிழ்ப்பற்று நமக்கு இல்லையே என்று நினைந்து நினைந்து மனம் வருந்துகிறது. வாடுகிறது; நைகிறது; நாணுகிறது.

தமிழகத்தில் சைவத்தையும் தமிழையும் வளர்த்த ஆதீனங்கள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்க பெருமை உடையது வள்ளலார் ஆதீனம். இந்த ஆதீனத்தின் மூல நாயகர் காழிக்கண்ணுடை வள்ளலார் ஆவார். அவர் திரு வாய் மலர்ந்த ஒழிவில் ஒடுக்கம் சிறந்த அனுபூதி நூல் ஆகும்.

அம்மரபிலே தோன்றிய பெரியார் சிவஞான வள்ளலார்.

இவ்வாதீனத்தின் தலைமையிடம் ஞானசம்பந்தப் பெருமான் திருவவதாரம் செய்த சீர்காழியே. இதனுடைய கிளை மடங்கள் பல இடங்களில் இருந்ததாகத் தெரிகின்றது. சூத சங்கிதைக்குச் சிறப்புப் பாயிரம் வழங்கிய பெரியார் சண்முக தேசிகர் நாகவெளிப்பாளையம் வள்ளல் சந்தானத்தைச் சேர்ந்தவர் ஆவார்.

திருக்கோளக்குடி தல புராணத்தில், கங்கைக் குலத்தில் காசிபர் கோத்திரத்தில் ஆதிசோழியரில் வள்ளல் சந்தானத்தில் உற்பத்தியாகிய மல்லையூர் அழகிய சிற்றம்பலக் கவிராசர் குமாரர் ஆகிய மங்கைபாகன் கைவரைதல் என்று எழுதி உள்ளது.

சிவஞானவள்ளலார் காஞ்சிபுரத்தில் பல நாட்கள் வாழ்ந்துள்ளனர். அவர் திருவாய் மலர்ந்த சிவகாமக் கச்சி மாலை இச்செய்தியை உறுதிப்படுத்துகிறது. இப்பெரு மகனுரால் பாடப்பட்ட திருப்புலிவனம் காஞ்சிபுரத்திற்குத் தெற்குப் பக்கத்தில் உள்ளது. இத்தலத்துக்கு வியாக்கிர புரம் என்னும் பெயரும் உண்டு. வள்ளலார் திருவாய் மலர்ந்த சீவனும் சிவனும் வேறே திருப்புலி வனத் துளானே, என்ற தொடரை வேதாந்திகள் அடிக்கடி கூறுவார்கள்.

சிவஞான வள்ளலார் காஞ்சிபுரத்தில் வாழ்ந்தபோது அவர் திருவருள் பெற்ற ஒருவருக்கு ஆனந்த வள்ளல் என்னும் தீட்சா நாமம் கொடுத்துப் பிள்ளையார் பாளையத்தில் ஒரு மடத்தைத் தோற்றுவித்திருக்கலாம். அச்சந்தானத்தில் வந்தவரே கச்சாலையர். சிறப்புப்பாயிரத்தில்

காமாட்சி ஏகம்ப வாணர்
புராணம் கழறி என்றும்
பூமா திருக்கும் தென் கச்சியி
லேகின் புகழ் வளர்த்தாய்!
சோமா னனத்தன்தென் காழிவள்
ளற்குத் தொழும்பிவனே
யாமா மெனத்திகழ் கச்சாலை
என்னும் அகளங்கனே.

பாரத மும்கச்சிக் கோவையும்
பாடப் பரிந்துதித்தாய்!
நாரதன் பாடும்இசைக்கே
உருகிய நம்பர் இம்பர்
ஊரர்தம் பாடல் எனவே உன்
பாட்டும் உவந்து கொள்ளப்
பூரண லட்சணக் கச்சாலை
என்னும்நற் போதத்தனே.

மூவர்கள் ஓதும் தமிழும் எப்
போது முனிவின்றியே
நாவினில் ஓதும் திருப்பாட்டு
நாயன் நகரத்திலே
யாவரும் மிக்கதென் றோதும்தென்
கச்சிக்கச் சாலை என்னும்
பாவலன் கம்பர் புராணத்தை
ஓதிய பண்பினனே.

வளங்கெழு காழி வள்ளல்
மலரடிக் கடிமை யாகி
விளங்குலட் சணக்கச் சாலை
என்பவன் விரிநீர்வேலிக்
களங்கமில் உலகின் மாந்தர்
கைக்கொளக் காஞ்சிமேவி
அளந்தறி யொண்ணு ஏகம்
பர்க்கொரு புராணம் சொன்னுன்.

என்று குறிப்பிடுவதை ஆராய்ந்தால் பல உண்மைகள் புலனாகும்.

கச்சாலை என்பது நூலாசிரியர் பெயர். இவர் துறவறத்தாரா? இல்லறத்தாரா? என்று ஆராய்ந்தால் உறுதி செய்ய முடியாமல் இருக்கிறது. காழிவள்ளற்குத் தொழும்பு இவன் என்றதனால் வள்ளல் சந்தானத்தைச் சார்ந்தவர் என்று தெரிகிறது. இவர் துறவு மேற்கொண்டிருந்தால் கச்சாலை வள்ளலார் எனப் பெயர் பெற்றிருப்பார். அங்ஙனம் பெயர் பெற்றதாகத் தெரியவில்லை. கச்சாலை வள்ளலார் என்ற பெயரையே (நாமைகதேசம் என்னும் விதிப்படி) கச்சாலை என்று சுருக்கியும் கூறி இருக்கலாம். இவர் வரலாறு யாதும் புலனாகவில்லை. வாழ்ந்த காலமும் உணரமுடியவில்லை. காஞ்சிமேவி என்ற தொடர் இவர் வேறு ஒரு ஊரில் இருந்து காஞ்சிபுரத்தில் வாழ்ந்து இந்நூலைப் பாடினார் என்று கருதவும் இடம் தருகிறது. சோமானனத்தன் தென்காழி வள்ளற்குத் தொழும்பு இவன் என்ற தொடர் இவர் குருநாதரின் பெயர் சோமானனர் என்று அறிவிக்கின்றது. இவர் பாரதத்தையும் கச்சிக்கோவையையும் பாடி உள்ளார் என்று புலனாகின்றது. அந்த நூல்களைத் தேடிக் கண்டுபிடிக்கவேண்டும். இப்பாயிரத்தில், லட்சணக் கச்சாலை என்று இரண்டு முறை குறிப்பிடப் பட்டிருப்பதால் இந்நூலாசிரியர் இலக்கணப் புலமை மிக்கவர் என்று தெரிகின்றது. இங்ஙனம் சில புலவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர் என்பதைத் தமிழ் உலகம் அறியும்.

இந்த ஆதீனத்தைப்பற்றி நாகலிங்கமுனிவர், குரு பீடங்களுள் கச்சி ஆளவந்தார் ஆதீனம் பழமையானது. இவ்வாதீனத்துக் குருமார்கள் பெரும்பாலும் இரு மொழிகளிலும் புலமை வாய்ந்தவர்களாய்ச் சொல்வன்மையும் செல்வாக்கும் பெற்றிருந்ததாகத் தெரிகிறது, என்று தன் வாழ்க்கை வரலாற்றில் குறிப்பிடுகின்றார்.

ஆதலால் கச்சாலையாரும் இருமொழிப் புலமையும் சிவஞானமும் சிவானுபூதியும் பெற்றுத் திகழ்ந்திருக்க வேண்டும் என்று கொள்ளலாம்.

இந்நூல் தெளிவானது, இனிமையானது, நடைசெம்

பாகமானது. புலமையைக் காட்டவேண்டும் என்னும் எண்ணம் இந்நூலாசிரியர் பால் காணப்படவில்லை.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றன்பாலும் இவ்வாசிரியர் கொண்டுள்ள பக்திக்கு வரம்பு கிடையாது. மற்றைய உலகங்கள் பிரம்ம தேவனின் படைப்பு. ஆனல் காஞ்சிபுரம் சிவபரம் பொருளால் படைக்கப்பட்டது என்று குறிப்பிடுகின்றார்.

நன்மையாம் பொருளி யாவும்
நண்ணிடும் ஐம்பூ தத்தின்
தன்மைய தன்று : பூதம்
தாவரும் குணங்கள் யாதும்
இன்மையால் படைப்போன் தன்னல்
இயற்றிய தன்று : சோதிச்
சின்மயம் ஆகி நிற்கும்
சிவனது சிருட்டி யாமால்.

(பாயிரம் 46)

காஞ்சிபுரம் பராசக்தியின் திருவருளின் வடிவம் என்று பல இடங்களில் குறிக்கின்றார்.

பிராட்டி கருணையின் உருவம் ஆகும் காஞ்சி, என்றும் (138) தினம் இனியதலம் பரைதன் திருவுருவாம் தலம் காஞ்சி என்றும், (171) உமைதிருக்காஞ்சி என்றும் (440) இத்தலம் பரை அருளுருவாம் என்றும் (576) மெய்யன் எமது இடதுபுற வடிவாகும் காஞ்சிநகர் மேவும் என்றான், என்றும், (840) சிற்பரை உனது மேன்மைத் திருவுருவந்த மூதூர் என்றும் (916) இப்பதிக் குருவம் திருவருள் உருவம், என்றும் (1025) ஆசிரியர் நயமுறப்பாடும் பகுதிகள் உளம் கொளத்தக்கன.

காஞ்சி என்று மரத்தின் பெயரைக் கூறினும், மகளிர் இடையில் அணியும் ஆபணத்தின் பெயரைக் கூறினும் முத்தி கிடைக்கும் என்று கற்பனை நயமுறக் கூறும்பகுதி ஆசிரியரின் ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது.

நா இன்பம் மருவும் காஞ்சி
நாமமாம் இப்பே ராக
மேவும் பொற் கலாபம் தாரு
விளம்பினும் முத்தி எய்தும்

என்று பாடச் செய்த பக்தி சிவானுபூதியின் விளைவாகும்.

காஞ்சியின் கண் உள்ள மாமரம் வேதத்தின் வடிவம் என்பது ஆசிரியர் கொள்கை. இதனை ஆசிரியர் சமயம் நேரும் போதெல்லாம் பாடிப்பாடிப் பரவசம் ஆகின்றார். மாமரத்தின் நிழலைக் காவியரசம் நிரம்பப் பாடும் ஆசிரியரின் புலமையும் பக்தியும் நம்மைப் புல்லரிக்கச் செய்கின்றன.

மறைஉருவாய்ச் சொற்பிரம மயமாகிப்
பெருஞான வரம்ப தாகி
இறை உருவாய் மாவடிவாய் அகிலகலைச்
சினைப்பொதுளி யாவ ராலும்
அறிவரிதாய்ப் பராபரமுத் தியையடிய
வர்க்குதவி யருள்வான் காஞ்சி
நிறைதனிமா நிழலடைந்து பிறவிவிடாய்
ஒழிதரவே நினைத்தும் அன்றே

என்று பாடிய புலமையை வியப்பதா? பக்தியை வியப்பதா?

வண்ணமா மறை வடிவமாம் தனிப்பெருமா என்றும் (141) அகிலவித்தையும் அங்கமும் சாகைகள் ஆகப்-புகலும் மாமறை ஆம்பர தருவதாய்ப் பொலிந்தே என்றும் (365) மாவும் மாமறைப்படிவம் என்றும் (567) வேதம் ஒரு மாவாக உறைதலினல் என்றும் (580) மறைத்தனிமா என்றும் (575) ஆதிவேத அருங்கலையாவுமாய்ப்-பூத பேத புவனம் பிறந்திடும்-சூதநீழல் என்றும் (797) ஆன்ற மாமறை ஆம்பரம் என்றும் (801) நல்லமாமறைமா என்றும் (990) கலைதிகழ் சுருதிவண்ணக் கன்னியந்தனிமா நீழல் என்றும் (1061) திருமறையாம் ஒரு தனிமா என்றும் (1117) இடந்தொறும் ஒளி வீசும் தொடர்கள் மாங்கனி போல் இனிக்கின்றன.

இப்புராண நாயகனுன கம்பன் எம்மானை ஆசிரியர் மனம் உருகிப் போற்றுகின்ருர். அங்குள்ள பிரான் திருக் கூத்தியற்றுவதாகத் தேவாரம் போற்றுகிறது. திரு மறையை நன்கு பயின்ற ஆசிரியர் பெருமானின் திருக் கூத்தில் தம்மைக் கரைத்துப்பாடும் பாடல்கள் பல.

நீர்பரவு மறைமுடிவுக் கப்பாலாய்
ஆனந்த நிருத்தம் செய்தே
பார்பரவ வரும் ஏகாம் பரத்தொருவர்
இருபதமே பணிதல் செய்வாம்

என்று பாடிய பாவில் தெய்வமணம் கமழ்கிறது. (பாயிரம் 1) சோதியாய் ஒரு தனிப் பெருஞ் சூதத்தின் நிழற் கீழ்-நாதனுர் நடம்புரிந்திடும் காஞ்சிமா நகரம் என்றும் (38) மாநிழற்கீழ் நன்னடம்புரிநாதன் என்றும் (39) தனிப் பெருங்கூத்தனைப் பணிந்தார் என்றும் (155) நெற்றியங் கண்ணிற் றீயால் நீறு செய்தாடல் கூர்ந்தார் என்றும் (211) பாடுகின்ருர்.

எம்பெருமான் மேற்கொண்ட நடனம் காப்பு நடனம் ஆகும். மாதவச் சிவஞானயோகிகள், 'காக்கும் நாயகர் காட்டினர் காப்பு நன்னடனம்' என்று திருவாய் மலர்ந் தருளினர், கச்சாலையார் 'அனைய நன்மையில் புரப்பியல் நிருத்தமே ஆற்றும்-புனிதம் ஆகிய காக்கு நாயகர்' என்று பாடுகிருர். இரு பெருமக்களின் பாடலிலும் உள்ள ஒப்புமை நம்மை வியப்புறச் செய்கிறது. மாதவச் சிவஞானயோகிகள் கச்சாலையாரின் வழியில் செல்பவர் என்பது நன்கு புலனு கின்றது.

இப்புராணம் பராசத்தியை மனம் உருகிப் புகழ்கிறது. பிராட்டி இறைவனை மணந்து நாணத்துடன் அமர்ந்த பேரழகை ஓவியமாகத் தீட்டிய ஆசிரியரின் புலமைத் திறமும் பக்தியும் நம்மைப் பேருணவிற்குக் கொண்டு செல்கிறது.

மன்னுதிரு மணநாளில் வதுவைவினைத்
திருவழகும், வதன வேர்வும்,
புன்னகையும், ஐ ஆணி மங்கலநாண்
திருத்துகையும், புனிதன் பார்வை

தன்னிலுறு பெருநாணும் அருகியநோக்
கமும், ஒதுக்கம் தருபொற் சீரும்,
இன்னிலையும் பொன்னிடையும் கன்னியுடை
இன்னருளும் அகத்துள் வைப்பாம்

என்று பாடிப் பராசத்தியை நம் இதயக் கோவிலில் குடிபுகுதச் செய்த ஆசிரியருக்கு நாம் கடன்பட்டுள்ளோம்.

இந்நூலில் தீர்த்தச் சிறப்புக்கள் நிரம்பப் பேசப்பட்டுள்ளன. தேவியார் பஞ்சதீர்த்தப்பக்கல் சென்று இது கங்கையோ என்று புகழ்ந்து நீராடினாள். உடனே தீர்த்தத்திற்குப் பேரின்பம் உண்டாயிற்று. அதனை ஆசிரியர்

என்ன மாதவம் செய்தனன்
யான்என இருந்தடம் எழுந்தாடி
மன்னு வெள்ளியங் கிரிமிசை
எம்பிரான் வாய்மலர்ந் தருள்கூறத்
தன்னை நேர்உமை திளைத்திட
இப்பெருந் தகைமைபெற் றனன்என்னக்
கன்னி தற்பண வினைமுடித்
தெழுந்தனள் கவினுறப் பொலிகுற்றாள்

என்று அழகுறப்பாடிய திறம் ரசிகப்பெருமக்களை மயக்கும்.

ஆசிரியர் சைவசித்தாந்தத்தை முறையாகப் பயின்றவர். எங்கும் சித்தாந்தம் மணக்கிறது. இவர் வள்ளல் மரபினர். ஆனாலும். கருத்து வேறுபாட்டைக் காட்டும் பகுதியில் புகாமையால் இவரது கொள்கை மெய்கண்ட நெறிக்கு அணிகலனாகத் திகழ்கிறது,

பெருமல பரிபா கத்தின்
பேற்றினைக் குரவன் உன்னி
விரவும் முப்பொருளும் ஆய்ந்து
வீடுபேறு அடைதல் சால
அரிது அரிது.

என்று கூறும் பகுதியால் ஆசிரியர் முப்பொருள் (பதி, பசு, பாசம்) உண்மையை நம்பும் பாங்குடையார் என்று தெரிகிறது.

உலகப் படைப்பு ஆன்மாக்களின் ஆணவமலத்தைத் அகற்றுதலுக்காகவே ஆகும். இதனை 'பசுவலிசேர் வினை அழுந்தி மலம் அகற்ற அயன் அகிலம் படைத்து மேவும்' என்று குறிப்பிக்கின்றார். (752) உலகை சங்காரம் செய்வது ஆன்மாக்களுக்கு ஓய்வு தருவதற்கே. இக்கருத்தை,

கால சங்கையின் கணக்கிறந்
திறுதியாங் காலை
மூல ஆருயிர் இளைப்பினை
மாற்றுவான் முன்னி
பால நாட்டத்தெம் இறையவன்
பார்முதல் அகில
காலமும் தொலைத்து இருந்தனன்
கவுரியும் தானும்

என்னும் பாடலால் குறிப்பிடுகின்றார்,

சிவஞானபோதத்தின் முதற்சூத்திரம் சைவசித்தாந்தத்தின் மூலவித்தாகவுள்ளது.

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்

என்னும் முதற்சூத்திரம் சகம், பிறப்பு, இருப்பு, இறப்பு ஆகிய முத்தொழில்கட்குட்பட்டது. அது அதனாலே உடையது. மற்றிருவர்களும் முத்தொழிற் படுவார்கள் என்னும் மூன்று கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இச்சூத்திரத்தை நன்குணர்ந்த கச்சாலையர்,

அகில காரண னேசிவன்: அவன்பரம்: என்றே
சகல பூரணம் ஆகிய குடிலை முன் சாற்ற
உவகை ஆகியே யாவையும் தோன்றியே ஒடுங்கப்
புகலதாம் அரன் பதி எனப் புகன்றதங் கிருக்கும்

என்று தெளிவாகப் பேசுகின்றார். *(364)*

சிவஞானபோதம் நான்காம் சூத்திரம் ஆன்மாக்கள் சிவத்தை உணரமுடியாதபடி ஆணவமலம் மறைக்கிறது என்பதை 'ஆன்மா சகசமலத்து உணராது' என்னும்

தொடரால் குறிப்பித்தது. வழிநூலான சித்தியாரும் 'ஞானச் செய்தி அநாதியே மறைத்து நிற்கும் பசுத்துவம் உடையன் ஆகிப் பசு என நிற்கும் ஆன்மா' என்று கூறிற்று.

'சிவஞான போதத்தால் சென்மவிடாய் தீர்ந்து
சிவஞான சித்தியால் தேறுதல்'

வள்ளல் மரபினர் மேற்கொண்ட முறை ஆகும். அம்மரபின் இயல்பை உணர்ந்த ஆசிரியர்-ஆணவமலம் ஆன்மாவின் அறிவை மறைக்கிறது என்பதை

வாலிதாம் உணர்வினை மலம் மறைக்கும்: அம் மறைப்பை
ஏலவே எமது அருள் இன்றி நீக்குதல் எளிதோ

என்று தெளிவாகக் குறிப்பிடுகின்றார். (374)

மலத்தில் தோய்ந்த ஆன்மாக்கள் சத்தி நிபாதத்தால் (திருவருள் வீழ்ச்சியால்) தெளிவுபெறுகின்றன. 'சத்தி நிபாதத்தால் கழிப்பன் மலம்' என்று சிவஞானசித்தியார் விளக்குகின்றது. இதனை நன்குணர்ந்த கச்சாலையார்,

பார வீடுறும் அன்புதான் சத்தினி பாத
நீரதாய் உடனே முத்தி பெறவரு நிலைத்தாம்

என்று அழகாகக் குறிப்பிடுகின்றார், (440)

சத்திநிபாதத்தில் அடங்கா வேட்கை கொண்ட ஆசிரியர் சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம் அதனைக் கூறிக் கூறிச் சிவானுபவத்தில் கரைகின்றார்.

'பரன் அருளால் சத்திபதி அறிவு கூடிப்-பயிரவ எம் பிரான் கருணை பலி என்று ஓத' என்றும், (430) அஞ்சு எழுத்தும்-செவிப் புலன்படவும் - திருவருட் பதியதில் உறவும் என்றும் (1026) எவரும் உண்மைச்-சத்திபதி பாகர் அன்றி மற்றையோருக்கு வரும் தன்மைப் பாற்றே என்றும் (1229) கூறிய பகுதிகளைக் கண்டு சத்திநிபாதப் பெருமையையும் அருமையையும் தமிழ் உலகம் அறிந்து உய்க.

சேய்க்கு நோய் வந்தால் அந்நோயை நீக்கத் தாயே மருந் துண்பாள். அம்மருந்தை உட்கொண்ட தாயின் பாலே

மருந்தாகிச் சேயின் நோயைப் போக்கும். மருந்தின் வெப்பத்தைத் தாங்கும் ஆற்றல் சேயின் மெல்லிய குடலுக்கு இன்மையின், தாயை மருந்துண்ணும்படி மருத்துவ நூல்கள் வற்புறுத்தின.

கச்சியப்ப முனிவர், 'இளங்குழவிப் பிணிக்கீன்ற தாய் மருந்து நுகர்வதுபோல் இருளின் மாண்ட-களங்குலவும் மலம் உயிர்கட்கு ஒழிய அருள் நடம் காணும் கடன் மீக் கொண்டு' என்று திருவானைக்காப் புராணத்தில் பாடு கின்றார். கச்சாலையாரும்,

மாது கூறலும் தூயதென்று இறைவன் இவ்வகை மேவும்
தீது தீர்ப்பது ஆருயிர்த் தொகைக்கு இயன்றிடும் நிறம்
நீதி யாகவே அகற்றிடப் படுவது நீ அன்னை [அன்றால்
வாதி யாது நோய் புதல்வரை அன்னையே மருந்துண்ணில்

என உணர்ந்து கூறுகின்றார். (906)

வேதாந்தத்தின் சாரம் சைவசித்தாந்தம் என்று ஆக மங்கள் கூறுகின்றன, 'ஸித்தாந்தோ வேத ஸாரத்வாத்' என்று மகுடாகமம் கூறும். ஆகையால் அனுபூதிச் செல் வர்கள் 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்று வித்தகரானார்கள். கச்சாலையர் வேதாந்த சித்தாந்த சமரசம் கண்டவள்ளல் மரபின் தொழும்பர்.' ஆகையால்

இவ்வதுவை சேவித்தோர் பெருந்திருவும்
தனையரும் பெற் றிகத்தின் மேவிக்
கவ்வையற அத்துவித சித்தாந்தப்
பெருவாழ்வும் காண வேண்டும்

என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

சைவசித்தாந்தத்தின் முக்கியமான பகுதி அத்துவா சுத்தி ஆகும். அத்துவாசுத்தி பெறாத ஆத்மா முத்தி பெறாது; ஆகையால் ஆசாரியர் சீடனுக்கு முதலில் அத்துவாசுத்தி செய்கிறார்,

அரும்பருவம் அடைதலுமே ஆசான் ஆகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகள் அறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித்து
ஏன்ற உடல் கன்மம் அனு பவத்தினால் அறுத்திங்கு
இனிச்செய்சன்ம மூலமலம் ஞானத்தால் இடிப்பன்

என்று சிவஞானசித்தியார் பகரும்; (சாதனவியல். 8ஆம் சூத்திரம் 1-ஆம் அதிகரணம்)

அத்துவ சுத்திப் பெரும்பேறு உற்றவரே
கேட்கலுறும் அளவைத் தாமால்

என்று கச்சாலையார் தக்க இடத்தில் கூறுகின்றார். (832)

சைவசித்தாந்திகள் பகவத்கீதையை மதிப்பதில்லை. சித்தியாரே

பார்த்தனூர் இரதம் ஏறிப்
படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்த அம் பாலே எய்து
கொன்று அரசாளேன் என்னத்
தேர்த்தனில் இருந்து மாயை
செய்துமால் கொல்லச் செய்யும்
வார்த்தை நூல் ஆக்கிக் கொண்டாய்
புறம் கொல் நூல் மதித்தி டாயே

என்று பேசுகின்றது. 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு' என வள்ளுவர் திருவாய் மலர்ந்த அறிவுரை மேற்கொண்ட வள்ளல் சந்தானம் பகவத்கீதையைப் பிரமாண நூலாக மேற்கொண்டுள்ளது. சிவஞானவள்ளலார் சத்தியஞான போதத்தில்

அருச்சுனற் காக அமரிடை இருந்தாங்
குணர்மெய்ஞ் ஞானம் உரைத்தவன் எவனோ
அவனே பிரமம் என்று அறி மனனே

என்று பேருணர்வில் நின்று பேசினார். அவர் மரபில் வந்த ஆசிரியர் கச்சாலையாரும்,

அரிதிருப் பதக் கடகமாம் பாடகம் அதையே
இருகையிற் பிடித்து எமரையான் கொலை செய்தற் கிசை
யேன்

கருணை உற்றருள் என்றலும் உண்மை நூற் கருத்தைத்
தெருள் உறுத்தி மால் இருந்திடும் தலம் அது செப்பின்

என்று நயமுறப்பாடி (644) வைதிக சமயம் ஒன்றுபட்டு உயர வழிகாட்டுகின்றார், 'உண்மை நூற் கருத்தைத் தெருள் உறுத்தி' என்று ஆசிரியர் ஸ்ரீகீதையின் சிறப்பை உணர்ந்து பாராட்டுகின்றார்.

சைவ சமயத்தின் பெருமைக்குக் காரணமாக இருப்பவர் விடைப்பிரான் ஆவர். அவர் திருவருளால்தான் இறைவன் ஆன்மாக்களின் இதயங்கள் தோறும் குடிபுகுகின்றான். அப் பெருமானை வழிபட்டாலே அன்பர்கள் தத்துவாதீதர்கள் ஆவார்கள் என்று பக்தியுடன் பாடுகின்றார், ஆசிரியர்.

யாவும் ஆகிய சிவனையும் எம்பிராட் டியையும்
தாவி லாவகை தரித்திடு விடைப்பிரான் தனையே
தேவ தேவென வழிபடில் திரிமலம் அகல்வர்;
மேவு தத்துவா தீதர் ஆகுவர்; இது மெய்ம்மை,

இப்பாடலால், எல்லாவற்றையும் தம்பால் கொண்டுள்ள பிரானையும் பிராட்டியையும் சுமக்கும் ருஷபதேவரின் பேராற்றலை வியக்கின்றார்.

அம்பிகை எம்பெருமானைக் கண்ட காட்சியை நயம் பெற ஆசிரியர் விவரிக்கிறார். இங்கு பெருமானின் சிறப்புக்கள் முற்றவும் கூறி இத்தகையவனைப் பிராட்டி கண்டாள் என்று கூறும்போது நம் எதிரில் அம்மையும் அப்பனும் காட்சி வழங்குகின்றனர்.

ஆரணத்தனி மாநிழல் அமர்ந்திடும் அமுதைக்
கார ணப்படா தருந்துவார்க் குவட்டுருக் கனியை
வார ணத்திரு வுரிவையில் புழுகு நெய் வழியும்
பூர ணத்தினை விழிகளால் திளைத்தனள் புகழ்ந்தாள்.

தற்ப ரச்சிவ தத்துவ பூரணத் தலைமை
பொற்புறப் பரமானந்த நிருத்தமே புரிந்து

சிற்ப தப்பொரு ளாய ஏகாம்பரத் தெய்வ
அற்புதத் தனி இலிங்கத்தின் பெருமையை அறிந்தாள்.

இந்தப் பாடல்கள் ஆசிரியர் ஏகாம்பரப் பெருமான் பால் கொண்ட எல்லை அற்ற பக்தியின் விளைவாகும்.

இப்புராணத்தில் கற்பனை வளம் சற்றுக் குறைவாகவே உள்ளது. ஆயினும் சில பாடல்கள் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன, திருக்குற்றாலப் புராண ஆசிரியர் பலா மரத்தைப் பாடித் தமிழ்மொழிக்கே பெருமை சேர்த்தார். கடம்பவன புராண ஆசிரியர் கடம்ப மரத்தைப் போற்றிப் பக்தர்களுக்கு உணர்வையூட்டினார். நம் கச்சாலையர் ஒரு மாமரத்தை வண்ண ஓவியமாகத் தீட்டியுள்ளார். இங்கு கூறப்பட்டது காஞ்சி மரம் என்றும் கருத இடம் உள்ளது.

மற்றது செம் பொற்படிவம் பன்னம்: இளம்
தளிர்பட்டு: வயிரம் நற்பூப்
பற்றியுறை நறை அமுதம்: மரகதம்காய்
மாணிக்கம் பழக்காய்: யாவும்
சொற்றவிதற் கீராறு பருவமுமாம்:
இதன் கனியைத் துய்ப்பார் ஆகின்
முற்றும் உடல் இளமை பெறும்: வளமை பெறும்
அறிவுமிக முதிரும் மாதோ.

இப்பாடலைப் பயின்று இன்பம் அனுபவிக்கக் கற்றவர்களே கற்றவர்கள்.

முருகப்பிரான் தந்தையின் பால் உள்ள கனியை வேண்டி உலக முற்றவும் வலம் வந்தது புராண உலகில் பிரசித்தம். அதனை உணர்ந்த ஆசிரியர் கந்தப்பிரான் ஒற்றை மாமரத்தின் அடியில் அமர்ந்திருப்பது கனியின் விருப்பத்தால்தான் என்று கூறுகிறார்.

கனிக்குவிளை பேராசை தணவாமல்
எந்நாளும் கருணை கூர்ந்து
தனித்திருமா வடியினுறை அறுமுகவன்
இருசரணம் சரணம் செய்வாம்.

கச்சாலையர் இஃது என்பதை இகுது என்றும், அஃது

என்பதை அருது என்றும் பல இடங்களில் குறிக்கிறார், 'சத்தியத்திறன் இருதென உரைத்தனன்' என்றும், (40) அருதவர் முடியும் ஆயுள்' என்றும் (210) 'நாரணனே முதலானோர் இருதென்ன மாயம் என என்றும் (324) கன்றொன்று அருதெழுந்து' என்றும் (732) இருதுபதேசம் (907) என்றும் கூறிய பகுதியை ஆய்க.

ஆசிரியர் யோகத்தை நன்கு உணர்ந்து போற்றுபவர். யோகிகள் மூலாக்கினியால் மதிமண்டலத்து அமுதை நுகர்வர். இதனை

ஏரகமே ஆகும் இரேசகமே கும்பகமே
பூரகமே ஆன அனு பூதிவழியே அதனில்
தாரணையே செய்து தனியே கனல் மூட்டி
ஆரழலால் உண்மதியின் ஆயஅவியே அயில்வார்

என்று பாடும் திறம் யோகிகள் மனத்தில் உணர்வை உண்டாக்கும் (489).

ஆசிரியர் சில இடங்களில் அற்புதமாக நீதிகளைக் கூறுகின்றார். கற்பது எதற்காக? இவ்வினா பலவிடைகட்கு இடம் தரும், அவ்விடைகள் நமக்கு நிறைவை வழங்க கச்சாலையார் 'கல்வி கற்பது அடங்குவது குறித்தே அன்றோ' என்று கூறி நமக்குக் கல்வியின் லட்சியத்தையும் பண்பாட்டையும் விளக்குகின்றார்.

ஏழையின் துன்பத்தைத் துடைப்பதே இறைவழிபாடு என்ற கருத்தை ரஷ்ய ஞானி டால்ஸ்டாய் பலபடியாக வரைந்துள்ளார். ஒரு தலயாத்திரிகர்களின் கதையை உலகம் அறியும். சிவபூஜை புரிய வருகின்ற தேவி மகத நாட்டின் பஞ்சத்தைக் கண்டு பூசனையை ஒதுக்கிவிட்டு மக்களின் துயரைப் போக்கினாள். இதனைப் பயிலும் நம் மனம் அம்மையின் கருணைத் திறத்தை நமக்கு உணர்த்திய ஆசிரியருக்கு நன்றி கூறுகிறது.

ஆசிரியர் பெருமான் திருவீதிக்கு வந்து காட்சி தரும் விழாவை நயமுறப்பாடுகின்றார். ஒவ்வொரு நாள் விழாவிற்கும் ஒவ்வொரு பலன் உண்டு என்கின்றார். (திருவிழாச் சருக்கம்).

முதல் நாள் விழாவின் பயனை, 'முதற்றிருவிழா அரசரே ஆதிநீதியாகிய புதல்வரைப் பெறுவர்' என்கிறார். இரண்டாம் நாள் விழாவின் பயனை 'முப்புரியுளோர் திருவுறுவர்' என்கின்றார், மூன்றாம் நாள் விழாவால் 'வான்முகில் வழாமழை மூடி எத்தினத்தினும் பெய்திடும்' என்கிறார். நான்காம் நாள் விழாவால் 'அரசர்தம் மருவலர் நசிப்பர்' என்கிறார், ஐந்தாம் நாள் விழாவால் 'நிசாசரர் முதலினோர் மாள்வர்' என்கிறார். ஆறாம் நாள் விழாவால் 'மறுவில் கொற்றமே மன்னர் மருவுவர்' என்கிறார். ஏழாம் நாள் விழாவால் 'உலகம் நல் ஒழுக்கமே இலகும்' என்கிறார். எட்டாம் நாள் விழாவால் 'அணுத்தொகை எலாம் மலத்தை விண்டு நித்திய வீடுறும்' என்கிறார். ஒன்பதாம் நாள் விழாவால் 'கோக்குலாம் புவனித்திறம் வருத்தனை குலாவும்' என்கிறார். பத்தாவது நாள் பெருமான் பிராட்டியைத் திருமணம் செய்து கொள்கின்றான்.

ஏகம்பன் காமாட்சியம்மையைத் திருமணம் செய்து கொண்ட பண்பைப் பக்திச் சுவையும் காவியச் சுவையும் நிரப்பிப்பாடி உள்ளார். பெருமான் அம்பிகையின் திருக்கழுத்தில் மங்கல நாண் புனைந்ததை

மருவு பொற்றிரு மங்கல நாணினை மனுவால்
புரிதொழில் புரிந்து யாவரும் யாவையும் புகழ

கன்னியாம் உமையவள் கவின்பெறு திருக் களத்தில்
என்னை ஆளுடை எம்பிரான் சாத்தினன் இனிதின்

என்று உருகிப்பாடுகின்றார். (திருவிழாச் சருக்கம். 1209. 1210).

இப்புராணத்தின் இதயம்போல் பொலிவது பிராட்டி பூஜையும், இறைவி தழுவ இறைவன் குழைந்து தழும்பு பெற்றதும் ஆகும்.

பூஜை செய்பவர்கள் பஞ்சசுத்தி செய்யவேண்டும். தாயுமானவர்,

'பஞ்சசுத்தி செய்து நின்னைப் பாவித்துப் பூசை செய்தால் விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே' என்று பேசினார். பஞ்சசுத்தி, 1. பூதசுத்தி, 2. ஆத்மசுத்தி,

3. திரவியசுத்தி, 4. மந்திரசுத்தி. 5. இலிங்கசுத்தி என்பவை ஆகும்.

தேவி பஞ்ச சுத்தி செய்து சிவபூசை செய்ததை மிகமிக விரிவாகப் பூசைச் சருக்கத்தில் விவரிக்கிறார்.

பிராட்டி தழுவ எம்பெருமான் குழைந்ததை அழகுற விவரிக்கும் ஆசிரியரின் திறம் வியத்தற்குரியது.

கடிது திருவுருவில் விழுந்து இருதனத்தில்
நெருக்கி வளைக்கரத்தால் சேர்த்தித்
தடநெடிய மார்பகத்துள் அடக்கிமுடி
மீதுமுகம் தாழ்த்திக் கண்ணீர்
படஇதுவும் ஒன்றெனவே திரும்பியுளம்
பதைபதைக்கப் பனிக்கும் அன்பில்
வெடவெடென உடல்மடுத்துத் தழீஇனள்அப்
பரிவினையார் விளம்பற் பாலார்.

அம்மை தழுவக் குழைந்து விழைந்து இழைந்து
தழைந்துவியந்து அவிர்ந்து சோதி
செம்மைபெறக் கவின்று புளகித்து இறுமாந்து
இனிமைதலை சிறந்து வாழ்ந்து
மெய்ம்மைபடக் குளிர்ந்து உயர்ந்து வளர்ந்து
தற்பரானந்தம் விளங்கி ஓங்க
எம்மடிமை உடையபிரான் முலைச்சுவடும்
வளைச்சுவடும் இசைந்தார் அன்றே

என்று பாடி நம்முள்ளத்தில் உவகை பெருகச் செய்யும் ஆசிரியரின் திறம் வியக்காமல் இருக்க முடியாது.

இப்புராணத்தில் காஞ்சிபுரத்தில் உள்ள அதிசயங்களை நகரச் சருக்கத்தில் விவரிக்கிறார். சிவஞான முனிவர் விம்மிதப்படலத்தில் 22 பாடல்களால் விவரிக்கின்றார். ஏகாம்பரநாதர் உலாவில்

.........வென்றியிபம்,

ஒன்று குறுமுயலுக்கு ஓடும் இடம்பார்த்து
நின்றுவிடும் காஞ்சி நிழல்பார்த்துச்-சென்றடைந்தோர்

தாம்பிறரைக் காணலாம் தம்மையவர் காணாமல்
ஆம்பரிசு நல்கும் அகம்பார்த்துக்-காம்பொன்றின்

மூன்று முளரி முகிழ்க்கும் தடம்பார்த்துத்
தோன்றுமலர்த் தீபச் சுடர்பார்த்துத்-தான்றன்

இடத்து நிழல்நோக்கி யாவரும் காணப்
படுத்தும் ஒருகிணறு பார்த்துக்-குடக்கோடிக்

காண வரிதாய்க் கரக்கும்நதி பார்த்து அமரர்
பேணுலகத் துய்க்கும் பிலம்பார்த்துக்-காணரிய

செம்பொனிறம் நல்கும் சிலைபார்த்து திண்காரி
வெம்பரியூர் செண்டு வெளிபார்த்துக்-கொம்பில்

கடிக்கமலப் போதும் கழுநீரும் சேரப்
படைக்குமொரு பாடலமும் பார்த்து—நடுப்புகுந்தோர்

தோற்றம் குரங்காக்கும் தொல்லையிடம் பார்த்துஅதனை
மாற்றும் கடவுள் மடுப்பார்த்துக்-கூற்றால்

இறவா இடம்பார்த் திறந்தவர் வந்து
பிறவா இடம்பார்த்த பின்னர்

என்று காஞ்சிபுர அதிசயங்களை விவரிக்கும்.

கச்சாலையார் நகரச் சருக்கத்தில் இந்த அதிசயங்களை மிக விரிவாகப் பாடுகின்றார். அப்பாடல்கள் யாவும் நயம் மிக்கவை. விரிப்பிற் பெருகும்.

இப்புராணத்தின் சிறப்பு முற்றும் வரைவது கடினம். கற்றுத் தெரிந்து மகிழ்வது அறிஞர்களின் கடமை ஆகும்.

இந்நூலைப் படிக்கத் தொடங்குமுன் என் அறியாமை காரணமாக நேர்ந்த பிழைகளை முதற்கண் திருத்திய பின் படிக்கும்படி பெருமக்களுக்கு விண்ணப்பித்துக் கொள்கிறேன். பிழையும் திருத்தமும் நூலின் இறுதியில் உள்ளன.

இப்பதிப்பை மேற்கொள்ளும் பணியை அடியேனுக்கு வழங்கிய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்து

அத்யக்ஷர் திருமதி ருக்மணிதேவி அம்மையாருக்கு நன்றி கூறுகின்றேன். அடியேன் இப்பணி மேற்கொள்ளக் காரணம் ஆனவர் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி ஆவார்கள். அவர்கள் கல்வெட்டுத் துறையில் அரும்பணி செய்து வருகின்றார். இருண்டு கிடந்த பல சரித்திரப்பகுதியில் ஒளி விளக்கு ஏற்றி உள்ளார். அவருக்கு மனமுவந்து நன்றி கூறுகிறேன்.

இந்த நூல் நிலையத்தைப் பாதுகாத்து ஐயர் அவர்களின் புகழைக் குன்றில் இட்ட தீபம் ஆக்கும் ஐயர் அவர்களின் பேரர் பிரம்மஸ்ரீ க. சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கு எல்லா நலங்களும் பெருகப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலகத்தில் பணிசெய்யும் அனைவருக்கும் வாழ்த்துக் கூறுகின்றேன்.

நலமார் கச்சி—நிலவே கம்பம்
குலவா ஏத்தக்—கலவா வினையே

இங்ஙனம்,
S. K. இராமராசன்,
'கம்பராமன்'

கம்பன் நிலையம்,
வேலூர்-சேலம்.
25-11-1982.

# காஞ்சித் திருத்தலங்களைப்பற்றிய குறிப்புக்கள்

**கச்சிப்பலதளியும் ஏகம்பத்தும் கயிலாயநாதனையே காணலாமே**
**தாண்டகம்.**

**1. அகத்தீச்சுரம்**

இப்பெயருடன் காஞ்சியில் இரண்டு தலங்கள் காணப்படுகின்றன. (1) பெரிய காஞ்சிபுரம் கயிலாய நாதர் ஆலயத்தின் கிழக்கே புத்தேரித் தெருவில் உபநிஷத் பிரமேந்திர மடத்தின் உள்ளே உள்ளது. (2) ஏகாம்பரர் ஆலயத்தில் வெள்ளக் கம்பலிங்கத்திற்குத் தெற்கில் பிரகார மேடைமேல் உள்ளது. இதுவே புதிய காஞ்சிப் புராணத்தில் குறிப்பிடப்படுவது.

**2. அசுரேசம்**

**3: அந்தகேசம்**

இத்தலம், காஞ்சிபுரத்திற்கு மேற்கே 4 கல் தொலைவில் திருப்புட் குழியில் உள்ள கோவிலாகும். இயமனுக்குப் பெருமான் வரமளித்த தலமிதுவாகும்.

> ''செல்லலாந் தகைத்தன்றம்ம தென்திசைக் கிழவற்
> கவ்வூர்''

எனப் புதிய காஞ்சிப் புராணம் புகலும்.

**4, அபிராமீசம்**

இத்தலம் பெரிய காஞ்சிபுரம் சப்பாணிப் பிள்ளையார் கோவிலுக்கு மேலண்டையில் உள்ளது. உலகளந்த பெருமாள் கோவிலுக்குத் தென்பகுதி. நல்ல நிலையில் உள்ளது. திருமால் வாமனராகி மாவலியை அழித்தற்குப் பூசித்த தலம் இதுவாகும்.

**5. அமரேசம்**

இத்தலம் (பெரியகாஞ்சி) காமாட்சியம்மை கோவிலுக்கு நேராக, மேலண்டை ராச வீதியின் மேற்குப் பக்கம் சிறிது உட்சென்று உள்ளது. கிழக்குச் சன்னிதி பல்லவ சிற்பம் நிறைந்துள்ளது.

முப்பத்து முக்கோடி தேவர்களும் வழிபட்ட தலம் இதுவாகும்.

## 6. அயிராபதேசுரம்

இத்தலம் கச்சபேசர் கோவிலுக்கு வட கிழக்கில் 30 அடி தூரத்தில் இராச வீதி தென்கோடியில் சாலைக்குக் கீழ்பால் உள்ளது. மேற்குமுக சன்னிதி. **கயிலாயர் கோவில் போன்றே சிற்பம்** நிறைந்தது.

வெள்ளை யானையாகிய ஐராவதம் இந்திரனைத் தாங்குதற்குப் பூசித்த தலம் இதுவாகும்.

## 7. அரிசாபந்தீர்த்தார்

இத்தலம் பெரிய காஞ்சிபுரம் நெல்லுக்காரத் தெருவில் இரட்டை மண்டபத்திற்குத் தென் மேற்கில் தென்னண்டை வாடையில் உள்ளது. நல்ல நிலையில் உள்ளது. மேல் விமானம் இல்லை.

திருமால் பிருகு முனிவரால் ஏற்பட்ட சாபத்தை நீக்கிக் கொள்ளுதற்காகப் பூசித்த தலம் இதுவாகும்.

## 8. அனந்தீசரம்

இத்தலம் பெரிய காஞ்சியில் இலிங்கப்பையர்தெரு தென்னண்டை வாடையில் ஒரு வீட்டின் கொல்லைப் புறத்தில் உள்ளது. மிகச் சிறிய கோவில்.

புதிய காஞ்சிப்புராணத்தில் இத்தலத்தைப் பற்றிய குறிப்புக் காணப்படவில்லை.

## 9. அனேகபேசுரம்

இத்தலம் கைலாச நாதர் கோவிலுக்கு அண்மையில், அதற்குத் தென் கிழக்கில் உள்ளது. **அனேகதங்காவதம்** எனத் தேவாரத்தில் இத்தலம் குறிப்பிடப்படுகிறது. காஞ்சியில் பாடல் பெற்ற தலங்கள் ஐந்தனுள் இது ஒன்று. ஞானசம்பந்தரால் பாடப்பட்டது. சுந்தரர் பதிகமும் ஒன்றுண்டு.

"ஆடுமவ ரினிதமரு மனேகதங்கா வதம்பரவி
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள்"

(1000)

எனப் பெரிய புராணம் ஞானசம்பந்தர் தரிசித்ததைக் கூறும்.

## 10. ஆதிபதேச்சுரம்

இத்தலம் சின்ன காஞ்சிபுரம் அத்திகிரிக்கு மேற்கில் இருப்பதாகப் புராணம் குறிப்பிடுகிறது.

பிரமன் வேள்வியை அழிக்கச் சரசுவதி நதி உருவம் கொண்டு நடு இரவில் வர, இறைவன் கட்டளைப்படி திருமால் விளக்கொளிப் பெருமாளாக விளங்கி நதியைத் தடுத்து வேள்வியைக் காத்தார். ஒரு லிங்கம் தாபித்துப் பூசித்துத் திருமால் அருள் பெற்றார்.

## 11. இட்டசித்தீச்சரம்

இத்தலம் பெரிய காஞ்சி கச்சபேசர் கோவிலில் உள்ள திருக்குளத்தின் வடகரையில் உள்ளது. மேற்கு சன்னிதி.

ததீசி முனிவர் குபன் என்னும் அரசனால் கொலை செய்யப்பட்டு, சுக்கிரனால் மீண்டும் உயிர் பெற்று உபதேசம் செய்யப் பெற்றார். அவர் அருளியபடி இட்டசித்தீசரைப் பூசித்து என்றும் கொலையுறாத வச்சிரயாக்கை பெற்ற தலம் இதுவாகும்.

## 12. இந்திராலயம் (சத்தியவிரதம்)

இத்தலம் **திருக்காலிமேடு** என வழங்கப்படுகிறது. **கச்சிநெறிக் காரைக்காடு** என்றே தேவாரம் குறிப்பிடும். காஞ்சியிலுள்ள ஐந்து பாடல் தலங்களில் இது ஒன்றாகும். திருஞானசம்பந்தரால் "வாரணவு முலைமங்கை" எனத்தொடங்கிப்பாடப்பட்ட பதிகம் இத்தலத்திற்கு உண்டு. மேற்கு முகம். நல்ல கருங்கல் திருப்பணி. புதிய காஞ்சிப்புராணத்தில் இதுவே முதல் தலமாக வைத்துப் பாடப்பட்டுள்ளது.

மேலும் இத்தலம் **இந்திரபுரம்** எனவும் **சத்தியவிரதம்** எனவும் புராணத்தில் கூறப்படுகிறது, காரை மரங்கள் நிறைந்த காடுகள் நெருங்கப் பெற்றமையால் **திருநெறிக்காரைக்காடு** என்னும் திருப் பெயரை உடையதாயிற்று என்றும் கூறுவர்.

இந்திரன் பிறவாநெறி வேண்டுமென இறைவனைப் பூசித்து வரம் பெற்றமையால் இந்திரபுரம் என வழங்குவதாயிற்று. காஞ்சியின் கிழக்கு எல்லையில் உள்ளது இத்தலம். இங்கு நந்தி நேர் முகமாக இல்லாமல் சற்றுத் தெற்கு நோக்கி உள்ளது.

## 13. இரணியீசுரம்

இத்தலம் பெரியகாஞ்சிசர்வதீர்த்தக்கரையின் மேல்பாலுள்ளது. அம்மேல் கரையில் காமீசுரம், தீர்த்தேசம், விஸ்வநாதேசுரம் என மூன்று தலங்கள் உள்ளன.

இரணியன் என்னும் அசுரன் தன் பெயரால் இலிங்கம் தாபித்துப் பூசித்து, மனிதராலும் மிருகங்களாலும் மற்றைய சீவராசிகளாலும், பூமியிலும், ஆகாயத்திலும், ஆயுதங்களாலும், காய்ந்த இடத்திலும், குளிர்ந்த இடத்திலும், வீட்டிற்கு வெளியிலும் உள்ளிலும், பகலிலும் இரவிலும் இறவாத வரத்தைப் பெற்றனன்.

### 14. இராமநாதீச்சுரம்

இத்தலம் ஏகாம்பரநாதர் பதினாறு கால் மண்டபத்திற்கு அருகில் தென்கிழக்கில் உள்ளது. கவனிப்பார் அற்றுக் கிடக்கிறது. நித்திய நைமித்திகம் எதுவும் நடப்பதாகத் தெரியவில்லை.

இராவணனைக் கொன்ற பாவத்தைப் போக்குவான் வேண்டித் தன் பெயரால் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பாவம் நீங்கி அயோத்தியை அடைந்தனன் இராமன் என்பது புராண வழக்கு.

### 15. இறவாத்தானம்

இத்தலம் பெரிய காஞ்சியில் பெரிய கம்மாளத் தெருவில் உள்ளது. கிழக்கு சன்னிதி. பல்லவ சிற்பம் உள்ளது.

சுவேதன், மார்க்கண்டேயர், சாலங்காயின முனிவரின் பேரன் ஆகியோர் இத்தலத்தை வணங்கி இறப்பைக் கடந்தனர் என்பது புராண வரலாறு.

### 16. எழுலிங்கீச்சுரம்

### 17. ஏகாம்பரேசுரம்

இது பெரிய காஞ்சியில் யாவராலும் அறியப்பட்ட தலமாகும். காஞ்சியில் மிகப்பெரிய தலமும் முக்கிய தலமும் இதுவே. முத்தி தரும் ஏழு தலங்களுள் ஒன்றுகும். 'ஒற்றை மாமரத்தின் நீழலில் அம்மையோடு வீற்றிருக்கும் பெருமான்' என்பது இத்தலப்பிற்குப் பொருளாகும். பழைய மாமரம் தல விருட்சமாக இன்றும் காட்சி அளிக்கிறது. ஐந்து பூத தலங்களுள் இது பிருதுவி தலமாகும்.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் தேவாரமும் இத்தலத்திற்குண்டு. மாணிக்கவாசகர் தாம் பாடிய திருவாசகத்தில், கீர்த்தித் திருவகவல், போற்றித் திருவகவல், திருப்பொற்சுண்ணம், திருப்பூவல்லி முதலிய பாடல்களிலும் திருக்கோவையாரில் (268) ஒரு பாடலிலும் இத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார். நாயன்மார்கள் வேறு தலங்களைப் பாடும் போதும் இத்தலத்தை இடையிடை நினைந்து பாடியுள்ளனர். சுந்தரர் இறைவனைப்பாடி இடக்கண் பெற்ற தலம் இதுவே. பட்டினத்துப் பிள்ளையார் பாடிய திருவேகம்பர் அந்தாதி இத்தலத்திற்கு உண்டு. இரட்டையர்கள் ஏகாம்பர நாதருலா என்னும் பெயரில் ஒரு நூல் பாடியுள்ளனர். காஞ்சியைப் பாடாத புலவர்களும் அதிலும இத்தலத்தைப் பாடாதவரும் இல்லையென

லாம். விரிவஞ்சி இத்துடன் இத்தலத்தின் பெருமை நிறுத்தப் பட்டது.

"பாட்டினிலடங்காக் காஞ்சியின் பெருமை பகர்ந்திடத்
தமியனுக் கெளிதோ" — கந்த புராணம்.

## 18. ஓணகாந்தனீசுரம்

இத்தலம் பெரிய காஞ்சியில் சர்வ தீர்த்தத்திற்கு வடக்கில் பஞ்சுப் பேட்டை பெரிய தெருவில் உள்ளது. பாடல் பெற்ற ஐந்து தலங்களுள் இது ஒன்று. சுந்தரரால் பாடப் பெற்றது.

"ஓணகாந்தன் தளிமேவும் ஒருவர் தம்மை உரிமையுடன் பேணி அமைந்த தோழமையாற் பெருகும் அடிமைத் திறம் பேசிக் காணமோடு பொன்வேண்டி "நெய்யும் பாலும்" கலைவிளங்கும் யாணர்ப்பதிகம் எடுத்தேத்தி எண்ணில் நிதி பெற்றினி திருந்தார்."
— சேக்கிழார்.

வாணசுரனுடைய சேனாதிபதிகளாகிய ஓணன், காந்தன் என்ற இருவரும் இவ்விடத்து இலிங்கம் தாபித்துப் பூசித்து அருள் பெற்ற தலம் இதுவாகும்.

## 19. கங்காதரேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி சர்வ தீர்த்தத்தின் கிழக்குக் கரையில் உள்ளது.

வருணன் கங்காதேவியோடு சேர்ந்து இறைவனைப் பூசித்து நீருக்கும், நீர்வாழ் உயிர்களுக்கும் தலைவனுதலைப் பெற்ற தலம் இதுவாகும்.

## 20. கச்சபேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி மேலண்டை இராச வீதியின் தென்கோடியில் உளளது பலரும் அறிந்தது.

திருப்பாற்கடல் கடைந்த காலத்து, திருமால் ஆமையாய் இருந்து தாங்கி, தேவர்களுக்கு அமுதம் கொடுத்தமையால் அகங் கரித்துப் பல கொடுமைகள் செய்ய, பெருமான் ஆமையை அழித்து அதன் ஓட்டைக் கலனுகப் பூண்டார். திருமால் தம் குற்றத்திற்கு இரங்கி, இறைவனைப் பூசிக்க, அவர் பெயரால் இத்தலம் விளங்கு வதாயிற்று. கச்சபேசன் - ஆமைக்கு அருள் புரிந்தவன்.

## 21. கயிலாய நாதம்

இத்தலம் யாவராலும் நன்கு அறியப்பட்டது. சிற்பம் நிறைந் தது. கண் கொள்ளாக் காட்சி. பெரிய காஞ்சிபுரம் புத்தேரித்

தெருவிற்கு நேரே சிறிது மேற்குச் செல்ல உள்ளது, கற்றளியாக அமைக்கப்பட்டதில் இதுவே முதல் தளி எனக் கூறுகின்றனர். காஞ்சிக்கு வருவோர் இத்தலத்தைக் காணுமல் இரார்.

இராச சிம்ம பல்லவனுல் இத்தலம் அமைக்கப்பட்டது எனச் சரித்திரம் கூறுகிறது. இப்பல்லவனையே ஐயடிகள் காடவர்கோன் நாயனுராகப் புராணம் கூறுகிறது. இத்தலத்தில் கல்வெட்டுகளும் நிறைந்துள்ளன. அவற்றுள் ஒன்று:- இத்தலத்தைக் கட்டி முடித்தவுடன் குட முழுக்குக்கு நாள் நியமித்த போது, திருநின்ற வூரில் பூசலார் நாயனுர் கட்டிய கோவிலுக்குத் தாம் செல்ல இருப்பதாகவும், வேறொரு நாளை நியமித்துக் கொள்ளும்படியாகவும் இறைவன் கனவில் கூறியதாகக் கல்வெட்டு கூறுகிறது. இச்செய்தி சேக்கிழாராலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

நாரத முனிவரும் புத்த முனிவரும் திரிபுரத்தார்க்குப் பொய் நூல் போதித்து மயக்கிய குற்றத்திற்காக இறைவனைப் பூசித்து அருள் பெற்ற தலம் இதுவாகும்.

"திருவளர் காஞ்சி மூதூர்த் திண்பெருங் கயிலை போலும்
ஒரு தலம் அதுவேயன்றி உலகம்மூன் றிடத்தும் இல்லை"

— புதிய காஞ்சிப் புராணம்

## 22. கரைக்கண்டேச்சுரம்

## 23. கள்ளக் கம்பர்

இத்தலம் ஏகாம்பரநாதர் கோவிலுள் மூல இலிங்கத்திற்கு வடக்கே உள்ளது.

மாயோன் உலகத்தை மயக்க விரும்பிப் பூசித்தமையால் அவ்விலிங்கம் கள்ளக் கம்பம் எனப்பட்டது.

## 24. காமீசுரம்

இத்தலம் சர்வதீர்த்தக் கரையில் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது.

மன்மதன் மூன்றுலகத்தும் தன் ஆணையைச் செலுத்தும் வரத்தைக் கொடுத்தருள வேண்டும் என இறைவனைப் பூசித்து அருள் பெற்ற தலம் இதுவாகும்.

## 25. காயா ரோகணம்

இத்தலம் தாயார் குளத்திற்கு நேரே வேகவதி ஆற்றின் வட கரையில் உள்ளது. கிழக்கு முகம் நல்ல நிலையில் உள்ளது.

திருமால், பிரமன் ஆகிய இருவரும் ஆயுள் முடிந்து இறக்க வரும் அக்காலத்தில், காலத்தைக் கடந்தவனாகிய இறைவனே அவர்களை ஒடுக்கி, அவர்கள் சரீரத்தைத் தன் தோள் மேல் தாங்கி அங்கு நடனம் செய்து அருளுவான். ஆதலால் இத்தலம் காயா ரோகணம் எனப் பெயர் பெற்றது.

காயம்-உடல் ; ஆரோகணம்-ஏறுதல்

## 26. குமர கோட்டம்

இத்தலம் பெரிய காஞ்சி மேலண்டை இராச வீதி நடுவில் அமைந்துள்ளது. பலராலும் அறியப்பட்டது. காஞ்சியில் முருகனுக் குரிய தனித்தலமாகும் இது.

பிரணவ மந்திரத்திற்குத் தவருகப் பொருள் கூறிய பிரமனை முருகன் சிறையிலிட்டான். இறைவன் பிரமனைச் சிறைவீடு செய்யு மாறு கட்டளையிட்டும் கேளாத குற்றத்தைப் போக்குவான் வேண்டி, முருகன் தேவசேனாபதீச்சரம் என ஒரு இலிங்கம் தாபித் துப் பூசை செய்து குமரக் கோட்டம் என்னும் ஆசிரமத்தில் வீற்றிருந்தான்,

இத்தலம் மிகச் சிறப்பாகப் போற்றப்பட்டு வருகிறது. அருண கிரிநாதர் திருப்புகழ் இத்தலத்திற்குண்டு. இராமலிங்க சுவாமி களுக்கு இத்தலத்தில் தனி சன்னிதி உள்ளது. பாம்பன் சுவாமிகள் இத்தலத்து முருகனை வேண்டித் திருவருள் பெற்றதாகச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது.

இத்தலத்தில் முன்னாளில் அர்ச்சகராக இருந்த கச்சியப்பசிவாச் சாரியார் கந்த புராணம் பாடியது குறிப்பிடத் தக்கதாகும்.

## 27. குரங்கணில் முட்டம்

இத்தலம் காஞ்சிபுரத்திற்குத் தெற்கே ஆறு கல் தொலைவில் பாலாற்றின் தென்கரைக்கப்பால் உள்ளது. தூசிக்குத் தென் கிழக்கில் ஒரு மைல்.

குரங்கு, அணில், முட்டம் (காக்கை) இவைகள் பூசித்ததலம் இதுவாகும்.

குரங்கு பூசித்தது திருவாயிலின் வடபாலும், அணிலும் காக்கையும் பூசித்தது தென்பாலும் காட்டப்பட்டுள்ளது.

திருஞான சம்பந்தர் பாடல் பெற்ற தலம் இது,

## 28. கேசரீசம்

## 29. சத்தியவிரதம் (இந்திராலயம்)

இதுவே இந்திராலயம், திருநெறிக்காரைக்காடு என்னும் மறு பெயர்களையுடைய தலமாகும். 12ஆம் எண்ணுள்ள தலக்குறிப்பைக் காண்க.

## 30. சலந்தரேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி ஓணகாந்தன்தளிக்கு வடக்கில் இருந்தது. அவ்விலிங்கத்தை எடுத்து வந்து ஓணகாந்தன்தளிக் கோவிலின் தெற்குப்பிரகாரத்தை ஒட்டி வைத்துக் கோவில் எடுத்துள்ளனர்.

சலத்தில் தோன்றிய சலந்தரன் என்னும் அசுரன் காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பல வரங்களையும் பெற்ற தலம் இதுவாகும்.

## 31. சவுனகேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி ஒக்கப்பிறந்தான் குளத்தின் (சகோதர தீர்த்தம்) தென்கரையில் புத்தேரித் தெருவிற்குத் தெற்கில் உள்ள ஒரு சிறு தெருவின் மேற்குக் கோடியில் உள்ளது. கிழக்கு முகம். நல்ல நிலையில் உள்ளது. இத்தலத்தின் தென் கிழக்கு மூலையில் 15 அடி தூரத்தில் அரம்பேசுரர் தலம் உள்ளது. மேற்கண்ட தலத்தைத் தற்காலத்தில் திருக்காஞ்சீஸ்வரர் தலம் என வழங்குகின்றனர்.

சவுனக முனிவர், தமது பெயரால் ஓர் இலிங்கம் தாபித்து முறைப்படி பூசித்து, மலநோய் நீங்கி வீடுபேற்றை அடைந்த தலம் இதுவாகும்.

## 32. சார்ந்தாரைக்காத்தார்

இத்தலம் சின்ன காஞ்சிபுரம் திருக்கச்சிநம்பித் தெருவிற்கு வடக்கே நகருக்கு வெளியில் வேகவதி நதிக்கரையில் உள்ளது. சார்ந்தாலீசுரன் கோவில் என வழங்கப்படுகிறது. சார்ந்தாசயம் எனப் புராணம் கூறும். சார்ந்தார்-தம்மை அடைந்தவர்; ஆச்ரயம்-ஆதரவு. வியாச முனிவர் 'நாராயணனே பரப்பிரமம்' — எனக் கூறிய சாபத்தைப் போக்குவான் வேண்டி, இலிங்கம் தாபித்து வழிபட்டு அருள் பெற்ற தலம் இதுவாகும்.

## 33. சிலம்பர்துறை

## 34. சிவாத்தானம்

இத்தலம் சின்ன காஞ்சிபுரம் தேனம்பாக்கத்தில் வேகவதி நதிக்கரையில் உள்ளது. கிழக்கு முகம். இக்கோவிலின் உள்ளே வேத

பாடசாலை நடைபெறுகிறது. இங்கு முள் இல்லாத வில்வமரம் உள்ளது.

பிரமன் திருமாலோடு சேர்ந்து உலகத்தைப் படைக்கும் ஆற்றலைத் தனக்கு அருள வேண்டுமென இறைவனை வணங்கி அருள் பெற்ற தலம் இதுவாகும். மேலும் பிரமன் இறைவனிடம் 'எனது ஆத்தானமாகிய (இருப்பிடம்) இதனை உமது ஆத்தனமாகக் கொண்டமையால் இத்தலம் சிவாத்தானம் என வழங்குதல் வேண்டுமென வரம் பெற்றனன்.

### 35. சுரகரேச்சுரம்

இத்தலம் பெரிய காஞ்சி ஏகாம்பரர் சன்னிதித் தெரு தென் கோடியில் உள்ளது. அதனை அடுத்துத் தான்தோன்றீச்சுரம் என்னும் தலமும் உள்ளது. கிழக்கு முகம். செம்மையான நிலையில் உள்ளது. மிகச் சிறிய சிவலிங்கம் அமைந்துள்ளது.

மாதவச்சிவஞான யோகிகள் பலவிதச் சித்திரக் கவிகள் அமைந்த படலத்தை இத்தலத்தில் பாடி உள்ளார்.

சுராக்கன் என்னும் அசுரனை அழித்தற்பொருட்டு இறைவனால் விரும்பி நிறுவப்பட்ட தலம் இது. தேவர்களின் சுர நோயைத் தீர்த்த தலமும் இதுவாகும்.

### 36. சுயம்பு

பெரிய காஞ்சிபுரத்திற்கு மேற்கில் உள்ள வராஹேசுவரருக்குக் கிழக்கில் உள்ளது. சடாயுவானவன் சிறந்ததாகிய மோக்ஷ கதி வேண்டும் என்றெண்ணிச் சுயம்புவேசுவரரைத் தன் பெயர் விளங்கச் சடாயுலிங்கம் என்று பிரதிட்டை செய்து பூசித்தனன்.

### 37. செவ்வந்தீசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி சூலதீர்த்தக் கரையில் உள்ளது. மிகச் சிறிய கோவில். அரசாங்க விவசாய விதைப்பண்ணையின் நடுவில் உள்ளது. ஓணகாந்தன் தளிக்கு வடகிழக்கில் ஒரு பர்லாங் தூரத்தில் உள்ளது. மேற்கு முகம்.

வாயுதேவன் சூலதீர்த்தக் கரையில் ஓர் இலிங்கம் அமைத்து, செவ்வந்தி மலர்களால் வழிபட்டுக் கந்தவாகன் ஆகிய தலம் இது வாகும்.

கந்தவாகன் - வாசனையைக் கொண்டு வருபவன்.

### 38. சொக்கீசம்

காமாக்ஷி அம்மன் கோயிலுக்கு அருகில் இருக்கிறது. சோழர் காலக்கோவில். தெற்கிருந்த நக்கர் கோயில் என்பது இதன் பண்டைய பெயர்.

## 39. தக்கீசம்

இத்தலம் பிள்ளையார் பாளையம் கச்சியப்பன் தெருவில் உள்ளது. மேற்கு முகம். செம்மையாக உள்ளது. பதிற்றுப்பத்தந்தாதி பாடல் ஒன்று முகப்பில் எழுதப்பட்டுள்ளது. தக்கேசம் எனப் புராணம் குறிப்பிடும்.

தக்கன் சிவபெருமானை நீக்கி விட்டு வேள்வி தொடங்கினான். சிவகணத் தலைவர்கள் அவ்வேள்வியை அழித்தனர். பின் தக்கன் தான் செய்த பிழையை எண்ணி வருந்தி, காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்து, இறைவனால் அருளப் பெற்றுச் சிவகண நாதனாயினன்.

## 40. தான்தோன்றீச்சுரம்

இத்தலம் உபமன்னியேசுரர் கோயில் என வழங்கப்படுகிறது. சுரகரேசத்திற்குத் தெற்கில் உப்பேரிக் குளத்தின் கீழ்க்கரையில் உள்ளது. சுரகரதீர்த்தமே உப்பேரிக்குளம் என வழங்கப்படுகிறது.

இறைவன் உபமன்னிய முனிவரின் அன்பைக் கண்டு, திருப் பாற்கடலைத் தந்து, மேலும் ஞானமும் மூப்படையாத இளமையும் கொடுத்த தலம் இதுவாகும்.

## 41. திரிகால ஞானேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி பேருந்து நிலையத்தில் உள்ளது. மேற்கு முகம். சிறந்த நிலையில் உள்ளது.

முனிவர்கள் சிலர் முக்கால உணர்ச்சியும் பெற வேண்டி ஓர் இலிங்கம் தாபித்துப் பூசிக்க, அவர்களுக்கு அதனை அளித்து பெருமான் எழுந்தருளியுள்ள தலம் இதுவாகும்.

## 42. திரிபுரேசம் (முப்புராரிக் கோட்டம்)

திரிபுராதிகள் தங்களுடைய முப்புரங்களைச் சிவபெருமான் எரித்த பின்னர் அப்பெருமானை எங்கள் மூவருள் இருவர் உனது வாயிற் காவலாளிகளாகவும், ஒருவன் மத்தள முழக்கவுமாக அருள் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கத் திரிபுராரி காஞ்சியில் எம்மை யருச்சிப்பீராயின் அப்பணி கிடைக்குமென, அவ்வண்ணமே பூசித்து அருள் பெற்றனர்.

## 43. திருமயானம்

இத்தலம் ஏகாம்பரேசுரர் கோயிலில் கொடிக்கம்பத்தை அடுத்துத் தென் கிழக்கில் மேற்கு முகமாக உள்ளது. இது தேவார வைப்புத் தலமாகும். "மைப்படிந்த கண்ணாளும்" எனத் தொடங்கும் அப்பர் திருத்தாண்டகம் காண்க.

பண்டாசுரன் என்பவனைத் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க அழிக்க வேண்டிப் பெருமான் தாமே ஒரு வேள்வியைத் தொடங்கி வேள்வித் தீயில் உலகத்துயிர்களையெல்லாம் இட்டனர்; பண்டாசுரனும் அத்தீயில் இடப்பட்டான்; பின்பு அத்தீயானது இலிங்க உருவமாகி மயான இலிங்கம் என்னும் பெயரைப் பெற்றது.

## 44. திருமாகறல்

இத்தலம் காஞ்சிபுரத்திற்குத் தெற்கே பத்துக் கல் தொலைவில் உள்ளது. இடையில் வேகவதியாறும் பாலாறும் ஓடுகின்றன. இத்தலத்திற்கு ½ மைல் தொலைவில் (தெற்கு) சேயாறு ஓடுகின்றது. அதன் தென்கரையில் கடம்பர் கோயிலும், அப்பால் 7 கல் தொலைவில் உத்தரமேரூரும் இருக்கின்றன.

திருஞானசம்பந்தரால் பாடப்பட்ட தலம் இது.

இராசேந்திர சோழனுக்கு இறைவன் பொன்னுடும்பாகத் தோன்றி, அவன் துரத்துங்கால் ஓடிப் புற்றில் ஒளித்துப் பின் வெளிப்பட்டருளினரென்ப.

## 45. திருமாற்பேறு

இத்தலம் காஞ்சிபுரத்திற்கு வடமேற்கே எட்டுக்கல் தொலைவில் உள்ளது. காஞ்சிக்கு அடுத்த புகைவண்டி நிலையம் இப் பெயராலேயே வழங்கப்படுகிறது. தற்போது இத்தலம் திருமால்பூர் என மருவி வழங்குகிறது.

திருமால் சுதரிசனம் என்னும் சக்கரத்தைப் பெறுவதற்காக இறைவனைத் தினமும் ஆயிரம் மலர் கொண்டு அர்ச்சித்து வந்தார். இறைவன் ஒரு நாள் ஒரு மலரை மறைத்து விட, திருமால் தன் கண் ஒன்றைப் பறித்து மலரோடு சேர்த்து அர்ச்சித்தார். இறைவன் அது கண்டு மகிழ்ந்து, "நீ இனிப் பதுமாக்கன் என்னும் பெயரடைவாயாக; இந்நகரமும் திருமாற்பேறு எனப் பெயர் பெறுக" என்று சொல்லிச் சக்கரத்தைக் கொடுத்து அருள் செய்தார்.

திருவீழிமிழலை என்னும் தலத்தின் வரலாறும் இவ்வாறே கூறப் படுகிறது.

அப்பரும் சம்பந்தரும் பாடிய தேவாரப்பதிகங்கள் இத்தலத்திற்குண்டு.

## 46. திரு வீரட்டானம்

இத்தலம் பெரிய காஞ்சி கோனேரி குப்பத்தாமல்வார் தெருவைக் கடந்து வடகோடியில் உள்ளது. மிகப் பாழான நிலையில் இக்கோவில் தோற்றமளிக்கிறது. ஆண்டுக்கு ஒரு நாள் கூட

பூஜை நடப்பதாகத் தெரியவில்லை. கோவிலைச் சுற்றி முள்ளும் புதரும் நிறைந்துள்ளன.

புதிய காஞ்சிப் புராணம் வீராட்டகாசம் எனக் குறிப்பிடுகிறது.

சங்கார காலத்தில், காலாக்கினி உருத்திரர் நெற்றிக்கண் தீயினால் எல்லாம் அழிக்கப்பட்டபோது, இறைவன் ஆனந்த மிகுதியால் மேன் மேலும் வீர நகையைச் செய்தார். அதனால் அவ்விடம் **வீராட்டகாசம்** என்றாயிற்று.

கொங்கண முனிவர் தவம் செய்து பலவித சித்திகளைப் பெற்றதும் இத்தலத்திலேயே.

சாக்கிய நாயனார் இறைவன் மீது கல்லெறிந்து வழிபட்டு வீடடைந்ததும் இத்தலமே என்பது செவிவழிச் செய்தியாகும். புராணக் குறிப்பு இல்லை.

## 47. திருவோத்தூர்

இத்தலம் காஞ்சிபுரத்திற்குத் தென்மேற்கே 19 கல் தொலைவில் உள்ளது. மூன்றாவது மைலில் பாலாற்றைக் கடத்தல் வேண்டும். கோயில் பெரிது. கோயிலுக்குப் பக்கத்தில் சேயாறு ஓடுகின்றது.

ஆண்பனையைப் பெண்பனையாக்கிய தலமாகும் இது. இதனைக் "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்னும் திருஞான சம்பந்தர் பாடிய தேவார அடியால் அறிக.

இறைவன் வேதத்தின் பொருளை முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் இத்தலத்திலிருந்து அருளிச் செய்தார். அதனால் இத்தலம் **திருவோத்தூர்** என்று பெயர் பெற்றது.

"இத்தகைய மாமறைநூன் முன்னுளித் திருக்காஞ்சி வரைப்பில் தென்சார், தத்துநீர் அலைபுரட்டுஞ் சேயாற்றின் றடங்கரைக்கண் இமையோர்கட்கும் மெய்த்தவர்க்கு மோதுவித்தோ மாதவினான் மேவு **திருவோத் தூரென்னும்** அத்தலத்தின் எமைத்தொழுவோர் அருமறைநூன் முழுதுணர்ந்து வீடு சேர்வார் - காஞ்சிப் புராணம். திருவேகம்பப். செய். 80

## 48. தீர்த்தேசம்

இத்தலம் பெரிய காஞ்சி சர்வ தீர்த்தக்கரையின் மேல்பால் உள்ளது.

திருவேகம்பர் காமாட்சியம்மையாரைத் தம்மைத் தழுவுதற் பொருட்டு அழைத்த போது, அண்டத்தின் அகத்தும் புறத்தும்

உள்ள எல்லாத் தீர்த்தங்களும் நதியுருவங்கொண்டு காஞ்சிப் பதியின் மேற்குத் திக்காக வந்தது, அம்மையார் இறைவனைத் தழுவிக் கொண்ட பின்னர் வேகந்தணிந்து அங்கேயே தங்கி, இறைவனைத் தீர்த்தநாதன் என்னும் பெயரால் வழிபாடு செய்தன. அதனால் இத்தலத்திற்கு இப்பெயர் வரலாயிற்று.

## 49. நல்ல கம்பர்

இவ்விலிங்கம் ஏகாம்பரநாதர் உள் பிரகாரத்தில் நிலாத்திங்கள் துண்டப்பெருமானுக்கு வலப்பக்கத்தில் வடகிழக்கு மூலையில் உள்ளது.

உருத்திரர் இறைவனோடு ஒருமை பெற, பூசித்தது நல்ல கம்பமாகும்.

## 50. நற்கீரம்

பெரிய காஞ்சி கீழண்டை ராசவீதியில் நகரீசுரர் என்னும் தலம் காணப்படுகிறது. அது இதுவாக இருக்கலாம் எனக் கருதப் படுகிறது.

புதிய காஞ்சிப்புராணத்தில் இத்தலத்தைப் பற்றிய குறிப்பு இல்லை.

## 51. நாரசிங்கேசுரம்

இத்தலம் காஞ்சிபுரத்திற்கு மேற்கே ஏழுகல் தொலைவில் உள்ள தாமல் என்னும் ஊரில் உள்ள கோயிலின் குளக்கரையில் வடமேற்கு மூலையில் சிறிய கோயிலாய் உள்ளது.

இரணியனைக் கொன்ற திருமால் வெற்றி பெற்ற வெறியால் மூன்றுலகத்தையும் வருத்தத்தலைப்பட்டனர். யாவரும் இறைவனிடம் முறையிட, பெருமான் சரபமாய் வந்து நரசிங்கத்தைக் கொன்று அதன் தோலை மேலே போர்த்துக் கொண்டார். பின் திருமால் நாரசிங்கப் பெருமானை அமைத்துப் பூசித்து, பாவத்தின் நீங்கித் திருவருள் பெற்றார்.

## 52. நாற்பத்தெண்ணாயிரவீசுரம்

## 53. பச்சிமாலையம் (திருமேற்றளி)

திருமால் காஞ்சி வீராட்டகாசத்திற்கு எதிரில் சக்கரதீர்த்தம் என்னும் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கித் தவம் செய்து கொண் டிருந்தனர். அவ்விடம் பச்சை வண்ணர் ஆலயம் எனப்படும் - புதிய காஞ்சிப்புராணக்குறிப்பு.

திருமேற்றளியில் திருமால் சிவசாரூபம் பெற்றதாகக் காஞ்சி மகிமை என்னும் நூல் கூறுகிறது. 1927-ஆம் ஆண்டுப்பதிப்பு. அதில் பச்சிமேச்சரர் என்று காணப்படுகிறது.

## 54. பணாதரேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி ஆலடிப் பிள்ளையார் கோவில் தெருவில் உள்ளது. வேகவதி நதியின் வடகரை. ஆதிபிதேசம் என்னும் தலத்திற்குத் தெற்கு.

கருடனால் தம் குலம் அழிதலைக் கண்ட பாம்புகள் காஞ்சியில் பணாதரேசப் பெருமானைத் தாபித்துப் பூசித்துத் தமது துன்பத்தைக் கூறி முறையிட்டன. பெருமான் மகிழ்ந்து அப்பாம்புகளை ஆபரணமாக அணிந்து கொண்டார், பின் அப்பாம்புகள் கருடனைக் கண்டு 'ஏன் கருடா! சுகமோ?' என்று கேட்டன.

## 55. பரசுராமீசுரம்

இத்தலம் காஞ்சிபுரத்திற்கு வடக்கில் திருமால்பூர் என்னும் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கில் பள்ளூரைச் சார்ந்துள்ளது. இதை அடுத்து ஓடுவதுதான் பழைய பாலாறு. கலிங்கத்துப்பரணி, பெரியபுராணம் முதலியவை குறிக்கும் பாலாறு இதுவே. இப்பொழுது காணப்படுவது பாலாற்றின் புதிய திசை மாற்றம்.

இவ்வாறு திருஅருணை வடிவேலு முதலியார் பதிப்பித்த புராண உரைநடைக் குறிப்பில் உள்ளது.

பரசுராமனின் தவத்தைக் கண்டு மகிழ்ந்து இறைவன் அரசர் குலத்தை அழிக்க மழுவாயுதத்தை உண்டு பண்ணித் தந்தனன். 'பரசாயுதம் (பரசு-மழு) பெற்றமையால் பரசுராமன் என்னும் பெயர் பெறுக' என்றருளினார். அப்பரசுராமன் பூசித்தமையால் இத்தலத்திற்கு இப்பெயர் வந்தது.

## 56. பராசரம்

இத்தலம் பெரிய காஞ்சி காந்தி சாலை செட்டித்தெருக் கோடியில் உள்ள வழக்கறுத்தீசர் ஆலயத்தினுள் தென்பக்கத்தில் சிறு கோயிலாய் உள்ளது.

வழக்கறுத்தீசர் ஆலயத்தைப் பற்றிய புராணக் குறிப்பு இல்லை. வசிட்டரின் பேரராகிய பராசர முனிவர் வசிட்டருடைய ஏவற்படி காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்தார். அதனால் இறைவர் அருள் பெற்று, சுதாசன் என்னும் அரக்கனால் விழுங்கப்பட்ட தம் தந்தையை நேரில் கண்டார். அசுரர் குலத்தை அடியோடு அழித்து, வெகுளி தணிந்து வாழ்ந்தார்.

57. பிராந்தகீச்சுரம்

58. பல பத்திரேசுரம்

இத்தலம் பிள்ளையார் பாளையம் சாலைத்தெரு வடகோடியில் கிழக்குப் பக்கம் வயல் வெளியில் இலிங்க மாத்திரமாய் உள்ளது. பல பத்திரராமேசம் எனப் புதிய காஞ்சிப் புராணம் கூறும்.

கண்ணனின் தமையனாகிய பலராமன் முனிவர்களின் ஆலோசனைப்படி காஞ்சியில் இலிங்கம் அமைத்துப் பூசித்துப் பல வரங்களைப் பெற்ற தலம் இதுவாகும்.

59. பிறவாத்தானம்

இத்தலம் பெரிய காஞ்சிபுரம் கம்மாளத்தெரு வடகோடியில் சாலைக்குக் கிழக்கில் உள்ளது. இறவாத்தானம் என்னும் தலத்திற்கு நேர் கீழ்பகுதியில் உள்ளது. மேற்குச் சன்னிதி. பல்லவ சிற்பம் உள்ளது. பூசை முதலியன இன்றிப் பாழ்பட்ட நிலையில் உள்ளது.

வாமதேவர் என்னும் முனிவர் தாயினது கருப்பத்தில் இருக்கும் போதே பிறவிக்கு அஞ்சி இறைவனை வழிபட, இறைவன் கட்டளைப்படி, பிறந்த பின் காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பிறவி நீங்கப் பெற்றார்.

60. புண்ணிய கோடீச்சரம்

இத்தலம் சின்ன காஞ்சிபுரம் செட்டித்தெருவிற்குத் தென் கிழக்கில் உள்ளது. கிழக்கு முகம். புதிய புராணத்தில் இது இரண்டாவது தலமாகும்.

திருமால் காஞ்சியில் ஒரு தடாகத்தை உண்டாக்கி இலிங்கம் தாபித்து, வரதா! வரதா! என அழைத்து, உலகங்களையெல்லாம் படைக்கும் ஆற்றலை எனக்கு அருள வேண்டுமென வேண்டினர். பெருமான் "எம்மை 'வரதா வரதா' என அழைத்தமையால் நீ வரதராசன் எனப் பெயர் பெற்று விளங்குக" என்று அருள் செய்து மற்றும் அவர் கேட்ட வரங்களையும் ஈந்தார்.

61. மங்களேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி மங்கள தீர்த்தத்தின் தென் கரையில் மறைத்து வைக்கப்பட்டுள்ளது.

மங்களை என்னும் பெயருடைய இறைவியின் தோழி ஒருத்தி, மண்டபம் ஒன்று உண்டாக்கி, அதற்குப் பின்னுக மங்களேசரைத் தாபித்து, மங்கள தீர்த்தம் என ஒரு தீர்த்தம் உண்டாக்கிப் பூசித்தனர்.

**62. மஞ்சள் நீர்க்கூத்தர்**

இத்தலம் சித்தீசம் என வழங்கப்படுகிறது. இது மூங்கில் மண்டபத்தை அடுத்து மஞ்சள் நீர்க்கால்வாயின் வடகரையில் உள்ளது. கிழக்கு முகம். நல்ல நிலையில் உள்ளது.

இறைவி, மஞ்சள் காப்பணிந்து முழுகிய நீர், மஞ்சள் நீர் நதியாகப் பெருகிச் செல்லுங்கால், இறைவனுர் மகிழ்ந்து அந்நதிக் கரையில் இலிங்கமாகத் தோன்றினுர். அதனுல் அவருக்கு மஞ்சள் நீர்க்கூத்தர் என்னும் திருப் பெயர் உண்டாயிற்று.

**63. மணிகண்டீசுரம்**

இத்தலம் சின்ன காஞ்சிபுரம் யதோத்காரிப் பெருமாள் கோவிலுக்குச் சிறிது கிழக்கே, பெருஞ்சாலைக்குத் தென்புறம் உள்ளது. மேற்கு முகம். நந்தி சற்றுப் பெரிது. இதனுள் பணு மணீசம் என்னும் தலமும் உள்ளது.

திருமால், அயன் முதலிய தேவர்கள் காஞ்சியில் மணிகண்ட நாதன் என்னும் பெயரால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்து, இறைவனை விட முண்ணச் செய்த பாவம் நீங்கப் பெற்று, பாற் கடலைக் கடைந்து அமுதம் எடுத்துண்டு, இறவாப் பெருநலம் பெற்றனர்.

**64. மதங்கீசம்**

இத்தலம் பெரிய காஞ்சி மிஷன் மருத்துவமனைக்கு வட கிழக்கில் சாலைக்கு வடவண்டையில் உள்ளது. மேற்கு முகம். இத்தலம் பல்லவர்களால் அமைக்கப்பட்டது என்பதற்கு அடையாளங்கள் உள. சிங்கம் தாங்கிய தூண்கள் உள்ளன.

மதங்க முனிவர் ஐம்புலனை அடக்க வேண்டிப் பூசித்த தலம் இதுவாகும்.

**65. மாகாளேசம்**

இத்தலம் பெரிய காஞ்சி காமாட்சியம்மை கோயிலின் வடக்கு வாயிலில் வடமேற்கில் உள்ளது.

மாகாளன் என்னும் ஓர் பாம்பானது காளத்தி நாதர் ஆணைப் படிக் காஞ்சியில் இலிங்கம் அமைத்துப் பூசித்து, மீண்டும் காளத் தியை அடைந்து வீடடைந்தது.

## 66. மாதலீசுரம்

இத்தலம் காணப்படவில்லை. மறைந்து போன தலங்களுள் இஃதொன்றாகும்.

இந்திரனுடைய சாரதியாகிய மாதலி என்பவன் காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்து, இந்திரனுக்கு மிக இனியவனானான்.

கங்கை கொண்டான் மண்டபம் அருகில் தர்க்காத் தோட்டத்தில் இலிங்கம் மாத்திரம் உள்ளதாகச் சிலர் இத்தலத்தைப் பற்றிக் கூறுகின்றனர்.

## 67. மாண்டகன்றீசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி - சகோதர தீர்த்தத்தின் கிழக்குப் பகுதியில் உள்ளது. நல்ல நிலையில் உள்ளது. கிழக்கு முகம். இக்கோவில் நந்தி நேரே இறைவனைக் காணாமல் சற்று வடக்கு முகமாகத் திரும்பி உள்ளது. மாண்டகன்னீசம் எனப்புராணம் குறிப்பிடுகிறது.

மாண்டகன்னி முனிவர் தமது பெயரால் இலிங்கம் தாபித்துப் பூசித்து, இந்திரனும் நாணும்படி தேவமாதர் ஐவர் இன்பத்தை நுகர்ந்து முடிவில் முத்தி அடைந்த தலம் இதுவாகும்.

## 68. முத்தீச்சுரம்

இத்தலம் பெரிய காஞ்சி காந்திசாலைக் கடைத் தெருவில் உள்ளது. நல்ல முறையில் போற்றப்பட்டு வருகிறது.

கருடன், தன் மாற்றாந்தாயாகிய கத்துருவால், தன் தாய் சுபருணை சிறையிடப்பட்டதை நீக்க வேண்டி, தேவலோகம் சென்று அமிழ்தத்தைக் கொண்டு வந்து தாயிடம் கொடுத்தனன். மேலும் கத்துருவின் புதல்வர்களாகிய பாம்புகளைக் கொல்ல முத்தீசரை வணங்கி வரம் பெற்றனன்.

ஏகாலியர் குலத்துப் பிறந்த திருக்குறிப்புத் தொண்ட நாயனார் இத்தலத்தில் வீடுபேறடைந்தனர்.

முத்தீசம் என்னும் பெயரால் காஞ்சியில் பல தலங்கள் உள்ளன. எனினும் இதுவே யாவராலும் நன்கு அறியப்பட்ட தலமாகும்.

## 69. முழவீசுரம்

## 70. முனீசுரம்

## 71. ராமீசுரம்

ஆதிசைவர்கள் அக்கிரகாரக் கோடியில் உள்ளது. ஸ்ரீராமர் ராவணசங்காரஞ் செய்து சேதுவில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்து, எஞ்சிநின்ற தோஷத்தைப் போக்கிக் கொள்ள அந்த ராமநாதர் ஆணையால் காஞ்சிக்கு மீண்டும் வந்து பூசித்தார்.

## 72. ருத்ரகோடீசுரம் (மொட்டைக் கோபுரம்)

ஒரு கற்பத்தில் ருத்ராதிகாரத்திலிருந்த கோடி ருத்திரர்கள் முத்திபதம் விரும்பிப் பூசித்தனர்.

## 73. வயிரவேசுரம்

இத்தலம் சோளீஸ்வரர் கோயில் என வழங்கப்படுகிறது. இது பிள்ளையார்பாளையம் சோளீஸ்வரர் தெருவில் உள்ளது. இக்கோயிலுள், குருபைரவேஸ்வரர், விடுவச்சேனேஸ்வரர், அசிதாங்க பைரவேஸ்வரர், (அல்லது சண்டபைரவேஸ்வரர்) சம்மாரபைரவேஸ்வரர், குரோதனபைரவேஸ்வரர், உன்மத்தபைரவேஸ்வரர், கபால பைரவேஸ்வரர், பீஷணபைரவேஸ்வரர் - என எட்டுத் தலங்கள் அமைந்துள்ளன. கிழக்கு முகம். மிகச் செம்மையாகப் பரிபாலித்து வருகின்றனர். 10-9-1981 அன்று குடமுழுக்கு நடந்துள்ளது.

இத்தலத்தில் முள் இல்லாத வில்வமரம் இருப்பது வியப்பிற்குரியது.

வயிரவர் ஐந்து முகமாக இருந்த பிரமனின் செருக்கை அடக்க ஒரு தலையைக் கிள்ளி எறிந்தார். அதனால் இறந்த பிரமன் இறைவன் அருளால் பிழைக்க, இறைவனிடம் வாழ்நாள் தரும்படி துதித்து, நான்முகனாய் இருந்து வாழவும் பிழையை மன்னிக்கும்படியும் வேண்டி வரங்கள் பெற்றனன்.

வயிரவர் தம் பெயரால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பல வரங்களைப் பெற்றனர்.

## 74. வராகீசுரம்

இத்தலம் காஞ்சிக்கு மேற்கே ஏழு கல் தொலைவில் உள்ள தாமல் என்னும் ஊரில் உள்ள குளத்தின் தென் கரையில் பெரிய கோயிலாய் இருந்து சிதிலமான நிலையில் உள்ளது.

இரணியாக்கன் என்னும் அசுரனைத் திருமால் வராக அவதாரம் எடுத்துக் கொன்று, பூமியை நிலைநிறுத்தினர். அவ்வெற்றிச் செருக்கால் உலகுக்குத் துன்பம் செய்த போது இறைவன் வேடுவராகி

அப்பன்றியைக் கொன்று அதன் ஒரு கொம்பை அணிந்து கொண்டனன். பின் திருமால் இறைவனைப் பூசித்துத் திருவருள் பெற்ற தலம் இதுவாகும்.

### 75. வன்மீகேசுரம்

இத்தலம் பிள்ளையார் பாளையம் சாலைத்தெரு வடகோடியில் மேற்குப் பக்கம் வயல் வெளியில் இலிங்க மாத்திரமாய் உள்ளது. இலிங்கத்தைச் சுற்றி இப்போதும் புற்றுகள் காணப்படுகின்றன, (வன்மீகம் - புற்று)

வேள்வியில் தோன்றிய கீர்த்தியைத் திருமால் முழுதும் கவர்ந்து செல்ல, அதை மீட்டும் பெற வேண்டி இந்திரன் காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்து, பல வரங்களைப் பெற்றனன் என்பது புராணம். இறைவன் ஆணைப்படி புற்றில் செல்லாகத் தோன்றி, திருமாலின் வில்நாணை அரித்து அறுத்துக் கீர்த்தியைப் பெற்றான்.

### 76. வன்னீசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி சகோதர தீர்த்தத்தின் தென்கரையில் நீரை ஒட்டி உள்ளது. கிழக்கு முகம். மேல் விமானம் இல்லை. நல்ல நிலையில் உள்ளது.

அக்கினி தேவனுடைய சகோதரர் மூவர், தேவர்களுக்குத் தரப்படும் அவிசைச் சுமக்க இயலாமல் இறந்தனர். அக்கினி தேவன் தனக்கும் இக்கதி வருமோ என அஞ்சித் தீர்த்தத்துள் மறைந்து வாழ்ந்தனன். பின்னர் அத்தீர்த்தக் கரையில் வன்னிசப் பெருமானைத் தாபித்துப் பூசித்து, அவிசைச் சுமக்கும் ஆற்றலைப் பெற்றனன்.

### 77. வாணேசுரம்

இத்தலம் பெரிய காஞ்சி ஓணகாந்தன் தளிக்கு வடமேற்கில் சாலைக்குக் கிழக்கில் ஒரு சிறிய குளக்கரையில் இலிங்க மாத்திரமாய் உள்ளது.

இறைவனால் பல வரங்களைப் பெற்ற வாணாசுரன் கொடுத்த வரையே மதியாமல் இறைவனோடு போர் செய்ய ஆயத்தமானான். இறைவன் வாணாசுரனிடம் 'நீ கண்ணனோடு போர் செய்; அவனோடு போர் செய்து வெற்றி பெற்றால் பின் என்னோடு போர் செய்யலாம்' என்றனன். அவ்வாறே வாணாசுரன் கண்ணனுடன் போர் செய்து தோற்றுத் தன் கைகளை எல்லாம் இழந்தனன். பின் காஞ்சியில் தான் முன்பு பூசித்த இலிங்கத்தை அடைந்து வேண்டி, கணத்தலைமை பெற்றான்.

78. வாலீச்சுரம்

இத்தலம் ஏகாம்பரர் ஆலயத்துள் கச்சி மயானத்திற்குப் பின்புறம் சிறு கோவிலாய் உள்ளது. மேற்கு முகம்.

சித்தர்கள் வழிபட வாயுலிங்கம் தோன்றிற்று. அவ்விலிங் கத்தை வாலியானவன் வழிபட்டு, தன்னைப் போரில் எதிர்த்தவர் கள் பலத்தில் பாதியைத் தான் அடையவும், வானர வீரர்களுக்கு அரசனுகவும் இருக்க வரங்களைப் பெற்றுன்.

79. விண்டீசுரம்

இத்தலம் ஏகாம்பரரேசர் கோயில் ஆயிரங்கால் மண்டபத்தில் உள்ள கோபுர வாயிலுக்கு நேரே தென் பிரகாரத்தில் உள்ளது. விண்டுவீச்சுரம் எனப் புதிய காஞ்சிப் புராணம் கூறும்.

சிவபெருமானின் திருநடனத்தைக் காண ஆவலுற்றுத் திருமால் காஞ்சியில் இலிங்கம் அமைத்துப் பூசித்துத் திருவருள் பெற்று, தில்லையை அடைந்து இலக்குமியுடன் இறைவனின் ஆனந்த நடனம் காணப்பெற்றுர்.

80. விண்டுசேனேசுரம்

81. வித்தேசுரம்

82. விசுவநாதேச்சுரம்

இத்தலம் பெரியகாஞ்சி சர்வதீர்த்தக் கரையின் மேல் திசையில் உள்ளது.

காசி விசுவநாதர் தம்மூராகிய காசியிலும் காஞ்சியே சிறந்த தென்று எண்ணி வந்து தங்கிய தலம் இதுவாகும்.

83. வீரராகவேச்சுரம்

இத்தலம் வயல் வெளியில் இலிங்க மாத்திரமாய் உள்ளது. புத்தேரித் தெருவில் உள்ள முருகர் கோயில் பக்கம் ஒரு சிறிய சந்து வழியாகவும் இவ்விடத்திற்குச் செல்லலாம்.

கானகத்தில் சீதையை இழந்த இராமன் அகத்திய முனிவரைக் கண்டு, அவரடியில் வீழ்ந்து புலம்பினன். அகத்தியர், இராமனி டம் ‘நீ காஞ்சிக்குச் சென்று இலிங்கம் நிறுவிப் பூசிப்பையாயின் இராவணனை வெல்லும் ஆற்றல் பெறுவாய்!’ என்று கூறினுர். அவர்

ஆணைப்படி இராமன் காஞ்சியில் வீரராகவேசன் என்னும் பெயரால் இலிங்கம் அமைத்து வழிபட்டு, வீரம், பாசுபதாத்திரம், பிரமாத்திரம் நாராயணுத்திரம் முதலியன பெற்று, இராவணனை அழித்து அயோத்தி அடைந்தான்.

## 84. வெள்ளக் கம்பர்

இத்தலம் ஏகாம்பரேசர் ஆலயத்தில் உட்பிரகாரத்தில் தெற்குப் பக்கம் கருவறையை ஒட்டி உள்ளது.

பிரமன் தூய சிந்தையோடு பூசித்தமையால் அவ்விலிங்கம் வெள்ளக் கம்பம் எனப்படும்.

குறிப்பிட்டுத் தந்த 84 தலங்களுள் விபரம் அறிய முடியாத காஞ்சித்திருத்தலங்கள் பின்வருவன :-

1. அசுரேசம்
2. எழுலிங்கீச்சுரம்
3. கரைக்கண்டேச்சரம்
4. கேசரீசம்
5. சிலம்பர் துறை
6. நாற்பத்தெண்ணாயிரவீசுரம்
7. பராந்தகீசுரம்
8. முழவீசுரம்
9. முனீசுரம்
10. விண்டுசேனேசுரம்
11. வித்தேசுரம்

84 தலங்கள் அன்றி வேறு தலங்களாவன :-

1. கற்கீசம்
2. ஒற்றுக்கேட்ட முத்தீசர் தலம்
3. மல்லிகார்ச்சுனர்
4. சீதேஸ்வரர்
5. இலட்சுமணேஸ்வரர்
6. தவளேஸ்வரர்
7. முத்தேஸ்வரர்
8. மச்சேஸ்வரர்
9. பார்க்கவேசம்
10. மகாலிங்கேஸ்வரர்

---

காஞ்சித் திருத்தலங்களைப் பற்றிய குறிப்புக்களைச் சேகரித்தவர் புலவர் எஸ். சீனிவாசன் அவர்கள். அவருக்கு உதவி செய்தவர், K. E. ராஜசேகரக் குருக்கள் அவர்கள். இவ்விருவர்களுக்கும் நூல் நிலையம் நன்றியைத் தெரிவிக்கின்றது.

உ

சிவப்பிரகாசனிணையடி துணை

# காஞ்சிப் புராணம்

## 1 பாயிரச் சருக்கம்

[கணபதி]

பொன்மதிற் காஞ்சியம் புராணம் செப்புவான்
தொன்மையிற் செந்தமிழ்த் தொடையல் யாப்புற
மின்மணிப் பணிபுனை விகட சக்கரச்
சின்மயக் களிற்றினைச் சிந்தை செய்குவாம்

### சரணம்

[ஏகாம்பரநாதர்]

1 சீர்பரவு பரஞான வொளியாகி
வெளியாகித் தெளிதல் தேற்று
வேர்பரவு மருவெனவு முருவெனவு
முருவருவ மெனவுந் தானாய்
நீர்பரவு மறைமுடிவுக் கப்பாலா
யானந்த நிருத்தஞ் செய்தே
பார்பரவ வருமேகாம் பரத்தொருவ
ரிருபதமே பணிதல் செய்வாம்.

---

### குறிப்புரை

காஞ்சிப் புராணம் செப்பச் சின்மயக்களிற்றைத் தியானிப்போம். காஞ்சிமதில் பொன்மதில் என்று புகழப்படும். செப்புவான்-சொல்லும் பொருட்டு-சின்மயம்-அறிவுவடிவம் ப்ரக்ஞானம் பிரம்மம் என்று ஐதரயோபநிஷத்கூறும். சின்மயக்களிறு என்றது விகடசக்கர விநாயகரை.

1. தெளிதல் தேற்ற-அறியமுடியாத. சிவத்திற்கு அருவத் திருமேனியும் (சிவம், சக்தி, நாதம், விந்து) உருவத்திருமேனியும் (மகேசன், உருத்திரன், திருமால், பிரமன்) அருவுருவத்திருமேனியும் (சிவலிங்கம்) உண்டு-ஆதலின். அரு என உருஎன, அருவுரு எனக்கூறினர். நிருத்தம்-திருக்கூத்து. 'ஏகம்பம் மேவி ஆடும் இறை' என்பர் திருஞானசம்பந்தர். இங்கு இறைவன் ஆடும் கூத்து காப்புக் கூத்து. ஏகஆம்பரம்-ஒற்றைமாமரம். ஆம்ரம் என்ற வடசொல் ஆம்பரம் ஆயிற்று. ஏகாம்பரர் என்ற சொல் முதல் எழுத்துக் குறைந்து 'கம்பர்' எனவந்தது.

[மாநிழல்]

2 மறையுருவாய்ச் சொற்பிரம மயமாகிப்
பெருஞான வரம்ப தாகி
இறையுருவாய் மாவடிவா யகிலகலைச்
சினைப்பொதுளி யாவ ராலும்
அறிவரிதாய்ப் பராபரமுத் தியை யடிய
வர்க்கட்குதவி யருள்வான் காஞ்சி
நிறைதனிமா நிழலடைந்து பிறவிவிடா
யொழிதரவே நினைத்து மன்றே.

[காமாட்சியம்மை]

3 பண்டுசிவ னிடத்துதித்திவ் வண்டமுழு
வதுமுதவும் பரிவி னாலே
சண்டதுண்டக் கனற்பால் விழிக்கால
வுருத்திரனைத் தரணி யாவு
முண்டகொண்ட னிறத்தானை முண்டகனை
விழிகளினா லுதவி மேன்மை
கண்டதனால் அபிதானங் காமாட்சி
யாமுமையைக் கருதி வாழ்வாம்

---

2 சினை பொதுளி-கிளை நிரம்பி. மாநிழல் அடைந்து வெப்பம் தீர்வோம். பிறவிவிடாய்-பிறவிவெப்பம். இப்பாடல் ஒற்றை மாமரத்தைப் புகழ்கிறது. இம் மரத்தின் சிறப்பைப் புதிய காஞ்சிப்புராணம் 'மீதுமன்னிய மூலமும் கிழங்கும் நோக்குசாகையுமாய் விரைகமழும்-பாதவந்தனை உணர்ந்தவன் வீடு பற்றும்: ஆங்கது பலகனி படைத்துச்-சீத வார்புனல் ஒழுக்கருங்கம்பைத் திருநதிக்கரை மருங்கு ஒலிவேதச்-சூதமாமரம் எனத் திகழ்ந்தொளிரும்-தொல்லைவையகம் பெரும் பயன்படைப்ப,' என்றும், 'ஏழிரட்டிய கல்வியும் அதன்மேல் மல்லிகைக்கொடி எனப் படர்ந்த மரும்-பாழி விச்சைகட் கிறைவியாம் காமக் கண்ணி அத்தரு பசுங்கொடிக்கினியாள்' என்றும் புகழும்.

3 சிவனிடத்து உதித்து-சிவபெருமானிடத்தில் தோன்றி. பரிவினால்-அன்பால். சண்டதுண்டம்-கடுமையானமுகம். 'துண்டம்-முகம். 'ஆனனம்-வதனம் துண்டம் வக்கிரம் முகம்' (பிங்கலம். 10347 அனல் விழி கால உருத்திரன் என மாற்றுக. நெருப்புக்கண்ணை நெற்றியிற் பெற்ற உருத்திரன். கொண்டல் நிறத்தான்-மேகம் போன்ற நிறமுடைய திருமால். முண்டகன்-பிரமன். தேவி மூன்று கண்களில் மும்மூர்த்திகளைப் படைத்தாள். சிவனிடத்து உதித்துப் பரிவால், உருத்திரனை, கொண்டல்

4 மன்னுதிரு மணநாளில் வதுவைவினைத்
திருவமுகும் வதன வோவும்
புன்னகையு மையாணி மங்கலநாண்
டிருத்துகையும் புனிதன் பார்வை
தன்னிலுறு பெருநாணு மருக்கியநோக்
கமுமொதுக்கந் தருபொற் சீரும்
இன்னிலையும் பொன்னுடையுங் கன்னியுடை
இன்னருளு மகத்துள் வைப்பாம்.

[விகடசக்கர விநாயகர்]

5 அருள்பெறுவீ ரத்திறைவ ரணிதவள
முண்டநகைத் தருளு மாழி
விரவவது பதத்தடக்கி யிருப்பதனைக்
கண்டுபண்டு விண்டு சேனர்
புரவிகட நடம்புரியச் சக்கரமங்
கவர்க்குதவும் பொற்பா லிப்போ
வருவிகட சக்கரமுக் கட்கடவுள்
மலரடியே வணக்கஞ் செய்வாம்.

---

நிறத்தானை, முண்டகனை விழிகளில் உதவி, காமாட்சி என்ற பெயர் பெற்ற உமை. அபிதானம்-பெயர். 'எண்கணனை எழில் வலக் கண்ணினும் பதுமவன்கணனை மற்றிடக் கண்ணினும், நுதல் மேல் ஒண்கணளனை நன்னிவிடக் கண்ணினும் உலவாப்-பெண்கள் நாயகி ஈன்றனள் முத்தொழில் பிறங்க' (காஞ்சி, திருவேகம்பம். 10).

4 வதுவைவினை-திருமணச்சடங்கு. ஐஆணி-அழகிய தாலியில் உள்ள திருநாணி. நாண்திருத்துகை, காதற்குறிப்பு, அருகிய நோக்கு-கடைக்கண்ணால் பார்த்தல். 'ஒதுக்கம்-ஒல்கி நடத்தல். 'கிண்கிணி ஒதுக்கிடை மிழற்றச் சென்று எய்தி (சிந்தாமணி-குணமாலை 164) 'கன்னி' என்றார். 'பான்மொழிகன்னி' என்று சித்தியார் கூறுதலின்:

5 வீரபத்திரர் அணிந்த பிரம்மகபாலம் (விடுவச்சேனரின் விகடக்கூத்தால்) சிரித்தது. அக்கபாலம் விழுங்கிய சக்கரம் உடனே பூமியில் விழுந்தது. அதனை விநாயகர் திருவடியில் மறைக்க மீளவும் விகடநடம்புரிந்து விடுவச்சேனர் சக்கரம் பெற்றார். அந்த வரலாறு இங்கே பேசப்படுகிறது.

முண்டம் பிரம்ம கபாலம். 'இறையான் கையில் நிறையாத முண்டம் நிறைந்த எந்தை' (பெரிய திருமொழி).

[முருகன்]

6 அனித்தமெனுஞ் சிறைபிறவிப் பெரும்பிணிக்கு
மருந்திதுவென் றறிவி லாய்ந்து
முனித்தவரன் றிருவேகாம் பரத்திறைவர்க்
கினிதெனவே முன்ன மீயுங்
கனிக்குவிளை பேராசை தணவாம
லென்றுளுங் கருணை கூர்ந்தே
தனித்திருமா வடியினுறை யறுமுகவ
னிருசரணஞ் சரணஞ் செய்வாம்

[வீரபத்திரர்]

7 சத்துருவி னிலைமைபெறு தக்கன்மக
மடுநாளிற் றலைமை சான்ற
பத்துருவு பெறுதிருமான் முதலாய
பண்ணவர்தம் படிவம் யாவு
முய்த்துருவு தனிவாட்கைப் பெருவார்கை
பெற்றவுருத் திரமூர்த் திப்பொற்
பத்திரையன் புறுவீர பத்திரர்சித்
துருவினையே பராவல் செய்வாம்

---

6 முனிவர் இறைவனுக்கு வழங்கிய மாங்கனியின் விருப்பத் தால் இன்னும் மாமரத்தின் அடியில் உறையும் முருகனைப் பணிவோம்.

(தற்குறிப்பேற்றஅணி) பழைப் புராண வரலாற்றை நினைந்து இங்ஙனம் பேசப்பட்டுளது.

அனித்தம்-நிலையற்றது. தணவாமல்-நீங்காமல்.

முதல் சரணம் திருவடி. இரண்டாம் சரணம் அடைக்கலம்' சரணௌ ஶரணம் (த்வயம்)

7 தக்கன்மகம்-தக்கயாகம். பெருவார்-நீண்டகேடயம். பத்திரை, வீரபத்திரரின் இல்லாள். 'பத்திரைகணவன் வீரபத்திரன் பெயர் (பிங்கலம். வானவர் 114)

[வடுகக் கடவுள்]

8 கொச்சையறி வுற்பவமாங் கொள்கையினு
லரிபிரமர் கூடி வீணில்
மெய்ச்சமரம் புரிந்திகலி யொருவரொரு
வரைமிகவும் வெறுக்கு நாளில்
அச்சுறவுற் றவரகந்தை விடுமாறு
நெருக்கியினி தருளே செய்யுங்
கச்சிவடு கக்கடவுண் முச்சிகைவேற்
படையினையே கருதி வாழ்வாம்.

[சமயகுரவர்]

9 காழியர்கோன் றிருவாக்கிற் பெருஞானம்
பரிமளிக்குங் கடவுட் பாடற்
பாழியமண் குழுக்குலைய வாகீசர்
புகல்மதுரப் பனுவற் செய்யுள்
ஏழிசையி னுவலூர்ப் பெருமானுர்
தோழமைசேர் யாப்பு யாவும்
ஊழிமுத லோதுமர புடையே னென்
வணக்கமவர்க் குவப்பா மன்றே

---

8 சமரம்-போர். இகலி-மாறுபட்டு. அறக்கருணையும் மறக் கருணையும் கூறப்பட்டுள்ளன. வடுகன்-வயிரவன். இவர்கரத்தில் கொண்டுள்ளவேல் முச்சிகை உடையது என்பதை 'கஞ்சுகன் மூவிலை வேலோன் காரி' என்ற பிங்கலம் கொண்டு அறிக. (வானவர் 115)

9 காழியர்கோன்-திருஞானசம்பந்தர். பாழி-சமணர் தங்கும் இடம். 'படர்உழந்து நடுங்கி அமண் பாழி யறை இடைவிழுந் தார். (பெரிய புராணம்-திருநாவுக்கரசு. 50) வாகீசர்-திருநாவுக்கரசர். பனுவல் செய்யுள்-பதிகப்பாடல் 'இணைகொள் ஏழ் எழுநூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன் (சுந்தரர். பதிகம் 65-2) நாவலூர்ப் பெருமான்-சுந்தரர். 'நாதனுக்கூர் நமக்கூர்-அணிநாவலூர். (சுந்தரர் தேவாரம்)

[மணிவாசகர், நாயன்மார், சேக்கிழார்]

10 போதமூர் கண்ணீரும் வெண்ணீறும்
மெய்ப்புளகப் பொற்பும் வாய்த்த
வாதவூ ராளியிரு பதநினைந்து
மற்றுமுள வண்சீர்த் தொண்டர்
பாதமுறு துகளெனது சிரமேற்கொண்
டவரதுசீர் பராவ வல்ல
மேதகுகுன் றைப்பதிவாழ் வரகவிதா
சிரோமணிதாள் வியத்தல் செய்வாம்.

அவையடக்கம்

11 மொழிக்குறைதீர் தருமொன்பான் சுவைப்பயனை
யறியாது முனிவர் நூலின்
வழிப்படவே யுரைப்பதிவ ணெவ்வணமென்
றெண்ணியவ மதித்து நாளும்
பழித்திடநீர் பெரும்புலவீர் உமதுதமிழ்ச்
சுவைக்கவிதை பலிக்கு மாற்ற
இழிப்புநகை யென்னுமிரு சுவைப்படவே
யுரைப்பனெனக் கினிதா மென்றே

12 வெற்பினுயர் மேருகிரி மாற்றேறு
பசும்பொனினல் விரகி லாது
சிற்பநெறி யறியாதோன் புரிபணியு
மப் பொருளின் சிறப்பாற் கொள்வர்
கற்பிலியா னுரைத்ததமிழ்ப் பனுவலுமித்
திருக்காஞ்சிக் காதை யான
பொற்பினிலற் புதமுறக்கொண் டினிதெனவே
புகல்வர்பெரும் புலமை யோரே.

---

10 அவர்சீர்பராவவல்ல-அந்த நாயன்மார்களின் புகழ வன்மை பெற்ற. சேக்கிழாரை 'வர கவிதா சிரோமணி' என்று பக்திச் சுவைசொட்டப் புகழ்கிறார் ஆசிரியர். 'தூக்குசீர்த் திருத் தொண்டத்தொகை விரிவாக்கினல் சொலவல்லபிரான்' என்று புதியகாஞ்சிப்புராணம் புகழும்.

11 முனிவர்-வியாசர். சூதமுனிவர் என்றும் கூறலாம். ஒன்பான்சுவை அறியாதயான் இழிப்பு நகை என்ற சுவை உண்டாகப் பாடுவேன்.

12 மாற்று ஏறு பசும் பொன்-மாற்று உயர்ந்த பொன்.

[கயிங்கரியபரர்]

13 திருநெறிசேர் நாற்பத்தெண் ணுயிரவர்
மாகேசர் செழித்து வாழி
கருதரிய சிவமறையோர் தானிகர்
கருணர்குலர் கனத்து வாழி
விருதுசெறி பல்கலைதேர் பரிசனமாம்
எனையோரு மிகவே வாழி
மருவுதிரு வேகம்பர் கயிங்கரியத்
தன்பரெலாம் வாழி தானே.

வாழ்த்து

**14** பெரிதுமறை யொலிவளர்க திங்கள்முறை
தவறாது பெய்க வானந்
தருமநெறி நீதிபுரி யரசர்செங்கோ
லோங்கிடுக தழைத்து நாளும்
பரமசிவ சாதனமே யகிலமெலாம்
பரந்திடுக பழிப்பி லாது
வரிசைபெறு வைதிகசை வம்பெருகி
யுலகமெலாம் வாழத் தானே.

---

பொன்னின் மதிப்பால் வேலைப்பாடற்ற நகையும் மதிப்புப் பெறும். கருத்தால் என் நூலும் சிறப்புறும். கற்பு-கல்வி. 'உலகம் தாங்கிய மேம்படு கற்பின்–வில்லோர் மெய்மறை'

(பதிற்றுப்பத்து 59)

13 மாகேசர்-மகேசனைப் பணிபவர். காஞ்சியில் நாற்பத் தெண்ணுயிர மாகேசர் வாழ்ந்தனர். 'எண்ணும் ஒரு நாற்பத் தெண்ணுயிரவரெனும்-புண்ணிய வேடப் புனிதரும்'. என்பர் இரட்டையர் (ஏகாம்பரநாதர் உலா 96) சிவமறையோர்-ஆதி-சைவர்.

14 சாதனம்-உருத்திராக்கம் முதலிய சிவசின்னங்கள். 'திரு நீறும் சாதனமும் கண்டால் உள்கி' என்பர் வாசீசர். (கன்றாப்பூர் பதிகம்) வைதிகசைவம்-வேத முறைப்படி அமைந்த சைவம். வைதிக சைவம் அழகிது என்பர் தாயுமானர்.

மடக்கு

வேறு

15 விஞ்சுதாரு விற்பா தவத்தையே
மேவமேவும் அம்பாத வத்தையே
கொஞ்சுபஞ்சரப் பரம தத் தையே
கொடுவருத்துமே பரமத த்தையே
நெஞ்சுதன்பெயர்ச் சொற்க லாபமே
நினைக்கிலுந்தருஞ் சொற்க லாபமே
அஞ்செழுத்தில வர்காஞ் சியென்றுமே
லானமா நிழல்காஞ் சியென்றுமே.

---

15 விஞ்சுதாருவில்-மேலானமாமரத்தில். வில்-ஒளி பெற்ற பாது-சூரியன். அவத்தையேமேவ-(மரத்தைத் தாண்ட முடியாமல்) துன்பம் அடைய. அம்பா-காமாட்சி அம்மை. அம்பா-தாய். வட மொழி. 'அம்பா ஆடல். (பரிபாடல் 11.81) தவத்தையே மேவும்-தவம் செய்தலிலேயே ஈடுபட்டிருப்பாள்.

பஞ்சரம்-கூட்டில். பஞ்சரம் தங்குகிளி (திருப்புகழ்) கொஞ்சும்-மழலை மொழிபேசும். தத்தை-கிளிகள், பர மதத்தை (நாத்திகம் முதலான) புறச்சமயங்களை. கொடு-(பிரமாணங்களைக்) கொண்டு வருத்தும்-துன்புறுத்தும்.

நெஞ்சு-மனமானது, தன்-தன்னுடைய. சொல்-(வஞ்சினச்) சொல்லால். (அடைவது) கலாபமே-போராட்டமே. (வஞ்சினத்தைவிட்டு நினைக்கினும் (ஏகம்பனை) நினைத்தாலும். (அவன்) சொற்க, லாபமே தரும்-சுவர்க்கமாகிய லாபத்தையே கொடுப்பான்.

அஞ்சு எழுத்து இல்லவர்-பஞ்சாட்சரத்தைச் செபிக்காதவர்கள் சி-இகழத்தக்கவர். என்றும்-சூரியனும். அவர்-அவர்களை. காம்-காயும். (காயும் என்பது, காம் என்று வந்தது. போகும் என்பது போம் என்றும், ஆகும் என்பது ஆம் என்று வருவதைக் காண்க. (மிறைக்கவியில் கங்கனம் வருவதை வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகள் பாடிய அரியேகபாத நூற்றந்தாதியில் காண்க). ஆன-மேலான. மாநிழல்-மாமரத்தின் நிழல். காஞ்சி-காஞ்சிமாநகரில். என்றும்-எப்போதும் உண்டு (வேற்றுரை கிடைப்பின் நன்று).

16 படிபுகழ் கங்கா தரனே
பராவ கங்கா தரனே
நெடிதகி லங்கடந் தானே
நினைவையெ லாங்கடந்தானே
கடிய புரத்தே கம்பர்
காஞ்சி புரத்தே கம்பர்
அடிய மெனத்துதிப் பாரே
யறிவு மனத்துதிப் பாரே

17 ஏத மாகநெஞ் சஞ்ச லத்தையே
எய்தி வீடுவாய் சஞ்ச லத்தையே
வாதி யாதுநம் பாதக மலமே
மருவு மேசிவன் பாதக மலமே
காத லாகியே மாவி டத்தையே
கண்ட மேவிடு மாவி டத்தையே
ஆதி யான துங்கச்சி நகரமே
யாக மேவிடுங் கச்சி நகரமே

---

16 படிபுகழ் கங்காதரனே-உலகம் புகழும் கங்கையைத் தரித்தவன். பராவு-பரவிய (மிக்க) அகம்-பாபங்களை. காது-அழிக்கும் அரன்-சிவன்.

(அப்பெருமான்) நெடிது அகிலம்-பெரிய உலகத்தை. கடந்தான்-தாவியளந்த திருமாலின். நினைவையெலாம் கடந்தான்-எண்ணத்திற்கும் அப்பாற்பட்டிருந்தான்.

அகிலங்கடந்தான்-வினையால் அணையும் பெயர்.

கடியபுரத்து-கடுமையான முப்புரத்தில். ஏகு-செல்கின்ற அம்பர்-அம்பை உடையர். காஞ்சிபுரத்து ஏகம்பர்-காஞ்சிமா நகரில் வாழும் ஏகம்பர் ஆவார்.

(அவர்) அடியம் என-(யாம்) அடியோம் என்று கூறி துதிப்பார்-துதிப்பவர்களின். ஏய்-பொருத்தமான. மனத்து உதிப்பார்-திருவுள்ளத்தில் உதயம் ஆவார்.

அகம்-பாபம். 'அகம் மனம் மனையே பாபம்' (சூடாமணி நிகண்டு) கடத்தல்-அளத்தல். அடியினுல்-முக்காற் கடந்தான் முழுநிலம் என்னும் நான் மணிக்கடிகையையும், 'நிகங்கடந்த நெடுமுடி அண்ணலே' என்னும் நச்சினர்க்கினியர் உரைப்பகுதியையும் நோக்குக.

17 நெஞ்சு-மனனே. ஏதம் ஆக-குற்றம் உண்டாக. அஞ்சல்

**வேறு**

**பதிகம்**

18 முந்து பாயிரஞ் சிவாலய மரிதிரு முற்றம்
எந்தை தீர்த்தமெய பிதானங் கயிலையெம் பிராட்டி
வந்து மேவுதல் மானகர் புரம்புகலல் மாது
தந்த பூசனை திருவிழாத் தருமமித் தரத்தால்

19 சருக்கமும் ஒருபா னிருபெயர் பெறச் சமைத்துச்
சுருக்கமும்பெருக் கமு மிலாதிடைப்படு தொடர்பால்
பெருக்கமுற் பொரு ளாடியிற் பொலி தல்போற்பிறங்க
விரிக்கலுற் றன்ன காஞ்சியங் கதைதனை விதியால்

இங்கு **"கச்சிநகர் மாகேசர்"** என்றொரு பாடலும் உண்டு

---

அஞ்சாதே, அத்தையே-அந்தப்பரம் பொருளையே எய்தி-தியானித்து. சஞ்சலத்தை-கலக்கத்தை. வீடு-விடுவிப்பாயாக.

நம் பாதக மலம்-நம்முடைய தீயமலமானது. வாதியாது-நம்மைவாட்டாது. (ஏன்எனில்) சிவன் பாத கமலமே மருவும்-சிவபிரானின் திருவடித்தாமரை நம்மை வந்து அடையும்.

காதல் ஆகி-மிக்க அன்புடன். மா இடத்தை-ஒற்றை மாமரம் உள்ள இடத்தை. கண்டு-பார்த்து. மாவிடத்தையே-பெரியவிடம் போன்ற தீக்குணத்தை. விடு விட்டு விடுவாயாக. அம்மே-கேள், அம்ம என்ற சொல் அம்மே என்று வந்தது. அம்ம உரை அசை கேண்மின் என்றாகும் என்று நன்னூலாரும் (இடை. 18) அம்ம கேட்பிக்கும் என்று தொல்காப்பியரும் (தொல். சொல். 28) கூறுவர். இங்கு ஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய ('பாயுமால் விடை' என்ற தொடக்கத்தை உடைய) திருவியமகம் காண்க.

18, 19 1 பாயிரம் 2 சிவாலயம் 3 அரிதிருமுற்றம் 4 தீர்த்தம் 5 அபிதானம் 6 கயிலை 7 பிராட்டி வருதல் 8 மாநகர் 9 புரம்புகல் 10 அம்மை பூசை 11 திருவிழா 12 தருமம் என்று பன்னிரண்டு சருக்கத்தால் புராணம் கூறப்படும். சுருக்கின் எஞ்சும், விரிக்கின் பெருகும் ஆதலால் அளவாகப் பாடப்பட்டுளளது. விதி-முறை.

### வேறு

20 போதநெறி யறிசூதர் புகன்ற தான
புராதனமா கும்பதினெண் புராணந் தன்னிற்
சோதி திகழ் காஞ்சிநகர்ப் புராணந் தன்னை
சொற்பயிலப் பற்பலவுஞ் சொல்லா நிற்கும்
சாதகமாம் பிரமாண்டங் காந்தஞ் தன்னிற்
சனற்குமார சங்கிதையிற் றருக்காற் கூறும்
பேதமெலாந் தெரிந்தெமது குருநா தன்றன்
பேரருளா லிக்காதை பேசு வாமால்

### வேறு

21 உலக மாமுனி வோரெலாங் கூடிமுன் னொருநாண்
மலரி னான்முகற் போற்றியே யடிமுறை வணங்கிப்
புலனெலா மொருப்பட் டியாம் பெருமகம் புரிய
நலமு லாவுமோர் தலத்தினை யருளென நவின்றார்

22 என்ற காலையி னான்முகன் றருப்பையொன் றெடுத்து
வென்றி சேர்தரு நேமியா யமைத்தனன் விடுப்பச்
சென்று போயிது நின்றிடு மெல்லையிற் சேர்ந்து
நன்றி சேர்மகஞ் செயுமென விடுத்தன னலத்தால்

---

20 பிரமாண்ட புராணத்திலும் காந்தத்தில் சனற்குமார சங்கிதையிலும் கூறியபடி பேசுவோம்.

21 நான்முகன்-பிரமன். புலன்எலாம்-ஐந்து புலன்களும் பெருமகம்-பெரிய யாகம் சந்திரயாகம். இதனைப் பன்னிரு வருடங்களில் செய்து முடிப்பர். ஆயிர வருடம் என்பரும் உளர். 'போற்றும் பருவம் ஈராறு புரியும் உயர்சந்திரயாகம்-ஆற்றும்நைமி சாரணியத்தருள்கூர் சூத முனி அடைந்தான்'. (கூர்ம புராணம் பூர்வ காண்டம்) முனிவர்கள் யாகம் செய்வதற்கு ஏற்ற இடத்தைப் பிரமனிடம் வினவினர்.

22 தருப்பையைப் பிரமன் ஒரு சக்கரமாகச் செய்தான். இது தங்கும் இடம் சிறந்தது என்றான். நேமி-சக்கரம் 'நேமியால் மாலை தந்தவர்' என்பது திருவரங்கக் கலம்பகம் (27) மகம்-யாகம்.

23 பார்ப டைத்தவன் விடுத்திடு நேமிபோய்ப் பதிய
வேர்ப டைத்திடு மெல்லையா யினையகா ரணத்தாற்
பேர்ப டைத்தது ; முனிவங் வீற் றிருந்திடப் பெரிதுஞ்
சீர்ப டைத்தது ; நைமிசா ரணியவாச் சிரமம்.

24 இந்த வாச்சிர மந்தனின் முனிவர ரியாருஞ்
சந்த நான்மறை விதியினுற் றவாமலே தகைமை
புந்தி செய்தொரு மாமகம் புரிந்தினி திருப்ப
வந்த வெல்லையி லனையவ ரியாவரு மறைவார்

25 கவலை சேர்தரு பிறவிநோ யெனுங்கடல் கடப்பான்
விவித மாகவே பலபல நினைவெலாம் வீரியத்
தவம தேசெய வேண்டுமென் றூர்சிலர் தனியாஞ்
சிவனை யேநினை வோமெனச் செப்பினர் சிலரால்

26 அறத்தி ளுல்வரு மென்றனர் சிலர்சில ரரிய
துறத்தி ளுல்வரு மென்றனர் சிலர்மகத் தொழிலாந்
திறத்தி ளுல்வரு மென்றனர் பொய்மையைச் சீறும்
மறத்தி ளுல்வரு மென்றனர் சிற்சிலர் மயங்கி

---

23 பார் படைத்தவன்-பிரம்மன். 'படைப்பானும் வியன் ஞாலம் காக்கும் ஆழிப்படையானும்' என்பது அஞ்ஞவதைப் பரணி (1) பிரமன் விடுத்த நேமிதங்கியதால் அவ்வனம் நைமிசம் எனப் பெயர் பெற்றது. வீற்றிருந்திட-கவலையற்றிருக்க. 'நேமி உய்த்தலால் நெஞ்சம் என நிகழ்த்தும் நாமம் உற்ற நல்வனம்'-என்று பாகவதம் கூறும்.

24 முனிவர்கள் யாகம் செய்து வாழ்ந்தனர்' ஆச்சிரமம்-முனிவர்கள் வாழும் இடம். நான்மறை-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். தவாமல்-கெடாமல். 'தவாப் பிறப்பு ஈனும் வித்து' என்ற குறளைக் கருதுக. புந்தி செய்து-சிந்தித்து.யாவரும் எல்லா முனிவர்களும்.

25 பிறவி நோய்-பிறவியாகிய நோயை. பிறவி நீங்கச்செய்ய வேண்டியது என்று சிலர் கூறினர். சிலர் சிவத் தியானமே செய்ய வேண்டும் என்றனர். இராமபிரானே 'வேண்டேன் இம்மாமாயப் புன்பிறவி வேண்டேன்' என்று கூறியிருத்தலில் கவலை சேர்தரு பிறவி என்றார்.

26 அரிய துறத்திறல்-கிட்டுதற்கரிய துறவால். 'துறம் என்ற சொல் அத்துச்சாரியை பெற்றுத் துறத்தினல் என்று வந்தது, துறம் காட்டி எல்லாம் விதித்தார்போலும்' என்று தேவாரம்

27 காய மாசறுஞ் சுருதியின் பொருளையே கருதி
ஆயி லென்றனர் சிலர்சில ரருமகப் பேறே
தூய தென்றனர் : இப்படி யிகலியே சொற்று
ராய காலையிற் சூதமா முனிவனங் கணைந்தான்

28 மாசி லாதவச் சூதனை யெதிர்கொடு வணங்கிப்
பேசு மாமகம் புரிதவப் பேறெனப் பேணி
யாச னத்திடை யிருத்தியே யருத்தியா லுரிய
பூசை யாற்றினர் முனிவர ரியாவரும் புகல்வார்

29 ஆதி நாரண ருருவமா யருமறை விரித்த
வாத ராயண ரறிவினுக் குறையுளாய் மருவும்
போத நாயக ! புராணநூல் முழுவதும் புகன்றாய் !
தீதி லாதுயர் மகம்புரி பேறெனச் சேர்ந்தாய்

---

பேசும், திறம்-கூறுபாடு. பொய்மையைச் சீறும் மறம்-பொய் யான மாயையைச் சீறுகின்ற வீரம்.

27 காயம் மாசு அறும் சுருதி-உடல் மாசு இல்லாத வேதம். வேதம் ஒருவர் உடலிலும் தோன்றாததால் இங்ஙனம் கூறப் பட்டது. அதனால் வேதம் 'அபௌருஷேயம்' என்று புகழப்படும். மகப்பேறு புதல்வரைப் பெறுவதால் உண்டாம் பலன் அப்போது சூத முனிவர் அங்கு வந்தனர்.

முனிவர்கள் முக்தி அடைதற்குக் கூறிய காரணங்களைப் புதிய காஞ்சிப் புராணத்தில் சிவஞான முனிவர் விரித்துப் பேசுவார். அவை சுவை மிக்கவை. வசிட்டர் தவத்தால் முக்தி கிடைக்கும் என்றார். சதாதபர் அறத்தால் முக்தி கிடைக்கும் என்றார். கவுதமர் கொடையால் முக்தி கிடைக்கும் என்றார். காசிபர் வாய் மையால் முக்தி கிடைக்கும் என்றார். பரத்துவாசர் யாகத்தால் முக்தி கிடைக்கும் என்றார். கண்ணுவர் மகப்பேற்றால் முக்தி கிடைக்கும் என்றார். துருவாசர் துறவால் முக்தி கிடைக்கும் என்றார்.

28 மாமகம் புரிதவப்பேறு-யாங்கள் யாகம் செய்ததால் உண் டான பெரும் பயன். தவ-பெரிய. 'சாலவுறுதவ நனிகூர் கழி மிகல்' (நன்னூல் 25). அருந்தி-ஆசை. 'அருந்தி உற்றபின் நாணம் உண்டாகுமோ' என்பர் கவிச்சக்கரவர்த்திகள். (பாலகாண்டம் உலாவியல்).

29 நாரணன்-திருமால். வாதராயணன்-வியாசர். வியாசரின் அறிவுக்கு இருப்பிடமானவர் சூத முனிவர், வியாசரின் மாணவர் சூதமுனிவர் என்பதைத் திருவாரூர் புராணம் 'சங்கபாணி கலை

30 பிறவி நோயற வெண்ணியாம் பற்பல பிதற்றி
உறுதி யாவது முணர்ந்திலோம்; தெரிந்திலோம் உண்மை
பெறுதி யாகநீ விட்டினை யெய்திடும் பெருமைத்
திறனி தாமென வுணர்த்துதி யாவையுந் தெளிந்தோய்

31 வாச கப்படா நெறிப்பர தத்துவ வழியை
நேச முற்றவர்க் குரைத்திடு குரவனீ யன்றோ
வாச கற்றயாம் வினவிய வினாவினுக் கன்பிற்
பேசு முத்தரம் வல்லவர் நீயலாற் பிறரார்

32 என்று கூறலுஞ் சூதமா முனிவனங் கெண்ணி
வென்றி சேர்தரு முரோமங்கள் பொடித்திட விழிநீர்
சென்று மார்பினி லொழுகிட வுன்னியே சிவனை
யொன்று காதலில் முனிவரை நோக்கியே யுரைப்பான்.

---

உருத் தரித்த வாதராயணன்-சரண பங்க யந்தலைத் தரித்த சூத மாதவன்' என்று நயமுறப் பேசும் போதநாயக-அறிவுக்குத் தலைவனே.

30 பலபல பிதற்றி-பலவிதமாகக் குழறி. 'பித்தன் நான் என்னும் பிதற்றொழிவது எக்காலம்' என்பர் தாயுமானவர். பெறு-பெற்ற. தியாக-தியாகியே. (தியாகத்தைப் பெற்றவனே) திறம்-கூறுபாடு.

31 வாசகபபடா நெறி—வார்த்தைக்கு எட்டாத வழி. பரதத்துவம்-மேலான உண்மை. குரவன்—ஆசிரியன். ஆசு-குற்றம். உத்தரம்-விடை. உம்மைத்தவிர விடை தரவல்லவர் எவர் உளர்?

32 சூதமுனி உடலில் புளகம் உண்டாயிற்று. விழிநீர் மார்பில் ஒழுகிற்று. சிவபிரானைத் தியானித்துச் சூதமுனிவர் கூறத் தொடங்கினர்.

புராணங்கள் கேட்கும்போது உடல் சிலிர்ப்பதால் சூதமுனிவனை 'ரோமஹர்ஷனர்' என்பர். 'நந்தல் இல்லா வியாச முனி புராணம் நினக்கு நவில்போதில்-சிந்தை மகிழ்ந்து மயிர்பொடிப்ப அதன் பேர் நினக்குச் சேர்த்தினரல் (கூர்ம புராணம் பூர்வ காண்டம்)

33 அனைத்தி னுக்கு மேலாகிய பரத்தினை யறிந்து
மனத்தி லுன்னியே யன்பினால் வழிபடுந் திறமை ;
யினைத்தெ னற்கரும் புண்ணியத் தலங்களி லிருத்தல் ;
முனிக்கணத்தர்பாற் புராணநூற் கேள்வியிம் மூன்றும்

34 அத்தி றத்தினீர் புகன்றிடும் பிறவிநோ யகற்றல்
இத்தி றத்தினா லன்றியே வேறுவே றிசைக்கு
மெய்த்தவத் தினாற்றரு மத்தின் வகையினான் மேலா
முத்த மப்பெரும் குணத்தினீர் போக்குதற் கொண்ணா.

35 மருவு முண்மையீ தென்றலு முனிவரர் வணங்கிப்
பரம மாகிய கடவுள்யார் புண்ணியப் பதியே
துரிய நன்மைசேர் புராணமே துரிமையா லறியப்
பெருமை யாலுரைத் தருள்புரி யென்றலும் பெரியோன்.

36 சுருதி நான்மறைச் சிரத்தினிற் சொற்பொருளறிந்தும்
அரிய நோன்பினை யாற்றியும் அந்தண ராயும்
பரம மாகிய கடவுள்யா ரென்றுநீர் பகர்ந்தீ
ருரிய தந்தையை யுணர்கிலாப் புதல்வரு முளரோ

---

33 பரத்தினை அறிந்து-பரம் பொருளைத் தெரிந்து. 1 இறைவனுக்கு வழிபாடு செய்தல். 2 புண்ணியத் தலங்களில் இருத்தல். 3 புராணம் கேட்டல். இவற்றால் முத்தி பெறலாம்.

அனைத்தினுக்கும் என்றது 36 தத்துவங்களை. உன்னி-நினைந்து இனைத்து-இப்படிப்பட்டது. எனற்கு அரும்-என்று கூறமுடியாத.

34 இத்திறம்—இந்தவகை. தருமத்தால், தவத்தின் வகையால் பிறவி போகாது. பிறவி நோய், இத்திறத்தினால் அன்றி, தவத்தினால் தருமத்தின் நீங்காது என்று கூட்டுக.

35 பரமம் ஆகிய-மேலான முனிவர்கள். பரமமான கடவுள் யார்? புண்ணியத்தலம் எது? நன்மை தரும் புராணம் எது? என்று வினவினர். பெரியோன்-சூதமுனிவர்.

36 நான்மறைச்சிரம்-உபநிடதம். 1 உபநிடதம் அறிந்தும். 2 நோன்புகள் செய்தும் 3 அந்தணராக இருந்தும் கடவுள் யார் என்று கேட்டீர். தந்தையை உணராப்புதல்வரும் உளரோ (என்று சூதமுனிவர் வருந்தி வினவினார்).

37 எண்ணு தத்துவங் கடந்தவன் பூரண னிறைவன்
பண்ண வாக்கு மேலாய வனீறிலாப் பகவன்
கண்ணு தற்றனிக் கடவுளே பரம்பொருள் கண்டீர்
அண்ண லந்தவ முனிவீர் காளிதற் கிலையையம்

38 ஆதலாற் சிவனே பரம்பொரு ளெனவ வன்றன்
பாதம் வைகலும் போற்றுதிர் புண்ணியப் பதியுஞ்
சோதியா யொருதனிப் பெருஞ்சூ தநன்னி ழற்கீழ்
நாதனுர் நடம்பு ரிந்திடுங் காஞ்சிமா நகரம்.

39 அன்ன கர்ப்பெரும் புராணமே புராணமா தலினுற்
பொன்ன கர்க்குமே லாகுமன் னகரிடைப் பொருந்தி
மன்னு மத்தலப் புராணமே கேண்மின் மாநிழற்கீழ்
மென்ன டம்புரி நாதனைப் போற்றுதிர் விரைவாய்

40 இத்த லத்திடைக் கலிப்பெருந் தீங்கிலை யெளிதாய்ச்
சுத்த முத்தியு மடைவது திண்ணமெய்ச் சோதி
யத்தன் முன்னமே யுமைக்கிவை யுரைத்தன னதனுற்
சத்தி யத்திற னிகுதென வுரைத்தனன் தவத்தோன்

---

37 தத்துவங்கடந்தவன், பூரணன், இறைவன், மேலாயவன், முடிவில்லாதவன், சிவபெருமானே, அவனே பரம்பொருள். ஐயம் இல்லை. பண்ணவர்-தேவர். பதியின் இயல்பை ஞானமிர்தம். ‘முப்பது முதலா மூவிரண் டோவா-ஒப்பில் தத்துவம் ஒரீஇய திப்பியன் ஒழிவற நிறைந்த ஒருவன்’ என்று விவரிக்கும் (56)

38 வைகலும் அவன் பாதம் போற்றுமின்-தினமும் அவனுடைய பாதத்தைப் போற்றுங்கள், சோதியாய்-ஒளி மயமாய். சூதம்-மாமரம். ‘சீதப்புனல் உண்டு எரியைக்காலும் - சூதப் பொழில்சூழ் சோற்றுத்துறையே’ என்று நம் சுந்தரர் நயமுறப் பாசுரமிடுவர்.

39 பொன்னகர்க்கு மேலாகும்-சுவர்க்கத்தைவிட மேலானதாகும். இந்த (38, 39) இரண்டு பாடல்களிலும் இறைவன் நடம் புரிவதாகக் கூறினர். ‘வான் உலாவிய பாணி பிறங்கவெங்-கானில் ஆடுவார் கச்சியேகம்பரே’ என்ற நாவரசரின் திருக்குறுந்தொகையைக் கருதி என்க. திருஞானசம்பந்தரும் இவ்வண்ணமே கூறி உள்ளனர் (முன் பகுதியைப் பார்க்கவும்).

40 கலிப்பெருந் தீங்கு-கலியுகத் தீமை. சுத்த முத்தி-தத்து

41 ஐய நீயெமக்கரு ளியதன் மையா லமைந்து
மையல் தீர்ந்தனம் முத்தியும் பெறுவது மதித்தோம்
செய்ய காஞ்சியம் புராணமா மெவற்றையுஞ் சிறியோ
முய்யு மாறருள் புரியென முனிவர ருரைத்தார்

42 முனிவர் கேண்மினோ நான்முகப் பண்ணவன் முன்னம்
சனக ராதியாந் தவத்தருக் கிக்கதை தன்னைப்
பனுவ னீதியாற் பகர்ந்தனன் பகர்ந்தவப் பரிசே
யினிது கூறுவன் யானெனச் சூதனங் கிசைப்பான்

வேறு

43 விழிபுனல் சொரிதர விதிர்வி திர்ப்புறு
மொழிதடு மாறிட முகிழ்ப்பரோ மங்கள்
எழுதரு முவகையி னெய்தியா னந்தத்
தழிவுறு பரவச னாகி விம்மியே

44 கருதிநீ ரெண்ணிய கரும முற்றுறச்
சுருதிநூற் புராணநூன் முழுதுஞ் சொற்றது
விரிதரு தலங்களின் மேன்மை சான்றது
பெருகுசீர் முனிவிர்காள் பேசக் கேண்மினோ

---

வங்கள் தன்னடைவே நீங்கிச் சிவப்பேறுதல். சோதி அத்தன்-ஒளி வடிவமான இறைவன். இதனை இறைவன் உமாதேவிக்குக் கூறினான். இஃது என்ற சொல் இருமுறை வந்துள்ளது.

41 அமைந்து-(பொறிபுலன்கள்) அடங்கி. மையல் மயக்கம். புராணம் எவற்றையும்-வரலாறு முழுவதையும். முனிவரர்-முனிவர்களில் மேலானவர். உய்யும் ஆறு-பிழைக்கும் படி.

42 முனிவர்: அண்மைவிளி. நான்முகப்பண்ணவன்-பிரமன்: பனுவல் நீதியால்-ஆராய்ச்சி முறைப்படி. அப்பரிசே-அம்முறைப் படி. இசைப்பான்-சொல்லத் தொடங்கினான்.

43 44 சூதமுனிவர், புராணம் கூறும்போது அடைந்த மெய்ப்பாட்டைக் கூறுகிறார். விதிர்விதிர்ப்புறு விரைந்து. 'கனகம் கண்டான் விதிர்விதிர்த்தான்' என்ற (திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் மெய்க்காட்டு 5) தொடருக்குத் தமிழ்த் தெய்வம் ஐயரவர்கள் வழங்கிய உரையைக் காண்க. நடுங்குதல் என்று பொருள் செய்வது பிழை. அம்மெய்ப்பாடு புராணம் கூறும் முனிவர்க்கு ஏலாது. 'மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து'

வேறு

45 நிராமய வுருவ மான நிருமலைப் பரமா னந்தம்
விராவிய வுண்மை ஞான விமலைபே ரொளியா யோங்கும்
பராபரை யகில நாதன் பராசக்தி வடிவ மாகுந்
தராதலத் திடையே வண்மை தரும்திருக் காஞ்சித் தானம்

46 நன்மையாம் பொருளி யாவு நண்ணிடு மைம்பூ தத்தின்
தன்மைய தன்று பூதந் தாவருங் குணங்க ளியாதும்
இன்மையாற் படைப்போன் றன்னு லியற்றிய தன்று சோதிச்
சின்மய மாகிநிற்குஞ் சிவனது சிருட்டி யாமால்

47 ஆக்குதல் காத்தல் யாவும்
அழிதரு கற்பந் தன்னிற்
போக்குதல் என்னும் செய்கை
பொருந்திடா குணங்கள் மூன்றுந்
தாக்கிடா பூகம் பத்திற்
சலித்திடா பூத வாதை
மீக்கொளா வதன்றன் மேன்மை
விளம்பலாங் தகைமைத் தன்றே

---

(திருவாசகம், திருச்சதகம். 1) மொழி தடுமாறி-சொற்கள் குளறி. அழிவுறு பரவசனுகி-தற்போதங் கெட்டுப் பரவசமாய். பரன்+வசம்—பரவசம் சிவமயமாதல். கருமம்-செயல். சுருதி-வேதம். நூல்-ஆகமம். சொற்றது-புகழப்பட்டது. 'கருமம் முற்றுறக் கேண்மின் என்று சேர்க்கவும்.

45. காஞ்சி பராசக்தி வடிவமானது. பராசக்தி, நிராமய உருவம் ஆனநிருமலை. பரம ஆனந்தம் விராவிய உண்மை ஞானவிமலை. பேரொளி ஓங்கும் பராபரை; அகிலநாதன் பராசக்தி. நிராமயம்-நோயின்மை உண்மை-சத்தாக இருப்பவன். ஞானம்-சித்தாக இருப்பவன். நிராமயம்-(நோயின்மையால்) ஆனந்தமாக இருப்பவள். பராசக்தி சச்சிதானந்த வடிவமானவள்.

46 காஞ்சிபுரம், ஐந்து பூதங்களின் தன்மை உடையது அன்று அது. (பூதங்களின் தன்மை இல்லாததால்) படைப்போனல் (பிரமன்) படைக்கப்பட்டதன்று. அது சின்மயமான சிவ சிருஷ்டியாகும். ஆதலால் நல்ல பொருள்கள் யாவும் (என்றும்) இருக்கும்.

பூதம்·தா·வரும்-பூதங்களால் தாவி வருகின்ற குணங்கள்.

48 ஆரிடர் தெரித றேற்ரு
வஞ்செழுத் தொலிநா டோறும்
பாரிய வொலிய தாகப்
பரவுமவ் வொலிபோ ருதன்
சீரிய நடன பாதச்
சிலம்பொலி யிடைய ருமற்
பேரொலி யாகு மென்ருல்
அந்நகர்ப் பெருமை யாதோ.

49 புவனியிற் றலங்க ளண்ட
புருடனுக் கவய வங்கள்
அவைதனிற் காசி காஞ்சி
யவனது விழிக ளாகும்
விவிதமாம் அவற்றுட் காஞ்சி
வியன்வலன் விழிய் தென்றே
உவமையில் வேத மாதி
யுலப்பினுன் முழுதுஞ் சொல்லும்

---

47 ஆக்குதல்-படைத்தல். யாவும் அழிதருகற்பம்-எல்லாம் அழியும் ஊழிக்காலம். குணங்கள் மூன்று: சத்துவம், ராஜசம், தாமதம். பூகம்பம்-பூமி நடுக்கம். 'பூகம்பம் பிறந்து உடுவும் நடுப்பகலே விழுந்து வாடி' (வில்லி பாரதம் சூதுபோர் 257). சலித்திடா-அசையாது. பூதவாதை-பூதங்களால் துன்பம்.

48 அங்குப் பஞ்சாட்சர ஒலியே நாளும் மிக்கு ஒலிக்கும். அவ் ஒலிக்கு ஏற்பச் சிவபிரான் ஆடுவான். அவன் ஆடுவதால் எப்போதும் சிலம்பொலியே கேட்கும்.

ஆரிடர்-மிக்க துன்பம். ஐந்து எழுத்தைக் கேட்டால் சிவபிரான் உடனே ஆடுவான் 'சிட்டன்-சிவாய நம என்னும் திருவஞ் செழுத்தாலே-அவாயமற நின்றுடுவான்' என்ற உண்மை விளக்கப் பாடலை (31) இப்பாடல் இதயத்திற் கொண்டுள்ளது.

49 அண்டபுருடன்-விராட் புருஷன். காசி காஞ்சி அவனுடைய கண்கள். காஞ்சி வலப்பக்க விழி. வேதம் ஆதி-வேதம் முதலான. உலப்பு இல்-அழிவு இல்லாத விவிதம்-வேறுபாடு.

50 சிலையெலா மிலிங்க மங்கண்
செறிபவர் முனிவர் தேவர்
சலமெலாந் தெய்வ கங்கை
தருவெலாந் தேவ தாரு
வொலியெலா மறையி னோதை
யுலகினி லோகோ விந்த
நலமெலா முமையாள் செய்யு
நற்றவத் தாய வன்றே

51 துயில்வது சமாதி யாது
சொல்லினு மனுவே யெண்ணல்
செயலெலாம் வேள்வி யெங்கே
திரியினுஞ் சிவனைச் சூழ்தல்
அயில்வது பூசை வீழ்வ
தரனடி வணக்க மென்னும்
பயனிறு லன்றோ தேவர்
அங்ஙனம் பயிலும் பான்மை

---

50 சிலை-கல். செறிபவர்-வாழ்பவர்கள். சலம்-தண்ணீர். மறையின் ஓதை-வேத ஓசை. ஓதை-ஓசை. 'உழவர் ஓதை மதகு ஓதை' என்பது சிலம்பு (கானல் வரி).

ஓகோ: வியப்பைக் காட்டும் சொல். 'ஓகோ உனைப்பிரிந்தார் உள்ளம் கனவில் வைத்த-பாகோ? மெழுகோ? பகராய் பராபரமே' என்பது தாயுமானவரின் திருவாக்கு (பராபரக்கண்ணி 30).

51 துயில்வது-உறங்குவது. மனுவே-மந்திரமே. எண்ணல்-ஜெபித்தல். சூழ்தல்-வலம் செய்தல். அயில்வது-உண்பது. வீழ்வது-விழுவது. தேவர்கள் இங்கே இருப்பது இத்தகைய பயனைக்கருதியல்லவா?

மொழிவது உன்செபம்: முத்திரை பாணியின் முயல்வது: எங்கும் நடப்பன கோயில்சூழ் தொழில்: அருந்துவமுற்றும் உன் ஆகுதி: துயில் வணங்கல்: களிப்பன யாவும் நீ, ஒழிவு அருங்களி: என் செயல் யாவையும் உனது நன்செய் பரிச் செயல் ஆகவே. அழிவரும் பதம் வைத்தருள் பேரொளி அளிவிளைந் தெழுகளிப் பெருநாதமே' என்ற சௌந்தரிய லகரியை இங்கு ஒப்பிடுக. (51)

52 இன்னக ரிடையா ரேனும்
இயற்றிய நன்மை யொன்று
மன்னியே கோடி யாக
வளர்ந்திடு மங்க ணொன்றுந்
துன்னிய தீமை செய்யத்
துணிவரோ துணிவ ரேனு
மன்னக ரிருக்கு மேன்மை
யாலவை நசிக்கு மன்றே

53 ஒருமித்து காஞ்சி தன்னை
யொருகணம் யாவ ரேனுந்
தெரிசிக்கில் நினைக்கிற் கூறிற்
செவிப்புல னிறைக்கில் வந்து
பரிசிக்கிற் புத்தி முத்தி
பலித்திடும் பரம னுரே
நிருமித்த தாகை யாலிந்
நீர்மையா ருரைக்கற் பாலார்

54 காசியே முதல தான
கருதருந் தல்ங்க ளெல்லாம்
ஈசன துறையு ளாகும்
இப்பெரும் காஞ்சி மூதூர்
ஆசிலத் தாணி யாக
வரசிருந் தானே யென்று
நேசர்பா லருளா நிற்பா
னித்தலும் புத்தி முத்தி

---

52. நன்மை ஒன்று (இங்கு) கோடியாகும் அங்கண்-அந்தப் புண்ணிஸ்தலத்திலே. துணிவரேனும்-உறுதி கொண்டாலும். அவை-அந்தத் தீமைகள். அன்றே-அன்றையதினமே.

53 ஒருமித்து-மனமும் மொழியும் செயலும் ஒன்றுபட்டு. செவிப்புலன் நிறைக்கில்-செவியில் நிரப்பிக்கொண்டால். பரமன்-சிவபிரானே. நிருமித்தது-படைத்தது. நீர்மை-தன்மை. பரிசிக்கில்-தொட்டால்.

54 கருது அருந்தவங்கள் - தியானிக்கத்தக்க ஸ்தலங்கள். உறையுள் - இருப்பிடம். அத்தாணி-ஓலக்க மண்டபம். 'அண்டத்து அமரர்கள் சூழ அத்தாணி உள் அங்கிருந்தாய்' (பெரியாழ்வார் திருமொழி (2.7.9).

55 காவென்ப தயன்ற ஞமம்
அஞ்சிதங் கருதும் பூசை
பூவின்க ணன்ஞேன் செய்த
பூசனை பெறுத லாலே
நாவின்ப மருவுங் காஞ்சி
நாமமா மிப்பே ராக
மேவும்பொற் கலாபந் தாரு
விளம்பினு முத்தி யெய்தும்

56 களவினல் வேட்டந் தன்னல்
காமத்தால் வழிபோ மாற்ருல்
வளமுறு தொழிலாற் செய்யும்
வாணிபத் திறத்தால் மற்று
முளமெலி யிரவா லிம்மூ
தூரினை யடைவ ராஞல்
எளிதவ ருய்யு மாறிங்
கியாவரே யவரை நேர்வார்

57 புரநடு வால யத்திற்
பொற்புறு புண்ட ரீகப்
பெருவயிற் சோதி லிங்கம்
பிரமீ சமென்று காஞ்சித்
திருவுள புரத்தை வேதஞ்
செப்பிடும் : புரமெ னுஞ்சொல்
பரிவுற மற்று வேறு
பதியிடைப் புகுதா திண்ணம்

---

55 கா-பிரமன். அஞ்சி-பூசை. காவால் (பிரமனல்) அஞ்சி (வழிபாடு) செய்யப்பட்டதால் காஞ்சி என்னும் பெயர் பெற்றது. காஞ்சி என்று கலாபத்தையும் (மகளிர் இடையில் அணியும் அணி) மரத்தையும் (ஆற்றுப் பூவரசையும்) கூறினலும் முத்தி உண்டாகும்.

56 வேட்டம்-வேட்டையாடுதல். உளம் மெலி-உள்ளத்தை மெலியச் செய்யும். இரவால்-யாசித்தல் காரணமாக அவர் செய்யும் ஆறு-அவர்கள் பிழைக்கும் வழி. அவரை நேர்வார் யாவர்-அவர்களுக்கு ஒப்பானவர் எவர்?

57 புரத்தின் (உடல்) நடுவில் உள்ள புண்டரீகத்தின் கண்

58 தன்னைநேர் முனிவர் யோகர்
தக்கவ ரியக்கர் சித்தர்
மன்னுயோ கினிகள் மற்றும்
வரம்பிலக் கணத்தோர் வாழும்
கன்னிமா மதில்சூ ழ்ந்தக்
காஞ்சிமா நகரின் வண்மை
உன்னியே யுரைக்கி லியார்க்கும்
உளப்படாத் தகைய தாமே

59 பலபல கடவுள் தானம்
பலபல வியல்சேர் நாமம்
பலபல சிவதீர்த் தங்கள்
பலபல புதுமை மற்றும்
பலபல தரும மோங்கும்
பதியத னிடையே யம்மை
பலபல தவமே செய்து
பலபெரும் பூசை யாற்றும்

---

இருக்கும் சோதிலிங்கம் 'பிரமீசம்' என்று வேதம் கூறும். புரம் என்ற சொல் வேறு ஸ்தலத்திற்குப் பொருந்தாது.

'அதயதி தமஸ்மிந் ப்ரஹ்ம புரேத ஹரம் புண்டரீகம் வேச்ம' என்று சாந்தோக்யம் பகரும் பிரம்மபுரம் என்னும் இதிலே தகர புண்டரீக வீடு உள்ளது என்பது அத்தொடரின் பொருள். இவ்வுபநிடதமே இப்பாட்டிற்கு மூலமாக இருக்க வேண்டும்

58 முனிவர். யோகர், இயக்கர் முதலானவர்கள் வாழும் இந்தக் காஞ்சிபுரத்தின் வள்ளல் தன்மையை உரைக்கத் தொடங்கில் (அது) எவர்க்கும் அடங்காதது.

உளப்படுதல்-உள் அடங்குதல். அவைதாம், அன்என் கிளவி உளப்படப் பிறவும்-அன்ன என்ப சாரியை மொழியே (தொல் எழுத்து புணரியல் 17) கன்னி-அழியாத. கன்னிமாமதில் என்ற தொடருக்குப் பெரியவாச்சான்பிள்ளை கல்லாலே செய்யப்பட்ட மதில் என்று உரை வகுத்தார்.

59 பல கோவில்கள், பல பெயர்கள், பல நீர்த்தங்கள், பல புதுமைகள், பல தருமங்கள் உயர்ந்துள்ள காஞ்சி மாநகரில் அம்மை பல பல தவங்கள் செய்து பூசை செய்தாள்.

60 இத்தல மித்தன் மைத்தென்
றெண்ணினு மெண்ணு ரேனும்
அத்தலத் துறுவா ராகில்
அருடரு பெருமா னன்பான்
முத்தியை யடைவர் யாரும்
மொழியிது சரத வுண்மைச்
சத்திய மீள மீளச்
சாற்றினன் றெளிவு கூர்ந்தே

61 என்னலு முனிவோர் யாரு
மெழுந்தன ருவகை மீக்கொண்
டுன்னரு ளுற்றே மெங்கட்
குருநல முளவோ வைய
வன்னக ருள்ள வீச
ளுலயப் பான்மை யாவும்
பன்னுதி யென்னச் சூதன்
பாற்படுத் துரைப்ப தானுன்.

---

'அஞ்செழுத்துமே ஆகருளுடைய அம்மை செம்மலர்க் கைகுவித் தருளித்-தஞ்சம் ஆகிய அருந்தவம் புரிய' என்று அம்மையின் தவத்தைச் சேக்கிழார் புகழார் (திருக்குறிப்பு 57)

60 இத்தலத்தின் சிறப்பை அறியாதவர்களும் இத்தலத்தை அடைந்தால் முக்தி அடைவார்கள். இது, சரத உண்மைச் சத்தியம். பாரதியார் 'யாம் அறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்—பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை: உண்மை. வெறும் புகழ்ச்சியில்லை என்று அடுக்கிக் கூறுவதுபோல் ஆசிரியர் உறுதிபடப் பேசுகிறார்.

61 உவகை-மகிழ்ச்சி. மீக்கொண்டு-அதிகரித்து. உருநலம்-அடையாத நன்மை. ஆலயம்-கோவில். இவ்வாசிரியர் ஆலயத்தை ஆலயம் என்றே கூறுகிறார். இவ்வாறு கூறல் இவருக்கு இயல்பு.

பாயிரச் சருக்கம் முற்றும்.

## 2. சிவாலயச் சருக்கம்

### சத்திய விரதம்

62 அத்திருக் காஞ்சி தன்னில்
அளவிலா வானோர் வைகும்
மெய்த்திரு வால யங்கள்
வீற்றுவீற் றாக மேவுஞ்
சித்திர நகர்க்கு மேன்மை
சிறந்தகீழ்த் திசையின் பாங்கர்
சத்திய விரத மென்றோர்
தானமப் பான்மை சொல்வாம்

63 வராகமா கற்பத் தாறு
மனுவர சியற்று நின்ற
புராதன னன்னான் வைகும்
புரந்தரன் சிவியென் பேரான்
நராசனர் பணியத் தெய்வ
நாரியர் குமுதச் சோமன்
பராவுறு முனிவ ராற்ற
பண்ணவர் பதும பானு

---

62 அளவிலா வானோர்-எண்ண முடியாத தேவர்கள். **வீற்று வீற்றாக**-தனித்தனியாக. 'கடிகாவில் காற்றுற்று எறிய வெடிபட்டு, **வீற்றுவீற்றாக** ஓடும் மயில் இனம்போல் (களவழி நாற்பது 29) தானம், சத்தியவிரத மேன்மையைச் சொல்வோம். **சித்திரம்**-ஆச்சரியம். 'சித்திரம் இங்கு இது ஒப்பது எங்குண்டு' **என்று** கவிச்சக்கரவர்த்தி பேசுவார். (கம்ப-பால-கார்முக). காஞ்சி புரத்தின் ஆச்சரியத்தைக் (புதிய) காஞ்சிப் புராணம் **விம்மிதப்** படலத்தில் விவரிக்கும். பதினொரு அற்புதம்

63 வராகமா கற்பத்து வராககற்பத்திலே புராதனன்-**பழமை** யானவன், அப்போது ஆட்சி புரிந்த இந்திரன் பெயர் **'சிவி'**. **நராசனர்-அரக்கர்கள்.** நர+அசனர். நரரையே **உணவாகக்** கொள்பவர். அசனம்-உணவு. 'அசனமிடு மாதர் தங்கள் **மனைகள்**, (**திருப்புகழ்** 418). தேவநாரியர்-தேவலோகப் பெண்கள். **குமுதச் சோமன்**-குமுதப் பூவுக்குச் சந்திரன். பதுமபானு-**தாமரைக்குச் சூரியன்.**

64 அனையவன் அணிகு லாவத்
தாணியில் அமரர் சூழத்
தனிமுனிக் கணத்த ரேத்தத்
தருமணி நிதியந் தேனு
நணிபுரிந் தேவல் கேட்ப
நடநவில் கடவுண் மாதர்
இனியபே ரிசைப்பண் பாட
லிசைத்தனர் தற்சூழ்ந் தெய்த

65 பொன்னரி யணையின் மீது
பொலிந்தினி திருக்குங் காலை
முன்னைநல் வினையின் பான்மை
முதிர்சத்தி பதித லாலே
அன்னவன் தனக்கு மேன்மை
யானபே ரறிவு கூட
உன்னரும் பெரும்போ கத்தின்
உவர்ப்பு வந்துற் றதன்றே

---

சிவஞான முனிவர் 'கற்பம் வராகமது உரும் ஆளும் முது முதுமந்தரநாள் சிவி என்று ஒருவாசவன் முன் உளனால்: விது வினை ஒப்பான் அரம்பையராகிய மென்குமுதங்கள் இடை' என்பர் (திருநெறிக்கரை 7).

64 தரு-கற்பக மரங்கள். மணி-சிந்தாமணி. நிதி-சங்க நிதி. பதுமநிதி. தேனு-காமதேனு. நடநவில்-கூத்தாடும். கூத்தாடுதலை நவிலல் என்பது பண்டைய மரபு. 'அம்பொன் அணியும் அரங்கில் நடநவில் அங்கண் அரசு' என்பது கோயில் நாண்மணி மாலை (11).

65 அரிஅணை-சிம்மாசனம். நல்வினையின்-நல்ல வினைகளின் கூறுபாட்டால். சத்திபதிதல்-திருவருள் பதிதல் இதனைச் சைவ சித்தாந்தம் சத்திநிபாதம் என்று கூறும். 'முதல் இருவர்க்கும் (விஞ்ஞான கலர் பிரளாய கலர்) நிராதாரம் ஆகிக், கரையில் அருட்பரமன் துவிதா சத்திநி பாதத்தால் கழிப்பன்மலம்: சக லர்க்குக் கன்மஒப்பில் தரையில் ஆசான் மூர்த்தி ஆதாரம் ஆகித்-தரித்து ஒழிப்பன்மலம் சதுர்த்தாசத்திநி பாதத்தால்' என்று சித்தியார்பேசும் (254). உவர்ப்பு-வெறுப்பு.

இந்திரனுக்கு இறைவன் அருள் நிராதாரமாகவே பதிந்தது. அதனால் அவனை விஞ்ஞானாகலரைச் சேர்ந்தவன் என்று கூற வேண்டும்.

66 புரந்தர ரொருபா னல்வர்
போதரும் போது வேதற்
குரந்தரு பகலொன் ருக
வுற்றநூற் றுண்டு செல்லிற்
கரந்திடும் பிரமன் அந்தக்
காலமே பரார்த்த மாகும்
பரந்த வப்பரார்த்த மேயோர்
பகல்பரந் தாமற் காமால்

67 அதுகணக் காக நூற்றுண்
டளவைமீச் செல்லும் போது
பதுமநற் கண்ண ராயுட்
பற்றறு மாத லாலே
புதுவதன் றிறுதி யெய்தல்
போதெனும் வலையுட் பட்டோர்க்
கிதுவென மகிழ்ச்சி சால
விழுக்கமா மொழுக்க மம்மா

68 சீகரத் தகந்தை மம்மர்
சேதகத் துட்பட் டேருச்
சூக ரத்தனைய மாகித்
துயலுது மந்தோ! வந்தோ!
சாகரப் பிறவி யாற்றேன்!
தத்துவ நெறிப்பே ரின்பத்
தாகரத் தழிவுறு வீடு
அடைவது நலமென் றுய்ந்து

66 புரந்தரன் - இந்திரன். பதினன்கு இந்திரர்கள் அழிந்தால் அது பிரம்மனுக்கு ஒருநாள், பகல் ஒருநாள். (பகலே நாள் ஒரு முகூர்த்தம் சூடாமணி நிகண்டு) கரந்திடும்-மறைவான். அது பரார்த்தம் ஆகும். பரந்தாமன் - திருமால். பரார்த்தம் திருமாலுக்கு ஒரு நாள் ஆகும்.

67 பதுமநற்கண்ணர் - திருமால். இறுதி புதுவது அன்று-மரணம் புதுமையானது அன்று. 'சாதலும் புதுவதன்றே' என்று புறப்பாட்டு பேசும். போது-காலம். இந்திரன் 'அம்மவோ! சீ!சீ! இந்த அநித்திய வாழ்வு வேண்டேன் - அம்மையில் வீடு பேற்றிற்கு உபாயமே அறிதல் வேண்டும்' என்று கூறுவதாகப் புதிய காஞ்சிப் புராணம் பேசும்.

68 நாம் சேற்றை விட்டு நீங்காத பன்றிகள் போல்

69 படையின ரும்பர் சுற்றுப்
பராயினர் முனிவர் யார்க்கும்
விடைபுரிந் தவரை யேவி
விரைந்தன னெழுந்து சென்றே
தடைபல கடந்துட் போகித்
தனித்தனன் : கோயில் நண்ணி
வடுவில்சீர்ச் செம்பொன் மாட
மந்திர இருக்கை புக்கான்

70 ஏவலர் தம்மை ஏவி
யெந்தையெம் பெருமா னுசான்
றூவறு மறைவ லாளன்
றமனியப் பேரான் றன்னைக்
கூவிநீர் கொணர்மின் னென்னக்
குறித்தது புரிவார் சென்று
தேவினர் குரவ சேறி
புரந்தரற் கருளச் சேவை

---

உள்ளோம். இந்திரனே பெரும் போகத்தையே துறந்தான். சீகரம்-செல்வச் செழிப்பு. 'சீகரம் மிக்க சூர் செயிர்த்துச் செய்திடும் ஆகுலம் (கந்தபுராணம். மகேந்திர சயந்தன் 20). சேதகம்-சேறு. 'சந்தனச் சேதகம் அணிந்த அண்ணல் கரியோன். (பால காண்டம் வரைக் 38) ஆகரம்-இருப்பிடம். சூகரம்-பன்றி.

69 பராயினர்-புகழ்பவர். விடை புரிந்து-விடை கொடுத்து. தடை-வாயில். 'தனித்தடையின்னவரும் தேமருதார் நந்தி (காஞ்சி மணிகண்டேச 31) மந்திர இருக்கை-ஆலோசனை செய்யும் இடம்.

70 இந்திரன் குருவை அழைத்துவரச் செய்தான். தமனியப் பேரான்-'பொன்' என்ற பெயரைப் பெற்றவன் (பிரஹஸ்பதி). 'புரந்தரற்குச் சேவை அருளச் சேறி' என்று பண்புடன் கூறினர். சேவை-தரிசனம். 'இராமநாதரின் பாதசேவை' (சேதுபுராணம். தோத்திர 55) சேறி-செல்.

71 என்னலும் பொன்னின் பேரோன்
எழுந்தனன் புகுந்த காலை
மன்னவ னுவகை தோன்றி
வரம்பில் பூசனைக ளாற்றிப்
பொன்னணி தவிசி னேற்றிப்
புகழ்தரு சுவையி னேற்றிக்
கன்னலி னினிய போற்றிக்
கருதிய தொன்று சாற்றும்

72 வெறுத்தனன் பெரும்போ கத்தின்
விழைவினைப் : பாசம் யாவு
மறுத்தனன் ஆசா னுன்கண்
அருளெனு மசியால் உண்மை
யுறுத்துதி ! யளியே னின்னே
யுறுதிப் பேரின்ப வீடு
குறித்துறு திறனீ தென்று
கூறுதி ! தேற வென்றான்

73 பெருமல பரிபா கத்தின்
பேற்றினைக் குரவ னுன்னி
விரவுமுப் பொருளு மாய்ந்து
வீடுபே றடைதல் சால
வரிதரி தெனினு மெம்மான்
அருளினு லெளிதி னெய்தக்
கருதியொன் றுரைப்ப னென்னுக்
கசிந்துகட் டுரைப்ப தானுன்

---

71 வரம்பு இல்-எல்லை இல்லாத. தவிசு-ஆசனம். கன்னல்-கரும்பு இந்திரன் தன் கருத்தைக் கூறத் தொடங்கினன்.

72 போகத்தின் விழைவினை வெறுத்தேன்-இன்பத்தில் கொண்ட விருப்பத்தை வெறுத்தேன். அருள் என்னும் அசி திருவருளாகிய வாள். அசி-வாள், 'அசி நவிர், ஏதி, நாட்டம்.... வாளாமே. (சூடாமணி நிகண்டு. செயற்கை வடிவம் 9). தேற-தெளிய. 'பாசம் யாவும் அருள் என்னும் அசியால் அறுத்தேன் என்று கூட்டுக.

78 குரவன் இந்திரனின் மலபரிபாகத்தின் பேற்றை

74 ஒருபொரு ளுடைய தொன்றை
யுதாரனே யுதவற் பாலான்
பரனரன் பிறவி யில்லோன்
பசுபதி யுதார வீரன்
தருணமா தேவன் சோதிச்
சங்கரன் றனே முத்தி
யருடரு கருத்த னென்றே
யறைந்திடு மறைகளி யாவும்

75 பிறிதொரு வழியி லுண்மை
பேசினன் சுருதி யாராய்ந்
துறுதிவா னுரிவை கொள்வோ
ரனையரே பிறராற் கொள்வோர்
இறையர சிருக்கும் மூதூர்
எம்பெருங் காஞ்சி மூதூர்
செறிவுட னங்கண் முத்தித்
திருவருள் புரிவ தெம்மான்

---

அறிந்தான். எனினும் ஒப்பொருள் ஆய்ந்து வீடு பேறு அடைதல் அரிது என்று கருதி எளிய வழி கட்டுரைத்தான்.

மலபரிபாகமாவது, மலம் தனது சத்தி தேய்தற்கு உரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலே ஆகும். (சிவஞான பாடியம் 8-ஆம் சூத்திரம் 1 ஆம் அதிகரணம்) முப்பொருள் பசு-பதி-பாசம் 'பசு பதிபாசம் எனப்பகர் மூன்று' என்பது திருமந்திரம்.

74 பொருளைப் பெற்றிருப்பவனே கொடுக்க வல்லவன் ஆவான். பொருள் இருந்தும் கொடைக்குணம் இல்லாதவன் வழங்கான். இவ்விரு பண்பும் பெற்றவன் சிவன் என்பதைக் குரு விளக்குகிறார்.

உதாரன்-வள்ளல். பசுபதி என்று பொருள் உடைமையையும் உதாரவீரன் என்று வழங்கும் வீரத்தையும் குறித்தார். தருணமாதேவன்-சமயம் தெரிந்த பெருந்தேவன். முத்தி அருள்தரு கருத்தன்-முத்தி கொடுக்கும் தலைவன். இதனை வேதம் கூறும்.

பசுபதி பசுக்களுக்குத் (ஆன்மாக்களுக்கு) தலைவன். சங்கரன்-இன்பம் தருபவன்: நன்றாக யாவற்றையும் ஒன்றுள் ஒடுக்க வல்லவன் என்றும் கூறலாம். சம்+கரன்.

75 சுருதி-வேதம். (கேட்கத் தக்கது) சிவபிரானை விட்டு

76 சத்திய ஞான தானத்
தலமது தன்னின் மன்னுஞ்
சத்திய விரத மென்றோர்
தனிப்பெருந் தான மங்கண்
சத்திய விரத மான
தமைதன் கரையின் பாங்கர்
சத்திய விரத நாத
னெனும்பெயர்த் தாணு மேவும்

77 பொய்ந்துபொய் யுரைப்போ ருண்மை
பேசுவோ ரவர்கள் தன்மை
ஆய்ந்துபா ரறியக் காட்டி
யருடரு தன்மை யாலுஞ்
சார்ந்தவர் தமக்கு வீடு
சத்திய விரத மாக
ஈய்ந்திடு மியற்கை யாலு
மிதுபெய ராயிற் றன்றே

---

மற்றைய தேவரால் முத்தி பெற விரும்புவோர் ஆகாயத்தின் தோலைக் கொள்ள நினைப்பவர் போன்றவர், (ஆகாயத்திடத்தில் தோல் இல்லை. மற்றைய தேவரிடம் முத்தியில்லை). அந்த இறைவன் இருக்கும் ஊர் காஞ்சிபுரம். முத்தித்திரு-மோட்ச லட்சுமி.

இங்குச் சுருதி என்றது அதர்வ வேதத்தை வளிதாழ் விசும்பைப் பசுந்தோல் போல் சுருட்டவல்லோர்-உளரேல், புடை வீங்கி எழுந்து திரண்டுருண்ட-இளவெம் முலைபங்கனை அன்றியும் இன்ப முத்தி-அளவிற்பெறலாம் என விண்ட ததர்வவேதம் என்று சிவ ஞான மணிவர் பகர்வர். கந்த புராணம் உபதேசப் படலத்திலும் இவ்வுவமை கூறப்பட்டுள்ளது),

76 தனிப் பெருந்தானம்-ஒப்பற்ற பெரிய இடம். தடம்-பொய்கை. சத்திய விரதமான தடம்-சத்திய விரத தீர்த்தம். மேல் திசைச் சத்திய விரத தீர்த்தம் ஒன்று, ஆற்றவும் மேன்மை பெற்றுடையது. (காஞ்சிப்புராணம். திருநெறி 84)

77 பொய் உரைப்போர், உண்மை பேசுவோர். தன்மை காட்டி அருள் தரும். பார் அறிய-உலக மக்கள் உணர, இப் பாடல் இத்தலம் சத்திய விரதம் என்ற பெயர் பெற்ற காரணத்தை விவரிக்கிறது.

78 புதனெனும் பேரோன் முன்னம்
போந்திவண் பிரானைப் பூசை
விதிமுறை யாற்றிப் புந்தி
மேன்மையுங் கடவுள் கோளாம்
பதவியு மடைந்தா னத்தாற்
பரவியே புதவா ரத்துள்
இதினுளம் படிந்தோ ரெண்ணா
மிமையவது திண்ண மாமால்

79 அனையவத் தலத்தை நீயின்
றணுகினை பிரானைப் போற்றி
னினைவது முடியு மென்ன
நெகிழ்தரு மனத்த னாகி
யினையது மாற்ற மென்ற
னிருசெவிப் புகுத லோடும்
புனிதவென் னுடன்மற் றோரற்
புதவசப் பட்ட தன்றே

80 அருளிதற் கேது விவன்னென்
றறைதலு மாசான் சொல்வான்
சரதநீ ரான வந்தச்
சத்திய விரதத் தன்னு
ளொருதினம் படிந்தோ ரன்பால்
உம்பர்கோன் பதவி சேர்வர்
இருதினம் படிந்தோர் வேத
னெனும்பெரு பதத்த ராவார்

---

78 இவண் போந்து-இங்கு வந்து. பிரான்-வள்ளல். பெரிய வாச்சான் பிள்ளை நம்பிள்ளை முதலான உரையாசிரியர்கள் பிரான் என்ற சொல்லுக்கு 'உபகாரகன்' என்று வழங்கியதைத் தேவார உரையாசிரியர்கள் மனம் கொள்ளவேண்டும்' பிரானாய் அடி என் மேல் வைத்தாய் போற்றி' என்ற வாகீசரின் தேவாரத்தை இங்குக் கருதுக. கோள்-கிரகம்.

79 அணுகினை-அடைந்து (முற்றெச்சம்) குருவின் பார்வை பட்டமையால் இந்திரன் தன் உடலைப் புனித உடல் என்றான். அன்று சத்தியதீர்த்தம் படியும் பேறு பெறுவதாலும் புகழ்ந்திருக்கலாம். 'வாழி எம் மணிநா வும்மே' எனக் குமர குருபரர் திருவாய் மலர்ந்தருளியதைக் கருதுக (மதுரைக் கலம்பகம் 103).

80-81. ஏது-காரணம். எனக்கு இத்தகைய நல் உணர்வு

81 முத்தினம் படிந்தோ ரந்த
முராரிசீர்ப் பதவி யாள்வர்
இத்திற னுகை யாலே
யினியமுற் பவத்தி லன்பாற்
சத்திய விரத மென்னுந்
தடமொரு தினநீ தோய்ந்தா
யத்திருப் பெறுதி யானீ
யமரர் கோனுன வண்ணம்.

82 இன்னுமங் கதன்பா னண்ணி
யிரும்பொய்கைத் தடநீ ராடீ
யன்னிலை மூல லிங்க
மைவன்ன மனுவி னுலே
மன்னிய சைவ நூலின்
வழிதவா வண்ணம் போற்றிற்
பொன்னக ராளி ! வீடு
புகுவது திண்ண மென்றுன்.

---

வருந்தற்குக் காரணம் யாது என்று இந்திரன் கேட்டான். ஆசான்-குரு. சரத நீர்-சத்தியத்தன்மை ஒரு தினம் (அதில்) படிந்தோர் இந்திரன் ஆவர், உம்பர் கோன்-இந்திரன். இரு தினம் படிந்தோர் பிரம்ம பதவி பெறுவர். மூன்று தினம் படிந் தவர் விஷ்ணு பதம் பெறுவர். முராரி-திருமால். (முரனை அழித் தவன்).

நீ முற்பிறப்பில் ஒரு முறை படிந்து இந்திரன் ஆனுய். அமரர் கோன் ஆன வண்ணம்-தேவர்களுக்குத் தலைவனுக உயர்ந்தபடி. அத்திரு-அந்தமுத்திச் செல்வம்.

82. தட நீர் ஆடி-பொய்கையில் குளித்து. ஐவன்ன மனு-ஐந்து எழுத்துக்களால் ஆன மந்திரம். (பஞ்சாட்சரம்) வர்ணம் என்ற வட சொல் வன்னம் என்று வந்தது. ‘ தேசுறும் வன்ன ரூபியாய் நிறைந்ததேவி. ’ (காஞ்சிப்புராணம்-சனற்குமார 18) பொன்னகராளி-இந்திரன்-அண்மை விளி.

83 சொற்றரு குரவர்ப் போற்றித்
துள்ளின னுவகை யாடி
நற்றிருக் காஞ்சி மூதூர்
நண்ணின னண்ணல் சான்ற
பொற்றிரு மாட கூடப்
புராதனக் கவின்கண் டன்னுன்
றெற்றெனச் சினந்தான் றன்னூர்
திருத்துமச் சிற்பன் றன்னை.

84 இப்பெருங் கவின்பொன் னாட்டி
னியற்றுவோர்க் குரைப்பான் போலத்
தப்பறப் பலகா னுடிச்
சத்திய விரத மென்னு
மப்பெருங் கோயிற் பொய்கை
யவிர்தரு மிலிங்கம் யாவும்
கைப்படு நெல்லி போலக்
கண்ணுக்கோர் விருந்து செய்தான்.

85 தடனது படிந்து செய்யுந்
தரும நன்னியமம் முற்றி
யடிகளை வணங்கிப் பூசைக்
காவன நிதிய நல்கிக்
கடன்முறை தவாம லாற்றிக்
கசிந்துமுன் புகழுங் காலை
வடிவுடன் முன்னின் றெம்மான்
வரமெது கேட்டி யென்ன

83. குரவர்ப் போற்றி-குருவைப் புகழ்ந்து. அண்ணல் சான்ற-பெருமை மிக்க. காஞ்சியைக் கண்ட இந்திரன் தன் ஊரைத் திருத்தும் சிற்பனை (விஸ்வகர்மா) இப்படிப் படைக்கப் பட்ட நகரின் அழகைக் காணவில்லையே என்று கோபித்தான்.

84. இந்த நகரின் அழகைத் தன் நாட்டில் உள்ள சிற்பி களுக்குக் கூறுவதற்காகப் பார்ப்பது போல் பார்த்தான். (தற் குறிபபேற்ற அணி) இந்திரன் கோயிலையும், பொய்கையையும், இலிங்கத்தையும் இன்னும் பிறவற்றையும் தன் கண்களுக்கு விருந் தாகப் படைத்தான். கைப்படு நெல்லி-கையில் உள்ள நெல்லி.

85. தடம் என்பது தடன் என்று வந்துள்ளது. போலி. நியமம்-கடமை. அடிகள்-இறைவன். மலர்மகள் விரும்பும் நம்

86 உனதுபே ரருளா லென்று
மொழிவிலா வின்ப வீடு
தனியனேன் வேண்டு பின்னுந்
தருவதொன் றுண்டு பெம்மான்
அனகமா மிலிங்க மிந்த
வாலயம் பொய்கை யாவும்
எனதுபே ரதனு லெங்கும்
இலகவும் வேண்டு மென்றான்.

87 தந்தனம் பெறுதி யென்று
தலைவனு ருரைத்த ஞான்றே
யந்தமின் முத்தி யின்பம்
அமரர்கோ னடைந்தா னன்றே
இந்திர தடாகஞ் செம்பொனிந்
திராலை யஞ்சிற் சோதி
யிந்திர லிங்க மென்றே
யெங்கணு மிலகு மாதோ.

---

அரும்பெறல் அடிகள் (திருவாய் மொழி 1.3-1 (பத்துடை). தவாமல்-கெடாமல். 'தவாப் பிறப்பு ஈனும் வித்து' என்பது திருக்குறள்.

86 ஒழிவு இலா-உன்னை விட்டு நீங்காத. அனகம்-தூய்மை யான. ஆலயம், பொய்கை, யாவும் என் பெயரைப் பெறவேண் டும். இலகவும் வேண்டும்—விளங்க வேண்டும். (உம் அசை).

'ஒழிவிலா' என்ற தொடர் ஒழிவில் ஒடுக்கம் என்ற நூலை நினைக்கச் செய்கிறது. இவ்வாசிரியர் காழிவள்ளல் தொழும்பர் அல்லவா? (நூலின் கடைசிப் பகுதியைப் பார்க்கவும்)

87 தந்தனம் - கொடுத்தோம். உரைத்த ஞான்றே - கூறிய போதே. அதனுல் (பொய்கை) இந்திர தடாகம் என்றும், (கோவில்) இந்திராலயம் என்றும் (இறைவன்) இந்திர லிங்கம் என்றும் விளங்கும்.

'அந்தமில் இன்பத்து அழிவில் வீடு' என்ற பரிமேல் அழகர் அந்தம் இல் முத்தி என்று பாடப்பணித்தார் போலும்,

88 தருமநீர்ப் பொய்கை லிங்கந்
தானமீ தோரொன் ருலே
பெருமிதங் குலவு பாரிற்
பிறங்கிய தலங்க ளெல்லா
மரிதிவை மூன்று முண்மை
யாகவே தலைமை சான்ற
தொருதிரு வைப்பி லல்லா
லுலகிடைக் காணற் பாற்றே.

89 சொற்கமாம் பெரும்போ கத்தைத்
துறந்தனன் பிறவிக் கஞ்சிச்
சிற்கன திகப்பே ரின்பஞ்
சேர்ந்தனன் தேவர் கோமான்
புற்கையால் வயிறு தூரத்தெம்
போலுவார் களிமீக் கொண்டே
ஒற்கமாம் பிறவித் துன்பம்
உவர்த்திடார் அந்தோ வந்தோ.

---

88 மற்றைய தலங்களில் தடாகம் ஒரு பெயரிலும், கோவில் வேறொரு பெயரிலும், இறைவன் பிறிதொரு பெயரிலும் அமையும். மூன்று பெயரும் ஒன்றாக அமைந்தது இத்தலத்தில்தான்.

ஓர் ஒன்றாலே-ஒவ்வொரு பெயராலே. சிவபிரான் கோவில்கள் இருப்பதால் உலகு பெருமிதம் உற்றது.

89 தேவர் கோமான் பிறவிக்கு அஞ்சித் துறக்க போகத்தைத் துறந்தான். எம் போன்றவர்கள் கூழால் வயிற்றை நிரப்பிச் செருக்குறுகின்றனர். அந்தோ! அந்தோ!

புற்கை-நீராடல் அடப்பட்ட கூழ். (புல்லரிசியால் சமைக்கப் பட்டதால் இப்பெயர் பெற்றதோ?) நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே (புறம் 64). 'தெண்ணீர் அடுபுற்கை' என்பர் வள்ளுவர். சித்கன அதிகப் பேரின்பம். சித்கன அதிகப் பேரின்பம் என மாற்றுக. கனசித்-பெருமை மிக்க அறிவு.

## புண்ணிய கோடீசுரம்

### வேறு

90 பொற்றிருவா லயமதன்றென் பாலாகிப் பொலியும்
புண்ணியகோ டீசமெனப் புராதனத் தென் றளியொன்
றுற்றொருபுண் ணியமெவரே புரிந்திடினு மங்கண்
ஓர்கோடி கோடியென வுற்பவித்த லாலே
மற்றொருபேர் மருவியது முன்னொருகான மேக
வாகனமாங் கற்பத்தில் மாதவனேம் மானைச்
செற்றிகழு முருத்திரித்துப் பரித்தனன்முன் பராவித்
திருமலரோன் முதற்புவனி திருத்துவதற் கிரந்தான்.

91 பெரிதிரங்கி முன்னவனுங் காஞ்சிதனிற் காம
பீடத்தி லெனையருச்சி பின்னையது முடியுஞ்
சரதமென வத்திகிரி யுத்தரவே திகையின்
தனதுதென்பா லாய்மருவிச் சாதகபா வனையில்
இருமையையுந் தருமிலிங்க மாகவொரு லிங்க
மிருத்திமுன்னர்ப் புண்ணியப்பொற் பொய்கை
யென்றோர் குளன்கண்
டரிதுபுரி மறைவிதியி னருச்சனையை நிரப்பி
யையன்ன மனுபுகன்றங் கன்பினொடு வணங்க.

---

90 தென்பால்-தெற்குப் பக்கத்தில். புராதனம்-பழமையான. தென்தளி-அழகிய கோயில். 'கறை பன்னீராண்டு உடன்விடுமின் காமர்சாலை தளிநிறுமின். (சிந்தாமணி நாமகள்).

மாதவன்-திருமால். செல்-மேகம். 'செல் என்று உன் நாமத்தைச் செப்பினதே அல்லாது-செல் என்று உனை நாங்கள் செப்பினமா' என்று வேத நாயகர் நயமுறப் பாடுவார். (தனிச் செய்யுட் சிந்தாமணி பக். 418. பாட்டு 39). திருமால் பிரமனையும் உலகையும் படைக்கும் வரம் கேட்டான். மலரோன்-பிரமன். புவனி-உலகம்: 'புவனியிற் போய்ப் பிறவாமையின் நாள் நாம் போக்குகின்றோம்' என்ற திருவாசகம் கருதுக. திருத்துதல்-படைத்தல்.

91 சரதம்-உண்மை. உத்தரவேதி-யாகாக்கினி இருக்கும் இடம். இங்கே வரதராஜப்பெருமாள் இருக்கும் கோவிலைக் குறிக்கிறது. 'உத்தரவேதிக்குள்ளே உதித்தார் வந்தார்-உம்பர் தொழுங்கழலுடையார் வந்தார்தாமே' என்று வேதாந்த தேசிகர்

92 தனிமுதல்வன் முன்னின்று பரிவெளிது விளங்கத்
தழீஇக் கொண்டு முகமனுரை தந்தடியர் தலைவ
னவுதிவேண் டியதளித்து மெனவுன து பதத்தின்
விழைவுதரு மன்புவரம் வேண்டுமுத லதற்பின்
புனிதமுறு பிரமனுடன் பெரும்புவன மனைத்தும்
புரணமுற வுண்டுபின்னைப் புரிந்திடவும் வேண்டு
மெனவுரைக்க வளித்தனனப் புண்ணியகோ டீசத்
திடைப் பெருமை புகல்வென்று லெம்மளவிற் றன்றே.

## சிவாத்தானம்

93 அதனதுகீட் டிசைமருவுஞ் சிவாத்தான மென்றோர்
அரனுறையுண் முன்னொருகா லகிலபெரும் புவனம்
பதுமன்முத லினரெவையும் விழுங்கியரி பின்னும்
படைத்தருள வுணர்ந்தெழுந்தப் பான்மைதனை நோக்கிச்
சதுமுகனும் பிரான்றனையே போற்றியடி யேற்குத்
தந்தருளிச் செய்கையெனச் சங்கரனு மெம்மைக்
கதுமெனநீ காஞ்சிதனிற் பூசியெனப் பிரமன்
காஞ்சியிடைப் பிரமீசங் கண்டுகவின் பெறவே.

---

'மெய் விரதமான்மியபத்தில்' பாடி உள்ளார். அருச்சி-வழிபாடு செய்.

சாதகபாவனையில்-யோகவழியால். குளன் கண்டு-பொய்கையை நிறுவி. குளம்-குளன். போலி. ஐவன்னமனு-பஞ்சாட்சரம். முத்திக்குச் சாதகமாக இருத்தலின் யோகத்தைச் சாதகம் என்றார்.

92. பரிவு-அன்பு. அன்பு விளங்க இறைவன் திருமாலைத் தழுவிக் கொண்டான். அளித்தும்-கொடுப்போம். அனைத்தும் உண்டு-யாவற்றையும் அடக்கி, புரிந்திடல்-படைத்தல்.

புரணம்-நிறைவு உண்டாக. புகலும் ஞானத்தினால் புரணம் ஆனது-நிகரில் வாசிட்டமா நிபுண ஞானமால் (வைராக்கியப் பிரகரணம் 2).

93. கீழ் திசை என்பது கீட்டிசை என்று வந்தது. சிறப்பு ழகரம் டகரம் ஆவதை மொழி நூலாலார் உடன்படுவர். தமிழ் மொழியில் உள்ள 'ஏழு' தெலுங்கில் ஏடு ஆகும். வீழ்தல் என்ற சொல்லே வீடல் என்று ஆயிற்று. புழற்காயே புடல்காய்

94 திருப்பிரம தீர்த்தமென்றோர் தீர்த்தமுங்கண்டதன்பாற்
சிவனையருச் சனைபுரிந்து தெய்வமக மியற்றி
வருக்கமுடன் முனிக்கணத்தோ ரிமையவர்தற் சூழ
வைதிகப்பே ரவைநடுவுண் மவுனநிய மத்தால்
விருப்பமுடன் றனையுதவு சிவனைமனத் துன்னி
மெய்ம்முகிழ்ப்ப விருந்துழியவ் விரதபல னளிப்பான்
உருக்குலவி நின்றிறைவன் வேண்டியது வினவ
வுள்ளபடி மறையொலியா னுவந்தெழுந்து வணங்கி

95 தெய்வதப்பே ரவைநடுவுண் முன்னின்று யதனாற்
சிவாத்தான மெனும்பெயரித் திருநகர்க்கு விளங்கச்
சைவநெறிப் பொய்கையிது புத்திராமற் பேர்த்
தனையர் பெறத்தென்பு லத்தார்த மதுகடனி யற்றி
னுய்வகைநன் னெறியருள்வாய் விண்டுவினை யுலகத்
துடன்விழுங்கிப் படைத்தருள வுதவுகெனப் பெற்றே
மெய்வகையாற் கண்ணருடன் புவியினையுட் கொண்டே
மீண்டுமுத வினனிதனை வேதமெலாம் விளம்பும்.

---

ஒரு அம் சாரியைப் பெற்று புடலங்காய் ஆயிற்று. ஈது உணரா தார் கீழ்த் திசை என்று மாற்றிவிடுவர். (திகழ்+தசக்கரம் திகடசக்கரம்-கந்த புராணம்).

94 பிரமனும், திருமால் கேட்ட வரத்தையே கேட்டான். பதுமன்-பிரமன். சதுமுகன்-நான்முகங்களை உடைய பிரமன். பூசி-வழிபாடு செய். பிரமீசம் கண்டு-பிரமீசம் என்ற சிவலிங் கத்தை எடுத்து. மெய் முகிழ்ப்ப-உடம்பு சிலிர்க்க. 'மெய்ம் மயிர்ப்புளகம் முகிழ்த்திட்டு' என்பர் பட்டினத்தடிகள்.

95 பிரமன் இத்தானம் சிவாத்தானம் என்று பெயர் பெற வரம் கேட்டான். புத்து-புதல்வரைப் பெறுதவர் அடையும் நரகம். 'புத்தாள கொடுவினையோடு அருந்துயரம் போய் ஒளிப்ப' என்பர் கவிச் சக்ரவர்த்திகள் (கம்ப-பால-திருவவதாரம்) விண்டு- திருமால்.

### மணிகண்டேசுரம்

96 மன்னுமதற் கனிலதிசை மணிகண்டே சுரமாம்
மருவுதிதி யதிதிதரு மைந்தர்கலாம் புரிய
வுன்னிமரி யாதிருக்குந் திறனதுசிந் தித்தே
யுந்தியந்தா மரைக்கடவு ளுடன்பிரமன் முதலோர்
பன்னியமு தம்படைத்தற் குததிகடை தருநாட்
பாவுகருங் கரளமதுற் பவித்தலுமே கலங்கி
யன்னிலையே வேறுபுக லிலாமையினு லெவர்க்கும்
அத்தனமர் தருங்கயிலை யடைந்தனருய்ந் திடுவார்.

97 நந்தியருள் பெற்றவரா லெம்பெருமான் திருமுன்
நண்ணியெண்ணிப் பன்முறையு நலந்திகழ வணங்கப்
புந்திதடு மாறியதென் மேனியெலாங் கருகப்
புகுந்ததுவென் னென்றறியான் போல்வினவும் பிரானுக்
கெந்தையமிழ் தினுக்குததி கடைந்தனமிக் கரளம்
எய்தியது பலபுகன்றெ னிக்கயிலை யடைந்தே
யுய்ந்தனநின் னருண்மருவா தேதுபுரிந் திடினு
மொன்றென்ரு மென்பதனை யுணர்ந்தனமென் றுரைத்தார்

---

96 அனில திசை-வடமேற்குத் திசை. அனிலம்-காற்று, 'அலையிலாத சாகரம் போல் அனிலம் சேரா விளக்கதுபோல்' என்று திருப்போரூர்ச் சந்நிதி முறை கூறும். திதிதரு மைந்தர். (தைத்தியர்) அசுரர். அதிதிதருமைந்தர் (ஆதித்தர்) தேவர்கள். மரியாது-சாகாமல். உததி-கடல். 'உததியிடை கடவுமரகதவருண குலதுரகம்' (சீர்பாத வகுப்பு) கரளம்-நஞ்சு, ' அதிகரளநதியை அதிமதுரம் உறுசெய்திறல் அறுவர் (பழைய திருவிளையாடல்" கடவுள் 12.)

97 புந்தி-அறிவு. புகுந்தது-வந்த (துன்பம்) உததி கடைந் தனம்-கடலைக் கடந்தோம். கரளம் எய்தியது-விடம் எழுந்தது. இக்கயிலை அடைந்தே உய்ந்தனம்-இந்தக் கைலாசத்தை அடைந் தமையால் தப்பினோம். அருள் மருவாது-அருளைப் பெருமல். ஏது புரிந்திடினும்-நன்மை செய்தாலும் தீமை செய்தாலும். ஒன்று-நன்மை, ஒன்ரும்-வேறு ஒன்ருகும். ஒப்பற்றது ஆதலின் நன்மையை ஒன்று என்ருர்.

புதிய காஞ்சிப் புராணத்தில் 'உன் அருள் அன்றி முயல்வது எல்லாம்-ஒன்று ஒழிய ஒன்ருகும் என்று உரைக்கும் மொழி மெய்யோ' என்று தேவர்கள் கூறுவர்.

98 அஞ்சலஞ்ச லென்றிறைவன் கரமதனை யலர்த்த
வம்புயத்தி னடுவுபெறு மறுபதம்போ லாகி
நஞ்சமது மருவுதலும் அருந்திடுத லறித
லுடியுமை விழியருளா னலத்தென நம்பன்
றஞ்சமென வடைந்தவரா ருயிர்மடவார் களத்திற்
றருணமணி மங்கலநாண் டரித்திடக்கந் தரத்தில்
வஞ்சனைநஞ் சினையிருத்தி யினியமுத மெளிதாய்
வருமுததி கடையுமென வணங்கினர்மு னகன்றார்.

99 தேவரது கணத்திலயன் றனைவணங்கி யளியேந்
தெய்வவமு தருந்தியிடு திறன்குறித்தெம் பெருமான்
மேவுகருங் கொடியபெரு விடமமுது செய்யும்
வினையதனுக் கஞ்சாமல் விழிகளிகா னுறுமிப்
பாவமெது புரியிலகற் றருமெனவே காஞ்சிப்
பதியணுகி வைதிகநூற் படிபரமன் பூசை
நீவிர்புரி தரிலகலு மெனப்பரமன் கூறு
நெறிதனையே கடைப்பிடித்து நீங்கினரந் நிலையே.

---

98 கரம் அதனை அலர்த்த-கையை விரிக்க, அம்புயம்-தாமரை. தாமரையில் இருக்கும் வண்டுபோல் நஞ்சு வந்து இறைவன் கரத்தில் தங்கிற்று. சிவபிரான் விடத்தை உண்ணக் கருதினன். உமை அம்மை, அதனை அறிந்து நலத்தது என்று விழியால் கூறினள். தஞ்சம் அடைந்த தேவர்களுடைய மனைவிமார்களின் கழுத்தில் தாலி இருக்க, இறைவன் தன் கழுத்தில் நஞ்சு இருக்கச் செய்தான்.

அறுபதம்-வண்டு. நம்பன்-சிவபிரான். களம்-கழுத்து. கந்தரத்தில்-கழுத்தில். உததிகடையும்-கடலைக் கடையுங்கள்(ஏவல்)

இங்கு சிவஞான முனிவர் 'கருங்கழற்கடு கமலமீச் சிறையளி கடுப்பப்-பெருந் திருக்கரத்து எய்தி ஏர் செய்து' என்பர். (மணிகண்டேச 44) மேலும் சிவபிரான் கூறிய பாடல் அமுதம் போன்றது. 'அரிவை கேட்டி இக்கொடுவிடம் அகிலமும் ஒருங்கே எரிமடுத்தது: உன் பார்வையால் இன் அமுது ஆமால்-புரிவது ஒன்றிலை பருகினல் புகறி நீ என்ன-வரிவிழிக்கடை தோய்விழிக் கணங்குழை மடமான்-தலைமை அன்பினல் மலர் முகம் ஒருபுடை சாய்த்துக் குலவு செங்கையின் விடத்தினை நோக்கினள் குறித்து' என்று பத்திச் சுவை சொட்டச் சொட்டப் பாடுவர் முனிவர்.

99 அதுகணத்தில்-அப்போது. எதுபுரியில்-என்ன புண்ணி

100 கன்னல்வயற் காஞ்சிநக ரணைந்துவியந் தனரே
கம்பரையே பரைதழுவக் கனிந்தவரை வணங்கி
யின்னகிரி லோரறிவு பெறுமுயிரா யேனும்
எய்திடப்பெற் றிலமெனவே யிரங்கியெம துயிரா
மன்னவிட மமுதுசெய்தா தரித்தெமைக்காத் தருளும்
மணிகண்ட மேபிரம மற்றினியென் றந்தச்
சென்னலமே யுன்னிமணி கண்டேச மெனவே
தெய்வதப்பே ரிலிங்கமொன்று திருத்தியவ ணிருத்தி

101 சைவநன்னூன் முறையறிந்தே பரனையதி னிறுவித்
தகுதியருச் சனைமுடித்துத் தமதுகுறை முடித்தார்
மைவிடமெம் மானருந்தப் புரிந்தனமென் றுருகி
வாசுகியா மரவரசும் வந்தனந்தப் பெயராந்
தெய்வநன்னீர் கண்டாடிச் சுடிகைபடு மணியாற்
றிருத்தியருச் சனைபுரிந்து சிவனருள்பெற் றோங்கிக்
கௌவையறப் பணியரச ஞனதநன் தென்பாற்
கருதியினைத் தடைந்தாரைக் காப்பவனு லையமால்.

---

யம் செய்தால். பூசை புரியில் பாபம் நீங்கும் என்று பிரமன் கூறி ஞன். கடைப்பிடித்து-மேற்கொண்ட செயலை மறவாமல், கடைப் பிடி-என்ற சொல்லுக்கு இறையனுர் அகப் பொருளில் கூறப்பட்ட விளக்கம் காண்க.

100 கன்னல்—கரும்பு. தேவர்கள் இந்த நாளில் ஓரறிவு பெற்ற மரம் புல் முதலாகப் பிறக்கும் பேறும் பெற்றேம் இல்லையே என்று வருந்தினர். இனி மணிகண்டமே பிரமம் என்று உன்னி எனக் கூட்டுக. திருத்தி-நன்ருகப் பளபளக்க நகசு வேலை செய்து.

தழுவக் கனிந்தவர்-உளம் தழுவ நெகிழ்ந்தவர்.

101 பரனை-சிவபிரானை வாசுகியும் நம்மால் அல்லவா இறைவன் விடம் உண்ண நேர்ந்தது என்று வருந்தி, இறைவனைத் தன் முடிமணிகளால் அருச்சனை புரிந்தது. அனந்தப்பெயராம் நன்னீர்-அனந்தசரசு. அந்தப்புண்ணியத்தால் அது அரசுகட்கு அரசு ஆயிற்று.

## வேறு

### சார்ந்தாரைக்காத்தார்

102 சுருதி நூன்முறை யொழுக்கமு மிழுக்கிலாத் துறவுந்
தரும நீதியுந் தத்துவ நெறிப்படுந் தகவும்
பிரம ஞானமு மானமு நலப்படும் பிறவுங்
கரவு செய்திடுங் கலியுகம் பிறந்தவக் காலை.

103 சரத மாகவே படிந்தவர்க் கழிவுறுத் தலைமை
வரத மாகவே தருமொரு பெருந்திரு வைப்பா
பிரத நீர்வர நதிப்பெருங் காசியி னிருந்தான்
விரத மாதவன் தராதல புராதன வியாதன்

104 அனக மாகிய பிரமநிச் சயந்தனை யந்நாள்
வினைய மாகவவ் விடையறை முனிவரர் வினவத்
தனிவி யாகர ணத்துநூன் முதற்பெருந் தகைமை
புனித நூற்றிறத் துண்மையே தனித்தனி புகன்றான்.

---

102 சுருதி, நூல், முறை ஒழுக்கம்-வேதத்திலும் ஆகமத்திலும் கூறப்பட்ட ஒழுக்கம்- பிரமஞானமும் பிரமத்தை அறியும் அறிவு. பிரமஞானம் முதலானவை, கலியுகம் பிறந்த காலை கரவு செய்திடும். கரவு செய்திடும்-மறையும்.

சுருதியும் ஆகமும் என்க. நூல் என்பது சிவாகமத்தை. 'உரை நூல் மறை உறையும் கோவில்[1] என்ற முதல் திருவந்தாதிக்கு வரைந்த விரிவுரை கொண்டு தெளிக. (முதல் திருவந்தாதி 5):

103 சரதம் ஆக-உண்மையாக. வரதம் ஆக-வரம் ஆக. தராதல புராதன-பூமியிலேயே பழமையான. வரதம்-வரம். வரதம் உடைய அணி தில்லை. (திருக்கோவை, 577). வைப்பு-சேமநிதி. இரதநீர்-சுவைமிக்க நீர். வரநதி-கங்கை.

104 அனகமாகிய பிரமம்-தூய்மையாகிய பிரமம். நிச்சயம்-உறுதி. வினயகம்-வஞ்சகம். விநயம் வேறு. வினையம். முன்னையது நன்று. பின்னையது தீது. வினை என்ற சொல் அம்சாரியை பெற்று வினையம் ஆயிற்று. கவிச்சக்ரவர்த்தி ' வினையம் வீய ' என்பர். 'வெம்மடங்கல் வெகுண்டனைய' என்று தொடங்கும் உலகப் பாட்டைப் பார்க்க (யுத்த காண்டம்) வியாகரணம்-இலக்கணம். தனித்தனி-தனித்தனியாகக் கூறும்போது.

105 கருதி யாவையு மொருப்படத் தொகுத்திடுங் காலை
விருது பூண்கலி தன்பெரு வலியினை விரிக்க
மருளின் மேவினன் கேசவன் பரமென வலித்தான்
பெரியர் யாவரு மையமே யுற்றனர் பெரிதும்

106 மறைதெ ரிந்தநீ யென்னிது புகன்றனை மறைநூ
லிறைவ ரித்தல நாதர் முனிசைத்தியோ வென்னக்
கறைத ருங்கலி வலியினை யாவரே கடந்தார்
அறைது மென்றவன் கரமெடுத் துரைத்தன னரன்முன்

107 அகில நாயகன் விருப்பிலன் வெறுப்பில னதனாற்
புகுதி கண்டது நந்தியெம் பிரானிது பொறுத்த
றகைமை யன்றென வவனகரத் தம்பனை புரிந்தான்
ககன மேலவன் கரஞ்சிலைத் தாணுவே கடுத்த

---

105 தொகுக்குங்காலை - சாரமாகக் கூறும்போது. கலி-கலியுகம். வலியினை-தன்னுடைய வன்மையை. விரிக்க-விரிவு படுத்த. கேசவன்-திருமால். பரம்-பரம்பொருள்.

விருது பூண்-வெற்றிக்கு உரிய சின்னங்களைக்கட்டிய. விருது கட்டி சுங்கம் வெட்டி (மதுரைக்கலம்பகம் 14) வலித்தான்-வற்புறுத்திப் பேசினான்.

வியாசன் ஸத்யம் ஸத்யம். புரஸ் ஸத்யம். உத்ருத்ய புஜம் உச்யதே-வேதசாஸ்த்ராத்பரம் நாஸ்கு. நதைவம் கேசவாத்பரம். என்கன் (வேதங்களுக்கு மிஞ்சின சாஸ்திரம் இல்லை. கேசவனுக்கு மிஞ்சின தெய்வம் இல்லை. கையை உயர்த்திச் சொல்கிறேன்].

இந்த ஸ்லோகத்தைச் சிவஞான முனிவர் 'வண்ண மாமறை நூற்கு மேல் நூல் இல்லை: மதியோர் எண்ணுகேசவன் தனக்கு மேல் தெய்வமும் இல்லை' என்று மொழி பெயர்த்தார். (சார்ந்த 8)

106 இது புகன்றனை என்? இதனை விசுவநாதன்முன் கூறுவாயோ என்று முனிவர்கள் கேட்டனர். வியாசன் கூறுவேன் என்று (இறைவன்முன்) கையை உயர்த்திக் கூறினான்.

கறைதரும்-குற்றத்தை வழங்கும். அறைதும்-கூறுவோம். (வேற்றுப்பொருள் வைப்பணி).

107 அகிலநாயகன்-விஸ்வநாதன். வேண்டுதல் வேண்டாமை யிலான் என்ற குறள், விருப்பிலன் வெறுப்பிலன் என்ற தொடரின் வேராகும். பொறுத்தல் தகைமையன்று-பொறுமையோடு இருப்பது தக்கதன்று. கரத்தம்பனை புரிந்தான்-கை அசையாமல்

108 கால மன்னதில் வியாதனக் கேசவக் கடவுள்
ஓல மென்றலு மாறன துளம்பரிந் தன்ஞன்
பால லணைந்தனன் மறந்தனை யோமறைப் பயனைச்
சீல மின்னதோ முனிவர் வென்றவற் சினத்து

109 வேத மேபிர மாணமிங் கிதற்கென விரித்து
நீதி சேர்தரு குழலைநாற் சுருதியை நினைந்தான்
போத மாமிவை வந்தன வுருவொடும் புணர்ந்து
காத லின்றியே யுண்மையாங் கருத்தினைக் கழறும்.

110 பகவ னச்சுதன் மகபலம் அதற்கிவன் பதிபின்
னிகலி லாதவன் அரியயன் தனக்கிறை யென்றும்
அகில காரண காரணன் சிவன்பர னவனே
சகல பூரண னென்றது சரதமாங் குடிலை

111 பிறவி யில்லவன் பிறப்பெனும் பெருந்துயர் பெயர்வுற்று
உறவு கூர்பவன் யாவர்க்கு மாரிய ஞெருவ
னறவன் யாவையுந் தோன்றியே யொடுங்கிடு மதனுக்
கிறைவ னேயரன் பரமென வுரைத்த தங்கிருக்கு.

---

இருக்கச்செய்தான். அவன் தூண்போல் இருந்தது. தாணு-தூண். ககனம்—ஆகாயம்.

தூணம் ஒத்து அசைவுற நின்ருன் என்றும், தெற்றற் செஞ் சடை எம்பிரான் திருமுன்பு நாட்டும்-வெற்றித் தம்பம் ஒத்து இலகி, என்றும் புதிய காஞ்சிப் புராணம் பேசும்.

108 கேசவக் கடவுள் ஓலம் என்று வியாசன் கூவினுன். உளம் பரிந்து-மனத்தில் கருணை கொண்டு. மறைப்பயன்-வேதம் படித்த தால் உண்டாகும் பயனை. இன்னதோ சீலம்-இதுவா ஒழுக்கம்.

109 திருமால் வேதத்தையும் பிரணவத்தையும் நினைத்தான். அவை உருவத்துடன் வந்தன. குடிலை-பிரணவம். எட்டொ ஞதவக் குடிலையின் பயன் இனைத் தென்றே-கட்டுரைத்திலன், (கந்தபுராணம். உற்பத்தி. அயன் 14).

110 அச்சுதன்-திருமால். மகபலம்-யாகத்தின் பலன். இவன் பதி-இந்த விஸ்வநாதன் அதன் தலைவன். இகல்-மாறுபாடு. அகில காரணம்-உலகிற்கு முதற் காரணமாகிய மாயைக்கு. கரணன்-கார ணமாக இருப்பவன். இது பிரணவத்தின் வாக்குமூலம்.

111 பிறப்பு என்னும்-பிறப்பு என்று சொல்லப்படும். பெயர்வு

112 முப்பெ ருங்குணங் கடந்தவன் சம்புவர் முதல்வ
னெப்பொ ருட்கணு நிறைபவ ணதியா மீச
ணெப்பில பூதத்தின் பயன்றர வுறைபவ னுமைகோன்
மெய்ப்ப ரம்பொரு ளென்று கூறியதெ சுர்வேதம்

113 விரவு மாயையாம் யாவையு முடையவன் விதியாற்
பரவ ருஞ்சகத் துருவமால் அதற்கிறை பகவன்
பொருவில் சின்மயச் சோதியாஞ் சிவனெனும் புராணத்
தரும மூர்த்தியே பரமெனப் புகன்றது சாமம்

114 மாயை யில்லவன் சம்புவா மீசன்மா தேவ
னேய நல்லறத் தகிலமெய்த் திருவுக்கு மிறைவ
னேய மாதவர் நினைந்திடு நெற்றிநாட் டத்துத்
தூய னேபர மென்றதங் கதர்வணச் சுருதி

---

அற்று-விவகாரம் இல்லாமல். உறவு கூர்பவன்-ஆன்மாக்களுடன் தொடர்பு கொள்பவன். யாவையும் தோன்றி ஒடுங்குதற்குக் காரணமான மாயைக்குத் தலைவன். இது இருக்கு வேதத்தின் வாக்குமூலம். [இறைவன்பால் உலகம் ஒடுங்கின் மீளாது. மாயையில் ஒடுங்கினால்தான் மீளும். ஆதலின், 'ஒடுங்கி, மலத்துளது' (சிவ-போதம்) என்ற தொடரில் ஒடுங்கியை எச்சம் ஆக்குக. நெருப்பில் எரிந்த கட்டை மீளாது. கடலில் மறைந்த கட்டை மீளும்].

112 மூன்று குணங்களையும் கடந்தவன். சாம்பவர்களுக்குத் தலைவன். எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பவன். அதியானவன். பயனை நல்கப் பூதங்கள் தோறும் வசிப்பவன். உமா தேவியின் தலைவன். அவனே மெய்ப்பொருள். இது எசுர்வேதத்தின் கூற்று.

இங்கு 'பூதங்கள்தோறும் நின்றாய் எனின் அல்லால்' என்ற திருவாசகத் தொடரின் ஒலி கேட்கிறது. சாம்பவி தீட்சை பெற்றவர் சாம்பவர்.

113 மாயையாகிய எல்லாவற்றையும் உடையவன் திருமால். அவன் உலக வடிவம் ஆனவன், அவ்வுலகத்திற்குத் தலைவன் ஆகிய சிவனே பரம் என்றது சாமவேதம். இங்கு, ஆசிரியர், இறை; பகவன்; சின்மயச் சோதியாம் சிவன்; புராணத் தரும மூர்த்தி என்று பரம்பொருளைப் புகழ்கிறார்.

114 மாயையில்லாதவன்–மாயையின் தொடர்பு அற்றவன்.

115 கேட்டி யோவெனச் சிதைந்தனன் கேசவப் பெருமான்
பாட்டி யற்றிற மன்றியும் பரம்பரை புவனத்
தீட்டி யேவழங் கியற்கைபு நடக்கையு மின்றால்
வீட்டி மெய்யினைப் பொய்யினைச் சூளுற விரித்தாய்.

116 தனித்தி ருப்பெறும் வெனெனக் களித்திடும் சகமாம்
அனைத்தி னுக்குமாம் தலைவன்என் பதனைநீ அறிந்தாய்
மனத்தி லென்றனக் கிறையவ னென்பதை மதியாய்
வினைத்தி றப்பய மெண்ணியே புகல்வது வேறோ

117 அரத னப்பெரு நீலலிங் கத்தய ரன்பால்
விரத முற்றருச் சனைபுரிந் தியாவரும் வியக்கத்
திருவி னுயக னெனுமொரு பதவியைச் சேர்ந்தேன்
சரத மாகிய வுண்மைமுற் சுருதியே சான்றால்

---

மெய்த்திருவுக்கு–உண்மையான ஞானத்திருவுக்கு, நெற்றி நாட்டத்துத் தூயவன்-நெற்றிக் கண்ணை உடைய தூய்மையானவன். இது அதர்வண வேதத்தின் கூற்று. வாமி ஈசன்-வாமி என்ற சக்திக்குத் தலைவன்.

115 இது திருமால் கூற்று. கேட்டியோ-கேட்டாயோ. பாட்டியல் திறம்–நூல் வழக்கு. புவனத்து வழங்கு இயற்கை-உலக வழக்கு. (உலகம் என்றது சான்றோரை). நடப்பு-சாதாரண மக்கள் செல்லும் வழி. நூல் நெறி, (சான்றோர் நெறி), மக்கள் நெறி, என்று கூறலாம். 'பாட்டியல், தமிழ், உரைபயின் எல்லை'–(பெரிய-திருநாட்டு 1). மெய்யினை வீட்டி-உண்மையை அழித்து. சூளுற விரித்தாய்–சபதம் பட விவரித்தாய்.

116 எனக்கு அளித்திடும் சகம்-எனக்கு வழங்கிய உலகத்திற்கு நீ, எனக்குச் சிவன் தலைவன் என்பதை உணர்ந்தாய். ஆனால் வேறு விதமாகக் கூறினாய். எண்ணம் வேறு ஆகவும் சொல்வது வேறாகவும் இருப்பது முறையா?

117 நீலலிங்கத்து-நீல லிங்கத்தின்கண். அயர்-செய்யப்பட்ட. அன்பால்–அன்பினால். அன்பு செய்தமையால் என்ற தொடர், செய்யப்பட்ட அன்பால் என்று வந்துள்ளது. திருவின் நாயகன்– திருமகளுக்குத் தலைவன். முற்சுருதி-இருக்கு வேதம்.

118 எனைமு தற்பெருந் தெய்வதப் பகுதியா மெவரும்
புனித முற்றவிக் காசியிற் காஞ்சியிற் புராணப்
பனவ ருக்கிறை யாகிய சிவனையே பரவி
யனைய மெய்ப்பத மியாவையு அடைந்தன ரன்பால்

119 இத்தி றம்புகன் றூர்குடி குறைதர விசைத்தார்
அத்த னெம்மிறை சிவனவ னடைந்தவர்க் கருளும்:
புத்தி மானை யாயவன் சரண்புக லெனப்புகுதி
பித்த வென்றவன் பேதைமை கண்ணினூற் பிரித்தான்.

120 அன்ன காலையி லவன்வினை வசத்தினு லறிவிற்
றுன்னு பேரிரு ளகன்றது: சிற்பரஞ் சோதி
தன்ன தாரருள் கிடைத்தது: கிடைத்தலுந் தடையற்
றுன்னி னுன்பெரு நூலெலாங்: கண்ணினீ ருகுத்தான்

121 முன்னர்மாமுனிக் கணத்தரை நோக்கிமூச் செறிந்தங்
கென்ன காரிய மிசைத்தனிர் ஏழையே னறிவு
பின்ன மாக்கினீர் தெருட்டுத லேயன்றிப் பிரான்முன்
இன்ன சூளுற வுரைத்தியென் றுரைப்பது மியல்போ

---

118 எனைமுதற் பெரும் தெய்வதப் பகுதி-என்னைத் தலைவனாகக் கொண்ட தெய்வப் பிரிவுகள். பனவருக்கு இறை-அந்தணர்களுக்குக் கடவுள். பிராமணர் என்ற சொல் பனவர் என்று தற்பவம் ஆயிற்று. 'மன்னு திருப்பெருந்துறை உறையும் பனவன்' (திருவாசகம்-உயிருண்ணி-3).

119 இப்படிப் பொய்ச் சூள் கூறி உன்னைத் தவிரப் பிறந்த குலத்தைக் கெடுத்தவர் எவர்? சிவன் கருணை உடையவன். சரண் புகுக என்று கூறித் (திருமால்) பிரமன் கண்களில் இருந்த அறியாமையைப் பிரித்தான். இத்திறம் குடி குறைதர இசைத்தார் ஆர் என்று பிரித்துக் கூட்டுக. அருளும் புத்திமான் நையாய் எனப் பிரிக்க,நையாய்-வருந்தாது. (முற்றெச்சம்) உரிமையால் திருமால் 'பித்த' என்று கண்டித்தது இயற்கையாகவுள்ளது.

120 வினை வசத்தினால்-தீவினையின் வசப்பட்டதால், அறிவில் துன்னு-அறிவிலே இருந்த, சிற்பரஞ்சோதி-அறிவுக்கு மேலே இருக்கும் இறைவன். அருள் கிடைத்ததும் தடை நீங்கிற்று. நூல் எல்லாம்-ஆகமங்கள் யாவற்றையும்.

121 வியாசன் முனிவர்களை வெறுத்துக் கூறுகிறான். ஏழையேன்-அறிவற்ற என்னுடைய. பின்னம் ஆக்கினீர்-சிதைத்தீர். தெருட்டுதல்-தெளிவுபடுத்தல். சூளுரை-சபதம்.

122 மாய மாயவன் மாயையை யுடையவன் வரதன்
சாயன் மேவுபெண் ணேயரி புருடனே தலைவன்
தூய விச்சுவ மாலதற் கிறைபரஞ் சோதி
சேய மாமக மாதவன் அதன்பதி சிவனும்.

123 என்று பற்பல திறத்தினுன் மறைபுகன் றிடவு
நின்ற தையமென் யளியனை வினவு தனீர்மை
யன்றெனுமற்ற தேவரை யருவருத் தரனே
யின்று நம்பிழை பொறுப்பனென் றிரங்கிநின் றிசைப்பான்.

124 கேசவன்முதற் கடவுளர் குறைவிடக் கெழீஇய
பூசை கொள்பவன் நீயெனக் காண்டலாற்; புராணம்
பேசு தொல்லைநூ லுரையினு லறிதரும் பெற்றி
ஆசு நீக்கியின் றருளினை; பருவ மீந்ததனுல்

125 முப்பு ரம்பட நகைத்தனை மதனனை முனிந்தாய்
எய்ப்பு றத்தவ ளத்துரு மாற்றிமா லிரங்க
வெப்பு றுத்திய கரளமன் றருந்தினை விறலாற்
றிப்பி யத்தனித் தக்கன்மா மகந்தனைச் சிதைத்தாய்.

---

122 மாயவன்–திருமால். மாயையை உடையவன்–மாயையை வசப்படுத்தியவன். வரதன்–வரங் கொடுப்பவன். சாயல்–மென்மை. அரி–பெண். சிவன் புருடன். மால்விச்சுவம்-திருமால் உலகம். பரஞ்சோதி–சிவபிரான். அதற்கு இறை–அந்த உலகிற்குத் தலைவன் (விஸ்வநாதன்) விஸ்வம், என்ற சொல் விச்சுவன் என்று வந்துள்ளது. மாதவன்–திருமால், மகம்-யாகம். அதன் பதி–அதன் தலைவன்.

123 மறை–வேதம். ஐயம் நின்றது–சந்தேகம் நிலைபெற்றது. என்று அளியனை வினவுதல் நீர்மை அன்று—என்று கூறிக் கருணைக்கு உரிய என்னை வினவியது நற்பண்பு ஆகாது. மற்ற தேவரை–பிற தெய்வங்களை. வியாசன், மற்ற தெய்வங்களை வெறுத்து இரக்கத்துடன் கூறத் தொடங்கினுன்.

124 சிவபிரானை நோக்கி வியாசன் கூறினுன். குறைவிட-குறைகள் நீங்க. பூசை–வழிபாடு. கண்டும், கேட்டும் அறிய முடியாத தன்மையை வழங்கினுய். பருவம் ஈந்து அதனுல் அருளினுய். பருவம்–பக்குவம், (தகுதி) பருவம் உற்றிலர்க்கு முக்கட் பகவன் ஆகமத்தின் உண்மை–உரைப்பில் குரவரில்பதடி. (பிரபுலிங்க லீலை, சித்தராமையர் 68).

125 முப்புரம்பட–முப்புரம் அழிய. மதனன்–மன்மதன்,

126 பரமெ னும்பிர மன்சிர மிறுத்தனை பரிய
வரியு ருப்படு மீன்விழி சூன்றினை யாமை
வெரின ணிந்தனை யேனத்தின மருப்பது மிலேச்சி
நரம டங்கலை யுரித்தனை தரித்தனை நயப்பால்

127 அகந்தை மிக்கொளு மிருவரை நடுக்குறுத் தணுகி
மிகுந்த பேரரு ளுதவினை யுனக்கது வியப்போ?
முகந்த ராதுதந் தனையர்பாற் குறைபெறில் முனிந்தங்
குகந்து சீருறுத் திடுவது முலகியல் பன்றே.

128 அய்ய வுன்றனக் கிகலொடு பற்றிலை ; யாயும்
பொய்யி லாருயி ரிருளது வீய, வென்பொருட்டாச்
செய்யு மாறுநீ யைந்தொழி லிதுமறைத் தெளிவின்
மெய்ய தாமெனி லடியனேற் கிரங்குதி விரைவின்

---

எய்ப்புற-வருந்த. தவளமால்-வெண்ணிறம் உடைய திருமால். மாற்றி-கருநிறம் பெறச் செய்து. வெப்பு உறுத்திய-வெப்பத்தை மிகுதிப்படுத்திய. கரளம்-விடம். விறலால்-வீரத்தால். மகம்-யாகம்.

126 சிரம் இறுத்தனை-தலையை அறுத்தாய். மீன்-மச்சாவதாரம், ஆமை-கூர்மாவதாரம். வெரிந்-முதுகு. ஏனம்-வராகவதாரம். மருப்பு-கொம்பு. மிலேச்சி. அணிந்து- நரமடங்கல்-நரசிங்கம். உரித்தனை தரித்தனை-உரித்துத் தரித்தாய்.

இறுத்தல்-கொய்தல். பரிய-பெரிய. சூன்றினை-தோண்டினாய். 'நுங்கு சூன்றிட்ட கண் நீர்மை' (நாலடி, தூய தன்மை 5).

127 அகந்தை-செருக்கு. இருவர் என்றது, திருமாலையும் பிரமனையும். நடுக்குறுத்து-நடுங்கச்செய்து (நெருப்பு மலையாய்த் தோன்றுதல்). தனையர்-புதல்வர். மைந்தரைச் சினந்து முகம் காட்டாமல் இருந்து அவரைத் திருத்துதல் உலக இயற்கை. இருவருக்கும் காணப்படாமல் இருந்ததை முகந்தராது என்ற தொடரால் சுருக்கிக் கூறினார்.

128 ஐயனே! உனக்கு வெறுப்பும் விருப்பும் இல்லை. (ஆனால்)-உன்னை ஆராய்கின்ற ஆன்மாக்களின் இருள் நீங்க என்னைக் காரணமாகக் கொண்டு (இச்செயல்) உன்னாற் செய்யப்பட்டகை ஆகும். உன்னுடைய ஐந்து தொழிலில் இது மறைத்தல். (இவ்வாறு நான் கருதுவது) ஞானத்தின் உண்மை என்றால் அடியேனுக்கு இரங்குக.

129 என்ற காலையி லுற்றவர்க் குதவிடு மெம்மான்
கன்று காணிய புனிற்றிருங் கறவை போற் கனிந்து
குன்று போலிய வென்றிமால் விடைக்களங் குலுங்கப்
பொன்று மாலயன் காயசின் னம்பல பொலிய.

130 மாய மாயவர் மாய்தொறும் படுசிர மாலை
தூய தானகங் காளமற் றத்தியின் றொடைய
லுய கத்தனிச் சூலத்திற் றூங்குற நாற்றி
மேய பல்கண நாதர்க ளிருபுடை மேவ.

131 போன வேதர்பற் பலதலை யணியல்முன் புராண
மான மாயவன் பல்பிற வியிலடை யாளந்
தானை யாகிய குறும்பல பூதங்க டாங்கி
மான வானவரக ந்தைபோ யொதுங்கிட மருவ.

132 கருணை பொங்கிமே லலையெறிந் திடுவிழிக் கடையா
லுருகு மன்பருக் கன்புசெய் யுமையெமை யுடையா
னருகு றத்தனி யானைமா முகவன றுமுகவ
னிருபு றத்தினுந் தத்தம் தியானமே விலங்க.

---

இகல்–வெறுப்பு. வீய-நீங்க. என் பொருட்டா–என்னைக் காரணமாகக்கொண்டு. மாறு–பகை. மறை–மறைத்தல். பொருட்டு என்ற சொல் காரணம் என்ற பொருள் தருதல் 'லெக்ஸிகன்' கண்டு தெளிக.—இப்பாடலின் உண்மை வடிவம் கிடைப்பின் உண்மை உரை புலனாகும்.

129 உற்றவர்க்கு–அடைந்தவர்களுக்கு. காணிய–காண்பதற்கு (வருகின்ற) புனிற்றிளங்கறவை–சமீபத்திற் கன்றையீன்ற பசு. குன்றுபோலிய–மலை போன்ற. காய சின்னம்–உடலின் அடையாளம்.

130 மாயம் ஆயவர்–மாயை போன்றவர்கள். சிரமாலை–தலை மாலை. கங்காளம்–எலும்புக் கூடு. அத்தி–எலும்பு. தொடையல்–மாலை.

131 போன—இறந்த. வேதர்–பிரமர்கள். அணியல்–மாலை. புராணமான–பழமையான. மானம்–பெருமை. தானைஆகிய–சேனைகளான. தாங்கி-சுமந்து.

132 அலைஎறிந்து–அலை வீசி. ஆனைமாமுகவன்-விநாயகர். தந்தமது+யானம்—தந்தமதியானம். யானம்-வாகனம். ஒளி

133 ஈறி லாவருட் பங்கயக் கண்ணரா மிருவர்
வீறு மால்விடை யெம்பிரான் வெரிந்புறத்திலகு
மாறி லாதசெஞ் சீரடி யுவகையால் வருடும்
பேறு பெற்றன ராகியே நடாயினர் பெயர.

134 வீடு பெற்றுயி ரிருளற வருணெறி விளக்கி
நீடு வெண்கவி கைக்குல மீமிசை நிழற்ற
மாட கத்தணி யாழ்மொழிப் பொன்முதன் மடவார்
சூட கக்கரக்க வரிகள் வானுறச் சுலாவ.

135 இந்தி யந்தம தேவல்செய யிருடிக ளேத்த
வந்தி யைந்தவா றேபல வந்தியர் வழுத்த
நந்தி யங்கட வுட்பிரான் முறைநெறி நடாத்த
முந்தி யந்தமி லருளுடன் றோன்றிய முதல்வன்.

136 அஞ்ச லஞ்சலிம் மயக்கமுன் னளவதோ வறிவால்
விஞ்சு மாலயன் முதலினோ ரெவரையும் விடாதா
லுஞ்சு போதனம் மருளின்றி யாவரே யுடையார்
வஞ்ச மாய்குதல் பருவத்தி லன்றியே வராதால்

---

கேட்டுச் சிலம்பல்தீர் இந்திர யானம் அளிக்கலாய நீர்வறந்திட்டு அகலா ஆசை அந்தத்தில் ஒளிக்க (ரகுவம்சம், திக்குவிசயம் 10).

133 பங்கயக் கண்ணர் என்ற தொடர் சிலேடை. பங்கயம்+கண்ணர். தாமரை போன்ற கண்ணை உடைய திருமால். பங்கய+கண்+அர் தாமரையின் கண் வீற்றிருப்பவர். கண் என்ற சொல், திருமாலைக் குறிக்கும்போது விழி: பிரமனைக் குறிக்கும்போது ஏழாம் வேற்றுமை உருபு. வெரிந்-முதுகு. 'சேண வெரிநில் கிடந்தானோடு ஏறினள்' (பரிபாடல் 12 பா. 48ஆம் வரி).

134 இருள்-அறியாமையாகிய இருள். கவிகைக்குலம்-குடைக் கூட்டம். மீமிசை-மேலே நிழற்ற-நிழலைச் செய்ய. மாடகம்-யாழின் முறுக்காணி. 'இடக்கை நால்விரல் மாடகம் தழீஇ' சிலம்பு, வேனில் 28). சூடகம்-வளையல். 'சூடக முன்கைச் சுடர்க்குழை மகளிர்' ('பெருங்கதை'—மகத-பதுமாவதி 91).

135 இருடிகள்-முனிவர்கள். வந்தியர் புகழ் பாடுபவர்கள் பரசு வந்தியர் முன்சூதர் மாகதர் ஒருபால்' (பெரிய—திருநகர 21). 68 பாடல் முதல் 74 பாடல் வரை, வியாசனுக்குக் காட்சி வழங்கிய சிவபிரானின் தோற்றம் விவரிக்கப்பட்டுள்ளது.

136 அஞ்சல்-பயப்படாதே உன் அளவதோ-உன்னை மட்டும்

137 பிரம வாரிட நிலைமைநீ பெற்றனை பிறித்தே
அரும றைப்பயன் யாவையு மாய்ந்தனை யறியும்
உரிமை யாமெம தருளிலா மையிலயர் வுற்றாய்
பரிவி லாதபொய்ச் சூளுற விதுபெரும் பாவம்,

138 பொருவி லாதவிப் பாவமற் றோரிடைப் போகா
வரிது தீர்வதற் காயினு மெம்மைநீ யடைந்தாய்
பெரிது நீயுய்யு மாறிது பேசுதும் பிராட்டி
கருணையின் னுரு வாகுமக் காஞ்சிமா நகரம்

139 பாட்டி யற்றிறப் பதியது புகுந்தனை பாவம்
வீட்டி யுண்மையைப் பெறுகுதி நீயென விளம்பி
நாட்டு சூளினை நந்திநீ விடுகென நயந்தான்
வேட்டு நந்தியுங் கருணையே புரிந்தனன் விதியால்.

---

சேர்ந்த பொருளா? எவரையும் விடாது-எப்படிப்பட்டவரையும் விட்டு நீங்காது. நம் அருள் இன்றி உஞ்சுபோதல் உடையவர் யார் என மாற்றுக. நம் அருள் இன்றி-நம்முடைய திருவருள் இல்லாமல். உஞ்சுபோதல்-(மாயையில் இருந்து)தப்பிப் பிழைத்தல். பருவத்தில் அன்றி-மலபரிபாகம் உண்டானால் அல்லாமல். வஞ்சம் மாய்குதல்-மாயை அழிந்து போவது.

137 பிரமவாரிட நிலை நீ பெற்றுள்ளாய். ஞானிகள்: பிரம்மவித்து, பிரம்மவரன், பிரம்மவரியான், பிரம்மவரிட்டன் என நான்கு வகைப்படுவர். 'ஞானமார் சிவன் முத்தர் நால்வகை ஆவர் கேளாய்-வான் நிகர் பிரமவித்து, வரன், வரியான் வரிட்டன். (கைவல்யம் 87). 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' என்பர் ணிவாசகர்.

138 பொருவிலாத-ஒப்பில்லாத. மற்றோரிடை-வேறிடத்தில். பிராட்டி-காமாட்சி. தாயின் வடிவமாய்க் காஞ்சிபுரம் இருப்பதால் அங்கு மன்னிப்புக் கிடைக்கும்

139 பாடு இயல் திறப்பதி-பெருமையை இயல்பாகப் பெற்ற நிலையான காஞ்சி. புகுந்தனை-புகுந்து (அடைந்து) முற்று எச்சப் பொருளில் வந்துள்ளது. வீட்டி-அழித்து. சூள்—சாபம். 'கனம் புரிந்த இக் கருப்பமோடு இருத்திர் பல்காலம்-இனம் புரிந்த நீர் யாவரும் என்று சூள் இசைத்தாள் (கந்த உற்பத்தி: துணைவரு படலம் 10).

140 முகுத்த மொன்றது பொழுதுமெய்ம் முகிழ்ப்புடன் முனிவன்
றிகைத்து நின்றுநீ பொறுத்தியென் றெளிவிலாச் சிறுமை
மகத்து வென்றிட வேகினன் சிவனிவன் மலையத்
தகத்தி யன்பெருந் தவம்புரி காஞ்சியை யடைந்தான்.

141 அண்ண லம்பெரு நதியெலா மாடின னணுகிப்
புண்ணி யத்திரு வேகம்பத் துறையுளிற் புகுந்து
வண்ண மாமறை வடிவமாந் தனிப்பெரு மாவைக்
கண்ணி னாற்கண்டு வணங்கினன் வணங்கிய காலை

142 ஆதி யாகிய வளவிலாப் பெருமறை யனைத்தும்
பேதி யாதுதஞ் சொற்பொருள் யாவையும் பிறங்கச்
சோதி யாய்நின்றங் கருச்சனை புரிதிநீ தொழும்பின்
மாது பாகனை மஞ்ச ணீர்ப்பெரு நதிவைப்பின்

143 என்று மாமுனி மனநிரு மலம்பெற விசைப்ப
நன்றெ னாமகிழ்ந் தெழுந்தனன் மஞ்சணீர் நதிப்பா
னின்று தேவினை துறையுளி னெறியெலா நிறுவ
வன்று மாமனு வலியினாற் செய்த னனங்கண்

---

140 முகுத்தம்-முகூர்த்தம். நன்முகுத்தத் தேற்ப - மேதகு மாதை வேத விதிப்படி மன்றல் செய்தான். (பழைய திருவிளையாடல், மணம் செய்த 25) மகத்து-பெரியது. மலையம்-பொதியமலை.

141 ஆடினன்-நீராடினான். 'புண்ணிய நதிகள் ஆடி' என்பது கவிச்சக்கரவர்த்தி வாக்கு. (அயோத்தி) மறைவடிவமாம் மா-வேத வடிவம் ஆகிய மாமரம். மாமரமாக வேதம் உருக்கொண்டதை 'தாவரும் பழ மாமறை தம்பிரான் அருளால்—மேவருந் தனிச் சூதமாய் மயானத்தின் மேல்பால்-பூ அரும்பி மென் தளிர் கனி புதுமலர் துறுமி - ஓவருங்குளிர் நிழல்குலாய் ஓங்கியதன்றே' என்று சிவஞானமுனிவர் நயமுறப் பகர்வர் (காஞ்சிப் புராணம், திருவேகம்ப 4)

142 வேதம் வியாசனை நோக்கி, மஞ்சள் நீர் நதியின் கரையில் அருச்சனை புரிதி என்றது. ஆதி ஆகிய-பழமையான. பேதியாது-வேறுபாடில்லாமல். சோதியாய் நின்று-ஒளிமயமாக நிலைபெற்று, 'மாதுபாகனை தொழும்பின் அருச்சனை புரிதி' எனக் கூட்டுக. தொழும்பு அடிமை, 'மழுங்காத ஞானமே படையாக மலர்உலகில்—தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே' என்பர் சடகோபர். (திருவாய் மொழி 3 1.9).

143 மாமுனி-வியாசன். நிருமலம்-தூய்மை. தேவினது உறை

144 திவ்வி யத்தனி லிங்கமொன் றனுபவ தியானத்
தவ்வ யின்னிறீ இ யருச்சனை விதிமுறை யனைத்துங்
கவ்வை யின்றியே புரிந்தனன் மறைகரை கண்டோன்
செய்வி னைக்கிது வரம்பென யாவரே தெரிப்பார்.

145 பூசை யாவையு முற்றிய முனிவரன் போற்றி
ஈச னேபுனை யளியனே னினைத்துவந் தடைந்தே
னாசு நீக்கியெற் கழிவிலா வீடுதந் தருளிப்
பேசு நாமமு மென்பொருட் டாகவே பெறுதி.

146 கண்ட லிங்கமிங் கிதனிடை யளவிலாக் கலைகள்
கொண்டு மேவுதி யடைந்தவர் யாவர்க்கும் குறிப்பாற்
தண்ட நாயகர் சினத்திடுங் குறையது தவிர
வண்ட நாயக வருளுதி யென்றனு மமலன்.

---

யுள்-கோவில். மனுவலியினுல்•மந்திரச் சக்தியால். 'நேசமோடளித்தேன் என்று நெடுமறை மனுக்கள் கூறி-வாசநல் உதகம் உய்த்தான்' (கந்த-உற்பத்தி—திருக்கல்யாணம் 70).

144 அனுபவ தியானம்-அனுபூதியை வழங்கவல்ல தியானம் தியானத்தை, 'தியான மாவ தைம்புலன் அடக்கிச்-சிவயோகம் சேர்தல் என்னச் செப்புப' என்று பொருட்டொகை நிகண்டு பேசும் (657). அனுபூதியைச் சமாதி என்பர். அதனைப் பொருட்டொகை நிகண்டு (858) சமாதியாவது இந்திரியம் முதலிய தத்துவ சேட்டைகட் கேதுவாம் யாக்கையும்-நின்றவற்ருேடு கூடினும் அவற்றில்-பற்றின்றி இருக்கும் ஆன்மாவாகிய-தன்னைத்தான் கண்டு பதியுடன் சார்தலே' என்று விவரிக்கும். (இவற்றை விரிவாக அறிய விரும்புவோர் - சிக்கத்தம்பூர் பிரம்மானந்த ஸ்வாமிகள் இயற்றிய அஷ்டாங்கயோகத்தில் காண்க).

145 முனிவரன்-முனிவர்களுக்குள் மேலானவன் (வியாசன்). அளியனேன்-இரக்கத்துக்கு உரிய யான். ஆசு-குற்றம். நாமம்-பெயர். 'சார்ந்தாரைக் காத்தார்' என்பது பிரமனைக் காத்ததால் வந்தது. பெறுதி-பெறுவாயாக.

146 இதனிடை-இந்த லிங்கத்தால். அளவிலாக் கலை-அளவற்ற அம்சம். தண்டநாயகர்-நந்தி.

### வேறு

147 ஏர்பரவ நீநினைத்த யாவையுந்தந் தனமென்றே
வார்பரவு கொங்கைமலை மங்கையுடன் மகிழ்ந்திருந்தான்
சீர்பரவு சார்ந்தாரைக் காத்தாரென் றிருநாமம்
பார்பரவ வன்றுமுதற் பலிப்பாக விளங்கியதால்

### எழு முனிவரீசுரம்

148 இனையமஞ்ச ணீர்நதிப்பா லெழுமுனிவ ரீசுரமென்
றனகபர சிவனுறையு ளதன்பெருமை தனைவிரிப்பன்
சினமொருவு முனிவாரத் திரிபிருகு வுடனகுற்சர்
கனவசிட்டர் கோதமர் காசிபரங்கி ராவென்போர்

149 இமையமலைப் பெருஞ்சிகரத் திவரெழுவர் தவமியற்றி
யமைவுறுநாட் செழுங்கமலத் தவனவர்க்கு முன்னின்று
கனம்பெறுமா முனிக்கணத்தீர் கருதியதென் னெனப்புகலச்
கமையமுட னுவந்தெழுந்து தனித்தனிபோற் றிசைத்
துரைப்பார்.

---

147 ஏர்பரவ-அழகு விரிவு பெற. மலை மங்கை-உமாதேவி. அன்று முதல் சார்ந்தாரைக் காத்தார் என்ற பெயர் (அப்பெருமானுக்கு) விளங்கி வருகிறது.

இவ்வரலாற்றைச் சிவஞான முனிவர் சார்ந்தாசயப் படலத்தில் 51 பாடலால் விவரித்தார். இங்கு திருமாலே வியாசனுக்கு அறிவுரை கூறுகின்றான். பிரணவமும், வேதங்களும் பேசும் பேச்சுக்களை வயிரவேசப் படலம் நயமுறக் கூறும்.

148—149 அனகபரசிவன்-தூய சிவபிரான். விரிப்பன்-சொல்வேன். சினம் ஒருவு-கோபம் நீங்கிய. அந்திரி, பிருகு, குற்சர், வசிட்டர், கோதமர், காசிபர், அங்கிரா என்னும் எழுவரும் இமய மலையில் தவம் புரிந்தனர். பிரமன் உங்கள் எண்ணம் யாது என்றான்.

இம்முனிவர்களின் பெயரைச் சிவஞான யோகிகள் 'அத்திரி, குச்சன், வசிட்டன், அருட்பிருகுப் பாசம்—கைத்துயர் கௌதமர், காசிபரோடு அங்கிரா என்றுஏழ்—மெய்த்தவர்' என்பர் (சத்த தானப் படலம்).

கமை-பொறுமை. 'கமை ஒப்பதோர் தவமும் சுடுகனல் ஒப்பதோர் சினமும்' என்பது கவிச்சக்கரவர்த்திகள் வாக்கு. (பாலகாண்டம், பரசுராமப் படலம்).

150 பேரறிவு முதிருமவர் பெறுகுவர்வீ டெம்மனையோர்
கூரறிவு சிறிதுடையோ ரெளிதின் முத்தி கூடுதிறன்
ஆரறிவர் நீரறிவ தல்லாமல்? அருமறையின்
வேரறிவீ ரெமக்கிதனை விரித்துரையு மெனவுரைத்தார்.

151 வினவியநான் முகப்பெருமான் விசித்திரமா கியதொன்றை
முனிவர்வின வினரெனநூன் முடிவையெலா மாய்ந்து தெளிந்
தினியதுநீர் வினவியதிங் கெனைத்துயிர்க்கு மிரக்க மென
நனிமகிழ்ந்து வைதிகத்தி னலந்தவறு துரைசெய்வான்.

152 பசுதருமஞ் சிவதரும மெனத்தருமம் பாகுபடும்
அசைவிலது பெருவயிர வரிசியெனச் சிவதருமம்
பொசிகரணத் திடைநாளும் பொன்றுதங் கதுபுகலில்
இசைவினுடன் சிவனுறையு ளெடுத்தன்முத லெண்ணிலவாம்.

---

150 அறிவு முதிரும் அவர்-ஞானம் முற்றிய சான்றோர்கள். எம்அனையோர்-எம்போன்றவர்கள். நீர் அறிவது அல்லாமல் யார் அறிவார் என்று மாற்றுக. மறையின் வேர் அறிவீர்-வேதத்தின் அடிப்படையைத் தெரிந்திருக்கின்றீர்கள்.

'பேர் அறியாத பெரும் பொருள் ஒன்று அதன்—வேர் அறியாமல் விளம்புகின்றேனே' என்று திருமூலர் பகர்வர்.

15 விசித்திரம்—அற்புதம். எனைத்து உயிர்க்கும்-எப்படிப் பட்ட (தாழ்வான) உயிர்களுக்கும். நீர்வினவியது இரக்கம் எனக் கூட்டுக. இரக்கம்-கருணையால். வைதிகத்தின் நலன் - வேதம் பயின்றதால் உண்டான நன்மை.

152 தருமம், பசுதருமம், சிவதருமம் என இரண்டு வகைப் படும். சிவ தருமம் வைர ஊசி போன்றது. ஆகையால் அது அழிவற்றது. பொசி கரணம்-அனுபவிக்கின்ற கரணம். சிவன் உறையுள்-சிவன் கோவில்.

'தருமம் தானும் அருள்சிவ தருமம் ஆவித் தருமம் என்று இரு கூறுமால்-பளகரும் இட்டியாதி பசு தருமங்கள் காலத்து-அளவையிற் கழியும்: என்றும் வச்சிர அரிசிமானத்-தளர்வுறு நிலைபேறு எய்தும் உயர்சிவ தருமம்' (காஞ்சிப்-சத்ததானப் படலம் 67).

153 அதுதருமம் பதியதனி வரனுறைதா னத்ததிகம்
விதிபெறும்அத் தானத்தின் மிக்கபலங் காசிதனிற்
கதிதரும்அக் காசிதனிற் காஞ்சிநக ரத்ததிகம்
பதியதனிற் சிவலிங்கம் பதிக்கிலது பலிக்குமென்றான்.

154 திருமலரோ னுரைத்தமொழி தெளிந்துருகிக் களிகூர்ந்து
பெருமுனிவர் அவணின்று பெயர்ந்துவழிக் கொண்டணுகிப்
பரிவினுடன் றிருக்காஞ்சிப் பதியடைந்தா ரடைந்தவுடன்
அரியதவ முயன்றபலன் அடைந்தனமென் றனர்வியந்தார்.

155 அற்புதமா மனைத்துங்கண் டாதரவு தலைசிறப்ப
முற்படுமெம் மானுறையுண் முற்றுமுறத் தொழுதுவந்து
சிற்பரமா கியதெண்ணீர்ச் சிவகங்கைத் தனிலாடித்
தற்பரமாஞ் சூதநிழற் றனிப்பெருங்கூத் தனைப் பணிந்தார்.

---

153 அத்தருமம் சிவன் கோவிலில் செய்யப்பட்டால் மிக்க புண்ணியம் ஆகும். அத்தானத்தில்-அச்சிவன் கோவிலுக்குள். காசியினும் காஞ்சி சிறந்தது. அதிகவிதி பெறும்-மிக்க புண்ணியம் ஆகும். 'முன்னம் நோற்ற விதி கொல்லோ' என்ற திருவாய்மொழிப் பாசுரத் தொடருக்கு (6.7.7). நம்பிள்ளை 'புண்ணியத்தின் பலமோ' என்று வியாக்கியானம் இட்டார். அதற்குச்சமாதானமும் கூறி உள்ளார். என் ஆசிரியப்பிரான் திருவாளர் பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள் வரைந்த விளக்கம் இங்கு உதவிற்று. இன்றேல் யான் தவறுபட உரை கூறியிருப்பேன்.

'இடையறு காசி மூதூர் தன்னிலும் இருமை சான்ற இடையருக் காஞ்சி மூதூர் எம்பிராற் கினியதாகும் (காஞ்சி-சார்ந்தா). காஞ்சி என்ற சொல்லின் இடையில் உள்ள ஒற்றை (ஞ்) நீக்கினால் அது காசி ஆகும். இடையரு திருத்தல் காஞ்சியாகவே இருத்தல். (சிலேடை நயம் காண்க).

154 களிகூர்ந்து-மகிழ்ச்சி மிகுந்து. அவண் நின்று-அந்த இமய மலையிலிருந்து. தவ பலன்-தவத்தின் பயன். வழிக்கொண்டு-பயணம் ஆய்.

155 ஆதரவு-விருப்பம். தலைசிறப்ப-அதிகரிக்க. சிற்பரம் ஆகிய-சித்துப் பொருளான சிவத்தின் சிரத்தில் இருக்கின்ற உபசாரத்தால் அக் கங்கையின் சிறப்பைச் சிவகங்கைக்கு ஏற்றிக் கூறினர். சூதம்-மாமரம். கூத்தனை-காப்புக் கூத்து நிகழ்த்தும் இறைவனை.

அவனருளான் மஞ்சணீராற் றினிடையொரு பாங்கா
சிவனுறையுள் வெவ்வேறு திருத்தியதிற் றெய்வலிங்க
156 மவுனமுட னமைத்து முன்ன மோதுமரு மறைவிதியிற்
புவனமுய்ய பெரும்பூசை புரிந்தனர்முற் றினர்புகழ்ந்தார்.

157 அழகனவர் முன்னின்றங் காற்றியபூ சனையுவந்து
வழுவிலவை வைச்சுதமன் வந்தரமிங் குறும்போதி
லெழுமுனிவ ராகியதனி றுதியினீரெ மையடையுந்
தொழுதெழுமா தவத்திரெனச் சோதிலிங்க மாயினரால்.

---

பிரம்மத்துக்கு ஓம், தத், ஸத், என்று முப்பெயர் உள்ளதைப் பகவத் கீதை பேசும். ஆதலில் இங்கு தத் என்றது பரமத்தை. தத் பரம் ஆகிய சூதம் பிரம்மத்துக்கு மேலே இருக்கும் மாமரம்: இறைவனுக்கு நிழல் தந்து நிற்றலின் இலக்கிய நயம்படத் தற்பரம் ஆகும் சூதம் என்றார் மாதவச் சிவஞான யோகிகள் இந்த மரத்தைப் புகழ்ந்த பாடல் மாங்கனியினும் இனிக்கும்.

156 அவன் அருளால்-சிவபிரான் திருவருளால். திருத்தி-படைத்து. புவனம் உய்ய-உலகம் பிழைக்க. பிறர் பொருட்டாகச் செய்யும் பூசை உயர்ந்தது. ஆதலால் அதனைப் பெரும் பூசை என்றனர்.

157 அழகன்-சிவபிரான். வைச்சுத மங்வந்தரத்தில் சப்தரிஷிகளாக இருந்து, முக்தியடையுங்கள் என்று இறைவன் வரம் தந்தான். உடனே அவர்கள் ஜோதிலிங்கமாக மாறினர்.

முனிவர்கள் இலிங்கம் ஆக மாறியதைச் சிவஞான முனிவர் விட்டுவிட்டார்.

158 பெருமுனிவர் பூசைபுரி பிரான்களையார் போற்றுகினுங்
கரிபரிபூந் திருவனைய கன்னியரைப் படைத்துயர்வர்
வருமிடையூ றகலுமிது மகதவர்பெற் றிடுவரமால்
பரவுமிதன் வடமேல்பாற் பராசரமென் றொருதானம்

159 சொல்லவரித தன்பெருமை சுதாசனனென் றோரரசன்
அல்லல் புரி வேட்டையிடை யரக்கரிரு வரைக்கண் ணுற்
றொல்லையொரு வனையடமற் றொருவனவன் போய் மறைந்து
வல்லவனிங் கிவன்றனையான் வஞ்சனைசெய் வேனென்று.

160 வஞ்சனையி னுருமறைந்து மடையடுவோ னெனப் போகித்
தஞ்சமெனப் பகையரசன் தனையடைந்தா னங்நாளில்
விஞ்சியதென் புலத்தரதிதி மேவவசிட் டரைவரித்தங்
கெஞ்சலிலா தடிசிலட விம்மடையன் றனையேவ

---

158 பெருமுனிவர்-ஏழு முனிவர்கள். யார் என்றது. எவ்வளவு இழந்தவர்களாயினும், பாபிகளாயினும் என்றும் பொருளைத் தரும். பூந்திருவனைய-மலரில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற. ‘இடையூறு-ஒரு நல்ல பணி செய்யும்போது வருகின்ற துன்பம். (இடையில் உறுவது இடையூறு) இதை வடநூலார் ‘விக்ரம்’ என்பர். ‘இடையூற்றுக்கு இடையூறாய்’ என்பது இராமாவதாரம். (பாலகாண்டம்).

159 அல்லல்புரி–துன்பத்தை விளைக்கின்ற. இத்தொடர் இனி வருகின்ற வரலாற்றுக்கு வித்தாகவுள்ளது. ‘வேட்டம் செய்தார் உழப்பவால் துன்பம்’ என்பர் தேவர் (சிந்தாமணி,முத்தி-168). அட-கொல்ல. ‘கடந்து அடு சேரலாதன்’ (புறம்-8).

மன்னன் பெயரைச் சுதாசன் என்பர் சிவஞான முனிவர். இவ் வரலாறு, பாகவதத்திலும், பிரம்மோத்தர காண்டத்திலும் சிறுசிறு மாறுபாட்டுடனும், வேறுபாட்டுடனும் கூறப்பட்டுள்ளது.

160 மடைஅடுவோன்-உணவு சமைப்பவன். மடை-உணவு. ‘மடையொடு நன்மாமயிலின் மென்மெல இயலி’ (மதுரைக்காஞ்சி 607—608) ‘மடைத்தொழில் அவனுக்கு ஈந்தான்’ என்று இவ்வரலாற்றைப் பிரம்மோத்தரம் கூறுவதை நோக்குக. இவ்வரலாற்றைச் சிவஞான முனிவர் கூறு துவிட்டனர்,

161 தனதுபகை முடிப்பதனைச் சாதிக்கு மடையனவன்
மனிதர்தசை தனைக்கூட்டி வசிட்டர்பரி கலத்திடலும்
இனையதறிந் தம்முனிவ னிக்குறைக்கு வினைவலியாற்
சினமுடனம் மன்னவனைத் தீயரக்க னாதியென்றான்.

162 அவனரக்கன் வனத்தியலும் அமைதியினில் வசிட்டர்தம
துவகைபெறு மைந்தரிவ ரொருநூற்று வரைசினந்து
தவமுனிவன் கவுசிகனைத் தறுகணரக் கற்குணர்த்த
இவறியவன் மைந்தர்தமை யெற்றினன் பாழ் வயிற்றிட்டான்.

163 அதுவினவும் வசிட்டமுனி யருந்ததியாம் பன்னியுடன்
கதுமெனவே துயர்கூர்ந்து காதலது மிகுதியினான்
முதுகுடுமிப் பெருவரையின் முனிவுபெற விரைந்தேறிப்
புதல்வரைவிட் டிருக்கமனம் பொருந்தாமல் விழுந்தனனால்.

164 இதுகாணும் பூமகளங் கிரங்கினளேற் றனள்கரத்தால்
அதுபோது வசிட்டமுனி யருந்தனையர் தமின்மூத்தோன்
பதியாகுஞ் சத்தியவன் பன்னியதி ரிசியென்பாள்
முதிர்வான கருப்பமுளாள் முனிந்துவயி றலைத்திரங்க

---

161 சாதிக்கும்-நிறைவேற்றுகின்ற. 'சாதிக்குமே பரதத்து வத்தைச் சமயத் திருக்கைச் சேதிக்குமே' (சடகோபர் அந்தாதி 8) பரிகலம் பாத்திரம்-'செம்பொன்னால் கோலப் பரிகலம் செய்தான்' (பெருந்தொகை 1113) ஆதி-ஆவாயாக.

162 உவகை பெறும்-அன்பைப் பெற்ற. 'அச்சமும் உவகை யும் எச்சம் இன்றி' என்ற (தொல்-புறத்திணையியல் 91) தொடர்க்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையைக் காண்க. இச்சொல்லை இப்பொருளில் வழங்கிய பெருமை பழைய காஞ்சிப்புராண ஆசிரி யர்க்கே உண்டு. வேறு உரை கூறின் பொருள் சிறவாது. தறுகண்-அஞ்சாத. இவறுதல்-விரும்புதல். ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் (திருக்குறள்) எற்றினன்-கொன்று - முற்று எச்சம்.

163 வினவும்-கேள்விப்பட்ட. 'மெலிந்திலன் அதன் என அருட்காரியும் வினவா' என்பர் கீழையூர்ச் சடகோபதாசர். (அரிசமய தீபம், பராங்குசச் சருக்கம்) பன்னி-மனைவி. பத்நி என்ற வட சொல்லின் திரிபு. 'கன்னி இவள் பிறர் பன்னி' என்பர் வில்லிப்புத்தூரார். (வேத்திர கீயச் சருக்கம்) முனிவு-வருத்தம்.

164 பதி-கணவன். வசிட்டரின் மூத்த மகன் பெயர் சத்தி

165 கண்டமுனி வசிட்டருமங் கருப்பமுறு திருவயிற்றை
யொண்டொடிநீ யலைத்தல் செயா தொழியச்ச மெனவிலக்க
வெண்டருமக் கெற்பம்வயிற் றிருந்திரங்கிக் கூப்பிடலு
முண்டுயிரின் றெனமுனிவ னுருகியருந் துயருழந்தான்.

166 அரிப்பெருமான் அதுகாலை யவன்முன்னந் தோன்றி
யென்னே
கருப்பமதிங் கருப்பமல கண்ணுதல்பத் தியிலென்போற்
பெருத்ததொரு பெருங்குழவிப் பேரனுனக் குறுமின்னே
வருத்தமொழி யுனதுகுலம் வரமுறுமென் றவனகன்றான்.

167 பரவிமுனி யுவந்திடுமப் பருவத்திற் பராசரனென்
றொருபுதல்வன் கருப்பமதி லுற்பவித்தா னினிமையுடன்
வரிசைபெற வருமுனிவன் வளர்க்குங்கா லதிரிசிதன்
பெருமடியில் மருவியுறை பெருங்குழவி யங்கொருநாள்

---

இம்முனிவரின் பெயரை விஷ்ணு சஹஸ்ரநாமம் 'வியாசம் வசிஷ்ட நப்தாரம் சக்தே பௌத்தம் அகல்மஷம்'—என்ற ஸ்லோகத்தில் குறிக்கும். சத்தி முனிவரின் மனைவியின் பெயர் அதிரிசி. வயிறு அலைத்து-வயிற்றில் அடித்துக்கொண்டு.

165 திருவயிறு என்றார் பரமஞானியாகிய பராசர முனிவரைச் சுமக்கும் பேறு பெற்றமையால். அன்னை அடித்த அடிபட்டுக்கருப்பம் 'ஐயோ' என்று ஓலம் இட்டது. துயர் உழந்தான்-துன்பத்தால் சிதைந்தான்.

166 அரிப்பெருமான்-திருமால். கருப்பம் அது இங்கு அருப்பம் அல் எனப் பிரிக்க. கற்பம் என்பது கருப்பம் என்றும், அற்பம் என்பது அருப்பம் என்றும் வந்தது. கற்பூரம் என்பது கருப்பூரம் என்று வந்தது போல (கருப்பூரம் நாறுமோ என்பது நாச்சியார் திருமொழி). கண்ணுதல்-சிவபிரான். வரம்உறும்-சிறப்படையும்.

சிவஞானமுனிவர் 'படநாகச் சேக்கைமிசை கண்படுக்கும் அறவோன்-'நின்மகனுக்கு ஒருமைந்தன் உதிக்கின்றான் எனை ஒப்பான்' என்று கூறுவர்.

167 பருவத்தில்-தக்க காலத்தில், வரிசை-பெருஞ் சிறப்பு மருவி உறை-மகிழ்ந்து அமர்ந்துள்ள.

168 அன்னைகள மதுதனைக்கண் டமங்கலமா யுறைவதுநீ
யென்னையென வுனதுதந்தை யிராக்கதனு லிறந்தனனென்
றுன்னரிய பெருந்துயர முழந்தனளப் பெருமுனிவன்
பன்னியஞான் றுற்றதுயர்ப் பரிசெவரே பகரவல்லார்.

169 நன்றெனவே யிளங்குழவி நகைத்துதைத்துச் சினத்தழன்றே
யின்றுலக முழுவதும்யா னெரிப்பனென வெழுந்திடலு
மொன்றுபுரி மன்முனிவ னுனதுதந்தை தனைமாளக்
கொன்றநிரு தரையன்றிக் குவலையஞ்செய் குறையுளதோ.

170 அரக்கர்குலம் வேரறுப்பான் அச்சங்கற் பனைபுரிந்தங்
கிரக்கமுடன் பரசிவனை யிறைஞ்சியருச் சனைமுடித்து
வரத்தினிலுன் பகைதணிநீ மதலையென வம்மதலை
தெரிந்துநினைத் ததுமுடிக்குந் திருத்தலமொன் றுரையு
மென்றான்.

171 முனிவனுநூற் சுருதிமுதன் முற்றினையுந் தெரிந்தாய்ந்து
புனிதமதாந் தலமுமையாள் பூசைபுரி தலமடைந்தோர்
நினைவுதருந் தலமுத்தி நினைத்தளவி லுதவுதலந்
தினமினிய தலம்பரைதன் றிருவுருவாந் தலங்காஞ்சி

---

168 களம்-கழுத்து, அமங்கலமாய்-தாலி இல்லாமல். மங்கலம்-தாலி. மற்றை நல்லணிகள் காண உன் மங்கலம் காத்தமன்னே என்பர் கவிச்சக்கரவர்த்திகள் (சுந்தரகாண்டம்) இறந்தனன் என்று-இறந்து விட்டான் என்றுகூறி. உழந்தனன்-துன்பத்தால் நிலை குலைந்தான். கண்ணில்லான் பெற்று இழந்தான் என உழந்தான் கடும் துயரம். (கம்பராமாயணம்).

169 நகைத்து-கோபத்தால் சிரித்து. அழன்று-கொதித்து. குவலயம்-உலகம். குவலயம் செய்குறை உளதோ என்ற தொடர், 'உலகம் செய்பிழையும் உண்டோ' என்ற சடாயுவின் மொழியை நினைப்பூட்டுகிறது.

170 வேர் அறுப்பான்-அடியோடு அழிக்கும் பொருட்டு. 'வேர் அறுப்பான் வெருவன்மின்' (கம்ப·ஆரண்யம்) சங்கற்பனை-இன்னது செய்வேன் என்று உறுதிபூணுதல். உரையும்-கூறுங்கள். செய்யும் என்னும் வாய்பாட்டுச்சொல் ஏவற் பொருளில் வந்துள்ளது. (நன்னூல்-இராமானுச கவிராயர் விளக்கம் காண்க)

171 சுருதி-வேதம். புனிதம்-தூய்மை. தினம் இனிய தலம்-

172 அன்னதல மடைந்தனைநீ யரனருள்பெற் றன்பதனுன்
முன்னியது முடித்தியென்றுன் மூதாதை யருள்புரிய
நன்னியமம் பரமநிலை நம்பர்தன்மை தனிலுதவத்
தன்னிகரும் பராசர னருன் றலமதனை யதுசேர்ந்தான்.

173 ஆகம்பா ரப்பொறையென் றருவருக்கும் பெருமுனிவர்
சோகம்பா வனைபுரியுந் துறையனைத்துங் கண்டுவந்து
மாகம்பா நதித்திவலை மந்தமாரு தமிறைக்க
ஏகம்பா நமவெனவங் கிறைஞ்சிவிடை கொண்டேகி

174 மஞ்சணீர் நதிவடபான் மருவுபரா சரமென்றே
யெஞ்சலிலா விதிமுறையா லிலிங்கமொன்று தாபித்தங்
கஞ்செழுத்தா லருச்சனைக டாற்றினன்போற் றிடுமளவிற்
றஞ்சமென்பார்க் கருள்புரியுந் தலைவரவன் முன்னின்றுர்.

---

எப்போதும் இனிக்கின்ற இடம். பயிலப்பயில எப்பொருளும் சுவைக்குறைவை உண்டு பண்ணும் இயல்புடையது. இத்தலம் அத்தகையதன்று, எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே' என்ற திருமுறையைக்கருதுக.

172. அரன் அருள்பெற்று-சிவபிரானின் திருவருளைப்பெற்று. முன்னியது-உத்தேசித்ததை. (எண்ணியதை). நுதலிப்புகுதல் என்பதும் அது. முருகொத்தீயே முன்னியது முடித்தலின் என்பது நக்கீரர் கூற்று (புறம்-56) மூதாதை-பாட்டன். நன்னியமம்-நல்லவிரதம் நம்பர்-சிவபிரான். தன்மைதனில் உதவ-உள்ளே இருந்து திருவருள் செய்ய.

173. 'பிறப்பறுக்கல் உற்றுர்க்கு உடம்பு மிகை' என்ற திருக்குறளின் ஒளி இப்பாடலில் பட்டுள்ளது. ஆகம்-உடம்பு. 'துயர்காள் உம்மால் ஆகம்தான் வேதலினுல் அன்றோ அன்பால் ஆத்தும தத்துவம் உணர்ந்தேன்' (வாசிட்டம்-விதகவ்வியன் 687) சோகம்பாவனை-தன்னைச் சிவமாப் பாவித்தல். 'நெஞ்சம் சோக பாவனையில் நிற்கநிறுத்தி' (பிரபுலிங்கலீலை-மனேலயம் 19) அனுபூதிச் செல்வர்கள் எப்போதும் 'சிவோகம்' என்று அனுசந்தித்த வண்ணம் இருப்பர். மா கம்பாநதி த்திவலை-பெரிய கம்பாநதியின் துளி, நம-வணக்கம்.

174. 'பராசரம்' இலிங்கத்தின் பெயர். (பாராசரமுனிவரால் நாட்டப்பட்டதால் இப்பெயர் அமைந்தது அம்மை நீராடிய மஞ்சள் கலந்ததால் மஞ்சள் நீர் நதி என்றும் பெயர் பெற்றது.

175 ஆற்றியபூ சனையுவந்தோ மரும்புதல்வ விரும்பியது
சாற்றுகெனம் பராசரப் பேர்த் தனயனவன் ருடொழுது
மாற்றலரா மரக்கரையான் வாட்டுதிறன் அருளுகெனப்
போற்றிமகம் புரியதனுற் பொன்றுவரென் றங்ககன்ருன்.

176 ஆரணநூல் மனுப்புகன்ருங் கன்னதற்காம் பொருள்கூட்டி
மாரணமா மகம்புரிந்து வருக்கமுடன் அரக்கரெனும்
பேருமிலா வகைசிதைத்தான் காஞ்சிநகர்ப் பிரானருளைச்
சேரவரு மன்பினர்கள் தீவினையைச் செற்றதுபோல்

ஆதிபதேசுரம்

177 தந்தியது காத்தபிரான் றன்றிருமுற் றக்குடபால்
அந்தமில்சீர் பெற்றுடைய தாதிபதே சுரமென்றே
யெந்தைபிரான் றன்துறையு ளிருங்கமலத் தவிசுறைவோன்
முந்திமகம் புரிவதனை முனிந்துகலை மானதியாய்

---

'காதல் கூர்தவம் ஆற்றும் மால்வரைக் கொம்பு மஞ்சளின் காப் பணிந்து மெய்-குளிர ஆடுநீர் மணம் கமழ்ந்து எழூஉப்-பம்பு மஞ்சள்நீர் நதி எனப் புடை பரந்து' என்பது மாதவச் சிவஞான யோகிகளின் அமுதவாக்கு. (காஞ்சிப் புராணம்-சித்திரம்-27.) தஞ்சம்–அடைக்கலம். 'தஞ்சம் என்று உனை அடைந்தேன் தாணுவேநமசிவய' (நமச்சிவாய மாலை 497.)

175. மாற்றலர்-பகைவர். திறன்-ஆற்றல். மகம்புரி-யாகம் செய்.

176. மனு-மந்திரம். மாரணமாமகம்-(ஆபிசாரம்) பகைவர்கள் மரணம் அடையவேண்டும் என்று செய்யப்படுவது. தீவினையைச் செற்றதுபோல் சிதைத்தான் என மாற்றுக. மாரணமகத்தைக் கொலைசெயும் வேள்வி என்று குறிப்பர் சிவஞானமுனிவர்.

177. தந்தி-யானை. (தந்தத்தை உடையது தந்தி) காரணப் பெயர். கமலத்தவிசு-தாமரை ஆகிய ஆசனம். குடபால்-மேற்குப் பக்கம். 'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி' என்று திருமாலை பகரும். கலைமான் நதியாய் எனப்பிரிக்க. கலைமான்-சரஸ்வதி, ஆதீபம்-விளக்கொளி.

178 அளக்கரெனப் பெருநிசியி லணைவதனைக் கண்ணுறுமால்
விளக்கொளியா யெழுந்ததனை விலக்குவதற் கிடையூற்றின்
றுளக்கமறப் பெருஞ்சோதிச் சுடரிலிங்க மவணிறுவி
யுளக்கருணை பெறப்பரவி யுன்னியது பெற்றுயர்ந்தான்.

## முத்தீசுரம்—முத்திகொடுத்தார்

179 அன்னதற்கு வடகீழ்பால் மாரனனுதி னம்பரவத்
துன்னுபுகழ் தருமுத்தே சுரமெனவே யொருதானம்
வன்னிநிகர் காசிபர்தம் மனைவாழ்க்கைத் துணையறத்தின்
றொன்மைபெறு கத்துருநற் சுபத்தையென விருமடவார்

180 படவரவு தனையீன்றுள் பனிநுதற்கத் துருவென்பாள்
துடர்சிறைய கலுழனையச் சுபத்தை மாதீன்று
ளுடனுறைவோ ரிருவருந்தம் முருவநலந் தீங்குரைத்துத்
திட்முடன்றேர்ந் தவரைவென்றோர் சிறையிடுவ தெனப்
பொருந்தி

178. அளக்கர் என-கடல்போல். 'கரைகாண் கல்லாக் கற்பனை அளக்கர்' ஞானமிர்தம். (46) நிசி-இரவு. மால்-திருமால். கலைமகள் நதியாக வந்ததையும், அதனைத் திருமால் தடுத்துப் பாதுகாத்ததையும் வேதாந்த தேசிகரின் மெய்விரத மான்மியத்தில் கண்டு மகிழ்க. இரண்டு பாடல்களும் குளகம்.

திருமால் நதியைத் தடுத்துக் காத்த தலம் திருத்தண்கா. அங்குள்ள பெருமாளின் பெயர் விளக்கொளி. வடமொழியில் தீப்பிரகாசர்-திவ்யப் பிரகாசர் என்றும் போற்றுவர். இங்கு யானையைத் திருமால் காத்ததாகச் சிவஞானமுனிவர் விவரித்துள்ளார். இங்குக் கஜேந்திரனுக்குப் பிரத்யக்ஷம் என்று வைணவப் பெருமக்களும் சொல்லுகின்றனர்.

179. வன்னிநிகர்-நெருப்பைப் போன்ற. காசிபரின் மனைவியரின் பெயர், கத்துரு சுபத்தை. சிவஞானமுனிவர் சுபத்தை என்ற பெயருக்குப் பதிலாகச் சுபகருணை என்பர். வாழ்க்கைத் துணை-மனைவி. அறத்தின் தொன்மை பெறு-இல்லறப் பழமையைக் கைவரப்பெற்று.

180. பட அரவு-படத்தைப் பெற்ற பாம்பு. பனிநுதல்-குளிர்ந்த நெற்றி. கலுழன்-கருடன், 'கொடியேறு கலுழன் திருத்தாள் மனத்திற் குறிக் கொள்ளுவாம்' (விஷ்ணுபுராணம் பாயிரம் 153). துடர்-தொடர். உருவம்-உடல். நலம்-அழகு.

181 காசிபனை வினவளவிற் கத்துருவை யவனுவப்பப்
பேசியகூ னுறவதனாற் பேரிடர்கூர் சுபத்தைதனைத்
தேசுபெறக் கத்துருவுஞ் சிறையிடுவித் தனளங்நாள்
ஆசறுமம் மாதுமிக வருந்துயரி லுழந்தனளால்.

182 அம்பரமூ விதம்பூத மருமாயை பரமென்ப
ரும்பருறை பரந்தனிலே யுறைந்திடுமிந் துவினமுத
மம்புவியில் அவ்வமுதைக் கொணர்ந்துதரில் அணி
யிழையாய்
இம்பரினுன் சிறைவிடுவ னெனச்சுபத்தை யாவலித்தாள்.

183 ஆயதனைக் கலுழனெனு மருமகவுக் குரைசெய்யத்
தூயதெனக் காசிபனைத் தொழுதுவனப் புள்ளரசன்
மேயினனக் காஞ்சிதனில் விரவுமஞ்ச ணதிவடபாற்
சேயபல வன்னலிங்கந் திருச்சுருதி நெறிநிறுவி.

184 விதிமுறைபூ சனைமுற்றி விரும்பியது தருதியெனப்
பதியவன தருள்கிடைத்துப் பரமமெனும் அம்பரத்தின்
கதுமெனச்சென் றிடுகாலைக் கருதமுதம் அதுபுரப்போ
ரதிர்கழற்காற் புரந்தான்முன் னுமமா ரெனைப்பலரால்.

---

இருவரும் தங்கள் அழகைப் புகழ்ந்து கொண்டனர். பொருந்தி-உடன்பட்டு.

181. வினவு அளவில்-கேட்ட சமயத்தில். அளவு-சமயம். அன்னதோர் அளவை தன்னில் அறுமுகன் (கந்த-யுத்த. விண்குடி 38) உவப்ப-மகிழ்ச்சியடைய. ஆசறும்-குற்றம் அற்ற. ஆசலம்புரி ஐம்பொறி வாளியும் (கம்பன்-பால).

இவ்வரலாறு பாகவதம் விஷ்ணுபுராணம் முதலிய நூல்களில் சிறுசிறு வேறுபாட்டுடன் கூறப்பட்டுள்ளது.

182. ஆகாயம் மூன்று வகைப்படும். 1. பூதாகாயம். 2. மாயாகாயம். 3. பரமாகாயம். உம்பர்-தேவர்கள். இந்துவின் அமுதம்-சந்திரனிடம் இருந்து வந்த அமிர்தம். ஆவலித்தாள்-வருந்தினள். 'அருவரை மார்பன் ஆவலித்திருந்தான்' (சிந்தா-காந்தர்வ 23) அவலம் என்பது ஆவலம் என்று வந்தது.

183. மகவுக்கு-மகனுக்கு. 'ஒரு மகவுக்கு அளித்திடும்போது ஒருமகவு கை நீட்டும்' என்பது குசேலோபாக்கியானம். உவணம்-கருடன். உவணத்து உயர்கொடியோயே (பரிபாடல் 2) சுருதி நெறி-வேதமுறைப்படி.

184. பதிஅவன்-பதியாகிய சிவபிரான். அம்பரம்-ஆகாயம்;

185 அனையருட னுவணர்பிரா னமரர்செய் தருஞ்சிறையான்
முனைதளர மருத்துவனை மோதியவ ணுறையமுதந்
தனைவிரைவிற் கொணர்தலுமச் சக்கரபா ணிப்பெருமா
னினிதிகலி வரவிருபத் தேழுநாளங் கமர்பொருதான்.

186 பொருவதுகண் டத்திருமால் புள்ளரசன் போர்வலியை
யிருபதுட னேழுதினமென் னுடனிகலி யிளைத்திலையா
லரிதரிதுன் றனையுவந்தோம் அருளுதும்வேண் டுவவினவென்
றுருகியவ னுரைத்தலுமே யுவணர்பிரா னுரைசெய்வான்.

187 என்னுடனிந் நாளளவு மிகலினர்யா வருமிலரா
லுன்னதுவீ ரியந்தனையா னுவந்தனனீ விரும்பியது
பொன்னணிமார் பினைகேட்டி பொருக்கெனவென்
றுரைக்கலுமே
மன்னெடுமா லென்றனக்கோர் வாகனமா குதியென்றான்.

188 அனையதுயான் புரிவனென தன்னைசிறையி னைவிடுவித்
தெனவுரைசெய் தமுதமுட னேகியன்னை மாற்றவடன்
சினமொருவ வுதவியவள் சிறைவிடுவித் தனன்வலியாற்
றனதுபகை யாமரவு தனையடரத் துடங்கினனால்.

---

அம்பரம் ஊடறுத்தோங்கி உலகளந்த (திருப்பாவை) கதும் என-வேகமாக. புரப்போர்-பாதுகாக்கும் தேவர்கள். அதிர்-ஒலிக்கின்ற.

185. உவணர்பிரான்-கருடன். பிரான் என்றதனால் இந்நூலாசிரியர் கருடன்பால் பற்றுடையவர் என்று தெரிகிறது. முனை-முனைப்பு-(செருக்கு). மருத்துவன்-இந்திரன். 'மருத்துவன் தனைச் சசியொடும் துரந்து (கந்த-அவைபுகு 98) அவண்-அங்கு. வரும் வழியில் கருடன் திருமாலோடு இருபத்தேழு நாள் போர் செய்தான்.

186 புள்ளரசன்-கருடன், புள்ளரையன் கோவில் என்று திருப்பாவைபேசும். இளைத்திலை-தளரவில்லை. வேண்டுவது அருளுதும்-வேண்டும் வரங்களைத் தருவோம்.

187 இகலினர்-மாறுபட்டுப் போர்செய்யும் ஆற்றல் உடையவர். வீரியம்-வீரம். வென்றியால் உலகுடன் வணக்கும் வீரியம் (சூளாமணி, முத்தி) மார்பினை-மார்பை உடையவனே.

188 மாற்றவள்-சக்களத்தி. 'மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்' என்று சூர்ப்பணகை பேசுவாள். (கம்ப-

189 அருளியதாய் சிறைமுத்த மாதலினு லருச்சனைசெய்
திருநிலையந் தரணியின்முத் தேசுரமென் றிலகியதால்
பரவுமத னிருதிதிசைப் பால்வேக வதிவடபான்
மருவியது பணுதரமென் றெங்கள்பிரான் மருவுமிடம்.

## பணுதரேசம்

190 அக்கருட னலைப்புண் டரவினமெல் லாம்வெருவி
மிக்கதொரு காசிபனை வினவுதலும் அவனிரங்கி
முக்கணனூர் திருக்காஞ்சி மூதுரல் லாதுமற்றுந்
தக்கநினை வினைமுடிக்குந் தலமுளதோ வெனப்புகன்றான்.

191 அவனதுரை சிரமேற்கொண் டதிவேக வதிவடபால்
கவனமுடன் றிருவுருவங் கண்டுகண பணவரவம்
நவவிதியிற் பெருங்கிரியை நடாத்திடப்பூ சனைபுரிந்தார்
மவுனமறச் சிவனவைமுன் வரம்வினவு மெனவணங்கி.

192 கருணைபுரி யெம்பெருமான் கருடபயந்த விர்த்திடெனப்
பரவுமர வினைத்திருவா பரணமென மிசைத்தரித்தா
ருரிமையுடன் அடைந்தவரை யுவந்துசிவ னருள்புரியுந்
திருவருளின் பெருமைதனைத் தெரிப்பவரார் விரிப்பவரார்.

---

ஆரண்யம்) சினம் ஒருவ-கோபம் நீங்க. அடரத் தொடங்கினான்-வாட்ட ஆரம்பித்தான்.

189 முத்தம்-விடுதலை. 'எய்திய பெத்தமும் முத்தமும் என்பன-எய்தும் அரன் அருளே' என்று திருமந்திரம் கூறும். நிருதிதிசை தென்மேற்குத் திசை, வேகவதி-கம்பாநதி.

190 அலைப்புண்டு-வாட்டப்பட்டு. பகையால் அலைப்புண்டு அந்நாள் அடிபோற்ற என்பர் கவிச்சக்ரவர்த்தி. (ஆரண்யம்) நினைவினை-கருதிய விருப்பத்தை.

191 சிரமேற்கொண்டு-தலையின்மேலே ஏற்றுக்கொண்டு. இப்பணிதலைமேற் கொண்டேன் என்று இராமபிரான் கூறியதை நினைவு கூர்க. (அயோத்தியா) கணபணஅரவம்-கூட்டமான படத்தை உடைய பாம்புகள். பணம்-படம். 'பணிப்படந்தான்' 'பணம்' எனும் நாமம் படைத்தலால் அதன்மேல் படுத்துளம் களித்தனம்..மாயன்' என்று மு. ரா. கந்தசாமிக் கவிராயர் குமண சரித்திரத்தில் பாடியுள்ளார். (58)

192 பரவும்-புகழும். மிசை-திருமேனியில். தெரிப்பவர்-அறிந்து

193 தெரிவரிய பேருணர்விற் சேடனுக்குந் திசையினுறை
தருமரவா மெண்மருக்குந் தரைதரிக்கும் பெருவலியுங்
கருணையுட னருள்புரிந்து கண்ணுதலெம் பெருமானுர்
பெருமையுடன் வீற்றிருந்தார் பேரரவக் கணம்பிழைக்க.

194 அருகுபெரு வலியினரை யடைந்தவர்க்கும் திறனுண்டாம்
பரிவினுட னினைத்தோரைப் பரிந்தடையி லென்னுகும்
விரவியரன் றனையடைந்து வெருவுபணிக் கணமெல்லாம்
வருகவிவண் கருடனன்று வாழ்ந்தனையோ வெனவுரைக்கும்.

---

கொள்பவர். விரிப்பவர்-அறிந்ததை விரிவாகப் பகர்பவர்-அருள் புரியும் திரு என்றது எம்பிரானைவிட்டு நீங்காத திருவருட் சக்தியை.

193 சேடனுக்கும், எண்மருக்கும், உலகையே சுமக்கும் ஆற்றலை வழங்கி அங்கேயே சிவபிரான் வீற்றிருந்தான். உறை தரும்-தங்கி உள்ள,

அறிவின்மிக்க ஆதிசேடனைத் தாயுமானவர் 'துரிய அறிவுடைச்சேடன் ஈற்றின் உண்மை சொல்லாளே சொல் என் பேன் என்பர். (சிதம்பர ரகசியம் 27) நாகங்கள் எட்டின் பெயர் களை 'நாம் எட்டு அவை வாசுகி அனந்தன், தக்கன் சங்க பாலன் குளிகன் பதுமன் மாபதுமன் கார்க்கோடகனே' என்று பொருள் தொகைச் சூத்திரம் கூறும்.

194 பெருகு வலியினரை அருகு அடைந்தார்க்கும் திறன் உண்டாம். இனைத்தோரை அடையில் என்னும் என்று கூட்டுக. பொருள் வெளிப்படை. பரிந்து-வருந்தி. என்னும்–என்னபயன் உண்டாகும். வெருவுபணிக்கணம்-கருடனைக் கண்டாலே அஞ்சிய பாம்புக்கூட்டம்.

சிவபிரானை அடைந்த பாம்புகள் கருடனைநோக்கிச் சுகமா என்று கேட்டதைச் சிவஞான முனிவர் 'பன்னகாபரணன்றன் இன்னருட்பெறு மதுகையால் கலுழனே சுகங்கொல் என்று அஞ்சாமே பன்னிமேன்மையின் வினையின இம்மொழி பாரெலாம் எடுத்தோதும்' என்று நயமுறப்பாடியுள்ளார். கற்பனைக் களஞ் சியமான சிவப்பிரகாசர் 'மெலியோர் வலிய விரவலரை அஞ்சார்-வலியோர் தமைத்தாம் மருவில் பலியேல்-கடவுள் அவிர்சடைமேற் கட்செவி யஞ்சாதே-படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து' என்று நன்னெறியில் இதனையே சுருக்கினர்.

### திருமாகறல்

195 செய்யதல மத்தலத்தின் றெனுதுதிரு மாகறலாம்
ஐயன்உகம் ஈரா றருச்சனைகொண் டோங்குமிடங்
துய்யவொரு பானிருபேர் சூடுகின்ற சுயம்புலிங்கம்
பையவென்ன காரணமோ வன்மீகப் பாற்படலும்.

### வேறு

196 மானும் சசம்ஒன்று வன்மீகத் தேபுகலும்
கானும்எயி னன்கை கடப்பாறைக் கொண்டுகுத்த
கோணிலவு சேர்முடிமேல் கோட்பட்ட மூந்திடலும்
தாணுவின்பேர் பாறைத் தழும்பரென்றும் சாற்றுவரால்.

### கடம்பவனம்

197 சீரியவத் தானத்தின் றென்பாலா லயமொன்று
தாரகற்காய்ந் திடுபொருட்டுத் தனித்திருவே லுடைக்
கடவுள்
ஈரமுடன் பூசைபுரிந் திகலவியின் திறனமைந்தான்
காரணிகச் சேயாற்றங் கரைக்கந்தே சுரமதுதான்.

---

195 ஐயன்-சிவபிரான். உகம் ஈராறு பன்னிரண்டுயுகம். ஒரு பான் இருவர்-பன்னிருவர். (சூரியர்கள்?) வன்மீகம்-புற்று.

196. சசம்-முயல். வன்மீகத்தே–சிவபிரான் மறைந்து வாழும் புற்றுக்குள். எயினன்–வேடன். கோள் நிலவு-ஒன்பது கோள்களில் ஒன்றாகிய சந்திரன். கோட்பட்டு-அகப்பட்டு. வேடன் கையில் உள்ள கடப்பாறையால் இறைவன் முடியில் தழும்பு பட்டதால் அவருக்குப் பாறைத்தழும்பர் என்றும் பெயர் உண்டாயிற்று.

'சசமும் வயமும் முயலாகும்மே' என்று பிங்கலந்தை கூறும் (2514).

197. தாரகற் காய்ந்திடுவான்-தாரகன் என்ற அசுரனை அழிக்கும் பொருட்டு (கவிசார்வபௌமர்-காளிதாசர் குமாரசம்பவத்தில் முருகப்பிரான் தாரகனைக் கொல்ல அவதரித்தான் என்பர்) இகல்அவி பகைவரை அழிக்கின்ற. காரணி காச் சேயாறு-மேகத்தால் அழகு பெற்ற சோலை சூழ்ந்த சேயாறு. காரணிகாச் சேயாறு என்பது காரணிகச் சேயாறு என்று தவறுபட எழுதப்பட்டது போலும் அன்றி, கரேணிகச் சேயாறு என்றே கொண்டு வளத்துக்குக் காரணமான சேயாறு என்ற வலிந்தும் நலிந்தும் பொருள் கொள்ளலாம்.

198 தடம்பெரிய கடம்பவனந் தனிதரியோ கத்திடமாம்
வடம்படுமக் கரையார்த்தோன் மந்தணமா யுறையுறையுள்
இடம்படுமெய்ஞ் ஞானமுளோ ரெங்கானு முறைபுனிதந்
திடம்படுமத் தலத்தொருபாற் சிலம்பர்துறை யென
வொன்றுல்.

## சிலம்பர் துறை

199 சதுமறையு முன்னொருநாட் டவமுயன்று பரவுதலு
மதுபொழுது சிவன்முன்னின் றறைந்திடுமி னெண்ணமெனப்
பதியுனது நடனமிடு பாதபரி புரமாக
விதிமுறையி லருள்புரிய வேண்டுமென விளம்பினவால்.

200 அனையதுநீர் பெறுமினென வன்றுமுத லருஞ்சுருதி
புனிதன்மலர்ப் பாதபுரி புரமெனவே வயங்கினவால்
வினையமுட னயன்புவனி விதிக்குநெறி தடுமாறிப்
பனிமலரோன் றலமிதனிற் பரனதுபூ சனைபுரிந்தான்.

201 சிவனவற்கு முன்னின்று சிலம்பெனவே யுறைமறையை
விவிதவுரு வினிற்பாதி விதிதுணையாய்ச் செல்லுமெனக்
கவனமுடன் அவைசென்று கழறிடுமத் தலந்தன்னை
அவனியுளோர் சிலம்பர்துறை யாமென்பர தன்குடபால்

---

198. தனி தரியோகம் (புலங்கள் முதலானவற்றை விட்டுத்) தனியே இருந்து சிவபரம் பொருளைத் தரிக்கின்ற யோகம்- வடம் படும்-மணிவடத்தின் தன்மைபெற்ற. அக்கு-எலும்பை. அரை-இடை: மந்தணம்-ரகசியம். 'அக்கும் புலியின் அதளும் உடையார் (பெரியதிருமொழி 9.6 1)

199 சதுமறை-நான்குவேதம். சதுர், என்ற சொல் சது என்று வந்துள்ளது. 'சங்கரன் ஈசன் சயம்பு சதுமுகன்' சிலம்பு 10-186) எண்ணம்-விருப்பம். எண்ணிய எண்ணியாங் கெய்துப என்ற திருக்குறளை நோக்குக. பதி அண்மைவிளி. பதியே என்பது பொருள். பரிபுரம்-சிலம்பு, கவியரசர் பரஞ்சோதி யார் மறைச் சிலம்படிகள் போற்றி என்றும் 'மறையே நமது நூபுரமாம்' என்றும் பாடியுள்ளனர். (திருவிளையாடற் புராணம்)

200 பரிபுரம்-சிலம்பு. 'இருக்கோ விடும் மரிபுரக் கோலமும்' (முத்துக்குமாரசாமிப பிள்ளைத்தமிழ். செங்கீரை. 12) புவனி-உலகம். 'புவனியில் சேவடி தீண்டினன் காண்க' என்பர் மணி வாசகப்பிரான்.

201 விவிதஉரு-வேறுபட்டவடிவம். 'விவிதமுத்தழல்' (தக்க யாகப்பரணி 506) விதி-பிரமன்.

### திருவோத்தூர்

202 வேதபுரி யெனுந்தானம் வேதமியா வையுமீசன்
பேதமிலா தெவற்றினுக்கும் பிரமாண மயமாக
நீதிபெற வையமற நிருமலபோ தகமாக
ஆதியிலே யருள்புரிந்தா னணுக்களவை யறிந்துய்ய.

203 அருள்புரிந்த சுருதிதனை யாதியயன் முதலான
சுரர்முனிவர் தெரிதரவே துளும்புபெருங் கருணையினு
லொருதிருவாய் மலர்ந்தருளி யோதுவித்தா னெம்மிறைவன்
பெரியபதி யதுவேத புரியெனவே பிறங்கிடுமால்.

### குரங்கணி முட்டம்

204 மாடதற்கு வடகீழ்பான் மாருதிசா னகியைமுன்னங்
தேடுவது குறித்தரனுர் செந்நெறியாம் பூசைதனைக்
காடகநூல் விதியாற்றிக் கருணைபெற் றதுபெருமை
கூடுகுரங் கணிமுட்ட மென்றெவருங் கூறுவரால்.

---

202 பேதம் இலாது–வேறுபாடு இல்லாமல். 'வேதம் பொது, ஆகமம் சிறப்பு' என்று கூறுவது சைவ சித்தாந்தம். ஆதலின் பேதம் இலாது என்றார்.

பிர+மாணம். பிரமாணம். போதம்-அறிவு. அணு-ஆன்மா. ஒருவாளினுடைய நுனியை நூறுபாகம் செய்து அதில் ஒருபாகத்தை நூறுபாகம் செய்யின் அதில் ஒரு பாகம் ஜீவன் என்று ச்வேதாச்வதரம் கூறுவதால் ஆன்மாவை அணு என்றார்.

203 சுருதி-வேதம் (கேட்கப்படுவது) துளும்பு-ததும்புகின்ற. 'கருணை நிறைந்து அகம் புறமும் துளும்பிவழிந்து' என்பர் வள்ளலார். (திருவருட்பா).

204 மாருதி-அனுமன். 'மாருதி விநய வார்த்தை' என்பர் கவிச்சக்ரவர்த்திகள். (யுத்தகாண்டம) காடகம் என்ற நூல் கூறிய படி அனுமன் பூசை புரிந்தான். கிருஷ்ண யசுர் வேதத்தில் காடக சாகை உள்ளது. அந்நூலிற் கூறியபடி அனுமன் பூசை புரிந்தனன் போலும்- ஆராய வேண்டும்.

### காயா ரோகணம்

205 அத்தருரை பதிபலவுண் டவனிதனி லதிலதிக
தத்துவமித் திருக்காஞ்சி தலமெனுநால் அதனிடையே
பத்திபெறு சிவாலயம்பற் பலவதற்கு ளிதுமிகவும்
உத்தமமோத் தமங்காயா ரோகணமென் றொருதானம்.

### வேறு

206 காலம திறுதி யெய்தல்
கடைப்பிடித் தங்கண் முன்ன
மாலயர் தவங்கண் முற்றி
வரம்பிலர்ச் சனையு மாற்றி
மேலெம தாயுண் முற்றும்
வேலையிற் பிதாநீ யைய
வேலவெம் முடல நீயே
யெடுத்தனை தாங்கிப் பின்னர்

207 பொற்றிருக் கண்ணிற் காலும்
புனிதமாஞ் சுடரி னாலே
மற்றவை யழற்றி யுன்றன்
மகாரியா முய்து மென்னப்
பற்றிய வடியார் வேண்டும்
பரிசதே புரியு மெம்மா
னற்றது புரிது மென்றா
னன்புளோர்க் கேது செய்யான்?

---

205 அத்தர்-சிவபிரான். தத்துவம்-சிறப்பு. 3 ஆம் அடி 'பத்தி பெறு சிவாலயங்கள் பற்பலவாம் அவற்றிற்குள்' என்ற பாடம் கிடைப்பின் பொருள் சிறக்கும். உத்தமோத்தமம்-சிறப்புக்குள் சிறப்புப் பெற்ற. காய+ஆரோகணம்-காயாரோகணம்.

206 கடைப்பிடித்து-குறிக்கொண்டு. (தெளிவாக அறிந்து) மால் அயர்-திருமாலும் பிரமனும். ஏல-பொருத்தமாக. எடுத்தனை தாங்கி-கையால் எடுத்து உடலில் சுமந்து. எடுத்தனை, முற்றெச்சம்.

207 காலும்-வெளிப்படுகின்ற. மகார்-புதல்வர்கள். வேண்டும் பரிசு-விரும்பப்படும் தன்மை. 'வேண்டும் பரிசு ஒன்று உண்டு என்னில்' என்ற திருவாசகம் இங்குப் பொருந்தி யுள்ளது. அற்றது-அத்தன்மை. புரிதும்-செய்வோம். வேற்றுப்

208 முந்திய வருட நாற்பான்
மூன்றிலக் கஞ்சென் றுற்றால்
அந்தமில் காத பேதத்
துச்ச திருகமா மென்ப
ரிந்தவண் ணத்தி னாலா
யிரந்தரந் திரும்பி லன்னாள்
கந்தமா மலரு ளோர்க்குக்
கணித்ததோர் பகல தாமால்.

209 இதுகணக் காகக் கூடி
யியன்றொரு நூறாண் டுற்றால்
அதுமல ரோன தாயு
ளாகிய பரார்த்த மாகும்
பதுமநற் கண்ணற் கிந்தப்
படியிரு பரார்த்த மானால்
முதிர்தரு மொருநா ளாக
மூண்டுநா றாண்டு செல்லில்

210 அகுதவர் முடியுமாயுள்
அளவிலாப் பிரமர் போன
பகுதிமற் றொருகா லத்திற்
பாவிய விருவ ராயுத்
தொகைபட முடிந்த காலைத்
தொடர்வினை யெண்ணி லண்ணல்
திகழ்தர விருவ ரங்கந்
திருக்கையா லெடுத்துத் தாங்கி

---

பொருள் வைப்பணி. மேல் வரும் பாடல்களில் காலப்பிரமாணம் கூறப்பட்டுள்ளன.

208 நாற்பத்து மூன்று லட்ச வருடம் சென்றால் ஒரு சதுர்யுகமாகும். இப்படிப்பட்ட சதுர்யுகம் நாலாயிரம் சென்றால் அது பிரம்ம தேவனுக்கு ஒரு பகலாகும். கந்தமாமலர்- மணம் வீசும் தாமரை.

சிவஞானமுனிவர் 'ஈண்டும்ஓர் இருபான் ஆயிரம் தலையிட்டியன்ற நாற்பத்து மூன்றிலக்கம் யாண்டெனப் படுவ நான்கு யுகத்தளவை' என்பர்.

209, 210, 211 இப்படி நூறு வருடம் சென்றால் அது (பிரம்மனுக்கும்) பரார்த்தமாகும். இப்படி இரண்டு பரார்த்தங்கள்

211 நெற்றியங் கண்ணிற் றீயா
னீறுசெய் தாடல் கூர்ந்தார்
அற்றைநாள் உள்ளான் றானே
யாதலின் அன்பு மேவி
மற்றையா ருடல மேந்தும்
அவைப்பினுக் கேற்ற நாமங்
கற்றவர் திருக்கா யாரோ
கணமெனப் புகல்வ ரம்மா.

212 அத்திருத் தான வைப்பில்
அருட்டிரு மாது மேனிப்
பத்தியில் வில்ல மொன்று
பதித்தன ளுவகை மேவி
நித்திய விதியிற் பூசை
நிரப்பினள் பிரானைப் போற்றி
யித்திரு மாறன் மார்பில்
யெய்திடும் பெருமை பெற்றாள்.

---

சென்றால் அவனுக்கு ஒருநாள் ஆகும். இப்படி நூறாண்டு சென்றால் பிரம்மதேவனின் ஆயுள் முடியும். இப்படி அளவற்ற பிரமர்கள் முடிவர். இப்படிப் பிரமவிட்டுணுக்கள் முடிந்த காலத்தில் சிவபிரான் இவர்களின் அங்கங்களைத் தாங்கி, நெற்றியில் உள்ள கண்ணின் நெருப்பால் நீறாக்கிக் கூத்தாடுவான். இப்படி இருவர்களின் உடல்களை ஏந்துவதால் (அவ்விடத்தைக்) காயா ரோகணம் என்பர்.

காயம்+ஆரோகணம்-காயாரோகணம். உடம்பைச் (சிவபிரான்) சுமத்தல். இங்குச் சிவஞான முனிவர் 'இருவரும் ஒருங்கே இறவருங் காலை எந்தையே ஒடுக்கியங் கவர்தம்-உருவம் மீதேற்றிக் கோடலாற் காயா ரோகணப் பெயர் அதற்குறுமால்-வருமுறை இவ்வாறெண்ணிலா விரிஞ்சர், மாயவர் காயம்மேல் தாங்கிக்-கருணையால் அங்கண் நடம்புரிந்தருளும் காலமாய்க் காலமும் கடந்தோன்' என்பர். (காயாரோகண 6)

212. வில்லம்-வில்வம். 'செஞ்சடைப் பிரானை வில்லத்தால்' (காஞ்சி. காயா. 7) மால்+தன்-மாறன். திருமகள் திருமாலின் திருமார்பைப் பெற்றது வில்வ பூசையால்

213 பொன்னெனும் பேரோ னங்குப்
புகுந்தன னுவகை மீக்கொண்
டன்னதன் தென்பாற் பொய்கை
யமைந்தன நன்னீ ராடி
நன்னிய மத்தாற் பூசை
நம்பனுக் கினிதி னாற்றிச்
சென்னியிற் சுமந்த கையன்
செய்தனன் துதிக ளெல்லாம்.

214 எம்பிரான் முன்னின் றெண்ண
மேதது கேட்டி யென்ன
உம்பர்தங் குரவ னாக
வுவந்தருள் புரிதி யென்றால்
இம்பர்யான் செய்த பொய்கை
இனியநீர் படிந்தோர் யார்க்குந்
தம்பிரான் வேண்டிற் றெல்லாந்
தந்தரு ளென்றா னன்றே.

215 வேண்டிய துதவு தார
வீரிய னாத லாலே
யாண்டகை யவற்கு நல்கி
யமர்ந்தனன் பின்னு மங்நன்
காண்டகை மறலி யென்னுங்
கடவுடன் பரிவான் மேவித்
தேண்டிய பொருளா லெம்மான்
றிருவடி பூசை செய்ய

213. பொன்-பிரஹஸ்பதி. நம்பன்–சிவபிரான் 'நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்' (கம்பன்-பால) பிரஹஸ்பதி செய்த துதிகள் காஞ்சிப் புராணத்திற் பயின்று இன்பம் பெறுக.

214 கேட்டி-கேள். உம்பர்தம் குரவன்-தேவர்களின் ஆசிரியன். இம்பர்-இந்த உலகத்தில். 'இம்பர் நாட்டிற் செல்வம் எலாம் எய்தி' (கம்பன்-பாயிரம்) தம்பிரான்-சிவபிரான். அண்மைவிளி. 'தம்பிரான் அடிமைத் திறத்து' (பெரிய-இளையான்குடி).

215. உதார வீரியன்-தானவீரன். ஆண்டகை-ஆளும் தன்மை (ஆசார்ய பதவி) மறலி-யமன். 'மறலியன்ன களிற்றுமிசையோனே' (புறம் 13) தேண்டிய-தேடிய. 'தேண்டிநேர் கண்டேன் வாழி' என்பது கம்பநாடகம் (சுந்தர-உருக்காட்டு).

216 ஆருயிர் புரியுங் கன்மத்
தளவிரு பயனை நல்குங்
காரியந் தென்பா லாசைக்
காவலு மவர்க்கு நல்கிச்
சீரிய காஞ்சி மூதூர்
செனித்தவர் நினைத்தோர் கேட்போர்
பேரதி கார மொன்றும்
பிறத்திபோ வென்றான் பெம்மான்.

217 தென்புலத் தவர்க்குச் செய்யுந்
திறனுறு கரும மந்த
நன்புலத் தாற்றி லெய்து
நலமெவர் புகறற் பாலார்?
பொன்பெயர் வாரத் தந்தப்
புராதனப் பிரானைப் போற்றி
லின்புடன் அவர்பாற் பூமா
னேவல்செய் திருக்கு மன்றே.

---

216. கன்மத்தளவு-கருமத்துக் கேற்ற படி. இருபயனை-நன்மை தீமைகளை. தென்பால் ஆசை-தெற்குத் திசை. 'ஆசையின் அளவும் எல்லா உலகமும் தானே ஆள்வான்'. (கம்பன்-யுத்த. அங்கதன்) பிறத்தி-(உன் அதிகாரத்திற்குப்) புறம்பானது. 'புங்கவன் தோன்றித் தென்திசைக் கிறையாம் புரவளித் தமை வணங்குனர்க்கு-மங்கலில் தண்டம் இயற்றில் அன்றுனக்கு மாளும் இப்பதமென விடுத்தான். (காஞ்சி காயா• 13)

217. தென்புலத்தவர்-பிதிரர்கள். 'பிதிரராவார் படைப்புக் காலத்து அயனால் படைக்கப் பட்டதோர் கடவுட்சாதி' என்பர் பரிமேலழகர். புகறல்-புகல்தல் (சொல்லுதல்) அகல்தல் என்பது அகறல் என்று வருவது போல் வந்தது. பொன் பெயர் வாரம்-வியாழக்கிழமை. பூமான்-மலரின் கண் வீற்றிருக்கும் மான் போன்ற திருமகள்-(கலைமகள் எனினும் குற்றமில்லை) பிரஹஸ்பதி அறிவுக்கு உரியவன் ஆகையாலே.

## மஞ்சணீர்க் கூத்தர்

218 மற்றொரு தானத் தெம்மான்
மஞ்சணீர்க் கூத்த ரென்னும்
பொற்றிரு நாம மெய்திப்
பொருந்துவர் உமையாண் மேவும்
அற்றைநாட் டூநீ ராடி
யரிசனக் காப்புச் சாத்தி
உற்றநீர் நதியா யோடி
யுலகெலாங் கமழ்ந்த தன்றே.

219 அன்னநீர்க் கன்பு கூர்ந்தே
யாருயி ருய்ய வங்கண்
மன்னினன் சுயம்பு வான
மணிமய லிங்க மாகி
முன்னவன் விளையாட் டாரே
முற்றுணர் தருவார் அந்தச்
சின்மயன் றனைப்பி னெண்ணிற்
சித்தரங் கணுகிப் போற்றி.

---

218. எம்மான்-சிவபிரான். அற்றைநாள்-அக்காலத்தில். அகரச்சுட்டு-பிராட்டி பெருமானைப் பூசித்த பழைய காலத்தைச் சுட்டுகிறது. அன்று என்பதே அற்றை என்று வேற்றுருக் கொண்டது. மென்தொடர்க் குற்றிய லுகரம் வன்தொடர்க் குற்றிய லுகரம் ஆதல் விதியாதலின். ஒன்று என்பது ஒற்றை என்றும் என்றைக்கும் என்பது எற்றைக்கும் என்றும் வருவன வற்றைக்காண்க. அரிசனம்–மஞ்சள். உற்றநீர்-நீராடியதீர்த்தம். 'கொம்பு மஞ்சளின் காப்பணிந்து மெய்குளிர ஆடும் நீர் மணம் கமழ்ந்தெழூஉப்-பம்பு மஞ்சள் நீர் நதியெனப் புடைபரந்து சேறலும்' (காஞ்சிப்-சித்திரம் 2 )

219. சுயம்புவான-தானே தோன்றிய. தான்தோன்றி என்று இம்மொழி வழங்கப்படும். கருவூரை அடுத்த சிறு குன்றில் எழுந்தருளி உள்ள பெருமானைத் தான்தோன்றிப் பெருமான் என்பர். லிங்கம் ஆகி மன்னினன் என்று ஓட்டுக சின்மயன்-அறிவுமயமான சிவபிரான்.

220 திருமுன்னர்ச் சித்த தீர்த்த
மென்றொரு தீர்த்தங் கற்பித்
தரியவன் நீரா னண்ண
லுவந்தருள் பூசை முற்றி
யரிதணி மாதி சித்தி
யடைந்தன ராத லாலே
சுரர்முத லெவருஞ் சித்தே
சுரமென்று புகல்வர் நாமம்.

221 கூறிய தீர்த்த மங்கோர்
கூவமா மதனை துண்மை
தேறியே யிரவி மைந்தன்
றிருப்பெயர் நன்னாண் மூழ்கிற்
பேறென யோக சித்தி
பெறுவது திண்ண மாகும்
மாறிலா துவகை யாவு
மருவிடு மதற்கொப் பின்றால்.

---

220. கற்பித்து-படைத்து. அணிமாதிசித்தி-அணிமா முதலான சித்திகள். 'சித்தி எட்டாம்:அவை அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்ன இயம்புப' (பொருள் தொகை நிகண்டு. 694) சான்றோர்கள் சித்தி அடைந்ததால் சித்தேசுரம் என்பர். சித்திகளின் தன்மையும் வன்மையும் பொருள் தொகை நிகண்டு 695 முதல் 702 வரை உள்ள சூத்திரங்களால் விளக்கப்பட்டுள்ளன காண்க.

221. கூவம்-கிணறு. 'கூவத்தின் சிறு புனலைக் கடலயிர்த்தல் ஒவ்வாதோ கொற்ற வேந்தே' என்பர் கவிச்சக்கரவர்த்திகள் (யுத்த. வீடணன்): இச்சொல் கூவல் என்றும் வழங்கப்படுகிறது. இரவிமைந்தன்-சனிபகவான். சித்த தீர்த்தத்தில் முழுகற்குரிய நாள் சனிக்கிழமை ஒன்றே கூறப்பட்டுள்ளது. சிவஞானமுனிவர் 'கற்றை வெங்கதிர்க் கடவுள் நாளையும் (ஞாயிற்றுக்கிழமை) சேர்த்துள்ளார். (சித்திரப் படலம் 4).

அரிசாபந் தீர்த்தார்

222 அரியதன் வடபா லாக
வரிசாபந் தீர்த்த தானம்
விரிவதன் பெருமை கூறி
விளங்கிய துரைப்பன் கேண்மோ
வொருதின முன்னாள் தத்த
முரிமையின் பகையினாலே
கருணையில் அசுரர் மற்றக்
கடவுளா ரமர்மீக் கொண்டார்.

223 பகலிரா வாக லக்கம்
பாரிய வருட மூண்ட
விகலமை விலாம லாற்ற
விளைத்தன ரமர ரன்னாட்
புகலவர்க் காய மாயன்
பொருபெரு நேமி யோடுங்
ககபதி மீது வந்து
கடவுளர்க் கிரங்கித் தாக்க

---

222. வடபால்-வடக்குப் பக்கத்தில். கேண்மோ-கேளுங்கள். 'மோ' முன்னிலையில் வரும் அசை. கருணை இல் அசுரர் என்ற தொடர் ஆசிரியர் 'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர்' என்ற கம்பநாடனின் பொன் மொழியில் தோய்ந்தவர் என்பதைப் புலப்படுத்துகிறது. அமர்-போர். மீக் கொண்டார்-மிகுதியாகக் கொண்டார்'.'ஊற்றம் மீக் கொண்ட வேலையான்' என்பர் கம்பநாடர். (யுத்த. வருணன்)

223. லக்கம்-லட்சம். பாரிய வருடம்-தேவ வருஷம். ஆற்ற-மிகுதியாக. அவர்க்குப் புகலாயமாயன் என மாற்றுக. புகல்-சரணாகதி. ககபதி-கருடன். ககபதி ஊர்தி காத்ததை (கஜேந்திர மோட்சம்). கடவுளர்-தேவர். தாக்க-அசுரர்களுடன் போர்செய்ய. திருமால் சரணாகத ரட்சகன் என்பதை ஆசிரியர் இங்குக் கூறுவது (ஆசிரியரின்) பெருந்தன்மையைப் புலப்படுத்துகிறது. இங்குச் சிவஞானமுனிவர் போர் நிகழ்ந்த வருடங்களை எண் இல் ஆண்டுகள் என்றார்.

224 வீறுசேர்த் தினகரேசன்
முன்னர்வெவ் விருளே யென்னப்
பாறினர் தகுவர் யாரும்
பருவர லுழந்தார் தங்கள்
கூறெனும் குரவன் வெள்ளி
குலப்பிதா பிருகு வென்பான்
மாறிலா வவன்றன் அன்னை
மதிநுதற் கியாதி யென்பாள்.

225 அன்னவ ராச்சி ராம
மடைந்தன ரஞ்சி யாசான்
பன்னியாங் கியாதி யன்ன
பான்மைகண் டபயம் நல்கிப்
பொன்னிய லாச்சி ராமம்
புகுத்தித்தான் வாயி னின்றுண்
மன்னுகே சவற்குத் தாமேனர்
மாமியென் பதனை யுன்னி

224. தினகரேசன்-சூரியன். தகுவர்-அசுரர். 'தகுவன்மேல் குலிச வேல் எடுத்து உறைத்திட வீசினான்'. (பரஞ்சோதி-திருவிளையாடல். இந்திரன் பழிதீர்த்த 20) கூறு-சார்பு (கட்சி). குரவன்-குரு-வெள்ளி-சுக்கிரன். சுக்கிரனின் தந்தை பிருகு. தாய் கியாதி.

225 அன்னவர்-தோற்ற அசுரர்கள். ஆச்சிராமம்-முனிவர்கள் தங்கும் இடம். ஆச்சிரமம் என்பது ஆச்சிராமம் என்று வழங்கப்பட்டுள்ளது. (பாச்சில்-ஆச்சிராமம்). ஆசான்-ஆசிரியன். பன்னி-மனைவி. (கியாதி) அபயம்-அடைக்கலம். அ+பயம்-அபயம். பயம் குன்றி இருங்கள் என்று கூறிப்பாதுகாத்தல். 'அபயதானம்' என்பன் கம்பன் (வீடணன் அடைக்கலப் படலம்) வாயில்-வாசற்படி. கேசவன்-திருமால். திருமகள் கியாதியின் மகள். மாமியைக் கண்டால் மருமகன் நாணி அகல்வது பழங்கால முறை. இதை உணர்ந்த கியாதி, திருமால் நாணித் திரும்பட்டும் என்று வாசலில் நின்றாள். இலக்குவன் தாரையைக் கண்டபோது இருந்த கோலத்தைக் கவிச்சக்கரவர்த்திகள் 'மாமியர் குழுவின் வந்தானும் எனமைந்தன் நிற்ப' என்று நயமுறக் கூறியதை இங்குக் கருதுக.

226 தானவர் தரும நீத்தோர்
தமதுபா விரக்க மெய்தி
மானிவள் வாயி னின்றூண்
மதியிலி யென்றே மாமி
யானவ டன்னைக் கொல்லு
மளவினிற் பிருகு வென்போன்
மோனமாஞ் சமாதி நீங்கி
முறைமையோ விதுவென் றுன்னி

227 ஆயவள் தான்நின் மாமி
யியல்பினால் அதிக மாகுந்
தூய பார்ப்பினி யினைத்
துணித்தனை கொலைமேற் கொண்டா
யோய்விலா தாக மான
பிறவிநீ யொருபான் மேவ
மாயவ பெறுதி யெம்மான்
வரமென துடைமை யாகில்.

---

226. தானவர்-அசுரர். (தனு என்பவள் மரபினர் ஆதலின் தானவர் என்ற பெயரைப் பெற்றனர்) தனு என்பவள் காசிப முனிவரின் மனைவி. 'தனு உவந்து ஈன்றுள் தானவர் தம்மை' என்று பாகவதம் கூறும். (6 ஆம் கந்தம் தக்கன் படைப்பு 24.) கொல்லும் அளவினில் கொன்று கொண்டிருக்கும் சமயத்தில். மோனம்-மௌனம்.

227. அதிகம்-சிறப்புக்கு உரியவள். துணித்தனை-துண்டாக்கி விட்டாய். அகம்-உடல். ஒருபான்-பத்து. 'ஒன்று முதலாப் பத்தூர்ந்து வரும்-எல்லா எண்ணும் சொல்லுங்காலை, ஆன் இடை வரினும் மானம் இல்லை' என்ற விதிப்படி ஒருபது என்ற சொல் ஒருபான் ஆயிற்று. (தொல். உருபியல். 27) எம்மான் வரம் எனது உடைமையாகில் பெறுதி எனமாற்றுக. வரம்-அனுக்கிரகம் (திருவருள்). இப்பகுதியில் சிவஞானமுனிவர் வழங்கிய பாடல்கள் வெகுளிச்சுவையின் விஸ்வரூபங்கள். படித்து மகிழ்க. (அரிசாப-5,6).

228 என்றனன் சீறி யங்ஙன்
எழுந்தனன் வெள்ளி யான
தன்றனிக் குமரற் கூவிச்
சம்புவி னருளி ஞலே
யுன்றன தன்னை யுய்வான்
உணர்த்தினை தருதி யென்ன
அன்றவன் கொணர்ந்தா னெம்மான்
அருளுளோர்க் கரிதே தம்மா ?

229 வருந்தினன் றெளிந்து மாயோன்
வரந்தரு காஞ்சி மூதூர்
இருந்தது நீல கண்டத்
தெம்மிறை யுள்ளா னென்னே
பொருந்திய குறைகள் தீரப்
போக்குவன் என்று போகித்
திருந்தின ரவலந் தீர்க்குந்
திருப்பெருங் காஞ்சி சேர்ந்தான்.

---

228. குமரற்கூவி-மகனை அழைத்து. சம்பு-சிவபிரான். உய்வான்-யான் உய்யும் பொருட்டு. உணர்த்தினை தருக-எழுப்பித் தருக. இறப்பு என்பது பெருந்தூக்கம். ஆகையால் துயில்பவரை எழுப்புவதுபோல் எழுப்பித்தருக என்றான் முனிவன். எது அரிது என்பதை அரிது எது என மாற்றுக. செய்யமுடியாத செயல் யாது என்பது அதன் பொருள். இப்பாடல் வேற்றுப் பொருள் வைப்பணி.

229. தெளிந்து-கலக்கம் நீங்கி. காஞ்சியில் எம் இறை உள்ளான்-குறைகள் போக்குவன் என்று அறிந்து திருமால் அவலம் தீர்க்கும் காஞ்சி உற்றான். நீலகண்டத்து எம் இறை என்பது கருத்துடை மொழி. நஞ்சு வருத்தாது காத்தவன், சாபம் வருத்தாது காப்பான் என்ற கருத்து உள்ளே பொதிந்துள்ளது. அவலம்-சோகம். 'பிறைமுடிச்சடைப்பிரான் உளன்: மனுப்பிரமம் ஐந்து உள: யாம் உளேம்: இனிக்குறை எமக்கு எவன் என்று தேறினன்' என்று சிவஞானமுனிவர் பேசுவார். (அரிசாப. 9).

230 கருதிய தருளுஞ் சைவக்
கங்கைநீ ராடி யேறி
மருவுமை வன்ன மான
மனுவினீ றணிந்து முற்றிச்
சுருதியின் வடிவ தான
சூதநன் னிழற் பெம்மான்
திருவடி புகழ்ந்து போற்றித்
திருவருள் பெற்று மீண்டு

231 பூசனை புரிந்து முன்னம்
போற்றிய கச்ச பேசன்
றேசுறு திருமுன் னாகத்
தீங்கறு புனித மான
வாசிர மஞ்செய் தன்பால்
அவ்விடை யனலைந் தாக்கி
யிசனை யுன்னி யுன்னி
இருந்தருந் தவமுன் செய்தான்.

---

230. சைவக் கங்கை—சிவகங்கை. ஐவன்னம் ஆனமனு-ஐந்து எழுத்துக்களால் ஆக்கப்பட்ட மந்திரம். பஞ்சாட்சரம். வன்னம்-எழுத்து. சுருதி-வேதம். சூதம்-மாமரம், நீழல்-நிழல். 'பாதிவம், இன்றேய் நீழல் காண்டலும் இலமே'(ஞானமிர்தம் 64). சிவஞான முனிவர் திருமால் கொண்ட சைவக்கோலத்தை ஒவியமாகவே வடித்துள்ளார்.

231. முன்னம்—தான் ஆமையாய் அவதரித்த அக்காலத்தில். கச்சபம்+ஈசன்-கச்சபேசன். கச்சபம்-ஆமை. அனல்ஐந்து-பஞ்சாக்கினி. புதிய காஞ்சிப்புராணத்தில் சிவஞான முனிவர் 'ஐந்தழல் மத்தி நின்று அருந்தவம் உஞற்றினன்' என்பர். தவம் செய்பவர்கள் ஐந்து நெருப்பின் நடுவில் நின்று தவம் புரிவதைப் பட்டினத்துப் பிள்ளையார் 'ஐவகை நெருப்பின அழுவத்து நின்றும்' என்று திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் திருவாய்மலர்ந் தருளினார், (19). நான்கு பக்கத்தில் உள்ள அக்கினியையும் மேலே தகிக்கும் சூரியனையும் சேர்த்துப் பஞ்சாக்கினி என்பர்.

232 பின்னரந் தரியா கத்திற்
பிரான்றனைப் போற்றுங் காலை
முன்னொரு லிங்க மாக
மூர்த்தியங் குறக்கண் ணுற்றான்
அன்னதிற் சுருதி வெவ்வே
றறைந்திடும் பூசை முற்று
நன்னிய மத்தாற் செய்தா
னுதனங் கவன்முன் னின்றான்.

233 நாதனே ! போற்றி போற்றி
நாயினேற் கிடையூ றெய்தும்
போதெலாங் கருணை செய்யும்
புராணனே ! போற்றி யென்றே
மாதவன் போற்ற வீசன்
மகிழ்ந்தனம் வரங்கே ளென்னப்
பேதுநீ யடிய னேற்கெம்
பிரானிடு பிருகு சாபம்

232 அந்தரியாகம்-மானசபூசை. (அகப்பூசை) இப்பூசையைப் பற்றி அறிய விரும்புவோர், சிவஞான போதம் 9 ஆம் சூத்திரத்தில் ஆய்ந்து தெளிக. மண் முதல் என்று தொடங்கும் வெண்பா இப்பூசையைக் குறிப்பாற் கூறும். இப்பாவை விரிவுபடுத்தி அருணந்தி சிவனார் 'நாட்டும் இதயந்தானும் நாபிதனில் அடியாய்-ஞாலமுதல் தத்துவத்தால் எண் விரல் நாளத்தாய்-மூட்டுமோ இனிசுத்த வித்தைமலர் எட்டாய்-முழு இதழ் எட்டு அக்கரங்கள் முறைமையில் உடைத்தாய்க் காட்டு, கமலாசனமேல் ஈசர் சதா சிவமும்-கலா மூர்த்த மாமிவற்றின் கண்ணுகும் சத்தி-வீட்டை யருள் சிவன்மூர்த்தி மாகுகச் சத்தி மேலாகி நிற்பன் இந்த வினைவறிந்து போற்றே' என்று சிவஞான சித்தியில் பேசுவார்.

மூர்த்தி - சிவபிரான் வெவ்வேறு-வேறுவேறுவிதமாக (பல விதமாக) நியமம்-முறை.

233. புராணன்-பழமையானவன். 'புண்ணிய, புராதன, புதுப்பூங் கொன்றைக் கண்ணி வேய்ந்த கயிலை நாயக' என்பர் பட்டினத்தடிகள். 'எம்பிரான் அடியனேற்கு பிருகு இடு சாபம் பேது நீ' எனக் கொண்டு கூட்டுக. எம்பிரான் விளி. சாபம்-சாபத்தால் வந்த. பேது-வருத்தத்தை. நீ-நீக்குக. 'பெடைமயில் சாயலாள் தன் பேது கண்டு ஆங்கு மீண்டேன்' என்று நந்தட்டன் கூறுவான். (சிந்தா. கனக, 187).

234 என்றவன் உரைக்க நோக்கி
யீசனங் கருளிச் செய்வா
னன்றரி கேட்டி யெம்பால்
நண்புளோ ருரைத்த மாற்றம்
பொன்றுத லரிது மற்றுச்
சிலாலிபி போலும் யாவும்
வென்றுளார் குறைகண் டாரை
வெகுளினும் விலக்கற் பாற்றே.

235 கருணையு மற்று லன்னூர்
கருதியே சினப்ப ராகிற்
பரிபவ மன்று தீயோர்
பரிகரித் துறுதி செய்தால்
பெரியவரன்பா லெம்மைப்
பிரானெனக் கொண்டார்க் குற்ற
தரியல ரெமக்கு மிக்க
தரியல ருண்மை யீதால்.

---

234 நன்று-நல்லது. மறுப்பவர்கள்-முன்பு கூறவேண்டிய பண்பாட்டுவாசகம் இது. அரி-திருமாலே. அண்மைவிளி. பொன்றுதல்-(பலிக்காமல்) அழிந்து போவது. சிலாலிபி-கல்லின் பொறிக்கப்பட்ட எழுத்து. 'நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்–கல் மேல் எழுத்துபோற் காணுமே' என்ற பாடல் இங்கே கருதத் தக்கது. யாவும் வென்றுளோர்-முனிவர்கள். விலக்கற்பாற்றே–யோக்கும் எளிமை உடையதா?

235 அற்றால்-அதைப்போன்றதே. பரிபவம் அன்று-அவமானம் அன்று. 'பரிபவம் என்பது பிறரால் பட்டால் அன்றோ' என்று தருமபுத்திரன் கூறுவான். (வில்லி-கிருட்டினன் தூது. 16) பரிகரித்து-நிவர்த்தி செய்து. உறுதி செய்தால்-நன்மையாகக் கருதினால். தரியலர்-பகைவர். தீயோர் ஆயினும் பரிகரித்தால் பெரியவர். எம்மைப் பிரான் என்று கொண்டார்க்குத் தரியலர் எமக்குத் தரியலர் என்று பிணைத்துப் பொருள் காண்க.

இங்கு இராம பிரான் சுக்கிரீவன் பால் 'நின்னைச் செற்றவர் என்னைச்செற்றார், தீயரே எனினும் உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார்' என்று கூறியது நினைவுக்கு வருகிறது.

236 அனையரில் தலைமை சான்ற
வரரவர் அவர்சொல் போற்ற
லுனதுமா கடனுன் பால
தாருயிர்க் குறுதி செய்தல்
பனவன துரைத வாதாற்
பரிந்துநீ புரியும் பூசை
வினையமுங் குறைக டீர்க்கும்
வெறுவிய தாகா தென்றும்

237 புவியின துபகா ரத்தின்
பொருட்டுநீ யொருபா னான
பவமது செறிதி யின்ன
பான்மையா லெவரும் போற்ற
விவிதம தான சால்பு
மேவுதி பிறவி யான
வனைவரும் அகந்தை தீர்த்தே
யாரருள் புரிது மென்ருன்.

238 பேறினி யிதன்மே லுண்டோ
பிறையணி யிதழி கங்கை
யாறணி கடவு ளுமம்
அரிசாபந் தீர்த்தா ரென்றே
கூறினர் புவியி னுள்ளோர்
குலமுனி சாபந் தானும்
மாறிலாப் புகழ்மை யான
மாயவன் றனக்கு மன்றே.

---

236. அனையரில்-அத்தகைய சான்றோர்களில். வரர்-மேலானவர். அவர் சொல் போற்றல் உனது மாகடன் (அது) உன்பாலது ஆருயிர்க்கு உறுதி செய்தல். பனவன்-அந்தணன். தவாது-தப்பாது. வெறுவியதாகாது-வீணாகப் போகாது.

237. ஒருபான் ஆனபவம்-பத்து அவதாரம். செறிதி-அடைக. விவிதமான-பலவகைப்பட்ட. சால்பு-நிறைவு. அகந்தை-அகங்காரம். ஆர்அருள்-மிக்க அருள்.

238. பேறு-பாக்கியம். பேறினி இதன்மேல் உண்டோ என்ற தொடர் பெரியபுராண அமுதக் கடலில் ஆசிரியர் முகர்ந்து கொண்டது. (பெரிய. கண்ணப்பர் 185) இதழி-கொன்றைப்பூ.

திரிகால ஞானேசுரம்

239 கீட்டிசை யிதன்பா லாகக்
கெழுமியே பிறவித் துன்பம்
வீட்டுதல் குறித்துப் பாசு
பதநிலை முனிவர் பல்லோ
ரீட்டின ரிலிங்க மொன்றவ்
விடைப்பட நிறுவி யீசன்
றாட்டுணை நெறியிற் போற்றித்
தலைவன தருண்மீக் கொண்டு.

240 சிற்றறி வதனைப் போக்கித்
திரிகால ஞானம் யாவும்
பெற்றனர் பெறுத லாலே
பிரானவன் றனது நாமஞ்
சொற்றிரி கால ஞானே
சுரனென விளங்கிற் றுமால்
மற்றதன் வடபா லாக
மாதங்க ரென்னு முன்னோர்.

---

'தண்ணூர் இதழித் தாராய் சரணம்' (திருவாரூர்ப் புராணம் இந்திர. 47) 'சாபம் புகழ்மை ஆன' என்று நயம்படப் பேசு கின்றார் ஆசிரியர்.

239. வீட்டுதல்-அழித்தல். பாசுபதம்-பசுபதியை வணங்கும் சைவசமயம். ஈட்டினர்-சம்பாதித்தனர். அவ்விடை-அந்த இடத்தில். தாள்+துணை-தாட்டுணை. துணைத்தாள் என மாற்றுக. துணை-இரண்டு. துணை விளக்கு எரியும் நிலைவிழிப் பேழ்வாய்-தோகைமண் புடைக்கும் காய்புலி (கல்லாடம். 6.9).

240. சிற்றறிவு-பாசஞானத்தையும் பசு ஞானத்தையும். திரிகாலம்-முக்காலம். பிரான்-வள்ளல் (சிவபிரான்) அதன்வடபால்-திரிகால ஞானேசுரத்துக்கு வடக்குப் பக்கத்தில்.

### மதங்கீசுரம்

241 உலைதரு பொறிக ளைந்து
　　மொருப்படு மதனை நாடிப்
பலனுறப் பூசை செய்த
　　பான்மதங் கீச மென்பர்
தலமதன் மேல்பால் முன்னர்ச்
　　சக்கரப் பாணி யண்ணல்
வலனுறு தான வேசன்
　　மாபலி யென்பான் முன்போய்.

### அபிராமீசுரம்

242 வாமன வுருவ மாக
　　மண்ணளந் திடுவா னுன்னிக்
கோமள லிங்க மொன்று
　　குறித்தவ ணிறுவிப் போற்றச்
சேமமாய் அவர்க்கு நல்குஞ்
　　சிற்பரம் பொருளா மையன்
தாமபி ராம ரூபந்
　　தரித்தவன் றன்மு னின்றூர்.

---

241. உலைதரு-பல இடத்தில் திரிகின்ற. 'உலைய விட்டாய் எனில் சொல்லவினிவாயுமுண்டோ'. (தாயுமானவர். சுகவாரி) ஒருப்படும்-ஓரிடத்திலே நிலைத்திருக்கும். பலன்-பயன். மாதங்கர் என்னும் முனிவர் பூசை செய்த இடம் மதங்கீசம்.

அதன்மேல்பால்–அந்த மதங்கீசத்திற்கு மேற்குப்பக்கத்தில். சக்கரபாணி–திருவாழியைக் கையில் தறித்த திருமால். தானவ+ ஈசன்-தானவேசன். அசுரர்களுக்குத் தலைவன். குளகம்.

242. வாமன உருவாக-குட்டையான வடிவத்துடன். கோமளம்-அழகு. சித்பரம் பொருள்-அறிவுக்கு மேலே இருக்கும் இறைவன். 'அருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான்' என்று கம்பநாட்டாழ்வார் பகர்வர். (கம்ப. பால. கையடை) அபிராம ரூபம்-மனத்துக்கு இனிய வடிவம். 'அபிராம இங்கு வருக' என்று திருப்புகழ் பேசும்.

243 கூரிய நேமி யோனுங்
குறித்தமூ வடியி னாலே
பாரினை யளக்கும் பண்பும்
பரவுமவ் வுருவி னாலே
பேருறு நலமும் வேண்டிப்
பெற்றன னாத லாலே
யேருறு மபிரா மீச
மெனப்பெயர் விளங்கிற் றன்றே.

**அயிராபதேசுரம்**

244 அறைந்தவத் தலத்தின் மேல்பா
லயிரா பதேச மென்றும்
சிறந்திடும் மகவா னூர்தி
தெய்வப்பா லுததி தன்னுள்
பிறந்தயி ராப தப்பேர்
பெற்றது பூசை முற்றிக்
குறைந்திடா வலியும் பெற்றுக்
குஞ்சரேந் திரனாந் தானம்.

**வேறு**

**இட்டசித்தி**

245 அனையதன் மேல்புறத் தரத னத்தினிற்
புனைமணி மண்டபம் பொலிய நின்றது
வனைதர வரியது மயனும் புகழ்ந்திடற்
கினியது பிரானுறை யிட்ட சித்தியே.

---

243. நேமியோன்-சக்கரம் ஏந்திய திருமால். பரவும்-ஞானிகளால் புகழப்படுகின்ற, வேதத்திலேயே புகழப்பட்ட அவதாரம் வாமனம். ஆதலினால் ஆசிரியர் 'பரவும் அவ்வுரு' என்றார். பரவும் என்பதற்கு எல்லா வுலகத்தினும் வியாபிக்கும் என்றும் கூறலாம். ஏர்-அழகிய.

244. மகவான்-இந்திரன். நூறு யாகம் செய்து பெற்ற பதவியை உடையவன் ஆகையால் இந்திரனை மகவான் என்பர். 'மகவான் மைந்தன் சிலைகண்டும்' (வில்லிபாரதம். கிருட்டினன் தூது) ஊர்தி-வாகனம். பால்உததி-பாற்கடல். குஞ்சரம்-யானை.

245. பிரான் உறை இட்ட சித்தி. அனையதன் மேல் புறத்து (உள்ளது அது) மயன் புகழ்ந்திடற்கு இனியது என்று கூட்டுக

246 அத்தல மதனிடை யமலன் பூரண
சத்திகொ டுறைதருந் தருமம் மேவிய
வித்தக முனிவரர் யோகர் வேண்டிய
சித்திபெற் றுடையது சிறப்பி னுன்றது.

247 பார்க்கவர் குலப்பயோ ததிக்குட் பான்மதி
போற்குல வியமறைப் புனித வேதியன்
தார்க்கம லப்புய ததீசி யென்பவன்
கூர்க்கதிர் வேற்கரக் குபனோர் மன்னவன்

---

வனைதர அரியது-படைக்க முடியாத சிறப்பைப் பெற்றது. மயன், அசுரத்தச்சன். அரதனம்-ரத்தினம். புனை-அலங்கரிக்கப்பட்ட. 'புனை மணி மண்டபம் பொலிய எய்தினான்' என்று கம்பன் பேசுவான். கம்பன் நினையவும் அரியது என்றான். இவர் வனைதர வரியது என்கிறார். கம்பநாடனின் கவிதை ஒளி இங்கே பட்டுள்ளது.

246 அமலன், பூரண சக்தி கொடு உறை தரும். அமலன்-சிவபிரான். (மலம் இல்லாதவன்). பூரண சத்தி-அருட்சக்தி. தருமம் மேவிய-தருமத்திலே நிலைத்து நின்ற. வித்தகம்-ஆச்சரியப் படத்தக்க. 'பிறர்களுக்கு அரிய வித்தகன்' என்னும் திருவாய் மொழித் தொடருக்கு உரைவகுத்த நம்பிள்ளை இங்ஙனம் பொருள் கூறியுள்ளார். (1 3.1). வித்தகம் என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் சதுரப்பாடு என்று உரை வகுத்தார். (அறம். புகழ். 5) ஆன்றது-பழமையானது.

247 பார்க்கவகுலம்-பிருகுவின் மரபு. பிருகு என்ற சொல்லி லிருந்து-தத்திதாந்த நாமம் ஆக-பார்க்கவ என்று சொல் உண்டா யிற்று. பயோததி-பாற்கடல். பயம்-பால். உததி-கடல். 'திரை கெழுபயோததி துயிலும் தெய்வ வான் மரகதமலை'. (பால-திரு அவதாரம் 11). பால்மதி-வெண்மையான சந்திரன். தார்க்கமலப் புயம் என்ற தொடரைக் கமலத் தார்ப்புயம் என்று பிரித்துக் கூட்டுக. கமலத்தார்-தாமரைமாலை. அந்தணருக்கு உரியது தாமரை மாலை. குபன், ஒரு அரசன் பெயர். இவன் ததீசி முனிவரின் நண்பன். 'ஒருவரும் கேண்மை' என்பர் சிவஞான முனிவர். (இட்டசித்தீச் சரப்படலம். 4)

248 அறைதரு மிருவரு மளவி னட்புறீஇ
யுறைதரு காலையி லுரைத்தி றத்தினுன்
மறையவன் மறையவர் வலிய ரென்றன
னிறையவர் வலியரென் றிறைவன் கூறினுன்.

249 முடுகின ரிருவரும் வெகுளி முற்றியே
நெடியது பொழுதுநின் றுரைநி ரப்பினுர்
வடுவிலாக் குலத்தபி மானம் யாரையும்
விடுவதோ? வுலகியல் விலக்க லாகுமோ?

250 வேதியன் தெய்வநூ லனைத்தும் வேதிய
ராதிசால் முறைமையே யறைய மன்னவ
னேதினன் பழுதுரை யென்னென் றுன்னியே
மோதின னவனது முரணு மார்பினே.

251 அரசனும் பெருவலி யங்கை வாளினு
லிருதுணி படமுனிந் தெறிய வேதியன்
மரபினிற் புகரினை மனத்தி லுன்னியே
தரையிடை வீழ்ந்தனன் றவத்தின் மேன்மையால்.

---

248 நட்புறீஇ-நட்பால் ஒன்றுபட்டு உரைத்திறத்தினுல்-பேசும் முறைப்படி. மறையவன்-ததீசி. இறைவன்-குபன். அரசனும், முனிவனும் தம் தம் சாதியே உயர்ந்தது என்றனர். சாதிப் போராட்டம் பண்டே உண்டு என்பதற்கு விசுவாமித்திர னுக்கும், வசிட்டனுக்கும் இடையே நிகழ்ந்த போராட்டமே சான்று.

249 முடுகினர்-வேகமானுர்கள். உரைநிரப்பினுர்-சொற்களைப் பெருக்கினுர். குலத்து அபிமானம் யாரையும் விடுவதோ என்று (வேற்றுப் பொருள் வைப்பணி) ஒரு பெரிய உண்மையை ஆசிரியர் கூறுகின்ருர். இதனுல் ஆசிரியரின் உலகியல் அறிவு புலனுகிறது. அபிமானம்-பற்று. விலக்கல் ஆகுமோ-ஒதுக்கமுடியுமோ? கம்பர் வீடணன் வாயிலாகக் 'குலத்துமானம் தீர்ந்திலன்சிறிதும்' என்று குறிப்பர். (யுத்த. கும்பகர்ணன்).

250 ஆதிசால் - பழமை நிரம்பிய முறைமை - ஒழுக்கம். அறைய-(சிறப்பித்துப்) பேச. பழுது உரை-குற்றம் மிக்க சொல். என்-(கூறுவதற்குக் காரணம்) யாது. மோதினன்-அடித்தான். (அடித்தவன் முனிவன்).

251 அங்கை-அகங்கை- கையகம் என மாற்றுக. கையின்

252 அறிதரு புகரவ னணுகி வாளினுன்
மறிதரு ததீசியை மனுவின் வன்மையா
னெறிபட வெழுப்பின னிலைமை யாவையும்
பிறிபட வுணர்ந்தனன் பேசல் மேயினுன்.

253 பரையுமை பராவிய பதியங் கன்னவள்
கருணையி னுருவமாங் காஞ்சி மாநகர்
பெரியதத் தலத்தினிற் பெரிதும் யாவர்க்கு
மிருமையு மருளுவ திட்ட சித்தியே.

254 பத்தியின் முதிர்ந்தவர் பரம யோகிகள்
சித்திபெற் றுடையது ; சிவானு பூதியின்
முத்தியை விரும்பினோர் முறையிற் போற்றுவது ;
அத்தனத் தாணி யாயமரு கின்றதே.

---

கண்கொண்ட. அகம் - இடம். மு னி ந் து எரிய - கோபித்துவீச. தவத்தின் மேன்மையான்-ததீசிமுனிவன். புகரினை-சுக்கிரனை. 'வெள்ளி தன்னை நினைந்து கீழ்வீழ்ந்தான்' (காஞ்சி. இட்டசித்தி 5).

மன்னவனும் முனிவனும் புரிந்த போரை ' வயிரப் பூசல் ' என்று காஞ்சிப் புராணம் பேசும் (சிவஞானமுனிவர்).

252 வாளினுல் மறிதரு-வாளால் இறந்த. 'மறிந்த மகன் தனைச் சுட' (அரிச்சந்திர. மயான.) மனு - மிருதசஞ்சீவினி என்ற மந்திரம் (இந்த மந்திரம் பெறக் கச்சன் சுக்கிரனுக்குச் செய்த தொண்டுகள், பட்டபாடுகள், கைக்கிளைக்காமம் முதலான செய்திகளை வியாசர் ஆதிபருவத்தில் (பாரதம்) விவரித்துள்ளார். பிறிபட-தெளிவாக. உணர்ந்தனன் -அறிந்து. முற்றெச்சம். பேசல் மேயினுன்-சொல்லத் தொடங்கினுன்.

253 பரைஉமை-பராசக்தியாகிய உமாதேவி. இருமையும்-இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும்.

254 பக்தர், யோகிகள், சித்திபெற்ற இடம். சிவானுபூதியில்-சிவபிரானை ஞானவழியில் கண்ட அனுபவ முதிர்ச்சியால். அத்தன்-சிவபிரான். அத்தாணி-அரசு இருக்கும் இடம். 'அண்டத் தமரர்கள் சூழ அத்தாணி உள் அங்கு இருந்தாய்' என்பது பெரியாழ்வார் மணிமொழி.

255 இனையவித் தன்மையவ் விட்ட சித்தியிற்
புனிதனைப் பூசனை புரிந்து பெற்றனன்
வினையம தடைதர மிருத மின்மையை
நினைவினை முடிப்பது நிகரி லாததது.

256 நீயுமத் தலத்தினை நினைவி னெய்தியே
காயம தீறிலாக் கவினும் வச்சிரத்
தாயின வுருவமு மதியமும் பெறீஇ
யேயின செய்தியென் றெழுந்து போயினான்.

257 பேசிய ததுகடைப் பிடிய தாக்கியே
யீசனை யன்பினால் இட்ட சித்தியி
லாசில னுடியே யதிவி தப்பெரும்
பூசனை முற்றினான் புனித முற்றினான்,

258 வச்சிர வுருவமு மடிவி லாமையு
மச்சமி லுறுதியு மதன மேன்மையும்
இச்சையில் யாவையு மிட்ட சித்தியிற்
பச்சிம முகப்பிரான் பாலித் தானரோ.

---

255 புனிதனை-சிவபிரானை. புனிதனைப் பூசனை புரிந்து மிருதம் இன்மையைப் பெற்றனன் எனக் கூட்டுக. மிருதம் இன்மை-மரணம் இல்லாமல் இருத்தல். பெற்றனன்-அடைந்தேன். 'மழை தவழ்மிடற்றுப்புத்தேள் மலரடிவழுத்திப் பெற்றேன், விழைதரு மிருத சஞ்சீவினி' (புதிய காஞ்சி. இட்ட சித்தி 8).

256 காயமது-உடம்பின்கண்ணே. ஈறுஇலா-முடிவு அடையாத. கவின்-அழகு. வச்சிரத்தாயின-வச்சிரத்தால் ஆக்கப்பட்ட. உருவம்-உடல். 'உருவமும் உயிரும் ஆகி ஓதிய உலகுக்கெல்லாம் பெருவினை பிறப்புவீடாய்' (அப்பர் தேவாரம்-பதிகம் 63 பாடல் 3) மதியம்-மதிப்பு. பெறீஇ-பெற்று.

257 கடைப்பிடியதாக்கி-உறுதியாகப்பற்றி. 'நன்மை கடைப் பிடி' என்று ஆத்திசூடி பேசும் ஆசு இலான்-குற்றம் இல்லாதவன். பூசனை முற்றினான்-நித்திய வழிபாட்டைச் செய்து முடித்தான். 'சிறப்பொடு பூசனை' என்று தொடங்கும் குறளுக்குப் பரிமேலழகர் வரைந்த உரையைக் காண்க. புனிதம் முற்றினான்-தூய்மையை நிரம்பப் பெற்றான்.

258 வச்சிர உருவம்-வச்சிரம் போன்ற உடல் மடிவு-சோம்பல். மச்சம் இல்-குற்றம் இல்லாத. மதன மேன்மை-மன்மதனைப்

259 சாற்றிய விவைபெறுந் ததீசியே கிப்போ
யேற்றனன் குபன்றனை யிடது தாடனு
லாற்றலி னுதைத்தன னவையின் வந்துழிக்
கூற்றெனச் சினந்தனன் குவவுத் தோளினன்.

260 சுற்றிய பரிசனத் தொகையுஞ் சூரராய்
மற்றுள வீரரும் வலியின் பாலதாய்
வெற்றிகொ ளுற்படை வெள்ளம் யாவையுந்
தெற்றென வெழுந்தனர் சினந்து நோக்கினர்.

261 எளியனோர் பனவனென் றிகழுமுள் ளத்தாற்
கொளுவிய பலபடைக் குழுக்கொண் டோச்சினர்
வளவிய கரிபரி வளைந்த மன்னனு
மளவில செருவெலா மாற்றி னனரோ.

262 பனவன தெரிவிழிப் பார்வை தன்னினல்
இனமுடன் விடுபடை யெரிந்து போயதால்
சனமுட னரசனுந் தாழ்ந்து சாம்பினு
னனகன தன்பர முன்யாவ ராற்றுவார்.

---

போன்ற அழகு: இச்சையில் யாவையும்-விரும்பிய யாவற்றையும். பச்சிம முகப்பிரான்-மேற்கு நோக்கிய முகத்தை உடைய சிவ பிரான் (சத்தியோசாதம்). பாலித்தான்-திருவருள் செய்தான்.

259 ஏற்றனன்-எதிர்த்துப் போர்புரிந்தான். 'ஏற்றூர்க் கிடாதார் இலை என்பது இன்றறிந்தான்' (பெருந்தொகை.1195) இடதுதாள்தனல் - இடக்காலால். குவவுத்தோளினன்-திரண்ட தோள்களை உடைய குபன்.

260 பரிசனம்-பரிவாரம். சூரராய்-வீரம் உடையவராய். தெற்றென-விரைவாக. 'பெற்றவை பிறர் பிறர்க் கார்த்தித் தெற் றெனச் செலவுகடை கூட்டுதிராயின்'. (பொருநர் ஆற்றுப்படை. 174-175). நச்சினர்க்கினியர் தெற்றென என்பதற்குக் கடுக என்று உரைவரைந்தார்.

261 பனவன்-பிராமணன். கொளுவிய - தூண்டப்பட்ட. 'குறுமுயால் எம்கேள் இதன் அகத்து உள்வழி காட்டீமோ- காட்டீயா யாயிற் சதநாய் கொளுவுவேன்'. என்று சினப்பாள் கலித்தொகைத் தலைவி. (நெய்தல், 27. பா. 18. 19. 20, வரிகள்.) வளவிய-வளமான. செரு-போர். ஆற்றினன்-செய்தான்.

262 பனவனது எரிவிழிப் பார்வை என்று பிரிக்க.

263 பார்த்தன னரசனப் பனவன் வன்மையை
மூர்த்திதன் னருளென முழுது மெண்ணியே
யேத்துவன் யானுமென் றிசைந்து கேசவன்
சீர்த்திருவடியினைச் சிந்தித் தானரோ.

264 வந்தனன் மாதவன் மன்னர் மன்னன்முன்
சிந்தனை யென்னெனச் செப்ப மன்னவ
னந்தணன் றதீசியென் பவனை யாரமர்
வெந்திறல் புரிந்துயான் வெல்ல வேண்டுமால்.

265 என்பது கேட்டமா லெம்பி ரான்றன
தன்புடை வேதியன் அவனை யாவரே
வன்பிகல் வெல்பவர் மதியிலாயவன்
முன்புசென் றிரக்குவ னென்ன முன்னினான்.

266 அதிர்மறைத் ததீசிபா லறவு மாயுளின்
முதிர்தரு பனவனுய் முந்தி வந்துநின்
றிதுபொழு துன்னையொன் றிரக்கின் றேனது
சதிர்பெறு மறையவ தருதி யென்றனன்.

---

எரிவிழி-நெருப்புபோன்றகண். விடுபடை-அரசனால் விடப்பட்ட ஆயுதங்கள். விடுபடையை வடநூலார் அஸ்திரம் என்பர், அவை அம்பு, சக்கரம் முதலானவை. வேல், வாள், முதலான வற்றைச் சத்திரம் என்பர். இதை அடியேனுக்குக் கூறியவர் திரு கம்பன் அடிப்பொடி. அனகன்-சிவபிரான். இப்பாடல் வேற்றுப் பொருள் வைப்பணி.

263 மூர்த்தி-சிவபிரான். யானும் ஏத்துவன்-நானும் புகழ் வேன் என்று கருதி. கேசவன்-திருமால். சிந்தித்தான்-தியானித் தான்.

264 மாதவன்-திருமால். சிந்தனை என் - கவலையாது. ஆர் அமர்-கொடும்போர். திறல் புரிந்து-ஆற்றலைக் காண்பித்து.

265 எம்பிரான்-சிவபிரான். வன்பு-வன்மையான. இகல்-போர். இரக்குவல்-யாசிப்பேன். முன்னினான்-முன்சென்றான்.

266 அறவும்-மிகவும். ஆயுளின்-வயதால். முதிர்தரு-முதிர்ச்சி யடைந்த. சதிர்பெறு-சதுரப்பாடு பெற்ற. மறையவ-வேதங் களைக் கற்றவனே.

267 ஆயது மாயையென் றறிந்து வேதிய
னீயிவண் வந்ததும் நினைவு மெண்ணினன்
தூயதன் றற்புதச் சோதிப் பேரரு
ளேயினர் தோல்வியு மெய்தற் பாலதோ.

268 ஈசன தடியவ ரென்று மீறிலா
ராசிலர் துன்பிலர் அச்ச மோவிலார்
வீசிய புகழினர் வென்றி மெய்யினர்
பேசுவ தரிதவர் பெருமையுண் மையால்.

269 அன்னவ ரடிப்பொடி யானு மாதலின்
பொன்னியல் நேமிநீ புகலு கின்றது
நன்னிலை யன்றென வுறுதி நாட்டினுன்
இன்னது காணுமா விளகி நாணியே.

---

267 ஆயது-அச்செயல். வந்ததும்-வந்த காரணமும். நினைவும்-எண்ணமும். தூயது அன்று-உன் செயல் தூய்மை உடையதன்று. அற்புதச் சோதி-சிவபிரான். எங்கும் ஒளிமயமாக இருந்தும் நம் கண்களுக்குப் புலப்படாமையால் அற்புதச் சோதி என்ருர். 'பேரருள் ஏயினர் தோல்வியும் எய்தற்பாலதோ' என்ற தொடர் 'வீரம் என்னுல் விளம்புந்தகையதோ' என்று பாடிய சேக்கிழாரின் திருவுள்ளத்தைப் பிரதிபலிக்கின்றது.

268 ஈறு இலார்-அழிவற்றவர். ஆசிலார்-குற்றம் அற்றவர். வீசிய புகழினர் என்பதைப் புகழ் வீசியவர் என்று கூட்டுக. புகழை மதியாது வீசி எறிந்தவர் என்று பொருள் கொள்க. வென்றி மெய்யினர்-வெற்றியைத் தருகின்ற சத்தியத்தைக் கடைப்பிடிப்பவர். பேசுவது அரிது-சொல்வது முடியாது. உண்மை-உண்மையாக. நம்பிக்கை ஊட்ட உண்மை என்று கூறினுர்.

269 அடிப்பொடி-திருவடியில் தூளாக இருப்பவன். சான்ருேர்கள் தம்மைத் தொண்டர் அடிப்பொடி என்று கூறிக்கொள்வது மரபு. அகோரதேவர் 'வாதவூர்ச் செம்மலடிப் பொடியாகித் திகழ்வாம்' என்று வேதாரணிய புராணத்திற் பாடினுர். (பாயிரம் 11) நேமி-சக்கரத்தை ஏந்தியவனே. உறுதி-வைராக்கியம். இன்னது-இதை. இளகி-பக்திக்கு உருகி. நாணி-தோற்றுப் போனேமே என்று வெட்கம் உற்று,

270 யானிவ ணிரக்கவு மிரங்கி லானிவன்
றொனொரு பனவனித் தகைமை நன்றெனு
ஈனமி லுருவுட னேமி யேந்தினன்
வானவ ரனைவரும் வந்து தோன்றினர்.

271 பாழிவா னவர்படை பனவன் மெய்யுறப்
பூழியா யினததுபுதுமைப் பாலதோ?
வாழிமா தவன்விட வடுவி லாப்புக
ழாழிமாப் படையையு மங்க ணுங்கினன்.

272 புனிதன தருச்சனை புரிந்து பெற்றபே
றினையது கேள்வியா லிசைந்து ளோரெலா
மனையவன் பூசனை யாத ரித்திட
நினைகிலாப் பவமதே நெடிது போலுமால்.

273 பரனரு ளிவனொரு பனவன் பெற்றபே
றொருவரும் பெற்றில ருண்மையென்றுமா
லரிதரி திவன்றனை யடைந்து பூசனை
புரிகென மன்னவற் புகன்று போயினன்.

---

270 இத்தகைமை-இந்தத் தன்மை. ஈனம் இல்-இழிவில்லாத. நேமி ஏந்தினன்-சக்கரத்தைத் தரித்தான் (போருக்குத் தயாரானன்) வானவர்-தேவர்கள்.

271 பாழி-பலம், 'விடப்பாழி வாய் வெவ் அரவக் கொடி வேந்தன்' (பாகவதம் 10, கந்தம் சுபத்திரை 21). பூழி–புழுதி. வடு-குற்றம். நுங்கினன்-(எளிதாக) விழுங்கினன். 'நூறு நூறு குடங்க(ள்)ளும் நுங்கினன்' (கம்ப, யுத்த, கும்பகர்ணன்).

272 புனிதனது அருச்சனை புரிந்து-சிவபிரானை வழிபட்டு. பேறு-பயன் (லாபம்) 'முன்பு பெறப் பெற்ற பேறே முடிவில்லை'. (கம்பன், யுத்த, இரணியன்). பவம்-பாவம். இவ்வரலாற்றைக் கேள்விப்பட்டும் சிவபூசையை ஆதரிக்காத பாவம் பெரியது என்று கூறி ஆசிரியர் இரங்குகின்றார்.

273 பரன் அருள் இவன்-சிவபிரானின் திருவருளைப் பெற்ற இந்தத் ததீசி முனிவன். ஒரு-ஒப்பற்ற. அரிது அரிது-அருமை! அருமை! திருமால் ததீசி முனிவன் பெற்ற பேற்றை வியக்கின்றான்.

274 ஈசனது றையுளாம் இட்ட சித்தியிற்
பூசனைபு ரிந்தனர் புராத னத்தவ
ராசி லரளவிலா ததன்றென் பாலது
காசினி புகழ்தரு கச்ச பாலையம்,

வேறு

கச்சபாலையம்

275 கால சங்கையின் கணக்கிறந் திறுதியாங் காலை
மூல வாருயி ரிளைப்பினை மாற்றுவான் முன்னிப்
பால நாட்டத்தெம் மிறையவன் பார்முத லகில
கால முந்தொலைத் திருந்தனன் கவுரியுந் தானும்.

---

274 புராதனத் தவர்-பழைய தவசிகள். ஆசு இலர்-குற்றம் இல்லாதவர். புதிய காஞ்சிப் புராணம், போரை விவரிக்கவில்லை. சுருக்கமாகக் கூறுகிறது. 'ததீசி எய்தி வேத்தவை வேந்தன் சென்னி, எவ்வமில் இடத்தாள் ஓச்சி உதைத்தனன் இவனுக் கென்று-தெவ்வெனச் சமரின் ஏற்ற மாயனைச் செயிர்த்து வென் றான்' என்று சில அடிகளால் விளக்கிய பெருமை சிவஞான முனிவருக்குரியது. இவ்வரலாற்றைச் சங்கரவிலாசம் நயம்பட விவரிக்கும்.

275 காலசங்கை-காலத்தின் எண்ணிக்கை. கணக்கு இறந்து-அளவு கடந்து. இறுதி ஆம் காலை-உலகம் முடிவடையும் ஊழிக் காலத்தில். உயிர் இளைப்பு-ஆன்மாக்களின் தளர்ச்சி. ஆன்மாக் கள் பலவிதமான பிறவிகள் எடுத்துத் தளர்ச்சி அடையும்போது, அவைகள் அமைதியாக இருக்க இறைவன் பிரளயத்தை உண் டாக்குகின்றான். அப்போது ஆன்மாக்கள் எவ்விதமான விகார மும் இன்றி அமைதியாக இருக்கும்

சிவஞானபோதம் முதற் சூத்திரம் இதனைச் சுருக்கிக் கூறும். 'உள்ளதாகிய உலகம், கருமமலம் பரிபாகம் ஆதற்பொருட்டு ஒடுங்கி: ஆணவமலம் பரிபாகம் ஆதற்பொருட்டு மீளவும் உண் டாம். இந்தக் கருத்தை 'மலத்தால் ஆம்' என்றார் மெய்கண்டார்.

பால நாட்டத் தெம் இறை-நெற்றியிற் கண்ணை உடைய சிவ பிரான். சிவபிரானின் வலக்கண் தொழில் புரியச் செய்யும் இடக்கண் உறங்கச் செய்யும். நெற்றிக்கண் சாந்தியை வழங்கும். ஆதலின் இங்கு ஆசிரியர் நெற்றிக் கண்ணைப் பற்றிப் பேசுவது சாத்திர வழக்குடன் இசைந்துள்ளது. தொலைத்து-ஒடுக்கி. கவுரி-உமாதேவி. அச்சொல்லின் பொருள், வெண்ணிறம்

276 அகில காலத்தி னிறுதியும் அழிவுறு ததனாற்
சகல காரண மாவது காஞ்சியந் தலத்திற்
பகுதி யாவைக்கு மூலமா கியபர மாணுத்
தகுதி யாகவே யுறைதரும் அதுசகச் சாரம்.

277 அதுதி ரண்டொரு திவ்விய லிங்கம தான
திதுப ரன்புரி யைந்தொழி னிலையம தென்பர்
புதுவ தன்றிது பூரண புராணமாம் புனித
மதிவி ரிந்தவர் யோகிக ளருள்பெறு வரதம்.

278 பிரமன் முன்னரே யன்னலிங் கத்தினைப் பெரிதும்
பரவி யன்பினில் அருச்சனை புரிந்தனன் பணிய
உரிய யாவையும் படைத்திடுந் தொழிலையு முதவிக்
கருணை கொண்டரன் மணிமுடி கவித்தனன் கரத்தால்.

---

உள்ளவள் என்பதாகும். உமை அம்மை இமவானின் பெண்ணு கப் பிறந்தபோது பனிமலை அரசனுக்கேற்ற வெண்ணிறத்தோடு தோன்றுகிருள். (லலிதா சஹஸ்ரநாம விளக்கம். 393 பக்கம்). விளக்கம் வழங்கியவர். திரு. சி. வே. இராதாகிருஷ்ண சாஸ் திரிகள்.

276 காலத்தின் இறுதியும்-ஊழிக் காலத்திலும். பகுதி-பிர கிர்தி (உலகம்) பரமாணுத் தகுதி ஆகவே-பரமாணுவைப் போலவே. சகத்+சாரம்-சகச்சாரம், உலகத்தின் சாரம். சமணர் கள்தாம் யாவைக்கும் மூலகாரணம் அணு என்பர். சைவ சித் தாந்தம் உணர்ந்த ஆசிரியர் யாவைக்கும் மூலமாகிய பரமாணு என்று கூறியது வியப்பாகவுள்ளது.

277 அது என்றது உலக சாரத்தை. திவ்வியம் தெய்வத் தன்மை. திவ்யப் பிரபந்தம் என்று வைணவர்கள் தமிழ் மறை யைப் போற்றுவர்.

ஐந்தொழில் : படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல். பூரணம்-நிறைந்த. புராணம்-பழைய. புனிதமதி-தூய அறிவு. வரதம் வரம் நல்கும் இடம். 'வரதம் உடைய அணி தில்லை' என்று திருக்கோவை பகரும்.

278 பரவி-புகழ்ந்து. அரன்-சிவபிரான். மணிமுடி கவித் தான்-மணிகள் பதித்த கிரீடத்தைச் சூட்டினுன். 'கவித்தானை மன்னற்கு நட்பாய் முடிகவித்தானை' என்று திவ்யகவி பேசுவார். (அழகர் அந்தாதி 38).

279 அன்றி யும்புரந் தரனயி ராபதத் தணைய
நன்றெ னுந்துரு வாசனு முனிவனு நயந்து
நின்று பைந்துழாய் மாலிகை யுதவிட நீட்டி
யொன்று மங்குசத் தேற்றனன் கரியின் மீதுய்த்தான்.

280 சிந்து ரம்புழைக் கையினால் வாங்கியே சிதற
வந்த மாமுனி யிந்திர திருவெலாம் வாரி
முந்தி வீழ்கென வீழ்ந்தது கேசவன் முதுநீர்
மந்த ரம்பெருங் கூர்மமாய்த் தாங்கினன் வலியின்.

281 மந்த ரந்தலைத் தாங்கிய வகந்தையின் வலியாற்
சிந்து நைந்திடக் கலக்கலுங் கலங்கினர் தேவர்
அந்த நாளது கூருமம் அடர்த்ததன் வெரிநை
விந்த மாகிய பணியென வணிந்தனன் விமலன்.

---

279 இந்திரனின் ஊர்தியாகிய யானை பெற்ற சாபமும் அதன் நீக்கமும் பேசப்படுகிறது. அயிராபதத்து-அயிராபதம் என்னும் யானையின் மேல். அணைய - உலாவந்துகொண்டிருக்க. துழாய் மாலிகை-திருத்துழாய்மாலை. துழாய்-துளசி. துருவாச முனிவன் கொடுத்த மாலையை இந்திரன் அங்குசத்தில் வாங்கி யானையின் மத்தகத்தில் வைத்தான்.

280 சிந்துரம்-யானை. 'சிந்தூரத் திலகநுதற் சிந்துரம்' என்பர் வில்லியார். (பாரதம்-கிருட்டினன் தூது). புழை-துவாரம். புழைக்கைக்கும் நேயப் பொதுவர் மகளிர்-அழைக்கைக்கும் முன் செல் அடி (நளவெண்பா). வாரி-கடல். முதுநீர்-கடல். (முன்னீர் என்று பழைய நூல்கள் பேசும்.) சுடர்படு முதுநீரில் ஆழவாழ் கின்ற ஆவியை அடுவதோர் அந்தி' என்பர் திருமங்கை மன்னர். (பெரிய திருமொழி 8.5.5). கூர்மம்-ஆமை.

இந்திரன் செல்வம் இழந்த வரலாற்றைக் கம்பராமாயணம், பாகவதம், விஷ்ணுபுராணம் முதலானவற்றில் காணலாம்.

281 அகந்தை-அகங்காரம். சிந்து-கடல். அதன் வெரிநை-அந்தக் கூர்மத்தின் முதுகெலும்பை. விந்தம்-ஆச்சரியம். பணி என-ஆபரணம் என்று கூறும்படி.

282 பின்னர் ஞானம்வந் தரகர பிழைத்தனன் பெரும
இன்ன தாகிய வினைகெடு மாறெது வென்னப்
பன்னு மாயவற் கிரங்கியே காஞ்சியம் பதியில்
என்ன தாகிய பூசைசெய் யென்றனன் எம்மான்,

283 அழகி தென்றுமா லழகிய நாயகி தழுவுங்
குழக னைத்தனிக் கச்சபத் துருவொடும் குறுகிப்
பழகு நான்மறை விதியினு லருச்சனை பணித்தான்
கழக மன்னதி லிறையவன் கொடுத்தனன் காட்சி.

284 அன்ப ரிற்பெருந் தலைமைசா லன்பனி யழகி
துன்பெ ருந்தனிப் பூசனை வேண்டுவ துரையென்
றின்பி னுலர னுரைத்திட மாயவ னியம்பும்
வன்பி னேன்பெரும் பிழைதனைப் பொறுத்தியுன்
வரத்தால்.

285 ஆதி லிங்கமுங் கச்சபே சுரனென வமைய
ஈது தானமுங் கச்சபா லையமென விலங்கப்
பேதி யாமலென் மனமுமுன் னிடத்தன்பு பெருக
மாது பாகவென் வலியெலா முன்னையின் மலிய.

---

282 அரகர-சிவனே! சிவனே! பிழைத்தனன்-தவறு செய்து விட்டேன். வினை-தீவினை. கெடும் ஆறு-அழியும் வழி. 'இடர் கெடும் ஆறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா' என்பர் தாண்டக வேந்தர். (பதிகம் 245—1) என்னது ஆகிய பூசை-சிவ பூசை.

283 அழகிய நாயகி–காமாட்சி. தேவியின் அற்புத சௌந் தர்யத்தை லலிதா சஹஸ்ரநாமத் தொடக்கத்திற் காண்க. குழகன்-இளமையானவன். 'அந்திப் பிறை சூடிய செஞ்சடிலத் தழகா! குழகா! சரணம் சரணம். (தணிகைப் புராணம்.) -கச்சபம்-ஆமை. பணித்தான்–செய்தான். கழகம்-திருவோலக்கம். 'கழகம் ஏறேல் நம்பி'. (திருவாய்மொழி 6.2.6) இங்கு நம்பிள்ளை 'நீர்முன்னம் எங்கள் ஓலக்கத்தில் புகுராதே கொள்ளும்' என்று விவரித்தார்.

284 உன் பெருந்தனிப் பூசனை அழகிது எனக் கூட்டுக. வன்பினேன்-கடினத் தன்மை பெற்ற என்னுடைய. பிழை-குற் றம். வரத்தால் பொறுத்தி-பெருந்தன்மையால் பொறுத்துக் கொள்க.

285 ஈதுதானம்-இந்த இடம். பேதியாமல் - வேறுபாடு

286 வேண்டு மென்றனன் அவையெலா மீந்தனன் விமலன்
ஆண்டு மாயவ னிரவிவெற் றரையவ னையன்
மூண்ட தென்புலத் தொழிவிலாக் குமரரின் மூத்தோன்
காண்ட குந்தவம் புரிந்தனர் தலமது காப்பார்.

287 ஐவராற் பஞ்ச சந்தியென் றுரைபெறு மதுதான்
தெய்வ மாலயன் போற்றிய திருத்தல மென்றூர்
சைவ ராகிய வனையரே புகழ்தரத் தகுமால்
மெய்வி ராவிய கலைமகள் பலாசின்பால் மேவி.

288 அங்க ருந்தவம் பற்பல வாற்றின ளாகி
யுங்கு வித்தியா பீடமாய் நிலைப்பட வுறைந்தா
டங்க ணுயகன் றிருவருட் டலைமையுஞ் சார்ந்தா
ளெங்கு மெண்ணுமற் றதன்குட பாலதோ ரிலிங்கம்.

---

அடையாமல். மாதுபாக-உமையை ஒரு பக்கத்தில் கொண்டவனே. (அண்மை விளி) வலி-வலிமை. 'என்வலி அவன்வயின் எய்த வரங்கொள் வாலிபால்தோற்றனென்' (கம்பன்.யுத்த. இராவணன் மந்திரம் 107).

286 கச்சபாலையத்தில் வழிபாடு செய்தவர்களை இப்பாடல் குறிக்கிறது. இரவி-சூரியன். வெற்று அரையவன்-பைரவன். ஐயன்-ஐயனுர் (சாஸ்தா). தென்புலத்து ஒழிவிலா-தென்னுட்டை விட்டு நீங்காத. குமரரின்-முருகப்பிரானின். மூத்தோன்-(அண்ணன் ஆன) விநாயகர். அவர்களே அத்தலத்துக்குப் பாதுகாப்பானவர்கள்.

287 ஐவர்-திருமால், சூரியன், பைரவன், சாஸ்தா, விநாயகர். ஐவர் பாதுகாப்பதால் அத்தலம் பஞ்சசந்தி என்று பெயர் பெறும். (சிவஞான முனிவர் திருமாலைக் கூறுமல் துர்க்கையைக் கூறியுள்ளார். இவ்விரு பாடல்களிலும் பிழைகள் உள்ளன).

மெய்-உண்மை. பலாசு-புன்முருக்கு. புரசமரம். இங்குக் குறிப்பிடும் மரம் யாதோ? கலைமகள் பலாசின்பால் மேவி (குளகம்).

288 ஆற்றினளாய்-செய்து. கலைமகள் வித்தியாபீடமாய் வசித்தாள். நாயகன்-கணவன் (பிரமன்). பிரம்மனுக்கு வேறு மனைவியர் இருப்பினும் அவன் கலைமகள் நாயகன் என்று பேசப் படுவதை நோக்கித் தலைமையும் சார்ந்தாள் என்றுர். குடபால் மேற்குப் பக்கம்.

மாண்டகன்றீசுரம்

289 மாண்ட கன்றியென் றொருமுனி கருதரும் வலத்தான்
றாண்ட வஞ்செயும் பிரான்றன தன்பரிற் றகையோன்
காண்ட ரும்பெருஞ் சொற்கத்தி னனுபவக் காட்சி
ஈண்டு பூதலத் திருந்தருந் துவனென விசைந்தான்.

290 வன்னி தீர்த்தமாஞ் சகோதர தடாகத்தின் மருங்கு
தன்னியற் பெயரி லிங்கமொன் றமைத்தனன் றவத்தாற்
பின்னி யற்றின னருச்சனை விதிமுறை பேணி
யந்நி மித்தத்தில் இறைவனு மெதிர்நிற்க வறைவான்.

291 போற்றி யையவச் சொற்கத்தி னினிமையிப் புவிமே
லாற்ற லாலரு ளென்றனு மளித்தன னமலன்
வீற்று ருப்பசிப் பூருவ சித்தி மேனகைப்பெண்
ணேற்ற மாம்புஞ் சிகத்தலைச் சென்னிகை யென்போர்.

292 தூய கன்னிய ரிவருறை தருமிடஞ் சொற்கம்
ஆய காரணத் தைவரு மிவனுறை யகத்தின்
மேயி னரவர் உடனுறை இன்பத்தின் மேன்மை
நேய மாகவே யருந்தினன் முனிநெடுங் காலம்.

---

289 கருதரும்-நினைக்க முடியாத. வலத்தான்-வன்மை உடையவன். தாண்டவம்-கூத்து. ஆண்கள் ஆடும் நடனம் தாண்டவம் என்றும், மகளிர் ஆடும் நடனம் லாஸ்யம் என்றும் கூறப்படும். காண்தரும்-காணத்தக்க. அருந்துவன்-அனுபவிப்பேன்.

290 மருங்கு-பக்கம். தன் இயற் பெயர்-தன்னுடைய அழகிய பெயர். தவத்தால் அமைத்தனன். அந்நிமித்தத்தில்–அந்தக் காரணத்தால்.

291 சொற்கம்-சுவர்க்கம். 'சொற்கம் ஈயும்: துயரம் துடைத்திடும்: வற்கம் நீடும் மருட்பவம் மாற்றிடும்' என்பர் நிரம்ப அழகியார். (சேதுபுராணம், அசுவத்தாமா. 76). வடமொழியில் உள்ள இடையின ரகரம் தமிழில் வல்லின றகரமாக வருவதும் உண்டு. உருப்பசி-ஊர்வசி. 'உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர' (கம்பன் சுந்தர). ஊர்வசி, பூருவசித்தி, மேனகை, புஞ்சிகத்தலை, சென்னிகை என்ற ஐவரும் விண்ணுலக மங்கையர்.

292 இம்மகளிர்கள் இருக்கும் இடம் சுவர்க்கம். இவன் என்றது மாண்டகன்னி என்னும் முனிவனை. உடன்உறை இன்பம்-கலந்து மகிழும் இன்பம். 'உடன் உறைவு மரீஇ ஒழுக்கொடு

293 அன்ன காதலங் கமைவுற வப்பிரா னருளான்
முன்னி ஞன்குணத் தன்மையை யடைந்தனன் முத்தி
இன்ன பொய்கைபஞ் சாத்தடா கமதெனும்பேர்
கன்னி மாரைவர் வருதலாற் பெற்றது கருதின்.

**வன்னீசுரம்**

294 இத்த டாகதீ ரத்தில் வன்னீ சுரமென்றே
ரத்த ஞலயம் வைவசு வரனெனு மங்கி
சுத்த ராகிய முன்னவ ரிருவரே சுற்றம்
மெத்து தேவருக் கவிசுமந் திளைத்தனர் மெலிந்தார்.

295 மெலிந்தி றந்தனர் முன்னவ ரிருவர்கள் மேலோன்
உலந்து நீர்த்தட மிதனுளே யொளிவுபுக் களியேன்
அலந்த வுன்சகோ தரன்தட மேயென நவிலா
வலந்த வென்றனைக் காவென விரந்தன னங்கி.

---

புணர்ந்த-வடமீன் கற்பின் மனைஉறை மகளிர்'. (சிலம்பு. இந்திர. 228 229) 'உடன் உறைவு இசையார் ஆனுர்' (பெரிய-திருநீலகண்டர்). அருந்தினன்-அனுபவித்தான். 'ஆருயிர்கள் பயன் அருந்தும் அமரர் உலகாம் எனக் கழித்தான்' (கோயிற் புராணம்: வியாக்கிரபாதச் சருக்கம்).

293 அமைவுற-போதும் என்று தோன்ற. 'கற்றுரை யான் வேண்டேன்; கற்பனவும் இனி அமையும்' என்ற மணிவாசகம் நினைவு கூர்க. குணத்தன்மையை முன்னினுன்-உலகப் பொருளின் இயற்கைத் தன்மையை ஆராய்ந்தான். முத்தி-விடுதலை.

294 அத்தன்-சிவபிரான். வைவசுவரன் என்னும் பெயருடையவன் ஒரு அக்கினிதேவன். அங்கி-அக்கினி. முன்னவர்-மூத்த சகோதரர்கள். அக்கினி தேவனின் மூத்தவர் இருவர். இவர்கள் இருவரும் தேவர்களுக்கு 'அவிர்ப்பாகம்' சுமந்து இளைத்தனர். அவி-தேவர் உணவு.

295 முன்னவர் இருவரும் அவிசுமக்க மாட்டாமையால் இறந்தனர். மேலோன் - அக்கினிதேவன். நெருப்பு மேல்நோக்கும் தன்மை உடையது ஆகையால் மேலோன் எனப்பட்டான். உலந்து-நிலைகுலைந்து, ஒளிவுபுக்கு-மறையும் பொருட்டு நுழைந்து. அளியேன்-இரக்கத்துக்கு உரியவனுகிய யான். 'அங்கி தடமே! அளியேன்: உன் சகோதரன் என நவிலா என்றனைக்கா என இரந்தனன்' எனக் கூட்டுக. தடமே-குளமே. நவிலா-கூறி. கா-காப்பாற்று. அலந்த-தளர்ந்துள்ள.

296 துடந்த தேவர்க்குத் தடத்துறை மீன்கணஞ் சொல்ல
விடந்து நீர்க்கொலைப் படுமினென் றவற்றினை யிகலி
யடைந்த வும்பரை வருவனீர் போமினென் றங்க
ணிடந்த னிற்சிவ லிங்கமொன் றமைத்தன னிலங்க.

297 நிரந்த ரப்பெரும் பூசனை யாற்றின னிமலன்
வரந்த ரப்பெரு வானவ ரருந்திடு மவியின்
பரந்த ரித்திடு பெருவலி பெற்றனன் பரித்தான்
கரந்த வத்தடஞ் சகோதர தடமெனக் கவினும்.

## சவுனகேசுரம்

298 தடம தன்குட பாற்சவு னகமுனி தன்பேர்
படநி லாவவோ ரிலிங்கம தமைத்தனன் பணிந்தான்
மடன றும்பெரும் பத்திபெற் றுனதன் வடபாற்
சுடரு மிஞ்சிசூழ் சுரகரே சுரமது சொல்லில்.

---

296 துடந்த-அக்கினியைத் தேடிப் பின்தொடர்ந்த. மீன் கணம்-மீன் கூட்டம். இடந்து-வருத்தம் உற்று. இகலி-சபித்து. உம்பரை-தேவர்களை நோக்கி. அங்கண் இடந்தனில்-அந்த இடத்திலேயே.

வேறு புராணங்களில் இக்கதை அக்கினிதேவன் மரத்தில் ஒளிந்துகொண்டதாகவும், அப்போது யானை ஒன்று தேவர்களுக்கு அக்கினிதேவனைக் காட்டிக் கொடுத்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

297 நிரந்தரம்–இடைவிடாமல். நிமலன்-தூய சிவபிரான். அவியின் பரம்-தேவர்களின் உணவுப் பாரம். தரித்திடும்-சுமக்கும்படியான. பரித்தான்-(எளிமையாகச்) சுமந்தான். அக்கினி தேவன், சகோதரனே என்று உறவு பாராட்டிப் பேசியதால் அது சகோதரத் தடம் என்னும் பெயரைப் பெற்றது.

'மகோததி யனைய ஐயதம் பையர்தம் வாவியின் உள்ளுறக் கலந்து–சகோதரர் தம்மை இழந்தனன் தனக்குச் சகோதரம் நீதடம் புனலே–உகாது எனைப் புரத்தி என்றுரைத் தங்கண் உறைந்தனன்: அன்று தொட்டளிகள் முகேரெனப் பாயும் மலர்த் தடம் அதற்கு மொழிபெயர் சகோதர தீர்த்தம்' என்று புதிய காஞ்சிப்புராணம் பேசும். (சகோதர தீர்த்தப்படலம் 6).

அக்கினிதேவனுடன் பிறந்தவர் மூவர் என்றும், அக்கினி தேவன் காட்டிக் கொடுத்த மீன்களைத் தூண்டிலில் சாகக் கடவீர் என்று சபித்தான் என்றும் சிவஞானமுனிவர் கூறுவர்.

298 குடபால்-மேற்குத் திசையில். பேர்பட-பெயர் பொருந்த.

### வேறு

### சுரகரேசுரம்

299 தாருகனை யடுவதது குறித்திமையோர்
புரிதவத்தாற் சம்பு நாதன்
ஆரியைதன் பெரியமண வினைமுடித்தங்
கிருவருமா யன்பி னாலே
பாரியமந் தரவரையி னிணைவிழைச்சின்
விளையாட்டின் பண்பு மீக்கொண்டு
ஏரமர விருந்துழிமா லயன்முதலா
மும்பரெலா மெண்ணி னொந்தார்.

300 இமயமயி லிடத்திலொரு தனையன்வரி
லவனுடனா ரிகலு கிற்பார்
சமையமிது தனக்கிடையூற் றினைப்புரிது
மெனக்கனலி தன்னைக் கூவி
யமைவுறுகா ரியமுணர்த்தி யேவினர்மற்
றவன்புகுது மளவிலங்கண்
உமையவனூர் தருமடங்கல் சினப்பதுகண்
டவன்புகுத லொழிந்து மீண்டான்.

---

மடன்அறும்–அறியாமை இல்லாத. 'மடம் பறி ஞான! வாழி' (ஞானமிர்தம். 54) சுடரும்–ஒளி வீசும். இஞ்சி–மதிள். 'செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்' (கம்பன். யுத்த, கும்ப).

299. தாருகன்-தாருகாசுரன். (தாரகன் என்று இருப்பின் நன்று). அடுவது-கொல்வது. சம்புநாதன்-சுகத்தைத் தருகிற தலைவன் (சிவபிரான்). ஆரியை-உமாதேவி. இணைவிழைச்சு-கலவி. 'வைகு துயிலோடு இணைவிழைச்சு-ஐயுறாது ஆடுக நீர்' (ஆசாரக் கோவை 10).

300. இமயமயில்-இமயமலையரசனின் மகள். இகலுகிற்பார்–போர் செய்யவல்லவர். கில் என்பது ஆற்றலை உணர்த்தும் இடைச்சொல். 'கிற்பன்கில்லேன் என்றிலன்' (திருவாய்மொழி 3-2-6). வல்லேன் என்றிலன், மாட்டேன் என்றிலன் என்று சான்றோர் அங்கு உரைவகுத்தனர். இடையூறு-தடை. கனலி-அக்கினிதேவன். ஊர்தரு–வாகனமாகக் கொண்ட. மடங்கல்-சிங்கம். சினப்பது-சீறுவது.

301 ஆயசெயல் காணுமும்ப ரனைவரும்போய்
மந்தரத்தை யணுகி யையன்
தூயதிருக் கோயின்முதற் கடைத்தலைவாய்
நின்றிரங்கித் துதித்த லோடும்
நாயகனங் கதுவினவி வெற்றரைச்சுந்
தரக்கோல நண்ணி மேவி
நேயமுட னனைவருமிங் கணுகியதேன்
எனவமரர் நினைந்து சொல்வார்.

302 பேரமுதத் தாலுனைமுன் பூசைபுரிந்
தமரரெனும் பெரும்பேர் பெற்றேஞ்
சீரியமா மலர்மிலைச்சிச் சுமனசராம்
பெயரையும்யாஞ் செறிந்தோ மையா
வாரியநீ யடைந்தவருக் கருள்புரிவை
துறந்தெவையு மகன்றோர் மேற்போம்
வீரியந்தாம் பெறுதல்குறித் துனையடைவர்
மறையுமது விளம்பு மாலோ.

---

301. கடைத்தலைவாய்–அரண்மனை முற்றம். கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினை களையலாமே (திருவாய்மொழி 10 2 7) இங்கு நம்பிள்ளை, 'திருவாசலிலே திருவலகு திருப்பணி செய்யப் பெற்றால் துயரம் எல்லாம் போம்' என்று கூறிய விளக்கம் கருதுக. வினவி-செவியேற்று. வினவுனர் இன்றி நின்று வேண்டுவ கூறுவாரும். (சிந்தாமணி–கோவிந்தை 58). இங்கு நச்சினார்க்கினியர், கேட்பார் இன்றாகவும்-கூறுவாரும் என்று உரைவகுத்தார். வெற்றரைச் சுந்தரக் கோலம்-திகம்பரக் கோலம். நினைந்து சொல்வார்' என்ற தொடர் ஆழம் மிக்கது. சிவசந்நிதானத்தில் மனம் கரைதலின், சிரமப்பட்டு மனத்தை ஒன்றுபடுத்திப் பேசினார்.

302. அமுதத்தாலும், பூசையாலும் அமரர் என்று பெயரைப் பெற்றேம். மலர்–(நீ புனைந்து வழங்கிய) பூக்களை. மிலைச்ச-அணிந்து. நாங்கள் உன் அருளால் சுமனஸ் (தேவர்) என்ற பெயரைப் பெற்றேம். சுமனஸ் என்ற சொல் மலரையும் நல் மனம் பெற்ற தேவரையும் குறிக்கும், மேற்போம் வீரியம்-ஊர்த்துவரேதஸ். இதன் நுணுக்கத்தைத் திருமூலர் பரியங்கயோகத்தில் மறைத்துக் கூறி உள்ளார்.

303 இறைவனீ யாவருக்கு மெமக்கிரங்கி
யருள்புரிவா யென்ன லோடுங்
கறையணியுந் திருமிடற்றோன் வேண்டுவது
கேண்மினெனக் கனிந்து போற்றி
யறமுதல்வி தனதிடத்தோர் குமரன்வரி
னுலகமிக வஞ்சு மன்னா
ளுறுகருப்பந் தவிர்த்தியெனக் குறையிரந்தார்
பரிந்துபரிந் தும்பர் யாரும்.

304 செயறனக்கொன் றில்லாதா னடியருக்கு
வேண்டியதே செய்யும் எம்மான்
பயனடைய வீரியநீ ரனைவருமிங்
கவியெனவே பருகு வீரென்
றியலுமொரு கோடிரவி யொளிபெறவே
கனலியிடத் தீய்ந்தான் செய்ய
நியதிபெறு கனலிமடி நிரம்பியவன்
றிருத்திபெறு நிலைமை தன்னில்.

---

303. நீ யாவருக்கும் இறைவன் என மாற்றுக. கறை அணியும், திருமிடற்றான்–விஷத்தை அலங்காரமாகக் கொண்ட கண்டத்தை உடையவன் (சிவபிரான்). அறமுதல்வி–அறத்தை வளர்க்கின்ற உமாதேவி. அம்மை காஞ்சியில் அறம்வளர்த்த பாங்கை அறியாதார் அறியாதாரே. அன்னாள்-அவள். (உமை) பரிந்து பரிந்து உம்பர் யாரும் குறையிரந்தார் எனக் கூட்டுக.

304. செயல்தனக்கு ஒன்று இல்லாதான்–தன் பொருட்டாக ஒன்றையும் செய்துகொள்ளாத இறைவன். (வேண்டுதல் வேண்டாமையிலான்) அவிஎன-அவிர்ப்பாகம் என்று கருதி. கோடிரவி–கோடிக்கணக்கான சூரியன், கனலி–அக்கினிதேவன். தேவர்கள் உண்ணும் அவி உணவு, அக்கினிமூலமாகத்தான் அவர்களை அடையும். மடி-வயிறு. 'படியை மடியகத்திட்டான்' (நான்மணிக் கடிகை 2). திருத்தி-திருப்தி, நிறைவு.

305 அரிபிரமர் முதலமரர் அகடுபுர
ணத்திருத்தி யான : வானத்
திரவிகிர ணத்தகில முகில்சலிலப்
புரணமுறும் இயல்பு போல ;
சுரர்கட்டில் கருப்பமது கேவலமோ ?
கனலுருவம் சுமையும் பாரா
தெருமரலுற் றுடல்வெதும்பிக் கன்றினரச்
சுரமெவரே தீர்க்கற் பாலார்.

306 அருவயவும் நிறைமெலிவுங் கருப்பமுறு
பெரும்பரமு மதனுன் மிக்குப்
பரவுசுர மதன்வெப்பு மாற்றுகிலார்
மாற்றுகிலார் பரனு ரென்றே
யிரவுவலி யுறுத்தானைப் பரவுதலுஞ்
சிவனணைந்தங் கெல்லீ ரும்போய்த்
திருமருவு காஞ்சிதனி லெமைப்பூசை
புரிமினிது தீரு மென்றான்.

---

305. அகடு-வயிறு. புரணத் திருத்தி ஆன—நிறைவு பெற்றது. வானத்து இரவி-வானில் உள்ள சூரியனால். அகிலமுகில்-உலகில் உள்ள மேகம். சலிலப்புரணம் கூறும் இயற்கை போல-தண்ணீரையே கர்ப்பமாகத் தரிப்பது போல—சூரியனால் மேகங்கள் தண்ணீரைக் கருப்பத்துக்குள் பெற்றாற் போல. கேவலமோ-அற்பப் பொருளா? தேவர்கள் கருப்பத்தைத் தாங்க முடியாமல் சுரம் (காய்ச்சல்) உற்றனர்.

306. அருவயவும்-தாங்க முடியாத மயற்கை நோயும் (இதனை மசக்கை என்பர்). 'வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்' என்று நாலடி நவிலும். ஆற்றுகிலார் மாற்றுகிலார் எனப் பிரிக்கவும். ஆற்றுகிலார்—தாங்க முடியாதவராய். மாற்றுகிலார்—மாற்றும் ஆற்றல் அற்றவராய். பரனுர் என்றே-பரம்பொருள் என்று அறிந்து. இரவு—பிச்சை எடுத்தலை. வலிஉறுத்தானை—நிலைநாட்டியவனை. தீரும்-நீங்கும்.

307 கேசவன்மு ஞமமரரனை வருங்காஞ்சியை
யணைந்துகி லேச நீங்கி
நேசமுடன் தீர்த்தமொன்று கற்பித்து
நீராடி நியம முற்றிப்
பேசரிய பிரமனொரு தெய்வலிங்க
நிறுவவதிற் பிரானை யன்பாற்
பூசனைமுற் றும்புரிந்தார் வெப்பிதனைத்
தீரெனவே போற்றி செய்தார்.

308 முன்னின்றெம் பெருமானு ரவருடலச்
சுரமதனை முற்று நீக்கிச்
சென்னின்ற மேருவினைச் சேர்ந்திடுமின்
கருப்பமது தீரு மென்முர் ;
அன்னின்ற வானவரு மேருவின்மேற்
சென்றணையும் அளவி லன்னர்
மெய்நின்ற வீரியமம் மலைமுழுதும்
பரவியது வெள்ள மாக.

309 வரையதனைச் செம்பொன்மய மாக்கியது
சரவணத்தின் மருவி வீழ்ந்து
முருகனுரு வாகியதிங் கிமையவர்தஞ்
சுரமதனை முனித லாலே
சுரகரமா கியதுதலம் பொய்கையுமச்
சுரகரப்பொற் றடாக மென்றே
பெருமைகுல வியதின்னு மொருகாதை
யத்தலத்திற் பேசக் கேண்மின்.

---

307. கிலேசம்-துன்பம். 'மருங்கிலே சங்கு எடுத்த மாலே எனக்கு-வருங்கிலேசம் கெடுக்கவா' என்ற தனிப்பாடலைக் கருதுக. கற்பித்து-படைத்து. நியமம்-கடமைகள். தேவர்கள் பிரமன் நிறுவிய லிங்கத்தின் மூலமாகப் பூசனை செய்தனர். தீர்-நீக்குக.

308. உடலச்சுரம்-உடம்பில் உள்ள காய்ச்சல். உடல் அச் சுரம் என்று பிரித்து வாட்டுகின்ற அந்தச் சுரம் என்றும் பொருள் கொள்ளலாம். செல்நின்ற-மேகம் நிலைத்துள்ள. அணை யும் அளவில்-அடைந்த அளவிலே. மெய்நின்ற-உடம்பிலே தங்கி யிருந்த.

309. வரை-மலை (மேரு). வரையைச் செம்பொன் மயம் ஆக்கி

310 அளகையர்கோன் அவனிதனை யடைந்துபல
பலவேள்வி யாற்றி யாற்றி
யுளமலிகா தலிற்பரசிச் சுரகரநா
தனையருச்சித் துறையு நாளிற்
றளரறிவு பெறுமவுணன் தாருகனென்
பெயரானற் றலைமை சான்றோன்
களவுடனே நான்முகனைக் குறித்தரிய
தவமுயன்றான் கணக்கில் காலம்.

311 வேதியன்முன் னின்றுவந்து வேண்டியதென்
னெனவினவ வினைய மான
சூதுதனில் யானெவரை நோக்குகினு
மவரைவெய்ய சுரநோய் பற்றித்
தீதடைய வேண்டுமிது வரந்தருதி
யெனவுதவச் செருக்கி னாலே
பாதகனஞ் ஞான்றுமுத லாரைவிழிக்
கினுமவரைப் பற்றும் வெப்பம்.

---

அது. முருகன் உருஆகியது. சரவணம்-நாணற்காடு. சுரம் அதனை முனிதலால் அத்தலம் சுரகரம் ஆகியது. பொய்கையும் சுரகரத் தடம் ஆகியது. முனிதலால்-போக்கியதால். குலவியது-விளக்கம் உற்றது.

310. வேள்வி-யாகம். உளம்மலி-ஊக்கம் நிரம்பிய. 'உள்ளம் உடைமை உடைமை' (திருக்குறள்-ஊக்கம் 2). பரசி-புகழ்ந்து. தலைமை சான்றோன்-அதிகாரம் நிரம்பியவன். களவுடன்-வஞ்சகத்துடன். அடியவர்க்கு எளியான், நம் களவு அறுத்து நின்று ஆண்டமை (திருவாசகம்-ஆன்மசுத்தி 5).

311. வேதியன்-பிரம்மதேவன். வினையம்-வஞ்சகம். தருதி-தருக அஞ்ஞான்று முதல்-அன்று முதலாக. வெப்பம்-காய்ச்சல். 'வேண்டினர் வேண்டலோடும் வெப்புநோய் ஒழியப்பெற்றார். (சிவ. காஞ்சி. சுரகரேச 42).

312 இன்னபரி செனுலகிற் றிரிதருநா
ளிமையவரு மேனை யோரும்
மன்னும்புகழ்க் காஞ்சிதனிற் சுரகரநா
தனைப்பணியு மன்ன னண்ணேன்
றன்னையடைந் தினிதான முகமனுரை
பற்பலவுஞ் சாற்றி யிங்கே
துன்னுசுர லோசனனை யடவேண்டுஞ்
சூட்சிசொல்லக் கேணீ யென்றார்.

313 என்றவரு மொருகன்னி தனைமாயை
யாலமைத்திங் கிவனை யன்னான்
முன்றுடர விடுதியவன் பெருமோக
மாயன்பின் முதிர்ச்சி யாலே
நின்றுசினந் தவிர்ந்துகொலை மறந்தவச
முற்றிடுவ னியக் காலை
கொன்றிடுக வெனவொருநாந் தகமுதவி
றரவனுங் கொடுபோய்ச் சென்றான்.

---

312. இன்னபரிசு-இந்த விதம். சுரகரநாதனைப் பணியும் மன்னன்-குபேரன். சுரலோசனன்-காய்ச்சலை உண்டுபண்ணும் கண்களைப் பெற்ற தாருகன். சூட்சி-உபாயம். 'சொல்லாய் யான் உனைச் சார்வதோர் சூழ்ச்சியே' (திருவாய்மொழி 236). சூழ்ச்சி என்பது, சூட்சி என விகாரம் பெற்று வருதலும் உண்டு. 'சூட்சியின் கிழவரை நோக்கிச் சொல்லினன்' (கம்ப-யுத்த-மந்திரப் படலம்) கேள் நீ என்று தேவர்கள் குபேரனிடத்திற் கூறினர்.

313. கன்னிதனை-பெண்ணை. துடர-தொடர. 'குருதி க்க்கு கதை கொண்டுகண நாதர் துடர.' (கூர்ம-தக்கன்-22). விடுதி-அனுப்பு. அன்பின் முதிர்ச்சி-காதல். அவசம் உற்றிடுவன்-தன் வசம் இழப்பான். நாந்தகம்-வாள். 'நாந்தகக் கிழவர்கோவே நம்பி என்பான் நலத்தின்மிக்கான். (சூளாமணி-தூதுவிடு 107) கொடுபோய்-கொண்டு சென்று.

314 மாதுதனை முன்கொடுபோய்த் தாருகனை
யிவளையன்பின் மணப்பா யென்ன
ஆதரவில் அவள்காதலைக்கொண்டங்
ககரனவன் அயரா நின்றான்
மேதகுபெண் ணாசையினால் விளையாத
தீங்குளதோ ? வீர வாளாற்
பாதகனை யடவரசைச் சுரகரனென்
றேயமரர் பரவிப் போனார்.

315 சுரகரனு மளகேச னிந்தலிங்கந்
தனைப்பூசைத் தொடர்பா லாற்றிப்
பெருமைதரு வுருவநள கூபரனு
மொருதனையற் பெற்று வாழ்ந்தான் ;
இருநிலத்தி லிதனாலுஞ் சுரகரேச
னெனும்பே ரெய்திற் றுமா
லரியசுர கரதீர்த்தத் தென்கரையி
லொருதான மறையக் கேண்மின்.

தாந்தோன்றீசுரம்

316 அகிலமெலாந் தோன்றிடத்தாந் தோன்றியதோர்
சுயம்புலிங்க மவனி மீதே
தகுதிபெறு வசிட்டனுடன் பிறந்தமட
மாதுதரும் தனையன் ஆன
நிகரிலுப மன்னியனக் காமதே
னுவின்பாலை நிறைய மாந்தி
யுகவைபெற்றுத் தந்தைபுலித் தாளவன்ற
னுறையுளில்வந் துற்ற காலை

314. ஆதரவில்-ஆசையால். அயரா நின்றான்-உணர்வு அழிந்திருந்தான். மேதகு- அழகு மிக்க. பாதகனை அடர-கொடிய தாருகனைக் கொல்ல. அரசை-குபேரனை. சுரகரன் என்ற பெயர் பெற்ற சிவபெருமானுக்கு ஒப்பானவன் என்று தேவர்கள் குபேரனைப் புகழ்ந்து (தம் ஊர்க்குப்) போனார்கள்.

315. அளகேசன்-குபேரன். தொடர்பால்-சுரகரன் என்னும் பெயர்பெற்ற சம்பந்தத்தால். தனையற் பெற்று-புதல்வனைப் பெற்று. தானம்-இடம்.

316. அகிலம்-உலகம். அக்காமதேனு-(வசிட்ட முனிவனிடம் இருந்த) அந்தக் காமதேனு. அகரம் சேய்மைச் சுட்டு. மாந்தி-நிரம்

317 அருந்தியபா றனைநினைத்தங் காவலிக்கப்
புலிக்கால னன்பி னாலே
புரிந்தகுளச் சாலிநென்மாக் கரைத்தருத்தத்
தளர்ந்தழுது பொருமவேக்கி
வருந்திடலக் காஞ்சிநினைத் தனைமுடிக்கு
மத்தலத்தின் மருவு கென்று
னருந்தவனுந் தந்தையுமக் காஞ்சிதனி
லந்தலிங்க மருச்சித் தானால்.

318 அச்சயம்பு நாதனவன் முன்னின்றே
வேண்டியதென் னறைவா யென்ன
நச்சினன்பா லென்றனனப் பாலுததி
தனையமைத்து நாளு நாளும்
இச்சிறுவன் பின்றிரியென் றுதவினனவ்
வுதாரவன்மை யீச னானை
மெய்ச்சிவனு மவனன்ப ரடியர்களு
மல்லாமல் வேறார் வல்லார்.

---

பக்குடித்து. உகவை-மகிழ்ச்சி. 'உகவையால் நெஞ்சம் உள் உருகி உன் தாமரைத் தடங் கண்களின்-அகவலைப் படுப்பான்' (திருவாய்மொழி 572). உவகை என்பது உகவை என்று வந்தது. சிவப்பு என்பது சிகப்பு என்றும், உவப்பு என்பது உகப்பு என்றும் வருவனவற்றை நோக்குக. 'நவம் என விலக்கல்: நல்லோர் வழக்குள்-வகரம் ககரமாய் வருதல் இயல்பே' என உரைச் சூத்திரம் கொள்க. புலித்தாளவன்-வியாக்கிரபாத மகரிஷி.

வசிட்ட முனிவரின் சகோதரியின் கணவன் புலிக்காலன். புலிக்காலன் மகன் உபமன்னியன். இவன் மாமன் (வசிட்டன்) வீட்டில் இருந்தபோது காமதேனுவின் பாலை உண்ண ஆசைப் பட்டு அழுதான்.

317. ஆவலிக்க-அழ, 'ஆற்றலன் இன்னன பன்னி ஆவலித்து ஊற்றுறு கண்ணின் உருகுவான். (கம்பன்-அயோத்தி-பள்ளிபடை 57). குளச்சாலி நெல்-குளநெல். ஒருவகை நெல், இதை வடநூலார் நீவாரம் என்பர். 'மெல்விரல் மெலியக் கொய்த குளநெல் (சிந்தாமணி - நாமகள் 326). மாக்கரைத்து-மாவைக் கரைத்து. அருத்த-உண்பிக்க. 'நென் மாவையள்ளித்-திருந்து இலை வள்ளத்து ஆக்கிக் கரைத்து நல் தீம்பால் ஐயா-பொருந்த நீ உண்க என்று கொடுத்தனன்' என்பர் சிதம்பரநாதகவி (சங்கர விலாசம். உபமன்னியர் திருப்பாற்கடல் பெற்ற அத்தியாயம் 69).

318. பால்நச்சினன்-பாலை விரும்பினேன். அப்பால் உததி-

### அமரேசம்

319 அதனொருபா லமரேச மெனவொருநல்
தானமுள ததனைக் கேண்மின்
திதியதிதி புதல்வரெனு மிமையவரு
நிசாசரருஞ் சினமீக் கொண்டே
மதுகையொடு பொருகாலை யரனுமையாள்
அம்பரத்தின் மருவிக் காணச்
சதிர்குலவி யிமையவரே வாகைபெறு
கென்றுமையாள் சாற்ற லாலே.

320 பொருது இமையோர் வாகையுற்றார் அசுரிறந்தார்
அதுவுமொரு புதுமைத் தாமோ?
தருமமது பவமதனை வெல்லாதோ?
காஞ்சிநகர் தன்னைச் சேர்ந்து
திரமுறவே தவம்புரிவான் கருணையினாற்
பெருகுவென்றி சேர நீடும்
பெரிதுமகிழ் வுற்றமரர் சுதர்மையெனுந்
தெய்வசபை பெயர்ந்து சென்றார்.

---

அந்தப் பாற்கடல். இச்சிறுவன் பின்திரி-இந்த உபமன்னிய முனி வன் பின்னே திரிவாயாக. சிவனும், அவன் அடியார்களும் அல் லாமல் எவர் வலிமை மிக்கவர் என்று ஆசிரியர் வியக்கின்றார். 'காலன் றனைஉதைத்தான்; காமன் தனை எரித்தான்; பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை ஞாலம் மெச்சப்-பின்னே நடக்கவிட் டான் பேரருளை நாடாதார்க்கு-என்னே நடக்கையினி. (தாயுமான வர் 28. உடல் பொய்யுறவு 43).

319. திதி புதல்வர், அதிதி புதல்வர், அதிதி புதல்வர் எனும் இமையவர். திதிபுதல்வரெனும் நிசாசரர். இமையவர்-கண் இமைக்காதவர் (ஒளிமயமானவர்). நிசாசரர்-இரவில் திரிபவர். (இருள்மயமானவர்) திதியும், அதிதியும் காசிப முனிவரின் மனைவி யர். மதுகை-பலம். அம்பரம்-ஆகாயம். 'அம்பரம் ஊடறுத் தோங்கி உலகு அளந்த' (திருப்பாவை). சதிர்-திறமை: உமை யம்மை தேவரே வெற்றி பெறுக, என்று சங்கற்பித்தாள்.

320. வாகை-வெற்றி. அசுர்-அசுரர். 'அசுரைச் செற்ற மாவியம்புள் வல்ல மாதவன்' (திருவிருத்தம் 67) அரும்பத உரை யாசிரியர், அசுர், என்றது அசுர வர்க்கத்தை என்று விளக்கம்

321 அரிமகவான் றிசைகாப்போர் மற்றுமுளோர்
தனித்தனியே யமரி னாற்றல்
புரிதருமிச் செயலெம்மான் முடிந்ததெனா
வகந்தையினற் புலன்மீக் கொள்ள
நிருமலனவ் வகந்தைகண்டோ ரியக்கவடி
வெய்தியங்க ணேர்ந்தே நின்று
பரிவினுட னொருதிரண மங்கணிறீஇ
யேமாப்பின் பால னானான்.

322 இத்திரணந் தனையுமது பேராற்ற
லாற்சிதையு மென்ன லோடுங்
கைத்திகிரி கூர்மழுங்க வெறிந்தெறிந்தே
யலுத்தனனக் கரிய மேனி
யெய்த்தனனப் புரந்தரனுங் குலிசமதன்
வலியிழந்தா னெரித்துத் தீயோன்
சத்திகுறைந் தான்காலுங் காலோய்ந்தா
னத்திரணந் தனைப்பேர்த் தன்றே.

---

கூறினர். சுரன் என்பது சூர் என்று வந்ததுபோல் வந்தது, 'சூர் முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்' (திருமுருகு 46). அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; என்னும் ஈது இயம்ப வேண்டும் தகையதோ? (கம்பன். சுந்தர. ஊர்தேடு 95).

'கருணையினால் வென்றிசேர மகிழ்வுற்று அமரர் சுதர்மை சென்றார் என்று சேர்க்க. இங்கு மகிழ் என்றது குடிவெறியை. ஐங்குறு நூறு 42 ஆம் பாடல் காண்க.

321. அரி-திருமால். மகவான்-இந்திரன். எம்மால் முடிந்தது-எங்களால் நிறைவேறியது. நிருமலன்-சிவபிரான். இயக்கவடிவு-யட்ச வடிவம். திரணம்-துரும்பு. சிவபிரான் ஒருயட்சனாகிச் சிறு துரும்பைத் தேவர்கள் முன்வைத்தான்,

322. திரணம்-துரும்பு. ஆற்றலால்-பலத்தால். திகிரி-சக்கரம். எய்த்தனன்-தளர்ந்தான் குலிசம்-வச்சிரம். தீயோன்-அக்கினி. காலும்-வாயுதேவன். பேர்த்து-அசைக்கக் கருதி. பெயர்த்தல் என்ற சொல் பேர்த்தல் என்று வந்தது.

323 மற்றுமுள திசைக்காப்போர் தமதுவலிப்
படையதனுல் வாட்டி வாட்டி
யிற்றனர்தம் மதுகையினை யற்புதநீர்
மருவிவியந் திருக்குங் காலை
வெற்றிபெறு மியக்கனுருக் காணுமற்
றிகைத்தன ரவ் வேளை தன்னி
லுற்றபரை தனைநோக்கி யிங்கிவனுர்
அம்மவென வுளமால் பூண்டார்

324 ஆரறிவார் சிவனருளா லன்றியொரு
திரணமுமிங் கசையா தென்னுங்
காரணநீ ரறிந்துய்வா னிறைபுரிந்த
கருணையெனக் கன்னி யோத
நாரணனே முதலாஞே ரிகுதென்ன
மாயமென நாடித் தேர்ந்து
பேரருளா லெம்மகந்தை தீர்த்திடுவா
னிவ்வுருவிற் பிரானே நேர்ந்தான்.

325 எனவிரங்கிப் பற்பலரு மிப்பழுது
தீர்ந்திடுவ தெளிதோ முன்ன
மனகைதவம் புரிகாஞ்சித் தலத்திலன்றி
யாவதுவோ வாத லாலே
தினமினிய நகரிதனை யடைந்துபரன்
பூசைமுதற் றீர்வு நேர்ந்து
புனிதமுறக் கணத்தமரர் மதுகையெல்லாம்
பெற்றுயர்ந்தார் போற்றி ஞரால்.

---

323. இற்றனர்-தளர்ந்தார். மதுகை இற்றனர் என்று மாற்றுக அற்புத நீர்-ஆச்சரியத்தன்மை. நீர்-தன்மை. பரை-உமா தேவி. மால்-மயக்கம்.

324. உமை, சிவன் அருள் இல்லாமல் திரணமும் அசையாது என்னும் உண்மையை நீவிர் உணர அவன் புரிந்த கருணை என்றாள். இகுது-இஃது, இப்படிப் பாடுவது இந்நூலாசிரியர் இயற்கை. பல இடங்களில் இகுதைக் காணலாம். பிரானே-சிவ பிரானே. நேர்ந்தான்–காட்சி தந்தான்.

325. பழுது-குற்றம் அனகை-காமாட்சி. ஆவதுவோ-நிறை வேறுவதா? பூசை முதல்-பூசித்தல், தியானம் செய்தல், வாழ்த்தல் முதலான செயல்களால். தீர்வு நேர்ந்து-பிராயசித்தம்

அடைந்து. 'சிந்தை ஆகுலம் இதற்குத் தீர்வை அன்று' (பழைய திருவிளையாடல் (வரகுணன் 8). இங்கு ஐயர் அவர்கள் தீர்வை-பிராயசித்தம் என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வரலாறு கேனோபநிஷத்தில் 3ஆம் கண்டத்தில் கூறப்பட்டுள்ளது. 'பிரம்மமே தேவர்களின் பொருட்டு (தேவாசுர யுத்தத்தில்) ஜயத்தை அடைந்தது. அந்த பிரம்மத்தின் ஜய விஷயத்தில் தேவர்கள் பெருமை கொண்டு' இந்த ஜயம் நம்முடையது. இந்த மஹிமை நம்முடையது என்று எண்ணிக்கொண்டார்கள்.

இவர்களின் கருத்தைப் பிரம்மம் அறிந்து அவர்களின் (ஒருயட்சரூபமாக) எதிரில் வந்தது. அதை அத்தேவர்கள் அறியவில்லை. இஃது என்ன? யட்சசா? (என்று சம்சயப்பட்டார்கள்).

அவர்கள் அக்கினியைப் பார்த்துச் சொன்னதாவது. 'ஹே! ஜாதவேதஸ்! இந்த யட்சஸ் இது என்று அறி' (என்றனர்) 'அப்படியே ஆகட்டும்' என்று அக்நி சொன்னார்.

(அக்நி) யட்சசின் சமீபத்தில் சென்றார். 'நீ யார்?' என்று இவரை யட்சஸ் கேட்டது. 'நான் அக்னி. நான் ஜாதவேதஸ்' என்று அக்னி சொன்னார்.

அப்படிப்பட்ட உன்னிடம் என்ன சாமர்த்தியம் இருக்கிறது என்று யட்சஸ் கேட்டது. 'பூமியில் எவை எவை இருக்கின்றனவோ அவை எல்லாவற்றையும் எரித்துப் போடுவேன்' என்று அக்னி சொன்னார்.

'இதை எரித்துப் போடு' என்று யட்சஸ் ஒரு த்ருணத்தை எடுத்து (அக்னியின்) முன்னால் போட்டது. அக்னி முழு வேகத்துடன் அந்தத் த்ருணத்தில் பிரவேசித்தார். அதை எரிக்க முடியவில்லை. அதனிடம் இருந்து திரும்பி, தேவர்களிடம் சென்று 'இந்த யட்சஸ் இது என்று அறியமுடியவில்லை' என்று அக்னி சொன்னார்.

மேலே கண்டதுபோல் வாயுதேவன் சென்று யட்சஸை அறிய முடியவில்லை என்று அக்னி சங்கதிபோல் சொன்னார்.

பிறகு தேவர்கள் இந்திரனைப் பார்த்து 'ஹே! மகவானே! இந்த யட்சஸ் இது என்று நீ அறி என்று சொன்னார்கள். அப்படியே ஆகட்டும் என்று இந்திரன் சொல்லி அதற்குச் சமீபத்தில் சென்றான், உடனே (யட்சஸ்) மறைந்து விட்டது.

அவர் அந்த ஆகாசத்தில், வெகு சோபை உள்ளவளாயும், உமையாயும், ஹிமவானுடைய புத்திரியாயும், ஸ்திரீ ரூபமாயும்

### உருத்திராட்ட வித்தேசுரம்

326 அருச்சனைசெய் திறந்தவலி தேவர்பெற
வமரேச ஞென நாமம்
பரிச்சனனெம் பிரானப்பாற் காயாரோ
கணக்குடபால் பரவி ஞலே
தரிச்சபுகழ் நூற்றெருருபத் தெட்டுலிங்க
முருத்திராற் றவத்தோர் தம்மாற்
றெரிச்சவட்ட வித்தேச ராற்பூசை
கொண்டொளிருஞ் சிறப்பி ஞலே.

---

ஆவிர்ப்பவித்திருப்பவளிடம் சென்று, அவளை இந்த யட்சஸ் என்ன என்று கேட்டார். (மேலே வருவது 4ஆம் கண்டம்)

அது பிரம்மம் என்றும், அந்தப் பிரம்மத்தினுடைய ஜயத்தில் (நீங்கள்) மஹிமை அடைந்திருக்கிறீர்கள் என்றும் சொன்ஞள். இந்த உபதேசத்தால் இந்திரன் அதைப் பிரம்மம் என்று அறிந் தான். (மொழிபெயர்ப்பு: நா. சு. ராஜாராமையர். இவர் மஹாகவி சுப்ரமணிய பாரதியாரின் பாராட்டைப்பெற்ற சான்ரேர்).

இந்த உபநிடதம் பிற்காலத்தில் தத்துவராய ஸ்வாமிகளால் (பிரம்ம கீதையில்) கவிதையாக வடிக்கப்பட்டது. அப்போது ஸ்வாமிகள் பிரம்மம் என்ற சொல்லுக்குப் பதிலாகச் சிவபிரான் என்ருர். உபநிடதத்திலும். பிரம்மகீதையிலும் வருகின்ற முக்கிய மான பாத்திரங்கள் பிரம்மம், உமை, இந்திரன், அக்கினி, வாயு தேவனே. இப்பகுதியைப் பிரம்ம கீதை தத்துவ நயத்துடன் கூறும்.

326. இறந்தவலி-நீங்கிய பலம். பரிச்சனன்-சுமந்தான் (பெற் ருன்) பரித்தனன் என்ற சொல் பரிச்சனன் என்று வந்தது' குடபால்-மேற்குப் பக்கம். தரித்த என்பது தரிச்ச என்று வந்தது. புகழ்தரிச்ச என மாற்றுக. தெரிச்ச தெரித்த. (சொல்லப்பட்ட) அட்டவித்தியேசுரர், 1. அநந்தன், 2. சூக்குமன், 3. சிவோத்தமன், 4. ஏகநேத்திரன், 5. ஏகருத்திரன், 6. திரிமூர்த்தி, 7. சீகண்டன், 8. சிகண்டி. இவர்கள் தோற்றம், இவர்கள் வாழும் இடம், இவர் களின் சக்தி முதலானவற்றைச் சிவஞானபோதம் மாபாடியத்தில் பிரமாணவியலில் 2ஆம் சூத்திரம், 3ஆம் அதிகரணத்திற் காண்க.

16

## பச்சிமாலயம்

327 ஓதுமதன் றென்மேல்பாற் பச்சிமா
லயமெனவோர் உறையுண் மேவு
மாதிபரன் புரணகலை யுடனுறையு
மவ்விடையச் சுதனு மெம்மான்
காதலுடன் பிரானைநினைந் தருந்தவமே
புரிந்தனனக் காலை தன்னிற்
சீதமதிச் சடையுடையோன் றழீக்கொடுநீ
வேண்டியதென் செப்பு கென்றான்.

328 ஆரியநீ யருளியதிற் குறையுளதோ
வுன துருநா னாகுமாறு
சீரியநீ யருளுதி யென்றுரைக்கலுமச்
சிவன்மகிழ்ந்து சிறப்பி னாலே
பேரியலு மறுமுகவ னெனவே
உனைப்போற்றும் பெருமை தன்னாற்
பாரியநம் முருப்பெறுதி நாமெனநீ
யெனவேறும் பான்மைத் தன்றே.

329 எனவிறைவன் அப்பரிசே மேற்றளியாந்
திருத்தளியி லிமையோர் யாரும்
புனிதமக மொன்றியற்ற வரியயனே
முதல்யாரும் புகுந்தா ரங்கண்
முனிவரர்தாம் பரப்பிரம நிலைபேசிச்
சிவன்பரம முராரி தானே
இனியபர மென்றிகல முருகவேள்
எழுந்துண்மை யியல்பு கூறும்.

---

327. பச்சிமம்-மேற்கு. அச்சுதன்-திருமால். இங்கு ஆசிரியர் திருமாலை எம்மான் என்பது வியப்பாகவுள்ளது மதிச்சடை-சந்திரன் தங்கிய சடை.

328. ஆரிய-ஐயனே. நான் உனது உரு ஆகுமாறு அருளுதி என்று திருமால் கேட்டான். அறுமுகவன்-முருகன். பாரிய-பெரிய பான்மை-பகுதி. (பிரிவு).

329. மேற்றளி-பச்சிமாலயம் மகம்-யாகம் சிவன்பரமம்; முராரிதானே பரம் என்று இகல. முராரி-திருமால். பரமம்-ப ம் பொருள்.

330 பரமசிவன் கலைகளிற்சிற் சிலவரியே
முதலோர்பால் பதித லாலே
வரதருமாய் வரதமது முறைபுரிவ
ருண்மையிது மறையின் றேற்றந்
தெரியுமுரைப் பிரமாணத் தன்றியே
கண்களினும் தெளியு மன்றே
சரதமுறச் சிவனெனவே விண்டுவினைப்
பராவிநின்று சாற்றி னானல்.

331 உரைத்தலுமே யரிவுருவஞ் சிவனுருவா
யிலிங்கமென வொளிர்த லாலே
பரத்துநெறி தெரிமுனிவர் முருகனைநீ
குரவனெனப் பரவிப் போற்றித்
திருத்தகுமப் பரமலிங்கந் தொழுதுவந்து
மகமுடித்துத் தெளிவு கூர்ந்தார்
அருத்தியுரை குறுகுதலால் ஓதவுரு
இப்பெருமான் ஆனான் ஐயன்.

---

330. கலை-அம்சம். (கூறு) அரி முதலோர்பால்-திருமால் முதலானவர்கள் பக்கல். வரதருமாய்-வரம் தருபவராய். வரம் புரிவர்-மேன்மையை உண்டு பண்ணுவார். சரதம் உற-உண்மையாக. விண்டுவினைச் சிவன் எனச் சாற்றினான். விண்டு-விஷ்ணு. 'விண்டு விரிஞ்சனும் தேடிக் காண்பரிய சொக்கலிங்க விமலா போற்றி' என்பர் அரங்கநாதக் கவிராயர் (அருச்சுனன். தீர்த்த யாத்திரை).

331. அரிஉருவம்-விஷ்ணு வடிவம். பரத்து நெறி-மேலான வழி. (பரத்வ மார்க்கம்) குரவன்-ஆசிரியன். அருத்தி-ஆசை. குறுகுதலால்-திருமால் செவியில் அடைந்ததால். ஓத-உலகம் புகழ. ஐயன்-திருமால். பெருமான் ஆனான்-சிவபெருமான் ஆக மாறிவிட்டான். இதனைச் சாரூபம் என்பர்.

இக்கதையைச் சிவஞான முனிவர், (திருமேற்றளிப் படலத்தில்) வேறு விதமாகக் கூறுவர். திருமால் தவம் செய்து சாரூபப் பதவியைக் கேட்கச், சிவபிரான் கலியுகத்தில் ஞானசம்பந்தர் உனக்குச் சாரூபப் பதவி கொடுப்பர் என்று கூறினன். பெருமான் வழங்கிய வரத்தைத் திருஞான சம்பந்தர் நிறைவேற்றினார்.

## அநேகபேசுரம்

332 அத்தளியின் வடபாலா யனேகபே
சுரமெனவோ ரரனூர் வைப்பு
மைத்தகரி முகனெனுமோர வுணனிமை
யோரையெல்லாம் வருத்து நாளில்
எய்த்தவருங் கணபதியெம் பெருமானை
யிறைஞ்சுதலு மிமையோர்க் காகப்
புத்திபுரிந் தத்திமுக னுடனமரேற்
றடல்பெறவே பொருதா னன்றே.

333 கரிமுகனக் கரிமுகனு மவுணனுடன்
போர்புரியக் கலாங்கொண் டன்னோன்
வெரினிடவே பேராழி யேழினும்புக்
கவைகுடித்து விரகி னாலே
யரியதொரு பாதலம்புக் கொளிக்கவொளித்
ததுதனையெம் மையன் னோக்கிப்
பொருவரிய மூடிகத்தை விடுத்தலுமப்
பாதலத்திற் புக்க தன்றே.

---

332. அத்தளி பச்சிமாலயம். 'அனேகபேசுரம்' என்னும் பெயருடைய சிவதலம் உள்ளது. அரனூர் வைப்பு-சிலஸ்தலம். மைத்த-கருமையான. கரிமுகன் எனும் ஓரவுணன்-கஜமுகாசுரன். மெய்த்தவர்-உண்மையான முனிவர்கள். அத்திமுகன்-கஜமுகாசுரன். அத்தி-யானை. ஹஸ்தி என்ற சொல்லின் தற்பவம். ஹஸ்தத்தை உடையது ஹஸ்தி. அது அத்தியாயிற்று. கரத்தை உடையது கரி. அனேகபம்-யானை.

333. கரிமுகன்-விநாயகன். கரிமுகனும் அவுணன்-கஜமுகாசுரன். கலாம் கொண்டு-மனம் கலங்கி. 'கலாவுதல்' என்ற சொல் கலக்கத்தைக் குறித்தலை நெடுநல்வாடையிற் காண்க. 'கோடல் நீடு இதழ் கண்ணி நீர்அலைகலாவ'. (நெடுநல் 5-6) வெரினிட-புறமுதுகு காட்ட (தோற்க). ஆழி-கடல். அசுரன் கடலிற் புகுந்து கடல் நீரைக் குடித்துவிட்டுப் பாதாள உலகம் புக்கான். ஐயன்-விநாயகப் பிரான். மூடிகம்-பெருச்சாளி. 'தன்னூறு மூடிகத்தைத் தம்பிரான் செலுத்தி' (விநாயக புராணம். விக்கினராசர் 97).

334 புக்குமிகு பகுவாயின் கூரெயிற்றுற்
கவ்விவெளிப் புகுத லோடும்
அக்கணமே கரமருப்பி னெறிந்தசுர
னுவியுண்டா னவன்கும் பத்தி
னுக்கபெருந் தரளநிரை புழைக்கரத்தா
லெடுத்துவகை யுடனே யேகி
முக்கணனை யித்தலத்திற் பூசைபுரிந்
தானவனு முன்னின் றுனல்.

335 உலகிலுள்ளோ ரெக்கரும நினைத்தாலு
மக்கரும முனைப்பூ சிக்கி
னலனுறுக வினைநினையா தியற்றியதற்
கிடையூறு நணுக நீ போய்க்
கலகமிடு கனகபுரிக் கேசரியை
வாட்டியவன் கன்னி யாய
சிலைநுதல்வல் லபையென்னு மரிவைதனை
மணம்புணர்தி செல்வ! வென்றான்.

---

334. பகுவாய்-பிளந்தவாய். மருப்பு-கொம்பு. கும்பம்-யானை மத்தகம். 'நிறந்தந்த கும்ப மதயானையும் நெடுந்தேர்ப் பரப்பும் (குமரகுருபரர், மதுரைக்கலம்பகம் 17) உக்க-சிந்திய. தரளம்-முத்து. விநாயகப்பிரான் கயமுகாசுரனின் மத்தகத்தைப் பிளந்த போது கிடைத்த முத்துக்களால் இறைவனை அர்ச்சித்துப் பூசை புரிந்தான்.

335. கருமம்-செயல். நணுக-உண்டாகுக. வாட்டி-கொன்று. மணம்புணர்தி-திருமணம் செய்துகொள். கனகபுரியைச்சிவஞான முனிவர் இரணிபுரம் என்பார்; அவர்,—'இரணியபுரத்தில் கேசி முதலான அசுரர்கள் உள்ளனர்; அவர்களைக் கொன்று அவர்கள் கருவின்கண் உள்ள வல்லபையை மணந்து வாழ்க' என்று கூறிய தர்கப் பகர்கின்றார்.

336 அன்றுமுதல் அனேகபமா மானைமுகன்
பூசைசெய்ய வனேக பேசம்
என்றவணி மேலிலகு நினைத்ததருள்
கரிமுகனுக் கினிய பூசை
நன்றுபுரி தலினன்றே வுலகிலுள்ளோர்
நினைத்ததெல்லா நண்ணு மாறு
வென்றிபுரி சிவன்மொழிந்த படியேயக்
கேசரிபான் மேவி னானே.

337 மேவியந்தக் கேசரியைக் குறுந்தாளாற்
றுகைத்தடர்த்து மிதித்தே யன்னா
னாவியுண்டு வல்லபையை மணம்புணர்ந்தா
னானைமுகன் அதன்மேற் பாலாய்த்
தாவுபுகழ்க் கயிலாய நாதனுறை
திருத்தானந் தவத்தி னாலே
பாவனைசெய் ததுபணிவோர் கயிலைமலை
பணிந்தபெரும் பரிசு சேர்வார்.

338 முன்னையநாட் சிலவசுரர் தவமுயன்றார்
மலரயனை முன்னி யன்னான்
றன்னருளாற் பெருவலியும் பெருந்திருவும்
பெற்றிருக்குந் தலங்க ளாகப்
பொன்னதனால் வெள்ளியினா லெஃகினா
லாகியமுப் புரம்வா னூடே
மன்னிவல மிடமாகச் சுழன்றுசுழன்
றேதிரியும் வரமும் பெற்றார்.

---

336. அனேகபம்-யானை. அனேகப+ஈசம், அனேகபேசம். நண்ணுமாறு-அடையும்படியாக. விநாயகப்பிரான் வல்லபையை மணந்தால்தான் சிவபிரான் வழங்கிய வரம் பலிக்கும். அதற்காக விநாயகப்பிரான் கேசரிபால் மேவினான்.

337. குறுந்தாளால்-குட்டையான திருவடியால். 'சதிபாய் குறுந்தாட்டு' (ஞானமிர்தம் 2). துகைத்து-மிதித்துச் சிதைத்து. மணம்புணர்ந்தான்-திருமணம் செய்து கொண்டான்.

அதன்மேற்பாலாய்-அந்த அனேகபேசுரத்திற்கு மேற்குப் பக்கத்தில். பாவனை செய்து—கயிலாச மலையாகப் பாவித்து. பரிசு-பயன்.

338. எஃகு-உருக்கு. 'இலக்கணம் பிழையா எஃகு அமை

339 நீறுகண்டி மாலேபுனேந் தரனேயருச்
சனைபுரியு நேசஞ் சேர்ந்து
மாறுபட விமையவரை நெருக்குவர்பூ
மிசைப்புரத்தை வலியி னூக்கிச்
சீறியதன் கீழ்ப்பட்ட பதியையெல்லாஞ்
சிதைப்பரவர் தீமை யாவுங்
கூறியள விடவெளிதோ விப்பரிசெ
லாமமரர் குறித்தே சொல்வார்.

340 புரத்தவரா லுலகமெலா மழியுமென
மாயவனைப் புலவ ரோடுங்
கருத்திலெண்ணி மகமதொன்று புரிந்தனரம்
மகந்தினிலே கன்ருேர் பூத
முருத்தெழலும் புரத்தையட வேவினரப்
பூதமவ ணுற்ற போதே
விரித்தகனற் படுநெய்யே யெனப்போயிற்
றமரரெலா மெலிந்தா ரங்கண்.

341 உற்றநெடு மாலிமையோ ருடன்வருந்திச்
சிவனேச முடையோர் தம்மை
வெற்றிகொள்வ தரிதவர்தம் அறிவுதனே
மயக்கிடவே வேண்டும் என்றே
தெற்றெனத்தன் னுருவுதனிற் றேரர்தமை
யுண்டாக்கித் தெளிய நூலாய்ப்
பெற்றபிட கந்தெருட்டி நாரதரை
யும்விளித்துப் பேச லுற்ருன்.

---

இருப்பின்-நீரளந்தூட்டிய நிறையமைவாள்: (பெருங்கதை. இலாவண 4, 164–165) எஃகு அமை இருப்பின் என்ற தொடருக்கு 'எஃகும் அதன் அளவை ஒத்த இரும்பும் ஆகிய இரண்டையும் காய்ச்சிச் செய்யப்பட்ட' என்று விளக்கம் தந்த ஐயர் அவர்களின் புலமை இங்கே உதவிற்று. நன்றி! இங்கனம் வரைய உதவிய சான்ருேர் நச்சிஞர்க்கினியர். சிந்தாமணி கொண்டு தெளிக.

339. நெருக்குவர் வருத்துவர். 'அறத்தின் நீங்கிஞர் நெருக்கவும்' (கம்பன். ஆரண்யம். அகத்திய 12. பூமிசைப்புரம் (பிரமன் வாழும்) சத்தியலோகம். நூக்கி—தள்ளி.

340 புலவர்-தேவர். கன்று-கோபம் கொண்ட. உருத்து-சீறி. அட-அழிக்க. கனல்படு-நெருப்பில்பட்ட. நெருப்பில் பட்ட நெய் போல் இல்லாது போயிற்று.

341. வெற்றிகொள்வது அரிது-வெல்ல முடியாது. தன்உருவு

342 சென்றவணீர் புரத்தவர்தஞ் சிந்தைதனை
மயக்கியவர் சிவன்பா லன்பு
கன்றிவெறுத் திடுசூழ்ச்சி புரிந்திடுமி
னுலகமெலாங் கலங்கா வண்ண
மென்றுபல முகமனுரை யுரைத்துவகை
யுடனனுப்ப வெளிய தாமோ
நன்றுபடு மோசிவன்பா லன்பர்தமை
மயக்கிலென நவின்று போனார்.

வேறு

343 மன்னியிடு நாரதரும் பவுத்தர் தாமும்
வசித்திடுமந் திரத்தவரை மருட்டித் தூய
நன்னெறியாஞ் சிவதரும நெறியை மாற்றி
நற்பவுத்தர் நெறிகொளுவி நடாத்தி மாதர்
தன்னிறைகற் புடைமையெலாஞ் சிதைத்து வேறோர்
தன்மையதாம் படியறிவைத் தடுக்க வந்த
புன்னெறியாம் புரத்தினுள்ளோர் மயக்கம் பூண்டார்
புன்மையுளோர் நன்மைநிலை பூணா ரன்றே.

---

தனில்-தன் உடம்பில். தேரர்-பவுத்தர். பிடகம்-திரிபிடகம். 1. விநயபிடகம், 2. சூத்திரபிடகம், 3. அபிதருமபிடகம். இவற்றைப் பிடகத்திரயம் என்றும் கூறுவர். இவை கூறும் நெறியை மணிமேகலை 'பெரியோன் பிடகநெறி' என்று புகழும், மணிமேகலையில் வஞ்சிமாநகர் புக்க காதையின்கண் ஐயர் வரைந்த விளக்கத்தைப் பார்க்கவும்.

342. சென்று அவண் நீர்புறத்தவர் என்று பிரிக்க. பின் அவண் சென்று நீர்புரத்தவர் என்று கூட்டுக. நீர்-பண்பு (சிவ பக்தி) அன்பு கன்றி-அன்பு சிதைந்து. எளியதாமோ-எளிதாக முடிக்கக்கூடிய செயலா? நன்று படுமோ?–நன்மை தோன்றுமோ? மயக்கில் நன்று படுமோ என மாற்றுக.

343. மந்திரத்து-மந்திரங்களால், மருட்டி-மயக்கி. கொளுவி-மேற்கொள்ளச் செய்து. நிலைபூணார்-நிலைத்திருக்கமாட்டார்கள்.

244 அனைவருக்குந் தீங்குபுரிந் தறஞ்செய் வோருக்
காக்கமிலை யென்பதற்கு மைய முண்டோ
வினையமிது புரிமாலு மிமையோர் தாமு
மேவியரன் முன்வணங்கி விமல னேயுன்
றனையடைந்தோம் முப்புரத்தோர் தருமம் யாவுந்
தணந்தனரங் கவர்வினையின் றன்மை யாலே
யினியவரை யடல்வேண்டு நீயே யெம்மா
லியல்வதல தியர்அவர் என்றார் அன்றே.

345 புவனிமுத லரிபிரம ரிமையோர் யாரும்
பொறுப்பா யமைந்துவந்து பொருவா யென்னச்
சிவனணைந்து முறுவல் செய்ய மூவரல்லாத்
திரிபுரநுண் பொடியாகத் தேவர் யாருங்
கவலையறப் போற்றியுய்ந்தார் ; யாவ ரேனும்
கண்டிகைவெண் ணீறணிந்தக் கருத்திநீத்தோர்
தவறுபுரம் படுமாறு படுக வென்று
சாபித்தார் தாபித்தார் சரத மென்றே.

---

344. ஆக்கம்-வளர்ச்சி. தீங்கு புரிந்து அறம் செய்தலாவது, கோவிலை இடித்து மதில் கட்டுதல், பசுவைக் கொன்று செருப்புத் தானம் செய்தல். ஞானேஸ்வரம் இத்தருமம் 'இடையை நிர்வாண மாக்கித் தலைப்பாகை கட்டுதல்' என்பர். தணந்தனர்-நீங்கினார்கள். இனி அவரை அடல் வேண்டும் என்றும், இனியவரை அடல் வேண்டும் என்றும் பிரித்துப் பார்க்க. அடல் வேண்டும்-கொல்ல வேண்டும்.

345. புவனி-உலகம். பொறுப்பாய்-மன்னிப்பாயாக. பொருவாய்-போர் செய்க. அணைந்து-அடைந்து. மூவர் அல்லா-மூவர் தவிர. கண்டிகை-உருத்திராக்கம். கருத்தில்-எண்ணத்தில். நீத்தோர்-கோலத்துக்கேற்ற நல்லொழுக்கங்களை நீக்கியவர். சாபித்தார்-சாபம் இட்டார்கள். தாபித்தார்-உறுதிப்படுத்தினர்.

முப்புரம் எரிந்து மூவர் பிழைத்த அதிசயத்தை 'மொய்ப்புரந் தபு காலை நீற்றறை நாவின் மன்னவர்போல் எரி தப்பி வாழ்ந் தனர்: ஈசன் ஆணையில் நிற்பவர்க்கிடர் சாருமோ' என்று நயம்படக் கூறிஉள்ளார். (காஞ்சி. முப்புராரி 2).

346 நாரணனே முதலானோர் பவுத்தர் தம்மை
நாரதரை முகமனுரை நவின்று நோக்கித்
தாரணியுய் வான்பொருட்டு நீவிர் தீய
தானவர தந்நீறுகண்டி தவிர்த்தீ ரேனும்
பாரியதோர் பவமன்றே வதனைத் தீர்க்கும்
பான்மைநினைந் தியற்காஞ்சிப் பதியை நண்ணி
யாரணநூன் முறைசிவனைப் பூசை யாற்றி
யத்தீமை யகற்றுமென வவர்கள்போனார்.

347 நற்றிறல்சேர் கண்ணர்வலைப் பட்டதோரா
நாரதர்தென் காஞ்சிநகர் நண்ணி யங்க
ணுற்றபெரும் புண்ணியநீர் அணைத்து மாடி
யுயர்கயிலை நாதரெனு வொருவர்ப் போற்றிப்
பற்றுடனா கமநெறியிற் றவரு வண்ணம்
பண்டினுட னுளங்கசிந்து பரிவி னாலே
முற்றுமுள பூசைதனைப் புரிய நாதன்
முன்னின்றான் றிருமுன்பே மொழிவ தானார்.

348 புன்னெறியோ ரெனினுமுன தன்ப ரான
புரேசர்தமை நீறுகண்டி போடச் செய்தோ
மன்னெறியா லெமதுகுறை யகற்றி யாள்வாய்
ஐயனே யெனச்சிவனு மவரை நோக்கி
மென்னெறிய ரேனுமஃதி லாதா ரேனும்
வேடமேபொரு ளன்றோ விலக்க லாமோ
மன்னுறையுள் காணிபதி தனையீந் தேனு
மறைநெறியா னீறுகண்டி மருவச் செய்வார்.

---

346. முகமன் உரை-உபசார வார்த்தை. பாரிய பெரிய. தீர்க்கும்பான்மை-போக்கும் உபாயம். ஆரணமுறை நூல்முறை எனப் பிரித்துக்கூட்டுக. ஆரண முறை-வைதீக பூசை. நூல் முறை-ஆகம பூசை.

347. நல்திறல்-நன்மைக்கே பயன்படுகின்ற வன்மை. கண்ணர்-திருமால். ஓரா-ஆராய்ந்து ஒருவர்-சிவபிரானை. பரிவினால்-அன்பால்.

348. புரேசர்-முப்புரத் தலைவர். தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி. போட-விலக்க. 'போடு அகலப் புல் ஏழுக்கை' (கம்பன்-ஆரண்யம். சூர்ப்பணகை 135). அங்கு உரையாசிரியர்

349 செய்யுமவர் பெறும்பேற்றுக் கவதி யில்லைத்
திறனுறவே விலக்கியபேர் தீய ரன்றே
வுய்யுநெறிய வர்க்கில்லை யேனுங் காஞ்சி
யுற்றதனுற் சிறிதுபவ மொழிந்த தாகும்
பையவவை முழுதுமினி நீங்கு மாறு
பல்பிறவி யடைந்தடைவிற் பாற்ற வேண்டும்
ஐயமற எமையரிதிற் சூழும் வாயி
லமைவதுவும் பிரிவதுவு மவையா மன்றே.

350 ஆதலினு லெமைநாளு நாளு நீவி
ராய்ந்தொருவா யிலிற்சூழ்ந் தடைவீர் நன்மை
யீதுகடைப் பிடித்திடுமி னென்று னைய
னித்திறத்தா லரியவல மினிதி னுற்றிப்
பாதகமா மவைநீக்கி யன்னோர் அந்தப்
பரனிருக்கை கயிலைமலைப் படிவ மாக்கித்
தீதகல நாரதரும் பவுத்தர் தாமுந்
திருவருள்பெற் றினியவின்பஞ் சேர்ந்தா ரன்றே.

---

எறிந்து விடு என்று உரை கண்டார். (அண்ணுமலை-பதிப்பு) உரை கண்டவர்: திரு. செ. வெங்கடராமச் செட்டியார் அவர்கள். மென்னெறியரேனும்-வைராக்கியம் அற்றவராயினும். சேக்கிழார் 'இன்பத் துறையினில் எளியரானுர்' என்பர் (திருநீலகண்டர்). வேடம்-கோலம். 'மாலற நேயம் மலிந்தவர் வேடமும், ஆலயம் தானும் அரன் எனத் தொழும்' என்று மெய்கண்டார் பணிப்பர். ஒருபொருள் அன்றே-ஒப்பற்ற பொருள் அல்லவா? உறையுள், காணி, பதி, ஈந்தேனும் நீறுகண்டி மருவச்செய்வார் (சிறந்தவர்).

349. மக்களுக்கு வீடு முதலானவற்றைத் தந்து (அவர்களை) சைவ நெறியில் வாழச் செய்பவர் அடையும் இலாபத்துக்கு முடிவு கிடையாது. சிறிது பவம்-கொஞ்சம் பாவம் பைய-மெதுவாக. சூழும் வாயில்-அடையும் வழி. பிரிவதுவும்-நீங்குவதும்.

350. ஆய்ந்து-ஆராய்ந்து. ஒரு வாயிலில்-ஒருவரே செல்லத் தக்க திட்டி வாசலில். சூழ்ந்து-பிரதட்சணம் செய்து. அரிய வலம்-கடுமையான பிரதட்சணம். பரன் இருக்கை-சிவபிரான் திருக்கோவில். படிவம்-போலச் செய்து. சிவபிரான் கோவில் கயிலையை முன்மாதிரியாகக் கொண்டு செய்யப்பட்டது.

இங்குக் குறிப்பிட்ட சுரங்கப்பாதையை இன்றும் காணலாம். திருவுண்ணுழியின் அடியில் உள்ளது. இதில் நுழைந்து வந்தால்

## வீரராகவேசுரம்

351 இத்தலக்கிழ் பால்வீர ராக வேசம்
இராமனட வியிற்சனகி யெனுமெம் மோயைக்
குத்திரத்தா லிலங்கையர்கோன் கொடுபோ மாறு
குறித்துவரு நாளறமே கூடுங் காஞ்சி
முத்திதரு தலமெனவந் தங்கண் மேவு
முனிவருடன் சிவகங்கை மூழ்கி யேறி
நித்தியஞ்செய் தொருதனிமா நீழலின் மேவு
நிமலரையும் போற்றியங்க ணிலவுங்காலே.

---

பிறவியில்லை என்று முப்போதும் திருமேனி தீண்டுவோர் கூறு கின்றனர்.

இக்கோயிலை எடுத்தவன் அசரீரி கேட்ட இராஜசிம்மன். பூசலார் மனத்தில் கோவில் கட்டிய காலத்தில் இக்கோவில் எழுந்தது. இங்குள்ள சிவலிங்கம் காம்பீர்யமாக நிற்கிறது. இங்குள்ள சுரங்கப்பாதையைச் சிவஞான முனிவர் கயிலாயப் படலத்தில் 'வலம் செயப் புகும் அப்போதும் வெளிக் கொளும் போதும், வாயிற்–புலந்தனைச் சுருங்கையாகப் புரிதும்: அங்கு அவையே கன்மப்-பலங்களை நுகரும் தோற்றம் இறப்பெனும் பகுதியாகி-இலங்க ஈண்டு இனிது வாழ்மின்; இறுதியில் தருவம் முத்தி' என்று சிவபிரான் கூறியதாக அமைத்துள்ள திறம் பாராட்டற் குரியது.

351. அடவியில்-காட்டில். சனகி-பிராட்டி. எம்மோய்-எம் முடையதாய். 'என் குலம் எனக்குத் தந்தாள்; என் இனிச் செய்வதெம்மோய்' என்று கவிச்சக்ரவர்த்திகள் (அனுமன் மொழியாக) அருமையாகப் பேசுவார் அதனை இங்கு எடுத்தாண்ட ஆசிரியர் திறம் பாராட்டற்குரியது. குத்திரம்-வஞ்சகம். கொடுபோம் ஆறு-கொண்டு செல்லும் வழி. முத்திதரும் தலம்-மோட்சம் கொடுக்கும் இடம். பாரத நாட்டில் முத்தி கொடுக்கும் தலம் ஏழு. 'முத்தி தரும் நகர் ஏழின் முக்கியமாம் கச்சி' என்பர் வேதாந்த தேசிகர். (தேசிகப்பிரபந்தம்: அடைக்கலம் 1) மாநீழல் – மாமரத்தின் நிழல்.

352 சுற்றிலகத் தீசுரத்திற் பரனைப் போற்றித்
தொழுதிருக்கும் அகத்தியர்பாற் றுன்னி மேவ
மற்றவரும் வருமாறு வினவித் தூய
வாய்மைசில வறிவுறுத்தி மதித்த யாவுந்
தெற்றெனவே யுதவுமிந்தப் பதியிலைய
சிவனையருச் சிக்கிலெண்ணாந் திண்ணங் கூடும்
உற்றமதி புட்கரணிக் கரைப்பா லேகென்
றுரைத்தலுமவ் வுரைதெளிந்தே யுவந்து போனான்.

353 சுருதிவழிப் பரனுருவங் கமைத்துப் பூசைத்
தொழின்முடித்தே யிலங்கையர்கோன் றுளங்கத்தாளி
ளொருதிருவங் குலியுறுத்தும் பரனே போற்றி
யுத்தமனே போற்றியென வுமையாள் பாக
னருகுபல தேவர்புடை சூழத் தோன்றி
யன்பகருத் தென்னெனவே யருள லோடும்
நிருதரையான் வெல்லும்வகை யருள்வா யென்று
னின்மலனும் பாசுபத நேர்ந்தா னன்றே.

**கற்கீசுரம்**

354 அருள்புரிந்து தேவர்தம் படைகளீந்தார் :
அகத்தியனும் பலகலைக ளறியச் சொற்று
ளிருநிலமே லதுவீர ராக வேச
மெனும்பெய்ராய் மருவியதா லிதற்குத் தென்பாற்
கருணையுடன் மண்ணிகுளக் கரைப்பான் மேவுங்
கற்கீசம் புரவிமுகக் கண்ணர் பூசை
புரியவது பேராகு மண்ணி தீர்த்தப்
புனலாடிப் போற்றில்வரும் பொருபோர் வீரம்.

---

352. சுற்றில் அகத்தீச்சுரத்தில் எனப் பிரிக்க. வரும் ஆறு-வந்த காரணம். தெற்றென-விரைவாக. தெளிவாக என்றும் கூறலாம். புட்கரணி-பொய்கை புட்கரம் என்ற சொல் தாமரையையும், தண்ணீரையும் குறிக்கும். புட்கரத்தைப் பெற்றிருப்பது புட்கரணி

353. துளங்க – நிலைகலங்க. அங்குலி - விரல். 'பெருவிரல் இறைதான் ஊன்றப் பிறை யெயி றிலங்க அங்காந்து-அருவரை யனைய தோளான் அரக்கன் அன்று அலறி வீழ்ந்தான்' என்று ஆளுடைய அரசு பாசுரம் நினைவில் வருகிறது. நிருதர்-அரக்கர். பாசுபதம்-பாசுபதாஸ்திரம். நேர்ந்தான்-கொடுத்தான்.

354. அதற்குத் தென்பால்-வீரராகவேசுரத்திற்குத் தெற்குப்

## பலபத்திரேசுரம்

355 அன்ன தன்பாற் பலபத்தி ரேசம் முன்பா
ரதப்போரிற் பலதேவன் அழுகி தாக
மன்னுபல புண்ணியநீ ராடு வான்போய்
மருவுகலை மானதிப்பால் மணிநீர் மூழ்கி
யுன்னரிய சிவனுருவு செய்து பூசித்
துற்றிடுநாண் முனிவரரா யுள்ளோர் தம்மை
நன்னகரா கியதலங்க ளுள்ளே மேலா
நற்றான மேததனைநீர் நவில்வீ ரென்றான்.

356 ஆனதொரு சிவாலயஞ்சேர் தலமே மேன்மை
யானதலம் அவற்றினுள்ளு மறையக் கேணீ
மானிடமா முனிசந்தெய் வதஞ்சு யம்பு
மற்றிவையாஞ் சிவனுருவு மருவுந் தான
மூனமிலா தொன்றுக்கொன் றதிக மாகு
முற்றவிவை தனிலுள்ளு முண்மை யாக
மேன்மைபெறு காசிதலங் காசி தன்னின்
மிக்கதலங் காஞ்சியென விளம்பு நூலே.

---

பக்கத்தில். புரவிமுகக் கண்ணர்-குதிரை முகம் பெற்ற திருமால். (கல்கி).

355. கலைமான் நதி-சரஸ்வதி நதி. உன்னரிய-நினைவுக்கு எட்டாத. நல்தானம்-நல்ல இடம்.

356. மானிடம், முனிசம், தெய்வதம், சுயம்பு எனச் சிவதலங்கள் நான்கு வகைப்படும். மனிதர்களால் பிரதிஷ்டிக்கப்பட்டது மானிடம். முனிவர்களால் பிரதிஷ்டிக்கப்பட்டது முனிசம். தெய்வங்களால் பிரதிஷ்டிக்கப்பட்டது தெய்வதம். தானே தோன்றியது சுயம்பு. இவற்றுள் காசி மேலானது. காசியை விடக் காஞ்சி சிறப்புடையது.

மாதவச் சிவஞான யோகிகள் 'நயந்த அங்கவற்றுள்ளும் நற்காசி மிக்கு உயர்ந்தது. அன்னதிற்காஞ்சி உயர்ந்ததே' என்பர் (பலபத்திர 9).

357 முனிவரிது புகலவலப் படையோன் காஞ்சி
முதுநகரி லற்புதமா முழுதுங் கண்ணுற்
றினியவிட்ட சித்திநன்னீ ராடி யங்க
ணேகம்ப முதற்றான மெவையும் போற்றித்
தனியுபமன் னியனுபதே சத்தி னாலே
தனதுபெய ரிலிங்கமொன்று தாபித் தேத்தி
யனிகமுடன் பார்பரிக்குந் திறலோ னானன்
ஆதலினா லதுபணிவோ ரரச ராவார்.

**வன்மீகநாதன்**

358 மற்றதற்கு வடபால்வன் மீக நாதன்
மகவானே முதலமரர் மகஞ்செய் வாரா
யுற்றகுருக் கேத்திரத்தி லளவிலாத
வொண்பொருணேர்ந் தரனையுன்னி யுஞற்றலோடுஞ்
சிற்பரன்முன் னின்றனனங் கமரர் கீர்த்தி
சேர்ந்தருள வேணுமெனச் சிவனன்பாலே
வெற்றிபெறு முலகமெலா நிரம்பிப் பொங்கி
வெண்கிரிபோ லேமருவி விளங்கிற் றன்றே.

359 அக்காலை மாதவனோர் கிராத னாகி
யக்கீர்த்தி தனைக்கவர்ந்தே யகற லோடும்
தக்காராந் தேவர்கண்டு தடுக்க மாயன்
றனிச்சிலைகோ லிச்சமரர் தமரை யெய்தான்
எக்காலு மிமையாதா ரஞ்சியோட
வெம்பெருமான் பெரிதுநகைத் தினிய மோவாய்
கைக்காணுஞ் சிலையதனி லூன்றி நின்றான்
கணக்கில்பெருங் காலமும்பர் கவலை கூர்ந்தார்.

---

357. அலப்படையோன்-கலப்பை ஆயுதத்தை உடைய பலராமன். 'அலப்படையண்ணல்' (காஞ்சி, பலபத்திர 2). இட்ட சித்தி நினைத்தவற்றைக் கொடுக்கும் பொய்கை, 'இட்டசித்தி எய்துவிராயின்-இட்டசித்தி எய்துவிர் நீரே' என்று சிலம்பு திருமாலிருஞ் சோலைமலையில் உள்ள ஒரு பொய்கையைப் புகழும். அனிகம்-சேனை.

358. ஒண்பொருள் நேர்ந்து-சிறந்த பொருள்களைத்திரட்டி. உஞற்றல்-செய்தல். புகழ், வெண்கிரிபோல் விளங்கிற்று, புகழ் வெண்மை நிறம் கொண்டது என்று கூறுவது கவிமரபு. 'உருக் கூர் பளிக்குப் பறம்பிற் பெருங்கீர்த்தி உணடாதலும். (சிவஞான காஞ்சி. வன்மீக 3),

359. கிராதனாய்-வேடனாய். சமரர்-போர் செய்வதில் வன்மை

360 நின்றபொழு திமையவர்கோன் சிதலாய்ச் சூழ்ச்சி
நினைந்தவன்கைச் சிலைநாணி னீர்மை தின்றே
யன்றுகறித் திடலுமவன் சிரம்போய் நீங்கி
யதுவிழுந்த விடஞ்சினகே சப்பே ரான
தொன்றுமவன் குறைத்தலையா றென்று மோடு
முரியமகம் புரியவினி யொண்ணு வொண்ணு
என்றுதிருக் காஞ்சிநகர் மகவா னெய்தி
யியன்ற செல்லாய்ச் சிவபூசை யியற்றி னானே.

361 செல்லினுரு வாய்ப்பூசை புரிய நாதன்
சென்றின்றே வேண்டியதென் செப்பா யென்ன
வில்லினையா னிறுக்கவந்த தீங்கு தீர
வேண்டுமரி யுருவமொன்ற வேண்டு மென்றான்
வல்லதெய்வ மருத்துவரா லொன்று மந்த
மாயனுருக் காஞ்சிநகர் மருவி னோர்க்கும்
அல்லலுறு வினையுமுண்டோ வென்றுனைய
னகமகிழ்ச்சியுடன் மகவான் மீண்டா னன்றே.

---

பெற்றவர். தமரை-தமக்கு உரியவரை (தேவர்களை). எம்பெருமான்-திருமால், மோவாய்-வாயின் அடிப்பகுதி. 'குரூஉமயிர் மோவாய்' புறம் 257. சிவஞான முனிவர் வில்லைக் கழுத்தில் ஊன்றி நின்றதாகக் குறிப்பர். 'அடல்வில் கழுத் தூன்றுபு, மைக் காள மன்னன் நெடும்போது வாளாது நின்றான். (வன்மீக 5).

360. சிதலாய்-கரையானாய். நீர்மை-தன்மை. (வன்மை) கறித்திடலும்-அரித்த உடனே. தலைவிழுந்த இடம் சினகேசம். அவ்விடத்தைச் சிவஞான முனிவர் 'சின்ன மாகேசவத்தானம்' என்பர். குறைத்தலை ஆறு-சிரோநதி. திருமால் வேள்வி வடிவம் ஆக இருப்பவன். அவன் இல்லாததால் வேள்வி செய்ய முடியாது என்று இந்திரன் வருந்தினான். மகவான்-வேள்வியின் பயனை அடையும் இந்திரன். செல்லாய் கரையானாய். 'இருந்த மாநிலம் செல் அரித்திடவும் ஆண்டு எழாதாள். (கம்பன்-சுந்தர 7).

361. உருவம்-உடல் ஒன்றவேண்டும் - அறுபட்ட தலையும் உடலும் சேரவேண்டும். தெய்வ மருத்துவர்-தேவ மருத்துவர். இவர்கள் 'அசுவினி தேவர்கள்' என்று கூறப்படுவர். இவர்கள் இருவர். நிறைஉடை இரவிமைந்தர் இருவர். (பாரதம்-சம்பவ 84).

362 இருதுணியா மரியுருவ மெம்பி ரான்றன்
இன்னருளா லொன்றுதலு மிமையோர் போற்றி
மருவுதம திடம்புகுந்தார் மகவா னங்கே
வன்மீக மாய்ப்பூசை மருவ லாலே
யுரிய பெயர் வன்மீக நாத னென்றே
யுற்றன னெம் மான்அதனுக் கொருதென் பாலா
யரிவையொரு பாகனுறை வயிர வேச
மதன்பெருமை யெவராலு மறியற் பாற்றே.

## வயிரவேசம்

363 தெய்வதமா முனிவரெல்லா மேரு மீதே
திகழ்முஞ்ச மானெனுமோர் சிகரந் தன்னிற்
கௌவையறச் செங்கமலத் தோனை நோக்கிக்
கருத்தொன்றித் தவமியற்றக் கமலத் தோனும்
எவ்வமிலா வஞ்சுதிரு முகத்தோ னாகி
யெதிருதலும் பரப்பிரம்மம் யாதோ வென்றார்
அவ்வயினப் பரப்பிரமம் யான்யா னென்றே
யயனுரைக்க மறையெழுந்தே யரற்றிக் கூறும்.

---

362. அரிஉருவம்-திருமாலின் உடல். வன்மீகம்—புற்று. 'ஆரூரில் வன்மீகத் தகிலசரா சரந்தழைப்ப (திருவாரூர்ப் புராணம், வன்மீகநாதச் சருக்கம் 1). அரிவையொரு பாகன்-உமாதேவியை ஒரு பக்கத்தில் கொண்ட சிவபிரான். அறியற்பாற்றே-அறியும் தன்மை உடையதா?

இக் கதை திருவாரூர்ப் புராணத்தில் சிறுவேறுபாட்டுடன் கூறப்பட்டுள்ளது. யாகத்தில் புகழ் தோன்றியதாக இங்குப் பேசப்படுகிறது. அங்கு வில் தோன்றியதாகப் பேசப்படுகிறது. அவ்வில்லைத் திருமால் கவர்ந்து சென்றதும், வில்லைக் கழுத்தில் ஊன்றி உறங்கியதும், சிரம் இழந்ததும், மீளப் பெற்றதும் கூறப்படுகிறது. அவ்வில்லை மேருத்தில் வைத்துப் போராட்டத்தை நீக்குகின்றான் இறைவன்.

363. முஞ்சமான் என்பது மேருமலையின் சிகரங்களில் ஒன்று. வடவரைத்தலை முஞ்சமான் எனும் தடநெடுங்கிரி. (புதிய காஞ்சி. வயிரவ 2). கௌவை-துன்பம். அவ்வயின்-அவ்விடத்தில். அரற்றி—உரத்து. வேதம் பிரமன் மொழியை மறுத்து உரத்துப் பேசிற்று.

வேறு—காரணன் சிவன்

364 அகில காரண னேசிவ னவன்பர மென்றே
சகல பூரண மாகிய குடிலைமுன் சாற்ற
வுவகை யாகியே யாவையுந் தோன்றியே யொடுங்கப்
புகல தாமரன் பதியெனப் புகன்றதங் கிருக்கும்.

365 செப்பு கின்றவேள் விக்கெலாந் தலைவனுஞ் சிவனே
மெய்ப்ப ரம்பொருள் என்று கூறியதெசுர் வேத
மொப்பில் சின்மயச் சோதியா யெங்கணு முறைவோன்
றப்பி லாத முக்கணன் பரமென்றது சாமம்.

366 நேய மாதவர் நினைந்திடு நெற்றிநாட்டத்துத்
தூய னேபர மென்றதா லதர்வணச் சுருதி
ஆய தேனெனச் சினந்தய னகிலமுந் தோற்றி
மாயு மென்னிடத் தென்றனன் மலத்தினுன் மயங்கி.

---

364. *அகிலகாரணன்*–உலகம் தோன்றுவதற்குக் காரணமாக இருப்பவன். *பரம்*–மேலானவன். *குடிலை*–பிரணவம், *உவகையாய்*-மகிழ்ச்சியுடன். *ஒடுங்கப் புகலதாம் அரன்*–ஒடுங்குவதற்கு இடமான சிவபிரான். *இருக்கும்*-இருக்கு வேதமும், உம்மை உயர்வைக் காட்ட வந்தது.

இப்பாடல் சிவஞான போதத்தின் முதற் சூத்திரத்தின் சாரத்தைத் தன்னகத்தே கொண்டுள்ளது. 'தோற்றிய திதியே-ஒடுங்கி, மலத்து உளதாம்; அந்தம் ஆதி என்மனார் புலவர். (சிவ-போதம் 1).

365. *வேள்வி*-யாகம். *மெய்ப் பரம்பொருள்*–உண்மையான தலைவன். *சின்மயச் சோதியாய்*-ஞானக்கினியாய். *முக்கணன்*-சிவபிரான்.

366. *மாதவர்*-முனிவர்கள். *நெற்றிநாட்டம்*-நெற்றியில் கண்ணைப் பெற்ற. *ஆயது*-அவ்வாறு ஆவதற்கு. *அகிலமும் என்னிடம் தோன்றி என்னிடத்தில் மறையும்* என்று பிரமன் கூறினான். *மலத்தினுல்*-ஆணவத்தால். பிரம்மதேவனைப் பரம்பொருள் என்று கூறும் மதம் 'இரணிய கருப்பம்' என்று சிவஞானபோதம் பேசும்.

367 முந்தி டும்பொருள் யாவைக்கு முதனடு விறுதி
யெந்தை நின்னையும் பயந்தவன் மகத்தினுக் கிறைவன்
புந்தி கொண்டுநீ பாரென மறையெலாம் புகல
நிந்தை சொற்றனன் சுருதியைப் பிரமனந் நிலையில்.

368 மருவி மாதவ ளுன்பர மென்றனன் மகத்தாம்
பெரிய ரேமருண் டிப்படிப் புகன்றிடிற் பிறரார்
தெரிய வல்லவர்? மானிடர் வீணிலே தியங்கி
யரிய தோர்பரத் திகலினைப் புரிவதே னந்தோ?

369 கால மன்னதி லிரவிமண் டலத்தினில் கனகம்
போலு மேனிய னெற்றியங் கண்ணினன் புராண
னுல மார்களன் றோன்றினன்: அவனிடத் துதித்தான்
சூல பாணியன் வயிரவப் பிரானெனுந் தூயோன்.

370 நின்ற மாயவன் மறைந்தனன் மலரவ னின்றுன்
சென்று தோன்றிய வயிரவப் பிரான்றனைச் சினந்து
தன்ற னிப்பெரு வாளியை விடுத்தலுந் தடுத்தே
யொன்று வெற்றரைப் பிரான்கைத் தலந்தினை யுகுத்தான்

---

367. மறையெலாம், முந்திடும் பொருள்: யாவைக்கும் முதல், நடு, இறுதி. நின்னையும் பயந்தவன், மகத்தினுக்கு இறைவன் எந்தை. புந்திகொண்டுபார் என, பிரமன் சுருதியை நிந்தை சொற்றனன் எனக் கூட்டுக.

பயந்தவன்-பெற்றவன். புந்தி-அறிவு. நிந்தை-இகழ்ச்சி.

368. மருவி-அங்கு வந்து. மாதவன்-திருமால். நான்பரம்-நானே பரம்பொருள். மகத்தாம் பெரியர்-மிகப் பெரியவர்கள். மருண்டு-மயங்கி. வீணிலே-பயன் இன்றி. பரத்து-பரத்துவ சம்பந்தமாக. இகல்-தர்க்கம். பெரியவர்களே உண்மை உணராது மாறுபடுகின்றனர். அங்ஙனம் இருக்க அற்ப மனிதர்கள் தர்க்கம் செய்யலாமா?

369. இரவி மண்டிலத்தினில்-சூரிய மண்டலத்தில். கனகம்-பொன். ஆலம் ஆர்களன்-விஷம் தங்கிய கழுத்தை உடையவன். அவனிடத்தில் வயிரவப்பிரான் உதித்தனன். 'இரவி மண்டிலத்து உறையும் நாயகன்' என்பர் சிவஞான முனிவர்.

370. வயிரவனைக் கண்ட திருமால் மறைந்தான். தன் தனிப் பெருவாளி-பிரம்மாஸ்திரம். உகுத்தான்-பொடியாகப் பண்ணி

371 கிளரு நான்முக னடுச்சிர முகிரினாற் கிள்ளத்
தளர ஆற்றனன் விழுந்தனன்: எழுந்தனன்: சலித்தான்
அளவி லாததன் அகந்தைபோ யகன்றிட வறிந்தான்:
தெளிவு கூர்ந்தனன் சிவன்பர மேயெனத் தேர்ந்தான்.

372 புவன நாயகர் தமையெலா மீன்றவன் புராணன்
சிவன வன்பெருஞ் சத்தியா முமையிரு திறத்தோ
ருவமை யில்லவ ரிவரெனத் துதித்தலு முமைகோன்
அவன்முன் நின்றனன் அஞ்சனீ யென்றன னருளால்.

373 அந்த வேலையி லனையவன் வணங்கியே யைய
சிந்தை செய்திடேல் பொறுத்தியென் னகந்தையாஞ்சிறுமை
புந்தி யின்றியே புதல்வர்செய் குறையெலாம் பொறுப்பார்
தந்தை யன்றியே பிறரெவ ரெனச்சிவன் சாற்றும்.

374 வாலி தாமுணர் வினைமல மறைக்குமம் மறைப்பை
யேல வேயெம தருளின்றி நீக்குத லெளிதோ
நாலு மாமுக பொறுத்தனன் போவென நவிலச்
சாலு மென்றயன் வணங்கின னிணங்கினன் தனதூர்.

---

ஞன். வெற்றரைப்பிரான்-வைரவக் கடவுள். வெறு+அரை வெற்றரை. ஆடையில்லாத இடை.

371. நடுச்சிரம்-மேல் நோக்கிய-நடுவில் உள்ள தலை. உகிர்-நகம். சலித்தான்-(தன்னையே) வெறுத்துக்கொண்டான், அகந்தை அகன்றிடத் தேர்ந்தான். உயிர்கள் உண்மை உணராமைக்குக் காரணம் அகந்தையே. ‘நான் என்னும் ஓர் அகந்தை எவர்க்கும் வந்து-நலிந்தவுடன் சகமாயை நானுவாகித்-தான் வந்து தொடரும் இத்தால் வளரும் துன்பச்-சாகரத்தின் பெருமை எவர் சாற்ற வல்லார்’ என்பர் தாயுமானவர்.

372. புவன நாயகர் உலகத் தலைவர்கள். இரு திறத்தோர்-இரண்டு வகையான கூறுபாடுடையவர்கள். அவன்முன்-பிரம னுக்கு எதிரில். அஞ்சல்-அஞ்சற்க.

373. அனையவன்-பிரமன். அகந்தையாம் சிறுமைபொருத்தி என மாற்றுக. புந்தி இன்றி-அறிவில்லாமல். பொறுப்பார் தந்தை அன்றியே பிறர் எவர்? (கருத்து நிரம்பிய மொழி).

374. வாலிதாம்-தூய்மையாகிய, உணர்வினை-அறிவை. மலம்-ஆணவமலம். மறைக்கும்-தெரிய ஒட்டாது செய்யும்.

375 அரனு மவ்வழி வயிரவப் பிரான்றனே யழைத்து
பெரிய ஞஞ்சுத மைக்குநீ யாதலிற் பேணி
விரியு மாயனே முதலதாம் யாரையு மியைந்தே
குருதி நீர்ப்பலி கொள்ளுதி யெனவருள் கூர்ந்தான்.

376 வெற்ற ரைப்பிரான் விண்டுவின் பதத்தினை மேவ
நிற்றி யென்றிடும் விண்டுசே னரைமிக நெருக்கிக்
குற்று மூவிலேச் சூலத்தி னெற்றியே கொடுபோந்
துற்ற னன்றிரு மாலது கண்டுமுன் னுற்றுன்.

377 முகம னுமுரை சொற்றனன் றெழுதுமுன் னிற்பப்
பகவன் செங்குரு திப்பலி பலியெனப் பகர்ந்தான்
மகித லாதிப னெற்றியி னரம்பினை வாங்கி
யுவகை யாகவே சொரிந்தனன் குருதிநீ ரொழுக்கம்.

---

எமது அருள் என்றது திருவருட் சத்தியை. சாலும்-(இத் தண்டனை) போதும். தனது ஊர் இணங்கினன்-தன் ஊரை அடைந்தான்.

இவ்வரலாற்றைக் கூறும் சிவஞான முனிவர் பிரமன் வாயிலாகப் பொழிந்த பாசுரங்கள் சுவைமிக்கன.

375. சுதமைக்கு-மகனுகும் உரிமைக்கு. பெரியன் ஆம்-பெரியவன் ஆவாய். யாரையும் இயைந்து-எல்லோரையும் அடைந்து. பலிகொள்ளுதி-பிச்சை கொள்வாயாக. 'காமருமடந்தையர் கடைதொறும் கடைதொறும்-பலிதேர்ந்து உண்ணினும் உண்ணும். (குமரகுருபரர். திருவாரூர் 25).

'சறுவ பூதைக தமனன்நீ எம்முடைத் தனயர்கள் தமின் மூத்த-சிறுவனே எனத் திருவருள் செய்து, (புதிய. காஞ்சி. வயிர வேசம் 27).

376. விண்டுவின் பதம்-திருமால் வாழும் உலகம். நிற்றி-நில். விண்டுசேனர்-விஷ்வக் சேனர். எற்றி-தாக்கி. கொடுபோந்து-சூலத்திற் குத்தி எடுத்துக்கொண்டு. முன்னுற்றுன்-எதிர் கொண்டு வரவேற்றுன்.

377. பலிபலி-பிச்சை பிச்சை. மகிதலாதிபன்-திருமால். குருதி நீர் ஒழுக்கம் இரத்ததாரை.

378 இலக்க மாண்டுசெந் நீர்சொரி தரவரியிளைத்தா
னலக்க னுற்றிடா தமுதபா ணியினில் வெற்றரையோன்
அலக்க முற்றிடே லென்றெடுத் தனனது காலை
நலக்கு விண்டுசே னரைவி டுத்திப்புற நடந்தான்.

379 குருதி நீர்ப்பலி புவனநா யகரிடைக் கொணர்ந்து
விரத மாகிய மாதவர் வலியெலாம் வீட்டிக்
கருணை யாகியே வயிரவத் தலைவனக் காஞ்சிப்
புரியின் மேவினர் அவர்க்கெலா மருள்புரி பொருட்டால்.

380 வீர மாகிய மூர்த்தியாய்ச் சிவனுரு விதித்துப்
போரு லாவிய தீர்வுநேர்ந் திடும்பெரும் பூசைக்
கார கப்படத் திருத்தியே சிவன்றனைக் காணு
வார மாகவித் தலனிடை யிருப்பது மதித்தான்.

381 கரக பாலத்திற் குருதிநீ ரினைக்கண நாதர்
பருக வீதலும் அவர்க்கது போந்திடாப் படியா
லிரண மண்டலத் தச்சம தின்றியே யிறந்தோர்
குருதி யாவையும் பருகுமி னென்றவை கொடுத்தான்.

---

378. இலக்கம் ஆண்டு-இலட்ச வருஷம், அலக்கண்-துன்பம். அமுதபாணியினில்-அமுதத்தின் தன்மை கொண்ட கையால். கலக்கம் உற்றிடேல்-சஞ்சலப்படாதே. விடுத்து-விட்டுவிட்டு.

379. புவன நாயகர்-உலகத் தலைவர்கள். (இந்திரன், வாயு, வருணன் முதலானவர்கள்). குருதிநீர்ப்பலி-இரத்தப் பிச்சை. விரதம் ஆகிய-விரதத்தையே வடிவமாகக் கொண்ட. வீட்டி-வருத்தி. மேயினர் அவர்க்கு-தங்கி இருப்பவர்களுக்கு.

380. சிவன்உரு வீரம் ஆகிய மூர்த்தியாய் விதித்து, எனப் பிரித்துக் கூட்டுக. காரகப்பட-செய்ய வேண்டிய முறையோடு. வாரம் ஆக-அன்பு பெருக. மதித்தான்-நினைத்தான்.

381. கபாலம்-பிரமனின் தலையோடு. கணநாதர்-சிவகணத் தலைவர்கள். போந்திடாப்படியால்-போதாத காரணத்தால். இரணமண்டலம்-போர்க்களம். கணங்கட்குப் போரில் இறந்தவர்களின் குருதியைப் பருகும்படியாக வைரவர் வரம் வழங்கினர்.

382 மூவிலைப் படையு டையவன் பூசனை முடிக்குந்
தேவனு மரும்வ யிரவே சுரனெனத் திகழுந்
தாவு சீர்பெறு விண்டுசே னேசுரத் தலமொன்று
ஏவரே யதன்பெ ருமையை யுள்ளவா றிசைப்பார்.

**விண்டுசேனேசுரம்**

383 போரு லாவிய தக்கனி யாகத்திற் புகுந்த
பேரு லாவிய வயன்முதற் றேவராம் பெரியோர்
ஆரு மேவினர் தத்தம திருக்கையில் அங்கண்
சீரு லாவிய மாயனும் வைகுண்டஞ் சேர்ந்தான்.

384 சேனை காவலர் விண்டுசே னர்க்கெலாஞ் செப்பி
யான தானவர் நிருதரை யடுதிற மதனுக்
கீன மில்லதோர் நேமியாம் படையிலை யென்னே
வான ராதியா மெவரையும் புரப்பதெவ் வகையால்.

385 இரவி மண்டலப் பொடியினு லியற்றுமங் நேமி
பொருது நற்றவத் ததீசியா லிற்றது புவனத்
துரவ ஞகிய சலந்தரன் றனையட வுலகிற்
பெரிய தாம்வலி யாவையுங் கூட்டியே பின்னும்.

---

382. மூவிலைப்படையுடையவன்-சிவபிரான். மூவிலை 'நெடு வேல் ஆதிவானவன்' (ஆசிரியமாலை). தாவுசீர்-பரவிய புகழ். உள்ளவாறு இசைப்பார் யாவர் எனக் கூட்டுக.

383. போருலாவிய-யுத்தத்தை விரிவுபடுத்திய. யாரும்-எல் லோரும். இருக்கை-இருப்பிடம். அங்கண்-அவ்விடத்தில்.

384. செப்பி-முன்பு பெற்ற வெற்றியைக்கூறி. ஆன தானவர்-கள்ளுண்ணும் கொடியவர். ஆனம்-கள். 'ஆனமும் அரிட்டமும் சாதியும் கள்ளாம்' (திவாகரம். பல்பெயர்த்தொகுதி). நிருதர்-அரக் கர். 'நிருதர்தம் அருளும் பெற்றேன்' (கம்பன். ஆரண்ய. சூர்ப்ப ணகை) அடுதிறம்-கொல்லும் ஆற்றல். நேமியாம்படை-சக்கரா யுதம். வானர்-தேவர். புரப்பது-பாதுகாப்பது.

385. இரவி மண்டலம்-சூரிய வட்டம். சூரியனின் வெப்பம் பொறுது வருந்திய (சூரியன் மனைவியின் பொருட்டாக) விஸ்வ கர்மா அமுதத்தைச் சூரியனின் திருமேனியில் தடவிக் குளிரப்பண் ணிப் பிறகு (சூரியனை) சாணைபிடித்தான். சூரியனின் உடம்பி லிருந்து உதிர்ந்த துகள்களால் திருமாலுக்குச் சக்கரமும்,

386 மலரி ஞோன்முதற் கடவுளர் சத்தியு மடுத்திங்
கிலக வேயமைத் திட்டசு தரிசன மிப்போ
துலவு வீரபத் திரன்முடி யணிமுண்ட முண்ட
தலகி லாப்படை மற்றிலை யென்றெனு மளவில்.

387 விண்டு சேனனுன் வீரபத் திரேசனை வேண்டி
மண்டு காதலா லடல்பெறு நேமியை வாங்கிக்
கொண்டு மேவுவ னென்றுரைத் துபாயமுங் குறித்துத்
தண்ட வீரபத் திரன்புவ னத்தினைச் சார்ந்தான்.

388 வாயில் காவலர் பானுகம் பனைமுதல் வயவர்
மேய காலமன் றிவண்புகு தற்கென விலக்க
ஆய காலையின் முனிவர ரிவனைக்கண் டன்பாற்
றூய காரிய முடிவதற் குபாயமே சொல்வார்.

389 எண்ணம் யாவையு முதவிடுங் காஞ்சியங் கெய்திப்
புண்ணி யப்புன லாடியே சிவன்றனைப் போற்றிற்
றிண்ண மாகநீ நினைத்தது முடிந்திடுஞ் செல்வாய்
அண்ண லேயிது யாவர்க்கும் வேண்டிய தன்றே.

---

சிவபிரானுக்குச் சூலமும் செய்யப்பட்டது. ஆதலால் இரவிமண்டலப் பொடியினால் இயற்றும் அந்நேமி என்றார். ததீசியால் சக்கரம் இற்றுப்போயிற்று. உரவன்-ஆற்றல் மிக்கவன்.

386. பின்பு ஜலந்தரனைக் கொல்லப் பிரமன் முதலான தேவர்களின் சத்தியாற் படைக்கப்பட்ட சுதர்சனத்தை வீரபத்திரன் அணிந்த பிரம்ம கபாலம் உண்டுவிட்டது.

மடுத்து-ஒன்று சேர்த்து முண்டம்-பிரம்ம கபாலம். அலகு இலா-எல்லையற்ற.

387. விண்டுசேனன்-விஷ்வக்சேனன். நான் வீரபத்திரேசனை வணங்கி எனப் பிரிக்க அடல்பெறு-ஆற்றல் பெற்ற. உபாயமும்-வழியையும். குறித்து-குறிப்பாற் கூறி. புவனம்-உலகம்.

388. வயவர்-வீரர்கள். இவண்-இங்கே. மேயகாலம் அன்று-தக்க சமயம் அன்று. உபாயம்-வழி.

389. புண்ணியப்புனல்-தீர்த்தம். திண்ணம் ஆக-உறுதியாக. யாவர்க்கும் வேண்டியது-எல்லோருக்கும் விருப்பமானது. அன்றே-உரைஅசை.

390 என்று மாமுனிக் கணத்தவ ருரைசெய விதுவே
நன்றெ னுவிண்டு சேனருங் காஞ்சியை நணுகி
யொன்று முள்ளத் தனுகியே சிவலிங்க மொன்றில்
நன்று பூசனை புரிந்தனன் புரிந்தநன் னலத்தால்.

391 ஆன வீரபத் திரேசனு மிமையவர்க் காகத்
தான வேசரை யடல்படத் தாக்கியே மீக்கொள்
வான நாயகர் போற்றவே காஞ்சியின் மருவி
ஞான தானமம் முனிவருக் குதவிடு நன்னாள்.

392 கண்ட னன்கண்ட விண்டுசே னனும்வரங் கருதி
யண்ட நாயக நேமிதந் தருளென வறைய
முண்ட மாலையை வேண்டிநீ பெறுகென மொழிந்தான்
பண்டு நேமியைக் கறித்திடு முண்டத்தைப் பணிந்தான்.

393 சேனை காவலன் வணங்கியே வினவலுஞ் சிறிதும்
ஏனெ னுமலே யிருப்பது கண்டுதன் னினிய
கான மோடியல் விகடநா டகந்தனைக் காட்ட
மேனி லாவிய தனிமுண்ட நகைத்தது வியந்து.

---

390. ஒன்றும் உள்ளத்தனுய்-ஒன்றுபட்ட மனம் உடையவனுய். நன்னலத்தால்-நல்ல புண்ணியத்தால்.

391. தானவேசர்-அசுரர்களின் தலைவர். மீக்கொள்-மிக்க புகழைப் பெற்ற. வானநாயகர்-சிதாகாசத்தில் நடிக்கும் சிவபிரான். ஞானதானம்-அறிவுக்கொடை. வீரபத்திரரின் உபதேசம் பெற்றவர்கள் வீரசைவர்கள் என்று சிலர் கூறுகின்றனர்.

392. வரம்கருதி-வீரபத்திரன் சிறப்பைத் தியானித்து. அண்டநாயக-அண்டங்களுக்குத் தலைவனே. முண்டமாலை-பிரம கபாலங்களால் தொடுக்கப்பட்ட மாலை. கறித்திடும்-கடித்துத் தின்ற.

393. சேனைகாவலன்-விண்டுசேனன். ஏன் எனுமல்-ஏன் என்று கூடக் கேட்காமல் (அலட்சியமாக). 'ஏன் என்று கேட்பவர் இல்லாத் தமிழ்' என்னும் தனிப்பாடலையும், வேழம் முதலே என அழைப்ப என் என்ருன், என்னும் நளவெண்பாவையும் ஈண்டு ஒப்பு நோக்குக. கானம்-இசைப்பாட்டு. விகடநாடகம்-விநோதக்கூத்து. அரிமா-கொடிப்புல்கறிக்குமோ. (நாலடி)

இந்தக் கூத்தைச் சிவஞான முனிவர் திறம்படச் சித்தரித்துள்ளார். 'கால் இரண்டும் கரம் இரண்டும் குஞ்சிதமாச்

394 கடித்த வாய்கொடு நகைத்தலு நேமிபோய்க் கடிதின்
படித்த லத்திடை விழுந்தது விழுந்தருள் பருவத்
தெடுத்தொ ளித்தனன் கம்பனூர் கோயின்முன் னிருக்கு
மடற்ப டும்புழைக் கரமுள விபமு கத்தையன்.

395 நாடி வந்தவன் பரவலும் விகடமா நடன
மாடு கென்றன னுடினன் நகைதரு மாடல்
கூடி யேபெரு மகிழ்ச்சியின் சக்கரங் கொடுத்தா
னீடு சேனைகா வலனுந்தன் வைகுண்டம் நேர்ந்தான்.

396 நகையெ னுஞ்சுவைப் பட்டிடு விகடமா நடனந்
தகைபெ றக்கண்டு சக்கர மீதலிற் றந்தி
முகவ னாகிய பிரானுக்குங் காரண மொழியால்
விகட சக்கர விநாயக னெனும்பெயர் விளங்கும்.

397 மாத வன்வரு சேனைகா வலன்றனை மகிழ்ந்தே
யீது வாங்கிய தெவ்வண மரிதரி தென்னப்
பேதி யாமலிந் நடனமே நடித்தனன் பெரிதுங்
காத லாய்முண்டம் நகைத்ததங் கென்றலும் கண்ணன்.

---

செய்துகொண்டு-வரித்த கழல் வீரன் எதிர் வாய் நாசி விழி யிணையை மாறிமாறிச்-சுரித்தசைத்து நடம் செய்தான் எவ்வ மொடுபயங் காட்டி எயிறுதோன்ற (காஞ்சி. விடுவச். 19).

394. நகைத்தலும்-(கூத்தை நோக்கி) பிரம்மகபாலம் சிரித்ததும். படித்தலத்திடை-பூமியில். பருவத்து-சமயத்தில். சக்கரத்தை இபமுகத்து ஐயன் (விநாயகர்) எடுத்து ஒளித்தனன். கம்பன்-ஏகாம்பரன். 'காலகாலனைக் கம்பன் எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே. (சுந்தரர் திருப்பாட்டு) புழைக் கரம்-துவாரம் பெற்றகை. இபமுகம்-யானை முகம்.

395. பரவலும்-புகழ்ந்தஉடன். நடனம் ஆடுக-விநோதக் கூத்தை ஆடுக. சேனைகாவலன்-சேனைத்தலைவன். நேர்ந்தான்-அடைந்தான்.

396. சுவைப்பட்டிடும்-சுவைபெற்றுள்ள. தகை-தகுதி. தந்தி முகவன்-யானை முகத்தை உடைய விநாயகர். தந்தி-யானை. தந்தத்தைப் பெற்றிருப்பது தந்தி. விகட சக்கர விநாயகர் என்ற பெயர் வந்த காரணம் கூறப்பட்டது.

397. அரிது அரிது-அருமை! அருமை! (பிறரால் செய்யமுடி

398 நடன மீதெமக் குவகையா நடனமே நம்பாற்
றிடம தாகிய வன்பரே புரிந்திவண் செய்யக்
கடன தாகவென் றன்பினுற் றழீஇக்கொடு கலந்து
படைகள் யாவுமாம் நேமியை யேந்தினன் பரிவால்.

399 தொக்க பேர்வினை யறுத்தவர் பவத்தையுந் தொலைத்தே
யக்க ணந்தனில் அழிவிலா வீடுதந் தருளு
மிக்க விண்டுசே னேசுரக் கீட்டிசை மேவுந்
தக்க னீசுர மென்பதத் தகைமையைச் சாற்றில்.

### தக்கனீசுரம்

400 பிரம ஞர்பெரி தானவங் குலியிலே பிறந்தோன்
சரத மாகவே தக்கனென் பவனவன் றனைய
ரரசு வாக்களாம் நூற்றுவர் அவர்தமை நோக்கி
விரத நாரத னேதுசெய் வீரென விளம்ப.

401 படைக்கு மாறியாங் கருதின மென்றவர் பகர
வடுக்கு லாவிய பிறவிநோ யறுப்பது மதியீர்
தொடுக்கு மாறிதெ னென்றலு நூற்றுவர் துதித்துத்
தடுக்கு மாதவ வுய்யுமா றென்னெனச் சாற்றும்.

---

யாதது) காதலாய்–விரும்பி. முண்டம்–கபாலம். கண்ணன்-திரு மால்.

398. எமக்கு உவகை-எமக்கு மகிழ்ச்சி தருவது. கடனது ஆக–கடமையாகட்டும். படைகள் யாவுமாம்–எல்லாதவிதமான ஆயுதங்களாகவும் இருக்கும். சக்கரமே திருமாலின், வில்லாகவும், வாளாகவும், கதையாகவும், சங்காகவும் வடிவம் கொண்டது ஆதலின் படைகள் யாவும் ஆம் என்று கூறப்பட்டது போலும்.

399 பேர்வினை-பெரியகர்மம். பவம்-பிறப்பு. கீட்டிசை-கிழக் குத்திக்கு. தகைமை-சிறப்பு.

400. அங்குலி–விரல். தக்கன் பிரம்மதேவனின் கைவிரலில் பிறந்தவன். (தக்கன் பிறப்பைப் பாகவதம் 3 ஆம் கந்தம்) சனகாதியர் தோற்றம் உரைத்த அத்தியாயத்தில் 9 ஆம் பாடலிற் காண்க, அரசுவாக்களாம் நூற்றுவர்-பட்டத்து யானை போன்ற நூறு புதல்வர்கள். 'தாக்கின அரசுவா தம்முள் என்பவே. (சிந்தாமணி. மண்மகள். 130)

401. யாம் படைக்கு ஆறு கருதினம் எனப் பிரித்துக்கூட்டுக.

402 அறுதி யாகவே காஞ்சியம் பதியினை யடைந்து
வறிதி ராதன பூசனை புரியவே மதித்துப்
பெறுதிர் முத்தியை யென்றனனாற்றுவர் பெயர்ந்தார்
உறுதி யாகவே காஞ்சியை யடைந்தன ருற்றார்.

403 அக்க ணஞ்சிவ பூசைசெய் தரனையே யடைந்தார்
தக்கன் மற்றுமோர் நூற்றுவர்ப் பெற்றனன் றனையர்
புக்க நாரதன் வாக்குநன் னெறியையே புகுத்த
துக்க மாம்பிறப் பறுத்தனர் சிவனையே துதித்தார்.

404 தனையர் மாறுபட் டென்வழி வராமலே தடுத்தான்
வினைய நாரத னென்றவன் தனைமிக வெறுத்துப்
புனித மாமகஞ் சிவன்றனை யன்றியே புரிவ
னினியெ னுத்தக் கன்மா மகமியற்ற வேயியைந்தான்.

---

படைக்கும் தன்மை. வடுக்குலாவிய-குற்றம் நிரம்பிய. இது-இத் தொழில். தொடுக்கும் ஆறு—கட்டுக்களை உண்டாக்கும் வழி. தடுக்கும்- (படைக்கவேண்டாம் என்று) தடை செய்யும்.

402. அறுதியாக-முடிவாக. வறிது இராதன-வீண்போகாத. அடைந்தனர் உற்றார்-அடுத்து வாழ்ந்தனர். அடைந்தனர்-முற்றெச்சம்.

403. மற்றும் பிறரும். வாக்கு—வார்த்தை. (எழுவாய்) நன்னெறியையே—நல்லவழியில் (உருபுமயக்கம்) பிறப்பு அறுத்தனர்—பிறப்பாகிய கயிற்றை அறுத்தார். அறுத்தார் என்பதற்கு ஏற்பப் பிறப்பைக் கயிறு என்று கூறுமையால் ஏகதேச உருவகவணி.

நாரதன் தக்கன் மக்களிடம் கூறிய மொழியைக் கந்தபுராணம் நயமுறப்பேசும். சிறப்புள அருந்தவம் செய்து நீர் இனி-உறப்படு கதிமறை உரைப்பக்கேட்டிரால்-பிறப்புளது: இடருளது: அல்றிப் பின்னரும்-இறப்புளது: அது நுமக்கு இனிய தாகுமோ? பற்றொடு முழுதுயிர் படைக்கும் பான்மையால்-பெற்றிடும் பயன் எவன் பெருமையல்லது-நற்றவ முனிவர்காள்! நன்கி தென்றொரு. பொற்றனை தம்பதம் பூட்டல் ஆகுமோ? எத்துணை எத்துணை இன்பம் வேண்டுனர்க்கு—அத்துணை அலக்கண்வந்து அடையும். (தட்ச காண்டம். தக்கன்மகப்பெறுபடலம்)

404. வினையநாரதன்-வஞ்சகநாரதன். மாமகம் – சிறந்த யாகம். சிவபிரானை வெறுத்துத் தக்கன் யாகம் செய்தான். இக் கதையின் விரிவை, கந்தபுராணம், பாகவதம், தக்கயாகப்பரணி முதலானவற்றில் காண்க.

405 எக்கி னப்பதப் பொருள்சிவன் மகத்தினுக் கிறைவ
னெக்கு மென்றறி தராமலே தேவரா யுள்ளோர்
தக்க மாதவ ரரியயன் யாவருஞ் சமைந்தே
புக்கு மாமகம் புரிந்தது மழிந்ததும் புவியில்.

406 அதிக மாகவே யறிகிலா ரெவரது தன்னை
விதியி னுல்விரித் துரைப்ப தென்னூலெலாம் விளம்புந்
ததீசி மாமுனி நந்தியெம் பிரானிடு சாபம்
புதிய தோவவை தவறுமோ சிலாலிபிப் பொற்பால்.

407 மகமு மன்னவர் மானமு மழிந்து போய் மகத்தில்
றிகைதரப் பொருந்தான வராற்றுயர் செறியும்
பகுதி நாடியே காஞ்சியம் பதியினைப் பரவி
யகில தேவரோ டுற்றனன் தக்கனங் கடைந்தான்.

408 அரசு வாக்களாந் தனையர் பூசித்திடு மங்கண்
பரவி யேயொரு சிவனுரு வமைத்தனன் பணிந்தான்
விரவி யாவரே யடையினும் வெறுப்பனோ விமலன்
இருமை சேர்கண நாயகத் தலைமையே யீய்ந்தான்.

---

405. எக்கு இனம் பதம் பொருள்-என்று பிரிக்க. எக்கு-மேலான. இனம்-கூட்டமான. பதம்-வேதம், பொருள்-(கூறப்பட்ட) பரம்பொருள். (எக்கு-தெலுங்குச் சொல்) ஐயர்அவர்கள் பரிபாடலில் இதைக் குறிப்பிட்டுள்ளார். அறிதராமல்-அறியாமல்,

406. அறிகிலார் எவர்-தெரிந்து கொள்ளாதவர் யாவர்? என்-என்னபயன்? சிலாலிபி-கல்லில் எழுதப்பட்ட எழுத்து. ததீசி மொழியையும் நந்தியின் சாபத்தையும் கந்தபுராணத்தில் தட்சகாண்டத்திற் காண்க.

407. மானம்-பெருமை. புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் (தொல்-அகத்திணை. 47) நச்சர் உரைகாண்க. திகைதர-திகைப்பு உண்டாக. தானவர்-அசுரர். (சூரபன்மா முதலானவர்.) அகில தேவரோடு-எல்லாத் தேவர்களுடன்.

408. அரசுவா-பட்டத்துயானை. விரவி-மனம் ஒன்று பட்டு. யாவரே அடையினும்-எவர் அடைக்கலம் புகுந்தாலும். வெறுப்பனோ-வெறுத்து ஒதுக்குவானோ? இராமபிரான் விபீடணன் அடைக்கலம் வேண்டிவந்தபோது கூறிய மொழிகள் இங்கு நினைவுக்கு வருகின்றன. ஈய்ந்தான்-கொடுத்தான். (சாசன வழக்கு நோக்குக) ஈந்தான் என்று திருத்தற்க.

### அசுரேசம்

409 அன்ன தக்கனீ சுரத்தய லசுரேச மாகும்
முன்னு காமிகம் வீடெனச் சிவனன்பு முடியும்
பன்னு காமிக பரமர்பா லுருமலப் பாலாய்
மன்னி நின்றுபின் வீட்டினுக் கேதுவாய் வளரும்.

410 பார வீடுறு மன்புதான் சத்தினி பாத
நீர தாயுட னேமுத்தி பெறவரு நிலேத்தாம்
வார மாகிய புரத்துளோர் காமிக மருவ
நார தாதியர் மோகத்திற் பிரிந்தனர் நடுங்கி.

411 முந்து மப்புரத் துள்ளவ ரவரலான் மூவர்
சுந்த ரந்திகழ் சுசீலனே சுகன்மனே சுபுத்தி
யிந்த மூவருஞ் சத்தினி பாதவம் பயின்றார்
விந்த மாமவர் சூழ்ச்சியாற் பேதியா விறலோர்.

---

இக்கதையைச் சிவஞான யோகிகள் சிவபரத்துவம் தோன்ற 73 கவிதைகளால் பெருமிதத்தோடு பாடியுள்ளார்.

409. சிவன் அன்பு, காமிகம், வீடு என முடியும் என்று கூட்டுக. காமிகம்-பயன் கருதிப் பூசித்தல். வீடு-முத்திவேண்டிப் பூசித்தல் (இதனை நிஷ்காமியம் என்பர். கீதையைப் பார்க்கவும்). அப்பாலாய்-முத்திக்கு அப்பாற்பட்டதாய். வீட்டினுக்கு-முத்திக்கு. ஏதுவாய்-காரணமாக.

410. பாரவீடு-பெருமைக்குக் காரணமான முத்தி. சத்தி நிபாத நீரதாய்-திருவருட்சத்தி பதியும் தன்மை உடையதாய். சத்தி நிபாதம் என்பது திருவருட்சத்தி பதிதலாகும். சத்தியின் விளக்கம் ஆன்ம அறிவின்கண் உண்டாதல். கவியரசர் பாரதியார் 'வேதமாய் அதன்முன் உள்ள நாதமாய் விளங்கும் இந்த-வீரசக்தி வெள்ளம் வீழும் பள்ளம்-ஆக-வேண்டும் நித்தம் என்றன் ஏழை உள்ளம்' என்று அனுபூதியிற்கண்டு பேசியதைப் பலர் அறியார். சிலர் அறிவர். ஆராய்க.

411. சுசீலன், சுகன்மன், சுபுத்தி, என்னும் மூவரும் சத்தி நிபாதம் பெற்றவர். பேதியா-மயக்கம் அடையாத. விறலோர்-ஆற்றலுடையவர்.

412 நாதன் முப்புர மெரித்தநா ளவன்றிரு நகைத்தீ
பேதி யாதிந்த மூவரை விட்டது பிரானுங்
காத லேதென மூவரை வினவினன் கடிதி
னோதி னாரெம துடல்விடா திறைவனே யுன்பால்.

413 அன்பு மேவியுன் றளித்திரு வாசல் காத்தடையு
மின்ப மேயரு ளென்றனர் பின்னுமொன் றிசைத்தார்
வன்ப ரேனுமுப் புரத்தருன் பூசனை மதித்தோர்
துன்பு தீர்த்தரு ளென்றனர் தொழுதனர் துதித்தார்.

414 ஏது வேண்டினு மெய்துவீர் காஞ்சியை யெய்திப்
பூதி சாதனம் பொலிவுற வருச்சனை புரிமின்
காதல் யாவதுந் தருதலங் காஞ்சிநீர் கடிதிற்
போதும் வேண்டிய தெய்திடு மென்றனன் புராணன்.

415 எரிந்து போனமுப் புரத்தரும் யாதனா சரீரத்
தரந்தை தீரவே யருச்சனை புரிந்தன ரடைந்தார்
பரிந்த வீசன்ற னன்பெது வாயினும் பழுதா
யிரிந்து போவதோ? பின்னரு நன்மையே யியற்றும்.

---

412. 413. விட்டது-எரிக்காமல் விட்டு விட்டது. காதல்-விருப்பம். தளி-கோவில். கச்சிப்பல தளியும் ஏகம்பத்தும் கயிலாய நாதனையும் காணலாமே. (தேவாரம்) முப்புரத்தில் தப்பியவர் கோவிலில் காக்கும் பணியைக் கேட்டனர். வன்பரேனும்-கொடியவராய் இருந்தாலும். புரத்தர்-முப்புரத்தைச் சேர்ந்தவர், வளைந்தது வில்லு: விளைந்தது பூசல்: உளைந்தனமுப்புரம்-உந்தீபற: ஒழுங்குடன் வெந்தவாறுந்தீபற. உய்யவல் லார்ஒரு மூவரைக் காவல் கொண்டு எய்யவல்லானுக்கேஉந்தீபற-இளமுலை பொங்க நின்று உந்தீபற (திருவாசகம், திருவுந்தியார்)

414. எய்துவீர்—அடைவீர். பூதிசாதனம்-திருநீறு, உருத்திராக்கம் முதலான சிவசின்னங்கள். கோவணம் பூதிசாதனம் கண்டால் தொழு தெழுகுலச்சிறை (சம்பந்தர்-திருக்கடைக்காப்பு) காதல் யாவதும்-விரும்பிய எல்லாவற்றையும். போதும்-செல்லுங்கள். புராணன்-பழையவன். (சிவபிரான்).

415. யாதனாசரீரம்-நரகத்தை அனுபவிப்பதற்கு உரிய உடம்பு. உடம்பு மூவகைப்படும். 1. பூதவுடம்பு. (பூமிக்கு உரியது) 2. பூதசார உடம்பு (சுவர்க்கத்துக்கு உரியது) 3. யாதனா உடம்பு

416 மூவர் பூசனை முற்றினூர் பரமனூர் முனிந்த
பாவ காரியர் தமையுமீ டேற்றினர் பரிந்தே
மாவின் மூலமாய்ப் பராபர வடிவமாய் மன்னுந்
தேவர் வாயில்கா வற்றிறம் பூண்டனர் சிறந்தார்.

### திரிபுரேசம்

417 ஆன மூவெயி லுள்ளவர் பூசனை யாற்றும்
பான்மை யாலெயிற் கோட்டமாங் காஞ்சியம் பதியின்
மேன்மை நீடிய சருவதீர்த் தத்திடை மேல்பால்
வானர் போற்றுமத் திரிபுரே சந்தனி மன்னும்.

### இரணியீசுரம்

418 வீடு கண்டவர்க் கருடிரி புரேசமாய் விளங்கும்
மாடு கீட்டிசை யிரணியீ சுரமென வயங்கு
நீடு காசிபன் புதல்வனு நிசாசர னிமையோ
ரோடு சீற்றஞ்செ யிரணிய னென்பவ னொருவன்.

419 குரவ னாகிய வெள்ளிபா லடைந்தனன் குறுகித்
தரணி யேமுத லனைத்துள புவனமுந் தாங்கி
யரசு செய்வதற் காகிய விரதமொன் றறைவாய்
சரத முன்மொழி யென்றலுஞ் சுக்கிரன் சாற்றும்.

---

(நரகத்துக்கு உரியது) அரந்தை-துன்பம். அன்பு பழுதாய் இரிந்து போவதோ—அன்பானது வீணாகிச் சிதைந்துபோகத்தக்கதா ?

416. பாவகாரியர்-பாவத்தைச் செய்தவர். ஈடேற்றினர்-உய்வடையச்செய்தார்' இறைவனுக்கு இருநிலை உண்டு. 1- சுகளம். 2. சகளம். மாவின் மூலமாய் என்றது சகளத்தை-பராபரவடிவம் என்றது சுகளத்தை. சுகளம்-சொரூபம். சகளம்-தடஸ்தம்.

417- மூஎயில் முப்புரம். சருவதீர்த்தத்திடைமேல்பால்-சர்வ தீர்த்தத்துக்கு மேற்குப் பக்கத்தில். வானர்-தேவர்.

418 வீடு-முத்தி, மாடு—பக்கம். நிசாசரன்-அசுரன், நிசா-இரவு. சரன்-சஞ்சரிப்பவன். நிசாசரன்-இரவில் சஞ்சரிப்பவன். சீற்றம்செய்-கோபம் கொள்கின்ற.

419 குரவன்-ஆசிரியன் அனைத்துளபுவனமும்-எல்லா வுலகங்களையும். உன்மொழி சரதம்-உன் வார்த்தை உண்மை ஆகும்.

வேறு

420 புத்தி முத்தி யகில மெலாம்
புரக்குமர சளவுபடாப் புகழ்மை ஞானஞ்
சித்திபல கலையழியா வுடலெவரும்
போற்றவருஞ் சிறப்பி யாவு
முத்தமமாஞ் சிவபூசை யல்லாமன்
மற்று மொன்றிங் குதவற் பாற்றோ
எத்தகைய வயன்முதலோர் தமதுபதம்
பெற்றதெலா மிதனு லன்றோ.

421 ஒருதனிமா நிழற்காஞ்சித் தலத்தினிடை
யேபுரிந்தா லுடனே யெண்ணாந்
தருமதனுற் றிருக்காஞ்சிப் பதியணுகிச்
சிவபூசை தனையே முற்றிப்
பெருமைபெறு தலைமையெலாம் பெறுதியென்று
னிரணியனும் பெயர்ந்து நீங்கி
மருவியதன் மனைதனையர் சுற்றமுடன்
காஞ்சியிடை வந்து சார்ந்தான்.

422 தனையரெலாந் தத்தமது பேராலே
சிவலிங்கஞ் சமைத்தார் : கல்வி
வினையமுட னிரணியனுங் கனகமணி
மயமாக விதித்தான் கோயில் :
புனிதமுறு சிவலிங்கம் அமைத்தினிய
வருச்சனையற் புதத்தான் முற்ற
அனகனவன் முன்னின்று னிரணியற்கு
வேண்டுவர மளித்தா னன்றே.

---

420. புத்தி, முத்தி, புகழ், ஞானம், சித்தி, பலகலை, அழியா வுடல், சிறப்பு யாவும் சிவபூசையல்லாமல் மற்ற செயல்கள் உதவுமா ? இதனுல்-இந்த சிவபூசையால்.

421. மாநிழல்-மாமரத்தின் நிழல். மனை-மனைவி. தனையர்-புதல்வர், இரணியன், மனைவியுடனும், புதல்வர்களுடனும், சுற்றத்துடனும் காஞ்சிபுரத்தை அடைந்தான்.

422. தனையர்–புதல்வர்கள். சமைத்தார்-அமைத்தார் கல்வி வினையம்-சிறப்பக் கல்வியின் தொழிலால். கோவில் மணிமயமாக விதித்தான். விதித்தான்-படைத்தான். அனகன் சிவபிரான். அன்றே-அசை.

## நாரசிங்கேசுரம்

423 இரணியவே சுரகுடபா னரசிங்கே
சுரமெனவொன் றினிய தானம்
வரமுறுமக் கனகனிமை யவரையெலாம்
வாட்டிமிக வருத்துங் காலை
தரணியுரு வாகியமா லக்கனகன்
றனையடவே சமைத்தான் மிக்க
நரவரியா யடர்த்தவன்தன் குருதியெலாம்
பருகிமத நண்ணி னானே.

424 மதத்தநர மடங்கறனை யரன்சரப
வுருவாகி வான்மீச் சென்றே
யதிர்த்திடலு நரமடங்கல் பெருஞான
முற்றரனை யருச்சித் தேத்திப்
பதிக்கணிடம் நாரசிங்கே சுரமெனவே
பெரிதாகப் பதியாய் நிற்கு
மிதற்கினிய தென்பாலாய் வராகீச
மெனத்திகழு மியம்பக் கேண்மின்.

---

423. குடபால்-மேற்குப் பக்கம். வரம் உறும்-சிறப்புடன் இருக்கும். கனகன்-இரணியன். தரணி உருவாகிய-உலகமாகிய. நரஅரி-நரசிங்கம். ஏனம் ஆகியும் நரவரியாகியும் (வில்லி. உத்தி). அடர்த்து கொன்று. மதம்-செருக்கு.

424. நரமடங்கல்-நரசிங்கம். சரபம்-எண்காற்புள். சரப புராணம் இதன்வடிவைப் படம் பிடித்துக் காட்டுகிறது. (தமிழ் இலக்கிய வரலாறு. 16 ஆம் நூற்றாண்டு-முதற்பாகம். 269 ஆம் பக்கம் பார்க்கவும்) அதிர்த்திட-அதட்ட. பதிக்கணிடம்-காஞ்சிபுரத்தில். பதியாய்-தலைமைபெற்று,

## வராகீசம்

### வேறு

425 தருக்குமிர ணியக்கண்ண னென்று மற்றோர்
தானவனங் குளனானான் : தவத்தி னாலே
பெருக்கும்வலி பேற்றுடையான் : ஒருவராலும்
பேர்க்கவொண்ணா வரமுடையான்: பெரியோர் தம்மை
நெருக்கிவரு நாட்புவியாந் திருவைப் பற்றி
நெடுநிலைப்பா தலம்புகுந்து நிலாவ மாயன்
பருக்களிசே ரேனமெனும் படிவ மாகிப்
பார்கீண்டு பாதலத்திற் படர்ந்தா னன்றே.

426 பொன்னனைய கண்ணனைக்கூர் மருப்பா லெற்றிப்
பூமியெனுந் திருவினைப்பொற் புறக்கொண் டேகித்
தன்னிகரி லாததற்ப மதுமீக் கொண்டு
தரைமுழுது முழுதுழுது தாக்க லோடு
மென்னெனவே சிவனுமொரு கிராத வேட
மெய்தியதன் மருப்பொசித்தங் கெழில தான
மின்னுமணி யெனப்புனைந்தான் ஏனமான
விறலரியு மகந்தையினை விடுத்தே சென்றான்.

---

425. தருக்கும்-செருக்குக் கொண்ட. இரணியக்கண்ணன்-இரணியாட்சன். தானவன்-அசுரன். பேர்க்க ஒண்ணா-அசைக்க முடியாத. புவியாம் திரு-பூமிதேவி. இங்கே திரு என்றது தேவி என்ற பொருளைத் தந்து நின்றது. பருக்களிசேர்-பெரியமதம் கொண்ட. ஏனம்-வராகாவதாரம்.

426, மருப்பால்-கொம்பினாலே. எற்றி-தாக்கி (கொன்று). பொற்புற-அழகாக. தற்பம்-செருக்கு. 'தற்பத்தைத் துடைத்த என்றால் பிறிதொருசான்றும் உண்டோ'. (கம்பன்-யுத்த. கும்ப) கிராதவேடம்-வேடவடிவம். எழிலதான-அழகான. விறல்அரி-ஆற்றல்மிக்க திருமால்.

## அந்தகேசுரம்

427 பவமனைத்து நீக்குதிருக் காஞ்சியான
பதியணுகிச் சிவனுருவு பரிந்து போற்றி
விவிதவுரு வடைந்தனன் : பின்னிப் பாலாய்
மேவுமந்த கேசுரம் : பொன் விலோச னன்றன்
தவமதனாற் றருதனைய னந்த கேசன்
தானவனும் அவன்கொடுமை தலைமேற் கொண்டே
யெவரையும்வென் றகிலமெலாந் தானே கைக்கொண்
டிருந்தரசு புரிவதுகண் டிமையோ ரெல்லாம்.

428 அரிய துநா மாணுருவை யடைத லென்றே
யவைநீத்துப் பெண்ணுருவ மதனை மேற்கொண்
டுரியசிவன் கயிலைமலை யதனை மேவி
யொளித்தனரஞ் சினர்புரியா துண்டோ வந்நாள்
பரிவுபெறச் சிவன்திருவோ லக்கந் தன்னிற்
பாவையரா மிமையவர்கள் பராவ வெங்குந்
திரிதருமந் தகன்கண்டான் காதல் கூர்ந்தான்
தீயவனக் கயிலைதனைச் செறியும் போதில்.

---

427. பதிஅணுகி-பதியை அடைந்து. அடைந்தது வராகம். விவிதவுரு-வேறுபட்ட வடிவத்தை. (பழைய கொம்புடன் கூடிய வடிவம்) இப்பால்-இப்பக்கத்தில். அந்தகேசுரம் மேவும் எனக் கூட்டுக. பொன்விலோசனன் - இரணியாட்சன். விலோசனன்-கண்ணையுடையவன். இரணியாட்சன் மகன் அந்தகேசன்.

428. தேவர்கள் அந்தகேசனுக்குப் பயந்து பெண்ணுருவம் ஆனார்கள். அரியது- (வாழ்வது) முடியாது. அவை-அந்த ஆண் வடிவங்களை. அஞ்சினர் புரியாதது உண்டோ? -பயம் கொண்டவர்கள் மேற்கொள்ளாத தாழ்வுகள் உள்ளனவா? தீயவன் அக் கயிலைதனில் செறியும் போதில், பாவையராம் இமையவர்களைக் கண்டான். காதல் கூர்ந்தான் என மாற்றுக.

429 மாயனது காண்டலுமெம் பிரானை யன்பால்
வணங்கியுரைத் தலுமிறைவன் மதித்து நோக்கி
நாயகமெய்த் தலைமைபுனை வயிர வேச
நாகர்குல மதுநடுங்க நணுகு மந்தத்
தீயவனைச் செற்றிடென்றான் சினத்துச் செந்தீச்
சிகைகதுவு முக்குடுமிச் செவ்வே லோச்சி
யேயெனுமாத் திரையிலந்த கனைக்கூற் றெற்றி
யெழுந்தனன்வெற் றரைப்பெருமாற் கிஃதோ
மேன்மை.

430 வரகயிலை மருங்கடைந்த நலமோ வெங்கள்
வயிரவர்தன் னுருவுகண்ட வளமோ வன்னார்க்
குரியதொரு மூவிலைவே றீண்டு மப்பே
றுடைமையோ நிசாசரனும் ஒருவர்க் கந்நாட்
பரனருளாற் சத்திபதி யறிவு கூடிப்
பயிரவவெம் பிரான்கருணை பலியென் றோத
விரவியடைந் தவர்க்கருள்வோன் அன்னோன் தன்னை
வேண்டியதே தெனவவனும் விளம்ப லுற்றான்.

---

429. மதித்து-திருமாலின் மொழிகளை ஏற்றுக்கொண்டு. நாகர்குலம்-தேவர்குழு. செற்றிடு-அழிப்பாயாக. செந்தீச்சிகை கதுவும் முக்குடுமிச் செவ்வேல்-நெருப்பின் கொழுந்து பற்றியுள்ள மூன்று தலையுடன் கூடிய வேல். ஓச்சி-செலுத்தி. ஏயெனும் மாத்திரையின்-ஏ என்று கூறுவதற்கு முன்பு. ஏ என்பது குறுகிய கால அளவைக் குறிக்க வந்தது. பரதன் கைகேசியை முனிந்து 'ஏயெனும் மாத்திரத்தெற்று கிற்றிலேன்' என்பான். கூற்று எற்றி-எமனை உதைத்ததுபோல் உதைத்து.

430. அந்தகாசுரன் சத்திநிபாதம் பெறுகின்றான். அதன் காரணங்கள்யாவையோ என்று ஆராய்கிறார் ஆசிரியர். கயிலை அடைந்த நலமோ? வயிரவமூர்த்தியைத் தரிசித்த பலனோ? அவரது வேல்தீண்டியபேறோ? என்று வினவுகிறார். நிசாசரன், என்றது நற்பேற்றுக்குத் தகுதியின்மையைக் குறிக்க. கருணைபலி-கருணையை வழங்கு. அடைந்தவர்க்கு-சரண்புகும் தொண்டர்களுக்கு. கூர்மபுராணம் பார்க்கவும்.

431 இறைவவுனை யடைந்தவெனக் கருள்வாய் வீடே
யென்றலுமப் பிரான்முத்தி யெளிதி னீயும்
உறையுடிருக் காஞ்சியலா துண்டோவென்றே
யொளிதருகூ லத்திலவன் உறவே கொண்டு
கறைமருவு கண்டனமர் காஞ்சி மேவிக்
கருதுசிவ கங்கையந்த கனைநீ ராட்டி
யறைதருமர்ச் சனைபுரிவித் தானன் றேனு
மந்தலிங்கந் தனிலயிக்க மடைந்தா னன்றே.

வேறு

நாற்பத்தெண்ணுயிரவீசுரம்

432 தாருக முனிவ ரான
தாபத ரியாரும் வேள்விக்
காருகம் பிரம மென்றே
கனத்திடு தவத்தி னுற்றப்
பேரகங் தையினுன் மாதர்
பெரும்பதி விரதந் தன்னு
லாரணி யரனை யுன்னு
தயர்த்தன ரொழுகு நாளில்.

---

431. வீடே அருள்வாய்-முத்தியையே கொடுப்பாயாக. உறையுள்–ஸ்தலம். சூலத்தில் அவன்உற-சூலத்தின் உச்சியில் அவன் இருக்க. கறை–விஷம். நீராட்டி, அர்ச்சனைபுரிவித்தான். அயிக்கம்-ஐக்கியம். (கலத்தல்) 'அங்கலிங்கம் அயிக்கம் இது என-மங்கலந்தரு மாமறை'. என்பர் சிவப்பிரகாசர். (பிரபுலிங்க லீலை).

432. தாருகமுனிவர்–தாருகாவனத்து முனிவர்கள். வேள்விக் காரகம்-யாகவினை. ஆற்ற-மிகவும். முனிவர்கள் பூர்வமீமாம்ஸகர். அவர்கள் கர்மமே தெய்வம் அதற்கு மேல் எதுவும் கிடையாது-கர்மமே பலனைக் கொடுக்கும் என்று கருதுபவர்கள். பதிவிரதம்-பத்தினித் தன்மை. ஆர்-ஆத்தி. அயர்த்தனர்-மறந்தார்கள்.

433 ஆருயி ரனைத்து முய்வா
னஞ்செனுங் கருமஞ் செய்வான்
பாரிலிம் முனிவர்க் குண்மைப்
பயனறி வுறுத்தி யாள்வான்
பேரணி மதனன் போற்றும்
பேரழ கினைமேற் கொண்டான்
சீரணி செக்கர்க் குஞ்சி
திருப்புறந் திகழ்ந்து சூழ.

434 காதணி குழையு நீறு
கண்டியின் வடமு நூலுஞ்
சோதிசெய் கபாலஞ் சூலந்
துடியமை தோளுந் தாளிற்
பாதுகை யழகுஞ் செய்ய
படிவமு முடிவி லாத
பேதைய ருயிரை யுண்ணு
மூரலும் பிறழ்ந்து தோன்ற.

435 விழிபுரி விகார லீலை
விரகி ஞன்முனி வராவி
யழிதர மோகி னிப்பெண்
ணுகமா லருகு போத
மொழிதரு பலிவி னவி
முனிவரா சிரமஞ் சேர்ந்தான்
பழிதரு காதல் கூர்ந்தே
பன்னி யரழி வதானர்.

---

433. உய்வான்-உய்யும் பொருட்டு, அஞ்சு எனும் கருமம்-படைப்பு, காப்பு, அழிப்பு, அளிப்பு, மறைப்பு. அறிவுறுத்தி-அறிவிலே தங்கச் செய்து. செக்கர்க்குஞ்சி-சிவந்த சடை. திருப்புறம்-அழகிய முதுகு.

434. சிவபிரானின் கோலம் பேசப்படுகிறது. குழை-குண்டலம். கண்டியின்வடம்-உருத்திராக்கமாலை. துடி-உடுக்கு. மூரல்-புன்சிரிப்பு. பிறழ்ந்துதோன்ற-விளங்கித் தெரிய.

435. விகாரலீலை-காமத்தை உண்டுபண்ணும் விளையாட்டு. ஆவிஅழிதர-உயிர்நிலைகுலைய. மோகினிப் பெண்ணுக-மயக்கும் மங்கையாக. மால்-திருமால். போத-போக. பலிவினவி-பிச்சை கேட்டு. பன்னியர்-பத்தினிகள், அழிவதானர்-மனம் சிதைந்தனர்.

436 மாயமோ கினிப்பெண் ணூலே
மவுனர்தந் தவஞ்சாய் வுற்றார்
ஆயது தெரிந்தே யாரு
மயர்வுசெய் தீய வேள்வி
மேயினர் புரிந்தார் சாபம்
விதித்தன ரவைகள் யாவுந்
தூயவர்க் கணியே யாகத்
துளங்கினர் நாண்மீக் கொண்டார்.

437 ஈசனே நன்மை தீமை
யியற்றுவான் எவர்க்கும் என்றும்
நாசமி லாதான் தன்பா
னண்ணுமோ வறிவி லாதோர்
பேசிய சூளுந் தீய
பிறபொரு ளெவையும்? அந்தோ
நேசனே பின்னு மன்னோர்
வினையிருள் நீக்கி னானே.

---

436. மவுனர்-பேசாதவர்கள். சாய்வுற்றார்-தோற்றார். யாரும் அயர்வு செய்-எவரையும் மயங்கப்பண்ணும். மேயினர் புரிந்தார்- விரும்பிச் செய்தார்கள். அவைகள் தூயவர்க்கு ஆபரணம் ஆயிற்று.

ஆசிரியர், முனிவர்களின் வேள்வித் தீயிலிருந்து புறப்பட்ட முயலகன், பாம்பு, மான், மழு முதலானவை பெருமானுக்கு அலங் காரமான தன்மையைக் குறிப்பாற் கூறினார். சிவஞான முனிவர், கச்சியப்ப சிவாசாரியர் முதலானோர் விரித்துக் கூறி உள்ளனர். துளங்கினர்-நடுங்கினார்கள்.

437. நன்மை தீமை இயற்றுவோன் ஈசனே அறிவில்லாதார் பேசியசூளும், தீய பிற பொருள் எவையும் நாசம் இலாதான் தன் பால் நணுகுமோ? அந்தோ! பின்னும் அன்னோர் வினை இருள் நீக்கினான்; எனக் கொண்டு கூட்டுக.

எவர்க்கும்-யாவர்க்கும். உம்மை-முற்றும்மை. சூள்-சபதம். பின்னும்-வேள்வி செய்து, புலி மழு முதலானவற்றை ஏவிய பிறகும். இருள் நீக்கினான்-அறியாமையைப் போக்கினான். இங்கே இருள் என்றது கருமமே கடவுள் என்ற கொள்கையை. வினைக்கு மேலே (அவற்றைத் துய்க்கப்பண்ணும்,) இறைவன் உண்டு என்பதே இருள் நீக்கியதாகும்.

438 அய்யனே யிரங்க ஞான
மடைந்தனர் முனிவர் யாருஞ்
செய்யனே போற்றி யாஞ்செய்
தீமைகள் பொறுப்பாய் போற்றி
யுய்யுமா றெவர்க்கு முத்தி
யுதவுவாய் போற்றி யென்றார்
மையல்போம் அவர்க்கு முத்தி
வழங்குதல் குறித்து நாதன்.

439 எளிதுநன் முத்தி யீயு
மிரும்பதி காஞ்சி மூதூர்
கிளர்தரு பறவை நாற்காற்
கீடமே முதலி யாவு
வளனுறு மங்கண் மேவி
மரித்திடின் முத்தி கூடு
முளமுற முனிவர் கேண்மி
னுண்மையீ துண்மை யீதால்.

440 என்றலு நாற்பத் தெண்ணு
யிரவரில் வாழ்க்கை யாவு
மொன்றொழி யாம லேகி
யுமைதிருக் காஞ்சி மூதூர்
வென்றிசேர் தமது பேரால்
வேறுவே றிலிங்கங் கண்டா
ரின்றது பார்மி னந்தத்
தலமெலா மிலிங்க மாமால்.

---

'செயல்களே பலத்தைச் செய்யும்: தெய்வம் வேண்டா: இங்கு என்னில்-முயலும் இச் செயல்கள் இங்கு முழுவதும்' அழியும்: எங்கே பயன் அளிப்பவன் அழிந்தே பயன்களைப் பண்ணும்' என்று சித்தியாரும், 'அடுத்தவினை உளது: ஆயின் இறை ஏன் என்னில் அசேதனம் மற்று அவை' என்று சிவப்பிரகாசமும் கூறுவனவற்றை நினைவு கூர்க.

438. செய்யனே!-செம்மையானவனே செம்மையாவது பிறர் குற்றத்தை மன்னித்தல் மையல்போம்-மயக்கம் நீங்கிய.

439. நாற்கால்-விலங்கு, கீடம்-புழு. கூன்மதிச் சடிலக் குன்ற வில் குளவி மாலறி யாத மலர்வாய்ப்பட்ட-சீடக்கீடம். திசைமுகன்-அறியா-முடியா இன்ப முடிபெற்றனவே. (வள்ளலார் சாத்திரம். சத்திய ஞான போதம் உபதேசவியல். 17)

440. இல்-மனைவி. வாழ்க்கை-வாழுதல். யாவும் மற்றைய

### வாணேசுரம்

441 மற்றொரு தான மங்கண்
வாணனு மசுரன் பூசை
முற்றினன் : போற்ற லோடு
முன்னவ ரவர்க்கு நல்கக்
கொற்றவ னுடற் கேற்பக்
குடமுழா வொலிக்கும் பேறு
பற்றியே யுலக மெல்லாம்
பரித்திடும் வாழ்வு பெற்றான்.

### ஓணகாந்தனீசுரம்

442 திருத்தளி யதன்கீழ் பாலாய்த்
திறல்பெறு வாணன் வாயிற்
கருத்தர் தானவர்க ளோணன்
காந்தனென் றிருவர் தீர்த்தம்
பொருந்திடத் தொட்டு நாதன்
பேருரு வமைத்துப் போற்ற
அருத்தியாற் சிவன்முன் னின்றான்
அவர்வரங் கேட்ப தானார்.

---

பொருள்கள். ஒழியாமல்-விடாமல் உமைதிருக்காஞ்சி-உமா தேவிக்கு உரியதான காஞ்சி.

441. தானம்-இடம். பூசை முற்றினன்-பூசையை நிறைவு செய்தான். ஆடற்கு ஏற்ப-ஆடுவதற்குப் பொருந்த. குடமுழா–குடமாகிய மத்தளம். உலகம் எல்லாம் பரித்திடும் வாழ்வு-எல்லா உலகத்தையும் பாதுகாக்கும் அரச வாழ்வு. வாணன் குடமுழா முழக்கியவை 'குடமுழ விருகரங் குலுங்கத் தாக்குதோ-றடர் பெருங் கருணைகூர்ந் தடிகள் ஆயிரம்-தட நெடுங் கரம்பெற நல்கித் தானவ-விடலை நீ வேட்டது விளம்பு கென்றலும்'என்னும் பாவால் சிவஞான முனிவர் பேசினார். இக் கதையைச் சிவபரத்துவம் நிலை நாட்டும் கருவியாக ஆக்கி மிக விரித்துப் பேசினார். காவியரசம் நிரம்பி உள்ளது. (சிவஞான முனிவரின் காஞ்சிப் புராணம் காண்க).

442. திருத்தளி-வாணேசுரம். வாயிற் கருத்தர்-தூதுவர் களுக்குத் தலைவர். வாசல் காப்பவர்களுக்குத் தலைவர் என்றும் கூறலாம். வாயில் என்ற சொல் 'வாயில் விடாது கோயில்புக்கு' என்ற (புறம்) இடத்தில் வாசல் காப்பானைக் குறிக்கிறது. வயந்த

443 இவ்விடை குளனெம் பேரா
லியன்றிட விவற்றி லொன்றே
பவ்வம தகற்றி வீடு
பலிக்கவும் வேண்டு மென்றுங்
கவ்வையிற் காஞ்சி மூதூர்
காத்திடும் பேறும் வேண்டுஞ்
செவ்விதி னருணீ யென்றார்
சிவனுமங் கருளிச் செய்தான்.

### சலந்தரேசம்

444 தலமதன் வடபா லாகச்
சலந்தரே சுரமென் றானம்
வலனுற வப்பு வான
மண்டலத் துதையஞ் செய்தா
னலகில சீர்ச்சலந் தரப்பே
ரசுரனிங் கவனி மீதே
நிலவினன் காஞ்சி மூதூர்
நிலைமைதேர்ந் தங்க ணுற்றான்.

---

குமரனை வாயிலாக (பெருங்கதை) என்ற இடத்தில் தூதன் என்னும் பொருளைத் தருகிறது. ஆசிரியர் கருதியதுயாதோ, சிவஞான முனிவர் இவர்களை வாணசுரனின் சேனபதி என்பர், தொட்டு-தோண்டி, (கூவல் தொட்டல் ஆதுலர்சாலை (ஞானமிர்தம் வினைவகை 24)

443. பவம் என்ற சொல், பவ்வம் என்று வந்தது. பவம்-பிறப்பு. கவ்வை-துன்பம். மூதூர்-பழைய ஊர். அருளிச் செய் தான்-கொடுத்தான்.

444. என் தானம்-என்று கூறப்பட்ட 'இடம். (புதுப்பிர யோகம்) சலந்தரன். அப்புமண்டலத்தில் பிறந்தான். சிவஞான முனிவர் 'அப்புவில் தோன்றியோன்' என்பர். நிலைமை-சிறப்பு.

445 வெள்ளித னுபதே சத்தால்
விமலன துருவு செய்தே
தெள்ளிதின் பூசை யாவுந்
திருத்திமுன் னிருந்து நாடி
வள்ளியஃ சரப மான
மனுவினை யெண்ணி யெண்ணி
யுள்ளினன் முகுத்த மொன்றே
யுற்றனன் சிவனு மங்கண்.

446 இதுதல மடைந்தோ ரெண்ண
மெளிதினின் முடியு மெம்மைச்
சதிர்பெறப் பூசை யாற்றிச்
சரபமும் புகன்றாய் நீயே
கதுமென வேண்டிற் றெல்லாங்
கழறுதி தருது மென்ன
மதுமலர்த் திருத்தாள் போற்றி
வரம்பல புகற லுற்றான்.

447 முடிவிலா வாற்ற லண்ட
முழுவதும் புரக்கு மேன்மை
நெடியது வாணு ளாரு
நீக்கலா வாண்மை யென்னை
யடுவது நீயே யப்போ
தடைவதிவ் விலிங்கத் திந்தப்
படியரு ளென்று னன்றோன்
பரனவை யெல்லா நேர்ந்தான்.

---

445. சரபமனு சரபமந்திரம். முகுத்தம் - முகூர்த்தம். 'பிரம்மமா முகுத்தத் துன்றன் உமையினிம் மந்திரத்தை' (பழைய திருவிளையாடல். கரிக்குருவி. 7)

446. சதிர்பெற-திறமையுடன். சரபம்-சரபமந்திரம் (ஆகுபெயர்) கதுமென-விரைவாக. 'கண்ணுர் கனங்குழை கதுமெனக் கண்டே' (பெருங்கதை. இலாவாண. 16.-12) மதுமலர்த்திருத்தாள்-தேன்ததும்பும் தாமரை போன்ற திருவடி. 'இனமலர்கள் மதுவாய்ப் பில்கி நனைந்தனைய திருவடி' என்பர் திருநாவுக்கரசர்.

447. புரக்கும்-பாதுகாக்கும். நெடியதுவாணு ள் - நீண்ட ஆயுள். அடுவது-கொல்வது, இறுதியில் இந்த இலிங்கத்தில் ஐக்கியம் அடையவேண்டும். நேர்ந்தான்-உடன்பட்டு வழங்கினான்.

448 பெற்றனன் முழுது மிந்தப்
பெருந்திரு மயக்கத் தாலே
யுற்றனன் அகந்தை சீறி
யுலகெலாம் அடுவ தானான்
மற்றிது செல்வ முற்றால்
மயங்கிடா தறமே செய்யக்
கற்பவர் பரம நாதன்
கருணைபெற் றவரே யன்றோ.

449 புரந்தரன் முதலா னோரைப்
பொருதுவென் றிடும்போ தன்னார்
அரந்தைக டீர்க்கு மாயன்
கருடன் மீதணு கிடேமிப்
பெருந்திருப் படைகொண் டெற்றிப்
பேரமர் விளைக்குங் காலை
விரிந்திடு நாக பாசம்
விடுத்த னனசுரர் கோமான்.

450 உவணர்கோ னுருக்கண் டெங்கு
முரகமாம் பாச மன்னான்
விவிதமாம் புயத்தி னாற்றல்
விலக்கியே வீக்கிற் றுமாற்
றவமலாற் பிறிது வேறு
வலியுண்டோ ? தான வாரி
யவனது மாயம் யாரே
யறிபவ ரவர்க்குள் ளானான்.

---

448. திருமயக்கத்தால்-செல்வச் செருக்கால். அடுவதானான்-வருத்தத் தொடங்கினான். பரமன் அருள் பெற்றவரே மயங்கிடாது அறமே செய்யக் கற்றவர் என்று கூட்டுக. வேற்றுப் பொருள் வைப்பணி.

449. அரந்தைகள்-துன்பங்கள். 'அரந்தை-விரிந்து அவிடு மாறுபோல் விண் தோயத் தோன்றி-எரிந்தவியும் போலும் இவ்வூர்'. (தொல்-புறத்திணை. 3. மேற்கோள்)

450. உவணர்கோன்-கருடன். உரகமாம்பாசம்-நாக பாசம். ஆம் அசை. வீக்கிற்று-கட்டியது. தானவாரி அவன்-தானம் வழங்கும் கடல் போன்ற சிவபிரான். திருமாலையே பிணிக்கும் ஆற்றலைத்

451 பலந்தரு நேமி யோனைப்
பற்றித்தன் னுறையுள் வைத்தே
சலந்தரன் மேவ வன்னுன்
றலைவியாம் விருந்தை தன்பாற்
கலந்திடு காதல் கூர்ந்தே
கண்ணனங் குறைந்தான் விண்ணோர்
நலந்தரு பிரம னோடு
நண்ணின ரசுரன் றன்பால்.

452 அகிலநா யகனீ யென்றே
யறைந்தன ராசி கூறிப்
பகவனு மாயற் கொண்டு
பதிபுகுந் திருந்தா ரிப்பா
லுவகையாற் கயிலை மேவு
மொருவரை வெல்வா னுன்னி
வகைமைசே ரனிகத் தோடுஞ்
சலந்தரன் மகிழ்ந்து சூழ்ந்தான்.

---

தந்த தவத்தை ஆசிரியர் வியக்கின்றார். சிவபிரானின் நவந்தரு பேதங்களில் ஒன்றான மூர்த்தியையே பிணித்த ஆற்றலை வியக்காமல் இருக்க முடியுமா ?

451. சலந்தரன் திருமாலையே சிறையில் வைத்தான். காதல் கூர்ந்து-காதல் நிரம்பி. 'பைந்துழாய்க் குரிசிலைப்பன்னகப் பகையொடும்-வெந்திறல் நாகபா சத்தினால் வீக்கினான். சிறையிடை மாட்டினன்'. (காஞ்சி. சலந்தரேசம். 5. 6)

452. மாயற்கொண்டு-மாயவனை அழைத்துக் கொண்டு. உவகை-செருக்கு, உவகை மகிழ்ச்சியில் சோர்வு. (திருக்குறள்-பொச்சாவாமை; 1) என்ற குறளைக் காண்க. மிக்கவுவகை பெருஞ் செல்வம், பேரின்பம், பெருமிதம், என்றிவற்றான் வருவது எனப் பரிமேலழகர் ஆண்டு விளக்கியது ஈண்டு நினைவு கூரத்தக்கது. வகைமை—நால்வகைப் பிரிவு. அனிகம்-சேனை. 'அனிகம் வந்து அடி தொழக் கடிது சென்று' (கம்பன். பால. எதிர்கொள். 23).

453 முதிர்தரு மறையோ ஞகிச்
சிவனவன் முன்ன நின்றே
யிதுபொழு தெவண்மீச் செல்வா
யியற்கையே தென்ன லோடு
மதிமுடி யவனை வெல்லு
மாறெண்ணி யணைந்தே னென்றான்
அதுநல மென்று தாளா
லாக்கிஞ னேமி யொன்றை.

454 இப்பெரு நேமி தன்னை
யெடுத்திட வல்லை யாகி
லப்பொழு தரனை வெல்லு
மாற்றனீ யுடையை யென்னத்
தப்பற வெடுத்து மீது
தாங்கின னுயர்த்த லோடும்
மைப்புயல் அனையான் மேனி
வகுந்தி ரண்டா யதன்றே.

455 உடலிரு கூற தாகி
யொழியவா ருயிர்போய் முன்ன
மிடனுள காஞ்சி தன்னி
லிவனியற் றியவி லிங்கத்தி
னடவிய சோதி யாகி
நண்ணிய தாத லாலே
படியுளோர் சலந்த ரேச
மெனநனி பகரு வாரே.

---

453. மீச்செல்வாய்- (கயிலைமலை) மேலே போகின்றாய். மதிமுடியவன்-சிவபிரான். நலம்-நல்லது. தாளால்-திருவடியால். நேமி-சக்கரம். ஆக்கினன்-படைத்தான்.

454. வல்லை ஆகில்-வன்மை உடையவன் ஆனால். வகுந்து-பிளவுபட்டு. 'பரலுடை மருங்கில் பதுக்கை சேர்த்து-மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு-அணிமயிற் பீலி சூட்டி. (புறம். 266

455. இவன் இயற்றிய-இந்தச் சலந்தரன் பிரதிஷ்டித்த. நடவிய-இயங்குகின்ற. சோதியாகி-ஒளிமயமாய். ஆன்மா சோதி

## திருமாற்பேறு

### வேறு

456 தானமத னனிலதிசை திருமாற் பேறு
தற்பரையா ளரனையருச் சனைமுன் ஞற்ற
வானமள வெறிதிரைநீர்ப் பாலி யாறு
வருவதுகண் டிலிங்கமது வழுவா வண்ணந்
தானினிய மலர்க்கரத்தாற் கூப்பி யன்பு
தலைப்பிரியா திருந்தவந்தத் தன்மை யாலே
வானவர்கோன் றிருமேனி சிவந்து கன்றி
மலர்க்கரத்தங் குலித்தழும்பு மருவிற் றன்றே.

457 மாதுவரு டச்சிவந்த பவளக் குன்றின்
வடிவினதா மந்தலிங்கம் : வளமை யாக
வாதியுக முதனாலு யுகத்து மேன்மை
யானபெரும் பூசைகொள்ளும் அனாதிலிங்கம்
மேதகைய திருமால்முன் ததீசி மீதே
விடுநேமி யிற்றதனுன் மெலிந்து நாடிக்
கோதுபுரி சலந்தரனை யரனார் செற்ற
குலநேமி வாங்குவது குறித்துக் கொண்டான்.

---

வடிவமாகி இறைவனுடன் கலக்கும். 'சேதி மன்னவன்றன் முடியினை நெடியோன் திகிரி சென்று அரிந்திட ஒரு பொற்-சோதி மற்றவன்றன் உடலின் நின்றெழுந்து சுடரையும் பிளந்து போய் மீண்டு-மாதிரம் அனைத்தும் ஒளிஉற விளக்கி-மண் அளந்தருள் பதம் அடைய' (பாரதம். இராசசூயம். 139) திகிரியால் அழிந்தவர் முத்தி பெறுவது இயற்கை போலும்.

இவ்வரலாற்றைப் பாடும் சிவஞான முனிவர், வேறுபல செய்திகளைச் சேர்த்துச் சிவபரத்துவத்தைத் திடமுடன் நிறுவுகின்றார். காம்பீர்யமான நடை.

456. அனிலதிசை-வாயுமூலை (வடமேற்கு). அனிலம்–காற்று. 'அனிலம் சேரா விளக்கது போல்' என்பர் சிதம்பர சுவாமிகள். (திருப்போரூர்ச் சந்நிதிமுறை). தற்பரை-உமாதேவி. ஆள் அரனை-(ஆன்மாக்களை) அடிமையாகக் கொண்ட சிவபிரான். தற்பரையாள். என்று பிரிப்பின் சிறவாது. வழுவா வண்ணம்–கரையாதபடி அங்குலி-வளையல், (புதிய ப்ரயோகம்)

457. மாது-உமையம்மை. அனாதிலிங்கம்-பழமையானலிங்கம். உமாதேவி வருடியதால் இறைவன சிவந்த நிறம் பெற்றான்.

458 ஈசனையா மருச்சனைசெய் துவகை சேர்த்தி
யெண்ணியது முடிப்பதனுக் கிடமே தென்றே
காசியினு மேன்மைபெறு காஞ்சி மூதூர்
காமீகத் தெளிவுதவு கண்மேற் கொண்டே
வாசவனே முதலமர ரேவ லாற்ற
மணப்பாலி நீராடி மனுவி னாற்றற்
றேசுதரு மஞ்செழுத்தும் விதியா லெண்ணித்
திருநீறு கண்டிமணி திகழ்ந்து தோன்ற.

459 வேதநெறிப் பாசுபத விரத மான
விதிமரபா லருச்சனைக்கு விதித்த தூய
போதுமுத லுபகரணந் தெய்வத் தாருப்
புரிந்துதவக் காமிகத்தின் பொருட்டி னாலே
யாதிலிங்க மதுதனிலே பூசை யாவு
மளித்தாற்றி யாயிரம்பே ரான நாம
மோதியருச் சனைபுரியும் போது போதங்
கொருமனுவுக் கிலாதுகுறை யுளதே யாக.

---

அதனால் பவளக்குன்றர் எனும் பெயரும் பெற்றான். 'சேயிழைக் கவுரி செங்கை தைவரச் சிவந்து தோன்றி-பாயொளிப் பவளக் குன்றர் எனப் பெயர் படைத்து' (புதிய காஞ்சி. திருமாற் பேறு. 5).

458. காமீகம்-காமியப்பயன் (இம்மைப்பயன்). காமிகத் தெளிவு உதவு கண் என்று பிரிக்க. தெளிவு-செழிப்பு- இப்போது அவன் தெளிவாய் உள்ளான் என்னும் உலகவழக்கை நோக்குக. கண்-பற்றுக்கோடு. 'நம், கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே', (திருவாய்மொழி. 122). கண் என்பதற்கு நம்பிள்ளை களைகண் என்று வழங்கிய விளக்கம் கருதுக. மனுவின்-மற்றைய மந்திரத்தை விட. ஆற்றல், தேசுதரும் அஞ்சு எழுத்து -எனப் பிரிக்க. ஆற்றல்-பலம். தேசு-ஒளி.

459. பாசுபத விரதம்-சிவபிரானைக் குறித்துச் செய்கின்ற நோன்பு. உபகரணம்-கருவி. தெய்வத்தரு-கற்பகமரம். பேரான நாமம்-புகழ்பெற்ற பெயர். 'பேர்பரந்த பிரமாபுரம் மேவிய பிரான் இவன் அன்றே' (ஞானசம்பந்தர். திருக்கடைக்காப்பு). ஒரு மனுவுக்கு-ஒரு மந்திரத்துக்கு.

22

460 அன்பினது பெருந்திறனோ? நேமி வேண்டு
மாதரவோ? எம்பெருமா னான மாயோன்
றுன்புபொறிப் பூங்கமலக் கண்ணி னொன்றைத்
துண்ணெனவே வாங்கியரன் றுணைத்தாள் மீதே
தன்பரிவி னாற்புனையக் கண்டே நாதன்
றரணிபல பலவுதித்த தன்மை போல
மன்பவளக் குன்றெனவே தோன்றி மாலை
வருகவென முகமனுரை வழங்கி நின்றான்.

461 துளபமணிப் பெருமானுஞ் சிவனை யன்பாற்
றொழுதுசலந் தரனையிரு துணியாய்க் கீண்ட
வளவில்வலி பெறுநேமி யருள வேண்டு
மையனேயெ னப்பரவ வகிலம் யாவும்
வளமைபெறக் காப்பதுநின் கடனே யன்றோ
மற்றதற்காய் வருந்தினைநீ மாலோய்! வண்மை
யுளமணிச்சு தரிசனமா நேமி யீதென்
றுதவினான் வரமெவையு முதவும் பெம்மான்.

462 திருமால்சக் கரப்பேறு பெறுத லாலே
திருமாற்பே றெனப்புவியிற் றிகழா நிற்கும்
பெரிதான வன்புபெறு மதனா லன்றோ
பிரானடியார் தனித்தலைமை பெற்றான்அம்மால்:
பரிவான நேசமுடன் மாற்பே றான
பதியிலரன் றனைப்பணிவார் பணியா ரான
கருதாரை வெல்வர்திரு மாற்பே றென்னிற்
கருத்தனதா யிரம்பேருங் கணித்த லொக்கும்.

460. திருமால் தன் கண்ணைப் பறித்துக் கொடுத்த காரணத்தை வியக்கிறார். அனபோ? ஆசையோ? என்கிறார். துன்புபொறி-தூண்பவர் உள்ளத்தில் துன்பத்தைப் பொறிக்கின்ற. 'மஞ்சு எனத் திரண்ட கோல மேனிய மகளிராக் கெல்லாம்-நஞ்சு எனத் தகையவாகி கண்ண்'. என்ற அனுமன் மொழியை மனம் கொண்டு இங்ஙனம் கூறினார் போலும் துணைத்தாள்-இரண்டு திருவடிகள். துணை-இரண்டு 'துணைககட் கமலம் பின்கிடப்பத் துண்ணென் றோடும் சிறுவா' (அழகர் பிள்ளைத்தமிழ். வாரானை. 10) தரணி-சூரியன், 'தரணியென இருள் அகல அறிவுதரு'. (திருப்போரூர்ச் சந்நிதிமுறை. பெரியகட்டியம்).

461. துளபம்-திருத்துழாய். தாராய தண்டுளப வண்டுழுத வரைமார்பன்: (பெரியதிருமொழி. 8-1-4) வளமைபெற-வளம் உண்டாக.

462. திருமால் சக்கரம் பெற்றதால் அத்தலம் திருமாற்பேறு

பரசுராமீசுரம்

வேறு

463 தரையின் மேலத் தலனது கீட்டிசைப்
பரம தான பரசுரா மீச்சுரம்
வரிசை சேர்செ மதக்கினி மாமுனி
யரிய ரேணுகை யன்னவன் பன்னியே.

464 இன்ன ராசி ரமத்தி லிருக்குநாள்
கன்னி நீர்கொணர் காலையி னேகியே
மின்னு வேற்கரன் கார்த்திகை வீரனு
மன்ன னங்கண் மருவிநின் றனரோ.

465 நின்ற மன்னனை நீருறு நீழல்வாய்
அன்று கண்ட வரிவையிங் கேகலுங்
கன்றி ராமனுங் காதற் புதல்வனை
நன்று கேளென நன்முனி சொல்லுமால்.

466 தாயெ னுதவ டன்னைத் துணியெனப்
போயி னன்றந்தை சொல்லையே போற்றினு
னுயி னனையுவந் துவந் தம்முனி
தூயை! நீயெனச் சொற்றனன் பின்னரும்.

---

என்று புகழப்படும். பணியாரான-அடங்காத. கருதாரை-பகைவர்களை. திருமாற்பேறு என்னில்-திருமாற்பேறு என்று சொன்னால். கணித்தல் ஒக்கும்-ஜெயிப்பதற்குச் சமம் ஆகும். தலங்களின் பெயரைச் சொன்னாலே பேறு கிடைக்கும் என்று திருநாவுக்கரசர் ஒரு பதிகம் பாடி உள்ளார். (பலவகைத் திருத் தாண்டகம். நேர்ந்தொருத்தி. 307)

463. அத்தலன், என்றது திருமாற்பேற்றை. கீட்டிசை-(அத் தலத்திற்குக்) கிழக்குப் பக்கத்தில். பன்னி-மனைவி.

464. கார்த்திகை வீரன்-கார்த்திகார்ஜுனன்,

465. நீழல்வாய்-நிழலின்கண். கன்று-கோபம் கொள்ளும் இயல்புடைய. பாகவதத்தில் ரேணுகை 'மைத்தடங்கண்ணுரோடு மருவிநீர் விளையா டுற்ற-சித்திர ரதனை கண்டாள் தெருமரல் உளத்திற் கொண்டாள்' என்று கூறுகிறது.

466. தாய் எனுது-தாய் என்று கருதி பக்தியோ அன்போ கொள்ளாமல், துணி-பிளப்பாயாக, போயினன் (பரசுராமன்)

467 ஏவ மானை யெழுப்பியெங் காகினும்
போவ தாகப் புகன்றனை வாவெனுக்
கோவ வான கொடுமை விடுத்தொரீஇ
மேவி னானம் முனிதவ மேன்மையால்.

468 கால மன்னதிற் கார்த்திகை வீரனுஞ்
சீல மாகச் சினத்தை விடுத்தனன்
வேலை யீதென மெய்ம்முனி வோரிரு
பால தாகப் படுத்து விழுத்தினான்.

469 தனைய னனவி ராமன் றவத்தினால்
வினைய னாகிய கார்த்திகை வீரனை
முனையி னலடு மாறது முன்னியே
யினைய காஞ்சியி னெல்லைவந் தெய்தினான்.

470 வந்து பாலி வடகரைமே வித்தன்
சிந்தை யார்தரத் திவ்விய லிங்கமொன்
றந்த மாகவி யற்றின னன்பினால்
முந்து பூசனை முற்றிநின் றேத்தினான்.

---

சென்றான். போற்றினான்-மதித்தான், (தாயைக் கொன்றான் என்று கூற மனமில்லாத ஆசிரியர் சேக்கிழார் நெறியை மேற் கொண்டு தந்தை சொல் போற்றினான் என்றார்).

467. ஏவம்-குற்றம் (செய்த). 'ஏவம்பாராய்: இல்முறை நோக்காய்: அறம் எண்ணாய்' (கம்பன். அயோத்தி, கைகேசி. 42). மானை-மான் போன்ற ரேணுகையை. புகன்றனைவா-சொல்லிவிட்டு வருக. புகன்றனை-முற்றெச்சம்: விடுத்து ஒரீஇ-தன்னிடத்தி லிருந்து விலக்கி. விலக்கியது சமதக்கினி. தவ மேன்மையால் கோவமான கொடுமை விடுத்து மேவினான் எனப் பிரித்துக் கூட்டுக.

468. காலம் அன்னதில். அன்னகாலத்தில்-(முனிவன் சாந்தமாக இருந்த) அந்தச் சமயத்தில். சீலம் ஆக-ஒழுக்கம் ஆக: (தொடர்ந்து நன்னெறியில் நடப்பதற்குச் சீலம் என்று பெயர்). ஈதுவேலை-இது தான் தக்க சந்தர்ப்பம். முனிவோர்-சமதக்கினி. இருபாலதாக-இரண்டு துண்டாக. படுத்து விழுத்தினான்-கொன்று விழச் செய்தான்.

469. தவத்தினால்-தவத்தின் வன்மையால். வினையன் ஆகிய-வஞ்சகன் ஆன- அடும் ஆறு-கொல்லும் விதம். முன்னி-குறிக் கோளாகக் கொண்டு.

470. சிந்தை ஆர்தர-மனநிறைவு உண்டாகும் படியாக.

471 அன்ன காலைய வனியல் தேரவஞ்
சென்னி யானரன் தீண்டப் பெறுவுரு
மன்னி ஞன்மனை வாழ்க்கையர் தம்மொடுந்
துன்னி ஞன்வன் பூசனைச் சூழல்வாய்.

472 கண்டி ராமன் கரும்புற மாயநீர்
அண்டு மாறித டாதிவண் போமென
வுண்டு நீயோ ருறவுன தன்னைதான்
பண்டு மாதங் கியான பரிசினுல்.

473 என்ன லோடு மிராம னிதுபுக
லுன்ன தாண்மை யுடற்றுவ னென்னனு
மன்னை யாளை யடுகொலை செய்தநீ
பின்னை யாரை அமாய்எனப் பேசியே.

---

அந்தம் ஆக-அழகாக. முற்றி-செய்து முடித்து. ஏத்திஞன்-புகழ்ந்தான்.

471. அவன் இயல்–பரசுராமனின் தன்மை. அம்சென்னியான்-கங்கையைத் தரித்த சிவபிரான். அம்-தண்ணீர்க் (கங்கை) 'அம் தாழ்சடைய' என்று திருவெங்கைக் கோவை கூறும். தீண்டப் பெறுஉரு-புலைவடிவம். மனைவாழ்க்கையர் - மனைவி, மக்கள் முதலானவர்கள். பெருமான் கொண்ட புலைக்கோலத்தைச் சிவஞானமுனிவர் ஓவியமாகத் தீட்டியுள்ளார். பூசனைச்சூழல்-வழிபாடு செய்யும் இடம்.

472. கரும்புறமாயநீர்-கரிய உடம்பைப் பெற்றிருக்கின்ற நீங்கள். இது அண்டும் ஆறு அடாது-இங்கே வருவதுதகாது. உனது அன்னை மாதங்கி. ஆனதால் (நமக்குள்) உறவு உண்டு என்று (சிவபிரான்) கூறிஞன். 'கழிய எனக்கு உறவு ஆயினை ஐயம் இலை கண்டாய் - இழிவு அற நின்னை அளித்த இரேணுகை என்பாள் என்-பழுது அறு சீர் மனையாட்கு இனியாளாம் பரிசாலே-விழுமிய நீயும் எனக்கு இனியாய்காண் எனவிண்டான்' (சிவ-காஞ்சி. பரசுராம 18).

473. இதுபுகல்-இம்மொழியைக் கூறும். உடற்றுவன்-அழிப்பேன். அடுகொலை-வெட்டிக்கொல்லுதல். யாரை அமாய்-எவரைச் சிதைக்கமாட்டாய்? தாயையே கொன்ற நீ எவரை வருத்தாமல் இருப்பாய்.

474 பழித்தி ராமன் கரந்தனைப் பற்றியே
யிழுத்த லோடு மிவனென்னைத் தீண்டுமோ
வழித்து ளானிவ் வொழுக்க மரனிரு
செழித்த தாடுணை செய்தில தேயென்று.

475 இனைய வெண்ணி யிரங்குமி ராமனைத்
தனைய ரோடு மனையொடுந் தள்ளியே
வினைய மாக மிதித்தன னெம்பிரா
னனைய னும்விழுந் தானயர்ந் தானரோ.

476 மந்த மாருதம் வந்தவண் வீசலு
முய்ந்து ளானனை யாலுல வாதவன்
தந்தை யாலடை யுந்துயர் தள்ளியே
நிந்தை நீசமொ றுக்கவு நீண்டதால்.

---

474. இவன் எனைத் தீண்டுமோ-இப்புலையன் என்னைத் தீண்டுவானோ? இவன் ஒழுக்கம் அழித்து-இப்புலையன் ஆசாரத்தை அழித்து. உளான்-உயிரோடு இருக்கிறான். அழித்தும் என்ற இடத்தில் உள்ள உம்மை மறைந்துள்ளது. உம்மைத் தொகை. அரன்-சிவபிரான். தாள் துணை செய்திலதே-திருவடி எனக்கு உதவி செய்யவில்லையே. தொண்டனான மார்க்கண்டேயனுக்காக யமனை உதைத்த திருவடி உதவாமற் போயிற்றே.

475. இனைய-இப்படிப்பட்ட. இரங்கும்-தன்தாழ்வை எண்ணிப் புலம்பும். தனியாக மிதிக்காமல், தனயரும், மனைவியும், தானும், மிதித்தான். அனையனும்-அந்தப் பரசுராமனும். அச் சுட்டு உயர்வைக் காட்டவந்தது. உயர்ந்தவன் தாழ்ந்தால் அவனுக்கு இந்நிலை வரலாமா? என்னும் உலகியல் மொழியை நோக்குக. சுட்டு இழிவையும் குறிக்கும். 'உயர்வையும் இழிவையும் உணர்த்தும் சுட்டே' என்று உரைச் சூத்திரம் புனைய வேண்டும். அயர்ந்தான்-மயங்கினான்.

476. மந்தமாருதம்-இளங்காற்று. மாருதம் வீசலும், அனையால், நீசம் ஒறுக்கவும், தந்தையால் அடையும் துயர் தள்ளி உய்ந்துளான். (ஆயுள்) நீண்டது என அந்வயம் செய்க.

அனையால்-உமாதேவியின் கருணையால். உமையம்மை பெருமான்பால், பரசுராமனை வன்மையாகத் தாக்காதே என்று விண்ணப்பித்ததாகச் சிவஞான முனிவர் கூறியதை நினைவு கூர்க.

477 ஆளும் நாயக னேவந் தருள்செய்வான்
கேளி ராகி யினியார் கிடைப்பவர் ?
மீள மீள விமலன் சிவனிரு
தாளை யேதுதிப் பேனெனச் சாற்றுவான்.

478 அய்ய னேயர னேயட லார்மழுக்
கைய னேயுனைக் காஞ்சியி லுற்றுளோ
ருய்யு மேன்மை யுறுருஞ் சிலவரோ
வெய்ய னேனள வோவென விம்மினன்.

479 நாய கன்னவன் முன்னர் நணுகியே
சேய காலம் வருந்தினை செவ்வியோய்
நேய மானவை கூறென நீர்மையாற்
றாயை நேர்தரு கன்றெனத் தாழ்ந்தனன்.

480 குரவ னெந்தையைக் கோறலை மேற்கொளுங்
கரவ னாகிய கார்த்திகை வீரனை
மரபி னோரை வகையறச் செற்றவர்
குருதி நீருடற் குளித்திட வேண்டுமால்.

---

துயர்தள்ளி-துன்பத்தை ஒதுக்கி. இங்கு வீசிய மந்தமாருதத்துக்குச் சிவஞான முனிவர் ஒப்பனை செய்துள்ளார். கண்டு மகிழ்வது கற்றவர் கடனே.

477 ஆளும் நாயகன்-சிவபிரான். 'இனி கேளிர் ஆகிக்கிடைப்பவர் யார்? நாயகனே அருள் செய்வான். மீள மீள சிவன் இரு தாளையே துதிப்பேன் எனச்சாற்றுவான்' என்று சேர்க்க பொருள் வெளிப்படை.

478 அடலார்-வன்மை மிக்க. காஞ்சியில் உனை உற்றுளோர்-காஞ்சிமாநகரில் உன்னை அடைக்கலமாக அடைந்தவர். மேன்மை உறுரும்-சிறப்பை அடையாதவர்களும். சிலவரோ-சிலர் உள்ளனரா? என் அளவோ-என் மட்டுமா? விம்மினன்-விம்மியழுதான்.

479 நணுகி-உண்மை வடிவத்துடன் காட்சிவழங்கி. சேய காலம்-நீண்டகாலம். 'சேயகாலம் பிரிந்து அகலத் தீர்ந்தான்' (கம்பன்-யுத்த. கடல் காண்படலம்) செவ்வியோய் - பண்புடையவனே. தாயை நேர்தரு-தாயைக்கண்ட. தாழ்ந்தனன்-பணிந்தான்.

480 கோறல்–கொல்லுதல். கஞ்சன் முன் கோறல் செய்த கருங்கடற் பவளச் செவ்வாய் - மஞ்சரைத்தருக. (பாகவதம்.

### வேறு

481 அய்ய படையொன் றளித்த ருள்வாய் யென்றலுமே
தைய லொருபா கன்சற் றேகடைக் கணித்தான்
கையின் மழுமற் றோர்கன மழுவை யீந்ததாற்
செய்ய தொருபரசு ராமனென வேசென்றான்.

482 சென்று பரசின் றிறலால் பெருஞ் சினமே
கன்றி யடலான் கார்த்திகைவீ ரன்றனையும்
வென்று செந்நீர் மூழ்கி விளையாடித் தென்புலத்தார்க்
கன்று புரிவினை யுமந்நீ ரினான்மு டித்தான்.

### இரேணுகேசுரம்

483 தூய தலம்பரசு ராமீ சுரமெனவே
மேய பரிசால் விளங்கிற் றதனயலே
யேய திறற்சே ரிரேணுகையா மாதுபெரு
நேய மதனாலே நிருமலனைப் பூசை செய்தே.

484 ஆன கலிகாலத் தெய்வதந்தானு கினளாற்
றான மதனையெவர் தாமே பணிந்திடினு
மான முடையதிறன் மன்னிடுவா ரன்னவரை
யீன மளவுகலி யென்னாளுஞ் சேராதால்.

---

10 ஆம் கந்தம். 4161) நரவன்-வஞ்சகன். வீரனை மரபினோரை-வீரனையும் அவன் குலத்தில் பிறந்தவரையும். வகைஅற - சாதியே இல்லாதபடி.

481 படை ஒன்று-ஆயுதம் ஒன்றை. தையல் ஒரு பாகன்-உமாதேவியை இடப்பக்கம் கொண்டவன். கடைக் கணித்தான்-(மழுவை) கடைக்கண்ணால் பார்த்தான். மழு, (பரசுராமனுக்கு) மற்றோர் மழுவை ஈந்தது.

482 பரசின் திறலால்-கோடரியின் சக்தியால். கன்றி-முதிர்ந்து. அடலான-ஆற்றலே வடிவமான. தென்புலத்தார்க்கு-பிதிர்களுக்கு. வினையும் என்றது அர்க்கியம் ஆசமனீயம், பாதோதகம் முதலானவை வழங்கலை முடித்தான்-நிறைவேற்றினான்.

483 அதன் அயல்-பரசுராமேசுரத்தின் பக்கத்தில். இரேணுகை-பரசுராமனின் தாய். நிர்மலன் என்பது நிருமலன் எனவந்தது, கர்மம் என்பது கருமம் என்று வந்தது போல.

484 தானம்-இடம். ஸ்தானம் என்னும் வடசொல் தானம் ஆயிற்று. மானம் பெருமை. கலி-வறுமை.

485 சேரு மதன் கீழ்பாற் சிவன்கூட லென்றுசிவன்
வார முறுதானம் வன்னிவனம் புன்னைவனம்
நேரி லரசவன நீள்பா டலவனமென்
றுரும் புகழ்பே ரவைநான் குகத்துமுள.

486 கன்னி யுமைமாது காஞ்சிநகர்க் கெய்துமன்னு
ளென்னை யுடையா னெனக்கிரங்கி முன்னின்றே
யுன்னி யதுவிரைவி னுற்றருள்வ னேயென்னுத்
துன்னி யதுதலத்திற் சோதிடநூ லின்படியே.

487 ஆட லதனுலே யார மவைநூற் றெட்டாற்
கூடு கணிதங் குறித்தனளக் காரணத்தி
னீடு சிவன்கூட லென்றே நிலவுமதன்
ஊடு சிவனைப்பூசித் துமையா ளேகினளே.

**நூற்றைம்பதின் மேலைச்சிவலிங்கம்**

488 அன்னதன்றென் மேல்பா லமரர் புனித மெனப்
பன்னகில தீர்த்தவட பாலாய் நடுவுபட
வுன்ன வரிதாமி யோகத் தலைமையுளோர்
முன்னவரே யாய முனிவரவர் பற்பலரால்,

---

485 சிவன் கூடல், தலத்தின் பெயர். வாரம் உறு-அன்பு கொண்ட. அந்த இடம் வன்னிவனம் என்றும், புன்னைவனம் என்றும், அரசவனம் என்றும், பாடலவனம் என்றும் நான்குயுகத் திலும் முறையே பெயர்பெறும். பாடலம்-பாதிரி. நான்கு உகம்-நான்குயுகம். யுகம், உகம் ஆயிற்று. யூகம் என்பது ஊகம் என்று வந்ததுபோல் வந்தது.

486 —487. உமாதேவி, காஞ்சிமாநகர்க்கு வரும்போது இறைவன் எனக்கு அருள்வானு என்று சோதிட சாஸ்திரத்தின் படி நூற்றெட்டு மணிகள் கொண்ட ஆரத்தால் கணித்துப் பார்த்தாள். ஆதலால் அத்தலத்தைச் சிவன்கூடல் என்பர்.

என்னை உடையான்-சிவபிரான். உன்னியது-நினைத்த காரி யத்தை. ஆரம்-ஹாரம். கணிதம்-சோதிடம். உமையை உமை யாள் என்றும் கூறுவர். 'மருதிடம் கொண்ட மருதமாணிக்க-உமை யாள் கொழுந' என்பர் பட்டினத்துப் பிள்ளையார், (திருவிடை மருதூர் 22—20 – 21),

488. அகில தீர்த்தம்-சர்வ தீர்த்தம். முன்னவர்-சிவபிரான். முன்னவரேயாய-சிவபிரானுகவே மாறிய.

23

489 ஏரகமே யாகுமிரேசகமே கும்பகமே
பூரகமே யானவனு பூதிவழி யேயதனில்
தாரணையே செய்து தனியே கனன் மூட்டி
யாரமுலா லுண்மதியி னுயவவி யேயயில்வார்.

490 மோனரசு வேதர் முதலில குளீசாதி
ஆன முனிவரர்நூற் றைம்பான்மே லைவரவர்
தேனகு பூங்காவு செறிக்கயிலைச் சாரலின்வாய்
ஞான முதிர்தவமே நன்குபுரிந் தாற்றினரே.

491 வீடு பெறவேண்டி மேலோர் தவமியற்ற
நாடியரன் முன்னின்று நன்காஞ் சிமூதூரி
னூடுமது சிந்தை யுவப்பனைத்து மீதுமவண்
கூடி முனிவீர் குறுகு மெனவகன்றார்.

---

489. பிராணாயாமம் கூறப்படுகிறது. 1. ரேசகம், வயிற்றி லின்றும் வாயுவை இரேசித்தல் (விடுதல்) இரேசகமாம்' என்று யாக்ஞவல்கியரால் இரேசகலட்சணம் சொல்லப்பட்டிருக்கிறது. 2. கும்பகம். 'கும்பத்தைப் போலே செவ்வையாய்ப் பூரித்து வாயுவைத் தரித்தல் கும்பகம் ஆகின்றது' என்பது கும்பகலட்சணம். 3. பூரகம். வெளியினின்றும் வாயுவை வயிற்றில் நிரம்பப் பூரித்தல் பூரகமாம். (ஹடயோகப் பிரதீபிகை 146. 147 பக்கம் சிக்கத்தம்பூர்—பிரம்மானந்த சுவாமிகள் மொழிபெயர்ப்பு). பிராணாயாமத்தை முற்றும் அறிய விரும்புவோர் ஹடயோகப் பிரதீபிகை பயிலவேண்டும். அனுபூதி-அனுபவம். தாரணை-மனத்தை ஒருவழி நிறுத்தல். கனல்-மூலாதாரத்தில் உள்ள அக்கினி. மதியின் ஆய-சந்திரனிடத்தில் தோன்றுகின்ற. அவி-அமிர்தம். 'மூலத்து எழும் அங்கி அமிர்து ஒழுகு மதிமண்டலத்தி லுற' என்று தாயுமானவர் குறிப்பர் (சச்சிதானந்தசிவம் 9).

490. ரசுவேதர், லகுளீசர்-முனிவர்களின் பெயர்கள். காவு-சோலை. 'சண்பகக் காவுதோறும்' என்பது கம்ப நாடகம், (பால. ஆற்றுப்படலம்),

491. உவப்பு அனைத்தும்-விரும்பிய யாவற்றையும். ஈதும்-கொடுப்போம். குறுகும்-அடையுங்கள்.

492 ஆவிக் கினியனரு ளன்பதனுற் காஞ்சிநகர்
மேவிப் பெருமுனிவர் வீற்றுவீற் றுகவவண்
தாவித் தனரிலிங்கந் தந்தமது பேராலே
தேவுக் கரசை யருச்சித்துப் பெற்றனரால்.

வேறு

493 காரணிகப் பெருந்தலங்க ளெவற்றினுஞ்செய்
தவப்பயனுற் கயிலை சேர்வர்
சீரணியக் கயிலைமலைப் புரிந்ததொரு
மாதவத்தின் செய்கை யாலே
யாரணரிக் காஞ்சிநகர் அடைந்தனருய்ந்
தனரென்று லகில மான
தாரணியிற் புதுமைபெறு மன்னகரிற்
பெருமையெவர் சாற்றற் பாலார்.

காமீசுரம்

494 சுரர்பரவ வருகாமீ சுரமெனவொன்
றதுமுனமே தோகை பாகன்
றிருவருளால் வருமதவேள் பேரகில
தீர்த்தமதன் தீர மேவிப்
பரமனைப்பூந் தாதுவினு லுருவுசெய்து
நறைமலராற் பணிந்து போற்றி
விரவுசரா சரவுதையப் பதியாகி
யிரதியையு மேவி ஞேனே.

---

492. ஆவிக்கு—ஆன்மாவுக்கு. வீற்றுவீற்றுக-தனித் தனியாக. ‘கோடை தூற்றக்கூடிய ஊழிலை-வாடையின் வீற்றுவீற்றுகியங்கு, (ஞானமிர்தம். ஞானசித்தாந்த வரிட்டம் 35) தாவித்து-ஸ்தாபித்து. தேவுக்கரசு-சிவபிரான்.

493. காரணிகம்-காரணம். உலகில் தவம் செய்தால் கயிலையில் வாழும்பேறு கிட்டும். கயிலையில் தவம் செய்தவர்கள் காஞ்சியில் வாழும் சிறப்பைப் பெற்றனர் என்றால் காஞ்சியின் பெருமை கூறத்தக்கதோ? கவிச்சக்ரவர்த்திகள் அயோத்தியின் சிறப்பைக் கூறிய பாடல்களைப் பயின்ற ஆசிரியர் இக்கவிதையை புனைந்துள்ளனர். (கம்பன், நாட்டு. 5,6 பாடலைப் பார்க்கவும்). ஆரணர்-வேதம் உணர்ந்த முனிவர்கள்.

494. சுரர்-தேவர். தோகை-மயில்போன்ற உமாதேவி

### தீர்த்தேசம்

495 ஆரியைமுன் னொருதனிமா நிழலிலர
   னைப்பூசை யாற்று நாளிற்
சேரகில தீர்த்தமுமை வெருவவரு
   செயலினுக்குத் தீர்வ தாக
வோருருவு செய்துதன்பேர்த் தடாகத்தின்
   பாலருச்சித் துருகிப் போற்று
மாலிதனுற் றீர்த்தேச மெனவிளங்கு
   மத்தீர்த்தத் தினிய கீழ் பால்.

### கங்கை வர நின்றூர்

496 கற்றபகி ரதன்றனது தென்புலத்தார்
   கதியடையக் கருதி யிங்ங
னுற்றரன துருவுசெய்து போற்றிடலுஞ்
   சிவனிரங்கி உலகம் யாவு
மெற்றிவரு சுரநதியைச் சடாடவியிற்
   றரித்தருளே யீந்தா னங்கண்
மற்றதுபேர் கங்கைவர நின்றதென்ப
   ரதன்குடபால் மருவு லிங்கம்.

---

பாகம்-பக்கம். தோகைபாகன்-சிவபிரான். தீரம்-கரை. 'கெங்கா தீரத்துத் தேசம்' (பெருங்கதை. உஞ்சை. 36. 220) பூந்தாது-மகரந்தம். மன்மதன் மகரந்தத் தூளால் சிவலிங்கம் செய்து பூசித்தான். உதயப்பதி-படைக்கும் தலைவன்.

495. ஆரியை-உமாதேவி. உமையம்மை அஞ்சும் படியாகச் செய்த பாபம் தீர அகிலதீர்த்தம் ஒரு சிவலிங்கத்தை நிறுவிப் பூசை செய்தது. உமைவெருவ-உமாதேவி பயப்பட. தீர்வதாக-பிராயசித்தமாக. தீர்த்தம்+ஈசம்-தீர்த்தேசம்.

496. தென்புலத்தார்-பிதிர்க்கள். (சகரர்). எற்றிவரும்-மோதி வரும். சுரநதி-கங்கை. சடாடவி சடைக்காடு. சட+அடவி-சடாடவி.

### விச்சுவநாதேசுரம்

### வேறு

497 பொச்ச மிலாவா னதிபுனி தத்தின் பொற்பாலே
யெச்சுறு முயிரா மெவைபுரி பவமு மினியானே
யச்சமி னலமே மருவுவ னென்றே யழகாக
வைச்சிடு லிங்கம் விச்சுவ நாத மகாலிங்கம்.

### முத்திமண்டபம்—செவ்வந்தீசுரம்

498 பத்தியி லெவரே யாயினு மவரைப் பணிவாரேற்
சித்தியி லணிமா தியுமெளி தாயே செறிகிற்பார்
அத்திரு வரமா லயமர னுக்கோ ரத்தாணி
முத்தியின் மாமண் டபமென வொன்றதின் முன்னுமால்.

499 மாருத வாசன் சூல தடாக மருங்கோர்பா
லேருறு செவ்வந் திப்புது மலரா லெம்மானைச்
சீருறு மன்பாற் பூசனை முற்றித் திசைகாக்கும்
பேரர சுடனம் மாமலர் யானம் பெற்றானே.

---

497. பொச்சம்-குற்றம். வான்நதி-கங்கை நதி. புனிதத்தின் பொற்பால் உயிராம் எவை புரிபவமும் எச்சுறும். எச்சுறும்-குறையும். எஞ்சுறும் என்பது எச்சுறும் என வந்தது இனியான், வைச்சிடுலிங்கம்'—எனக்கூட்டுக. இனியான்-சிவபிரான். சிவபிரானாலே நிறுவப்பட்டதால் மகாலிங்கம் என்றும் பெயர் பெற்றது.

498. எவரேயாயினும்-எத்தகையபாபிகளும். அணிமாதி செறிகிற்பார்-அணிமா முதலான சித்திகளை அடைவர். இது விசுவநாதேசுரத்தின் பெருமை.

அதின்முன்-விசுவநாதேஸ்வரத்துக்கு முன் பக்கத்தில். திரு-அழகிய. வரம்-மேலான. அத்தாணி-ஆஸ்தான மண்டபம். இது முத்தி மண்டபத்தின் சிறப்பு.

499. மாருதவாசன்-வாயுதேவன். சூலதடாக மருங்கு-சூல தடாகத்தின் பக்கத்தில். மலர்யானம்-மலர் வாகனம். வாயுதேவன் செவ்வந்திப் பூவால் அருச்சித்த செய்தியைச் சிவஞானமுனிவர் 'செவ்வந்தி வேரிச்செழும்பூப் பலகொண்டு-வழிபட்டு' என்று கூறுவர். (நவக்கிரகேசப்படலம். 3)

### அங்காராதீசுரம்

500 அன்னது செவ்வந் தீசுர மாகும் அதன்கீழ்பாற்
பொன்னவ னங்கா ரகனொடு புதனும் பூசித்தா
ரின்னவர் பேராற் றத்தம் பதவியெலாம் பெற்றார்
பன்னிடு பிறவாத் தான மதன்கீழ் பாலாகும்.

### பிறவாத்தானம்

501 அன்னை கருப்பத் தாருயி ரடைபோ தருஞான
மன்னிடு மொருபான் றிங்களி லதனால் வாமப்பேர்
துன்னிடு முனியாய் மடியுறு காலத் துனிமீக்கொண்
டுன்னின னங்தோ பிறவித் துயரமி துலவாதால்.

502 இதுவிடு மாறே தெவரிது தீர்ப்பா ரென்றென்றே
கதுமென வானீ ழலினுறை யாசான் கழல்பேணப்
பதியவ னன்னா னுக்கறி வுறவே பகர்கிற்பான்
விதுவிதி ரெனீயிப் பதியதில் உற்பவ மேலாமால்.

---

500. பொன்னவன்-பிரஹஸ்பதி. அங்காரகன்-செவ்வாய். கீழ்பாலாம்-கிழக்குப் பக்கத்தில் உள்ளதாகும்.

501. கருப்பத்து அடைபோது உயிர், ஞானம் மன்னிடும். கருப்பம்-கர்ப்பம். ஆய்மடி-தாயாரின் வயிறு. துனி-துன்பம். உலவாது-குறையாது. வாமதேவன், தாயார் கருப்பத்தில் இருக்கும்போது பிறவியை நினைந்து வருந்தினன்.

உயிர்கள் தாயாரின் கர்ப்பத்தில் இருக்கும்போது பிறவியை நினைந்து வருந்தும். பாகவதம் 'திங்கள் ஏழின் அறிவு சிறந்தெழத்-தங்கு தொல்லைப் பிறவிகள் தான் உணர்ந்து-இங்கு தோன்றும் இடரினைத் தீர்க்கென-அங்கை கூப்பி மயலனை ஏத்துமால்' என்று கூறும். (3ஆம் கந்தம். கபிலர் தத்துவம் 40).

502. இது-இப்பிறவி. விடும் ஆறு-நீங்கும் வழி. வான்-சிதாகாசம். நீழல்-நிழல். ஆசான்-குரு (சிவபிரான்). சிவபிரானே குருவாக வருதலின் ஆசான் என்றார். 'அகளமாய் யாரும் அறிவரும் அப்பொருள்-சகளமாய் வந்தது' என்று திருவுந்தி கூறும். விதுவிதிர்என்-நடுங்கும் காரணம் யாது. இப்பதி-காஞ்சி. கருமபூமியில் பிறந்தே ஆன்மாக்கள் முக்தியடையும். ஆதலில் இப்பதியில் உற்பவம் மேல் என்று இறைவன் கூறினன்.

503 அனக மெனுதல மிதனிடை யுற்பவ மானோர்பின்
விளைய முறும்பிற வித்துய ரதுபட மீள்வாரோ
தினகர னவனை யடைந்தவர் பனியினைச் சேர்வாரோ
யினிய வணைய்தி யருச்சனை புரியெமை யென்றானல்.

504 அம்மொழி வினவிய வாறவ னுற்பவ மானான்றன்
செம்மையி லரனை யருச்சனை செய்து சிறப்பானான்
எம்மையு மிலதொரு நெறிதனை யெய்தின னிதனோர்பான்
மெய்ம்மையி னிறவா விடமது பெயர்மே வியதன்றே.

## இறவாத் தானம்

505 மற்றொரு போது சுவேதனெ னும்பெயர் மறையோனைப்
பெற்றிடு தந்தையு மன்னையு மன்னோன் பெறுநாளிற்
சொற்றிடு சாதக கருமமி யற்றினர்; தொடர்பாலே
யுற்றிடு மிருபஃ தாயுள வாமென வுளநொந்தார்.

506 நொவ்வுறு மன்னையர் தந்தையர் மெலிவை நுனித்தன்னா
னெவ்வகை துயர்வ தெனத்தம துண்மை யினைச்சொற்றா
ரவ்வழி யயனை நினைத்தவன் மாதவ மதுசெய்தான்
செவ்விய னுமயன் முன்னின் றவனொடு சிலசெப்பும்.

---

503. அனகம்-பாபம் இல்லாத. உற்பவம்-பிறப்பு. வினையம்-வஞ்சகம். தினகரன்-சூரியன். பனி-குளிரால் வரும் நடுக்கம்.

504. வினவியவாறு-கேட்டபடி. உற்பவமானான்-காஞ்சி மாநகரில் பிறந்தான். எம்மையும்-எவ்வுலகத்தினும், இதன்ஓர் பால்-இந்தப் பிறவாத் தானத்தின் ஒருபக்கத்தில்.

505. ஒருபோது-ஒருகாலத்தில். சாதக கர்மம்-ஜாதகம் கணித்துப் பார்க்கும் சடங்கு. தொடர்பால்-கிரகங்களின் சேர்க்கையால்.

506. நொவ்வுறு-வருந்துகின்ற. நொவ்விடை மடந்தை தன் இருக்கை நோக்கினான்'. (கம்பன். சுந்தர. காட்சிப் படலம்) மெலிவை நுனித்து-உள்ளத் தளர்ச்சியைக் கூர்ந்து நோக்கி. துயர்வது-துன்பம் அடைவது. எவ்வகை-என்ன காரணம். அயன்-பிரமன். அஜன் என்ற வடசொல்லின் தற்பவம். அ+ஜன். பிறப்பற்றவன்.

507 வினைவலி யதனு லாயுளை நாடி விதிப்பேன்யா
னனையது தவரு தாயினு மெனையுற் றனையன்றோ
நினைவினை யுதவுங் காஞ்சி யெனும்பதி நீயேகித்
தனியனை யெண்ணி யருச்சனை புரியிற் றருமென்றான்.

508 நன்றென வேயப் பதியவ னுற்றன னடுவோனை
வென்றிடு மரனை மிருத்துஞ் சயமனு விதியாலே
யன்றொரு பூசை யியற்றி னனவன் முன்னின்றே
யின்றெது வேண்டுவ புகலென வவனு மிசைக்கின்றான்.

509 ஏதிடு மாறோ திடவரி யானே! யெனதாயுட்
சோதிட நூலோ ரிருபஃ தெனவே சொற்றாரே
யாதலி னுலென் னிருகுர வருநொந்த யர்கின்றார்
நீதுணையா யன்ன வர்துயர் களைவாய் நின்றென்றான்.

510 அதுவின வியகோன் விதிவலி தவரு தானுலு
முதிர்தரு மிருபான் வயதுறி லன்றோ முடிகாலம்
பதினறு வயதாய் அனுதின முறைநீ படிமீதே
யுதவின மெனவே மறையவன் வரமே யுற்றானே.

---

507. வினைவலியதனுல்-ஆன்மாக்களின் வினையின் வன்மைக் கேற்ப. 'வேதாவை இவ்வணம் விதித்தது ஏது என்னில் வினைப் பயன் என்பன்' என்பர் தாயுமானவர். நினைவினை-நினைத்த விருப் பங்களை. தனியன்-ஒப்பற்றவன் (சிவபிரான்).

508. நடுவோன்-யமன். 'நல்காக்கரவன் நடுவன் மேல்வர- ஒல்காத் தவம் இலாது ஒளித்தது போல' (பெருங்கதை. உஞ்சை. 53. 70. 71). மிருத்துஞ்சயமனு-மரணத்தை வெல்லும் மந்திரம். 'த்ரயம்பகம் யஜேமஹே சுகந்திம் புஷ்டிவர்த்தனம்-உர்வாருகம் சிவபந்தனுன் ம்ருத்யோர் முக்ஷீய மாமிருதாத்' இதுவே மறலியை வெல்லும் மந்திரம்.

509. ஏது இடும் ஆறு-காரணம் காட்டும் வழி. ஓதிட அரி யானே-புகழ்வதற்கு எட்டாதவனே. சொற்றார்-கூறினர். இருகுர வர்-தாய் தந்தையர். அன்னவா-அவர். களைவாய்-போக்குவாயாக. 'களைவாய்துன்பம்: களையாது ஒழியின் களைகண் மற்றிலேன்' என்பர் சடகோபர்.

510. விதிவலி தவருது-விதியின் ஆற்றல் தப்பாது. நீபதினறு வயதாய் அனுதினம் படிமீதே உறை என மாற்றுக. படி-பூமி. உறை-வாழ்க. வரமேஉற்றான்-வரம் பெற்றான்.

511 அவ்விடை தனிலே நந்தியு மாற்கண் டயர்தாமு
மிவ்விடை யூறே யணுகிட நோற்றங் கிதுபெற்றார்
செவ்விய தாமவ் விறவாத் தலமிது தென்கீழ்பாற்
சைவர்ப ராவும் பெரிய பிரானுந் தனிலிங்கம்.

பெரியபிரான்

வேறு

512 காலவலைப் படுமகில சாலமெலா
முடிந்ததொரு கற்பந் தன்னி
லாலமிசை கண்டுயில்கூர் பெருமானு
மலர்த்தவிசின மர்ந்து ளோனு
மூலமெனும் பரப்பிரமப் பேரிகலாற்
போர் பொருதார் : முன்னோ ரான
மேலவரே கலாம்புரியில் வரசமையப்
பிணக்கர்தமை வெறுக்க லாமோ.

513 ஒருவரொரு வரின்மாறாய் பாசுபதப்
படைமுதலா யுள்ள யாவும்
வெருவவவர் விடுத்தலுமே யகிலசரா
சரமனைத்தும் விளிந்து போன :
பருவரலிற் றரணிமுதற் புவனமுழு
துந்துகளாய்ப் பறவா நின்ற
பெருவலியும் பெரும் படையு முடையவரே
சீறிலெவர் பிழைக்கற் பாலார்.

---

511. அவ்விடை-அந்த இடம். இ+இடையூறு-இவ்விடையூறு. அபமிருத் என்பதை இடையூறு என்றார். அபமிருத்யு என்பதை அவமிருத்து என்று சிலர் தற்பவம் ஆக்கினர். நோற்று-தவம் செய்து. பெரிய பிரானும் தனிலிங்கம்—மஹாலிங்கம்.

512. காலத்திற்குள் யாவும் அடங்கலின் காலவலை என்றார். 'மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும் காலம் என்று ஒருவலை கடக்கல் ஆகுமோ' (கம்பன், அயோத்தி. திருவடி 73). கற்பம் என்பது சிருஷ்டி முதல் பிரளயம் வரை உள்ள காலம். மனுஷ வருஷம் நானூற்று முப்பத்திரண்டு கோடி பிரமனுக்கு ஒரு நாள். ஆலம் ஆலந்தளிர். (ஆகு பெயர்) பேரிகல்-பெரும்போர். கலாம்-கலகம். சமயப்பிணக்கர் தம்சமயமே பெரிதென்று தர்க்கிப்பவர்கள்! சமயக் கணக்கர், சமயப் பிணக்கர் என்ற தொடர்களை ஆய்க: பல உண்மைபுலனாகும்.

513. வெருவ-உலகம் அஞ்ச. விளிந்து போன-அழிந்தன.

514 ஆருருவுந் தனதுருவாம் பிரானதுபோ
தன்னவர்த மகந்தை தீர்ப்பான்
பாருருவக் ககனமுழு துருவவனலு
ருவமெனும் படிவமாகிப்
பேருருவ லிங்கமதா யிருவர்நடு
வுறத்தோன்றப் பேதுற் றன்னோர்
காருருவ மசகமெனத் தோன்றினரவ்
வுருவமுனங் கன்றி னாரே.

515 இவ்வுருவே திதனதடி முடிவேதென்
றறிதுமென விருவர் போகித்
தெய்வதவா யிரவருட மேனமுமன்
னமுமாகித் தெரிந்தெய்த் தார்பின்
மெய்வடிவாய்ச் சுருதியவ னுற்றரனே
யிறைவனென விரிக்கும் போதில்
வெவ்வுருவாங் கனலுருவிற் றனதுருவாய்
வெளிநின்றான் விமல நாதன்.

---

பறவா நின்ற-(காற்றிலே நுண் துகள் போல்) பறந்தன. பருவரல்-துன்பம். தரணி-பூமி. வேற்றுப் பொருள் வைப்பணி. எதிர் காலப் போரின் அச்சத்தை அன்றே கற்பனைக் கண்ணாற் கண்ட ஆசிரியர் திறம் பாராட்டற்குரியது.

514. லிங்கோற்பவம் கூறப்பட்டுள்ளது. இறைவன் எல்லா மாகவும் உள்ளான் என்ற பெருந்தத்துவத்தை ஆருருவும் தனது உருவாம்பிரான் என்றார். 'பாரொடு விண்ணாய்ப் பரந்த எம் பரனே' என்று திருவாசகம் பேசும். தீர்ப்பான்-நீக்கும் பொருட்டு, இறைவன் கனல் தூணாக இருந்ததை நயம்படக் கூறுகிறார். மூவுல குருவ இருவர் கீழ் மேலாய் முழங்கு அழலாய் நிமிர்ந்தானே. (திருவாசகம். வாழாப்பத்து. 9) மசகம்-கொசு. 'மசகம் தரம் என்னலாய் நிலையா உடல் உயிர்' (திருவேங்கடத்தந்தாதி)

515. இவ்வுரு ஏது? இதன் அடி முடிவு ஏது? எனப் பிரிக்க. 'பாதாளம் ஏழினும் கீழ்ச் சொற்கழிவு' என்று தொடங்கும் திருவெம்பாவையின் சாரமே இத்தொடராகவந்துள்ளது. ஏனம்-பன்றி. தெரிந்து-இது அறியக்கூடாத பொருள் என்று தெரிந்து. எய்த்தார்-தளர்ந்தார். கனல் உருவில் தனது உருவாய் வெளி நின்றான் என்ற தொடர், ஆய்தற்குரியது. வெளி நின்றான்-வெட்டவெளியில் நின்றான். சிதாகாசமாக நின்றான் என்பது நுட்ப மான பொருள்.

516 ஐயனவன் முற்படுமன் னவனுலே
யிருவருமங் ககந்தை யான
மையலகன் றுனதருளி லாமையினுல்
மயங்கினமிம் மயக்க நீங்கி
யுய்யுநெறி தருதியெனப் பரவுதலு
நும்பொருட்டா லுலகம் யாவும்
மெய்மையறிந் தினிமைபெறு மாறுகுறித்
துரைத்துமென விரிப்ப தானுன்.

517 தோற்றியவிவ் வுருவமெமை யறிகுறியா
மிலிங்கமிதன் ருெடர்பை நாடிப்
போற்றிடுமி னுமதறிவு திரியாத
நிலைமைபெறும் போத மேவு
மேற்றமுட னின்றுமுத லிவ்வுருவே
பரமதென விறைஞ்சில் யாருந்
தேற்றமுடை யவராகி மருட்கையடை
யாதவுண்மை செறிவ ராமே.

---

516. மையல்-மயக்கம். மயங்கியமைக்குக் காரணம் இறை யருள் இன்மையே. 'அருளால் எவையும் பார்' என்பர் தாயுமானவர். உலகம் இனிமை பெறுமாறு உம் பொருட்டால் உரைத்தும் எனக் கூட்டுக.

517. இலிங்கத்தின் பெருமையைச் சிவச்சுடரே பேசுகிறது. அறிகுறி–அடையாளம். திரியாத நிலைமைபெறும்–சஞ்சலம் அற்ற உறுதியைப் பெறும். இவ்வுருவேபரம்-இந்த வடிவமே பரம் பொருள். தேற்றம் தெளிவு. மருட்கை-மயக்கம். மருட்கை அடை யாத உண்மை-பிரமம். செறிவர்-கலப்பர். இலிங்கத்தைப் பரம் பொருள் என்று நம்பி வழிபாடு செய்பவர் பிரமத்தில் ஒன்று படுவர். 'திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனி தன்னைச் சிவன் எனவே கண்டவர்க்குச் சிவன் உறைவன்'. (சித்தியார். 325)

## திருவீராட்டகாசம் (திருவீரட்டானம்)

518 என்றலுமே பதியதனிற் பெரியபிரா
னெனுமிலிங்க மியற்றிப் போத
மொன்றியருச் சனைபுரிந்தா ரதுபெரிய
லிங்கமென வுலகம் போற்ற
நின்றதத னயலொருபால் வீரவட்ட
காசமது நிமல ரூபம்
வென்றபுல னுடையரணி மாதிசித்தி
பெறவுதவி விளங்கா நிற்கும்.

519 ஒழிவுபெறு மற்றுமொரு கற்பத்திற்
காலாங்கி உருத்தி ரேசர்
விழியனலாற் புவனமிவை முழுதுமழி
தந்துவெறும் வெளிய தாகப்
பழிபடுபே ரிறுதியினு முடிவுபடா
துறைகாஞ்சிப் பதியி லீசன்
கழிதருவா னுவகைபட வடுதிறலா
னிருத்தமியல் கருத்த ஞான்.

520 பெருந்திமிர முறுநாளி னெடுந்திறலான்
நடனமிடு பெருமான் றாய்மை
திருந்துமதி பலகோடி யுதையமென
வீரநகை செய்தான் வான்மேற்
பொருந்துமெழு வருக்கமுகில் பேருருமுக்
கான்றதெனப் புரியு மோதை
நிரந்தரமு மொடுங்கலின்றிப் பற்பலகா
லுலவாது நிமிர்ந்த தாமே.

---

518. பெரியபிரான்-மகாலிங்கம். போதம்-அறிவு. வீரஅட்ட காசம் எனப்பிரிக்க, வீராட்ட காசம். புலன் உடையார் அணி மாதி சித்திபெற விளங்கா நிற்கும். விளங்கா நிற்கும்-விளங்கும்.

519. காலாங்கி உருத்திரர்-காலாக்கினிருத்திரர். இவர் தாம் அனைத்தையும் அழித்துப் பின் மிஞ்சியிருப்பவர். இம்மூர்த்தியை ஊழிக்கடை நாளில் திரிஉமைகேள்வன் என்றும். ஈமத்துள் தனியன் நின்ற உறைமிடற்று இறை என்றும் கவிச்சக்கரவர்த்தி பகர்வர். இறுதியினும்-ஊழிக் காலத்தும். முடிவுபடாது-அழி யாமல் கழிதருவான் உவகை-மிகப்பெரு மகிழ்ச்சி.

520. பெருந்திமிரம்-பேரிருள். திறலான்-ஆற்றலோடு. வீர

521 ஓதைபடு மன்னகையின் பெருநிலவு
திரண்டுகதை யுருவ மாகி
மேதகுமோ ரிலிங்கமென மேவியது
பின்னகிலம் விரிந்த காலை
யாதரவிற் பற்பலராம் யோகரருச்
சனைபுரிய வதனை நாளும்
மூதறிவோர் வீரவட்ட காசதல
நிலையமென மொழிவர் தாமே.

## உருத்திர கோடீசுரம்

522 அன்னதற்கீ சானதிசை கோடியுருத்
திரர்கள்ஆ ராமம் செய்தே
யுன்னவரும் பரசிவனைப் பூசித்த
ருத்திரசோ லைப்பேர் மன்னும்
பின்னுமதிற் சண்டிகையாள் கோடிதீர்த்
தமும்புரிந்து பிரானைப் போற்றிப்
புன்மையராங் கொடியநிசா சரரையடும்
பவம்பிரிந்து புனிதை யானாள்.

---

நகை-வீரம் தோன்றச் சிரித்தல். இச்சிரிப்பை வடமொழியாளர் வீராட்டகாசம் என்பர். உருமு-இடி. பற்பல கால்-பலகாலம். உலவாது-அழியாமல்.

521. ஓதை-ஓசை, 'உழவர் ஓதை மதகு ஓதை' (சிலம்பு. கானல்வரி). இறைவனின் பெருஞ்சிரிப்பு இலிங்கமாக உருக் கொண்டது. அகிலம் விரிந்தகாலை-சுருங்கிய உலகம் விரிவு பெற்ற பிறகு.

புன் சிரிப்பை மந்தஹாசம் என்றும், பெருஞ்சிரிப்பை வீராட்ட ஹாசம் என்றும் வடமொழி புகலும்.

522. ஈசானம்-வடகிழக்குத் திசை. ஆராமம்-சோலை. மணிமே கலையுள், ஐயர் அவர்கள் ஆராமம்–உபவனம் என்று உரை எழுதி, அதை விளக்க' உண்டாக்கப்பட்டவனம் என்று வரைந்தருளினார்: அது இன்று உருத்திரசோலை என்று வழங்கப்படும். சண்டிகை-துர்க்கை, புனிதை-தூயவள்.

**பலதலம் - கயிலாயநாதன்.**

523 வீரதலம் அதன்றென்பால் ரோமசர்பாண்
டவர்மனையாள் வீதி கோத
ராருணிமுற் கலர்பஞ்ச பகவர்தவு
மியர்முதலா மறிவின் மேலோர்
சீரியர்தம் பேர்படவே யியற்றுலிங்கம்
அன்னதற்குத் தென்பா லாக
வாரமுடன் கயிலாய நாதனெனு
மொருநிலைய மன்னு மாலோ.

**சேசலீசம்.**

524 ஈசான னப்பரனைப் பூசனைசெய்
தொருதிசையி னிறைவன் ஆனான்
றேசாரு மதனயலே சேசலீசஞ்சே
லுருவாயத் திருமால் முன்னங்
கூசாது மறைகவருஞ் சோமுகனைக்
கொலைபுரியக் குறித்த நாளி
லாசாரத் தருச்சனைசெய் தரியவரம்
பெற்றதல மதன்மேல் பாலாய்.

**தொக்கீசம், மாகாளீசுரம்**

525 உமைகவுரி யாகியநாட் டிருமேனித்
திமிரமதோ ருருவ மாக
வமர்தருமூ விலைச்சூலி பூசைபுரி
தொக்கீசம் அப்பால் ஞாலச்
சுமைபெறுமா காளனெனு முரகவிறை
தென்கயிலை தொழுது போற்றி
யிமையவரு மடையாத முத்திகுறித்
தரியதவ மியற்று நாளில்.

---

523. ரோமசர், முதலானவர்கள் தங்கள் பெயரால் இலிங்கம் நிறுவினர். வாரம்-அன்பு.

524. அப்பரமன்-கயிலாயநாதன். அதன் அயல்-கயிலாய நாதன் கோவிற்குப் பக்கத்தில். சேல்-மீன். கூசாது-பயப்படாமல். ஆசாரம்-ஒழுக்கம்.

525. உமை-(கரிய நிறம் பெற்ற) உமாதேவி. கவுரி ஆகிய நாள்-வெண்ணிறம் பெற்ற காலத்தில். திமிரம்-இருள் (கருமை) உமையம்மையின் கரிய நிறம் ஒரு வடிவம் பெற்றுப் பூசை புரிந்த இடம் தொக்கீசம். உரக இறை-பாம்புகளுக்குத் தலைவன்.

526 பொருவரிய காஞ்சியினை யடைந்துபிரா
னதுபூசை புரியி லின்னே
கருதியது வருமெனவா னிடைவாணி
யுரைத்தலுமக் கணமே நண்ணிப்
பெருமைபெறு முலகாணி நீராம
யக்கரையிற் பெருமான் றன்னை
யிருமைபெறு பூசனைசெய் தடைந்தவது
மாகாள மெனும்பே ரெய்தும்.

குமரகோட்டம்

வேறு

527 வெள்ளி மால்வரைத் தொழுவரு மயன்தனை
வேலுடைப் பிரானை
வள்ள லீயுரை முதலெழுத் துறுபொருள்
வல்லவா றெனலொடு
முள்ள வாறுமும் முதல்வர் தம்முரு
வமங்குல குளோ ருளங்டோறுந்
தெள்ளி தாகிய தீபிகைச் சிகையெனச்
செறிதரு மதுவென்றான்.

---

526. இன்னே-இப்போதே. வானிடைவாணி-ஆகாசவாணி. இருமைபெறு-இம்மை மறுமைகளைப் பெறச் செய்யும். 3 ஆம் அடியின் சரியான பாடம் கிடைக்கவில்லை. பெருமைபெறும் உலகாணி தீர்த்தத்தின் இருங்கரையில் பெருமான் றன்னை என்று மாற்றலாம். சரியான பாடம் கிட்டும் வரையில் இப்படியே இருக்கட்டும்.

**527.** வெள்ளிமால் வரை-கயிலாயம். முதல் எழுத்து-பிரணவம். மும்முதல்வர்-பிரமன், திருமால், சிவபிரான். தீபிகை-விளக்கு. பிரவணத்தின் பொருள் மூர்த்திகள் என்று கூறினான். (புதிய-காஞ்சி-குமர-18), பிரமன் 'பல்கலைக்கும் முதலாகப் புகன்றிடுவது ஓம் என்னும் பதமாம்: அந்தச்-சொல்விளைக்கும் பொருள் அயன்மால் ஈசன் எனும் மூவர் எனச் சொல்வர் மேலோர்' என்று பகர்ந்ததாகக் கூறும்.

528 என்று கூறிய வேதனைச் சினத்தறு
முகப்பிரா னிதன் மேன்மை
நன்று தேறிலன் விதிப்பது தகாதென
நடுச்சிறை யவற் போக்கி
யன்று நீதியிற் படைத்திடு தொழிலினை
யாற்றின னதுகாலை
வென்றி சேர்தரு பரமனே வேண்டிட
விடுத்தனன் அந்நாளில்.

529 அத்த னெம்மிறை வேண்டிடப் புரிந்தன
மது பிழையென வுன்னிப்
பத்தி யான்முனம் படைத்திடு முருவுடன்
பதியிது தனைமேவி
யத்தி யானமோ டுறைவிடங் குமரகோட்
டமதெனுந் தலமன்றுன்
மெய்த்த பூசனை புரிதரு மேன்மை
யால்விளங் கிடுகும ரேசம்.

530 திண்டி டாதவர் குமர கோட்டப்
பெயர்செவிப் புலனிறைப் பாரே
லாண்டு மாமறை யவரென வெழுபல
மடைகு வரது திண்ணந்
தூண்டு மாவலா லய்யனு மப்பதி
சுடர்த ருமொரு லிங்கம்
வேண்டி யேயருச் சனைபுரிந் தனனரன்
மேவி னனவன் முன்னம்.

---

528 வேதனை-பிரம்மதேவனை. விதிப்பது-படைப்பது. அவற் போக்கி—அப்பிரமனை அனுப்பிவிட்டு. பரமன்-சிவபிரான்,

529. வேண்டிடப்புரிந்தனம்-வேண்டிக்கொள்ளச் செய்தோம். (குறிப்பு அறிந்து செய்திருக்கவேண்டும்) படைத்திடும் உரு—உலகைப் படைப்பதற்காக மேற்கொண்ட வடிவம். முருகப்பிரானின் படைப்புக் கோலத்தைக் கந்தபுராணம் 'ஒரு கரந்தனில் கண்டிகை வடம் பரித்து ஒரு தன்—கரதலந்தனில் குண்டிகை தரித்திருகரங்கள்-வரதமோடு அபயம் தரப்பரம் பொருள் மகன் ஓர்—திருமுகங்கொடு சதுர் முகன் போல்விதி செய்தான்'. என்று நயம்படப்பகரும். அத் தியானம் எனப்பிரிக்க. குமரேசம்-குமரக் கோட்டம்.

530. திண்டிடாதவர்-திண்டத்தகாதவர். புலன் நிறைப்பாரேல்-

531 ஆதி பூதர் பைசாசர்யோ கினிகளாம்
அனைவரும் புவியோரை
வாதி யாவகை யவர்க்கதி பதியென
வாழுதி யுமைமாது
நீதி மாதவம் புரிபரா
பரமெனுநிலை யமதுறு வாயிற்
கோதி லாவகை யுறைகென வுவகை
மேற்கொண் டுறைதரு மையன்.

**மங்களேசுரம்**

532 இனிய மங்கை யென்னுமோர்
சூரணங்கிதன் வடபா லாகத்
துனித ராதுதன் பேர்பெற மங்களே
சுரமெ னவொரு லிங்கம்
புனித மாகவே யியற்றினள் பூசனை
புரிந்த னளத னாலே
வனிதை யாமுமை சேடியா யுறைந்தனள்
மற்ற தன்குட பாலில்.

---

செவிப்புலனில் நிரப்பிக் கொள்வாரேயானால். அந்தணர்க்கு உரிய தொழில்கள் ஆறும் அவற்றால் கிடைக்கும் முத்தியும் எழு பலன் என்ற சொல்லால் குறிப்பிட்டார் என்று கருதுகிறேன், சிறக்கு மேல் வேறு பொருள் காண்க. தூண்டும் ஆவலால் எனப் பிரிக்க. ஐயன்-சாஸ்தா. 'ஐயன் பாழியில் ஆனைபோர்க்கு உரித் தாம் அன்றாயிற்று' என்று நம்பிள்ளை 'அவரவர்' (திருவாய் மொழி 5) என்று தொடங்கும் பாவில் வரைவர்.

531. புவியோரை-பூமியில் உள்ள மக்களை. வாதியாவகை-வருத்தாதபடி. அம்மை தவம் புரிந்த இடத்திற்குப் பராபர நிலையம் என்றும் பெயர் இருந்ததாகத் தெரிகிறது.

532. அதன் குடபாலில், மங்கை, லிங்கம் இயற்றிப் பூசனை புரிந்தனள். அதனால் உமைசேடியாய் உறைந்தனள் எனக் கூட்டுக. சூர்அணங்கு - துன்பம்தரும் தெய்வப் பெண். துனி - துன்பம். சேடி-தோழி. 'தாமரை இருந்தையல் சேடியாம் தரமும் அல்லன்' (கம்பன், ஆரண்யம். சூர்ப்பணகை. 69)

## இராமேசுரம்

533 தராத லாதிபன் ராகவன் முன்னரித்
தலத் திடை யெம்மானைப்
பராவி யேகிய நலத்தினு னிருதரைப்
படுத்தனன் மீள்காலை
விராவி யின்னிடைப் பின்னரும் பூசனை
விதித்த னனொரு லிங்க
மிராம நாத னென்றன னதுபணி
குவோர்யா வருமர சாள்வார்.

## மாதலீசுரம்

534 விரத வாகம மகபதி விரித்திட
வினவின னனையான்ற
னிரத மூர்பவ னுவர்த்தனன் வாழ்க்கையை
யினியன வினி மேலாஞ்
சரத மாகிய வீடெனக் குறித்தனன்
தலனி துதனை மேவி
வரத னுணையிற் பூசனை புரிந்தது
மாத லீசுர மென்பார்.

---

533. நலத்தினல்-நன்மையால் எம்மானை-சிவபெருமானை. படுத்தனன் மீள் காலை – கொன்று திரும்பும் சமயத்தில். இன்னிடை-இவ்விடத்தில் (புதுப்பிரயோகம்.) இவ்விடை என்ற சொல் ஏடெழுதுவோரால் புத்துருவம் பெற்றும் இருக்கலாம்.

534. விரத ஆகமம்-விரதிகள் போற்றும் ஆகமம். ஈண்டு 'விரதிகள்' என்றது சைவசமயச் சான்றோரை. 'வெண்டலை மாலை விரதிகள்' திருநாவுக்கரசரின் தேவாரம் (பதிகம் 21. 1-முத்து விதானம்). வினவினன்-சிந்தித்தான். திருவடி வினவாக்கருவுறை மாக்கள் (கல்லாடம். உயிர்புகும். 30) உவர்த்தனன்-வெறுத் தான். சரதம்-உண்மை. 'சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்'. (திருவாசகம்)

### அநந்தீசுரம்

535 மாது மீசனுந் திருவிளை யாடலை
மதித்தனர் சூதாடும்
போது மாயவன் தோற்ற னளுமை
யெனப்பொய்க் கரிதனைக் கூறப்
பேதை நீயிவண் விழியி லாவரவெனப்
பெயருதி யெனமாலை
யாதி நாயகி சபித்தனண் மாயனு
மம்பிகை தனைநோக்கி.

536 இன்ன சூளுரை தவிருமா றருளுதி
யன்னை நீயெனப் போற்ற
வுன்னி நாயகி காஞ்சியம் பதியினை
யுற்ற ருச்சனை பேணி
மன்னி யீசனைப் போற்றுதி யிவ்வுரு
மாறு மென்றலு மாயன்
அன்ன தாகுமென் றனந்தனும்
பேருடனப்பதி தனையுற்றான்.

### அனைத்தீசுரம்

537 நேரி லாவனந் தீசுரம் என்றொரு
நிலையம தமைத் தீசன்
சீரு லாவிய பூசனை திருத்தி
யேதிர்ந் தனனச் சாபம்
பேரு லாவிய வனைத்துமா னரியற்
பேசு வனினிக் கேண்மின்
ஏரு லாவிய காலகற் பனையுகத்
தெண்ணொரு நான்காகும்.

---

535. பொய்க்கரி பொய்ச்சாட்சி. விழியிலா அரவு-குருட்டுப் பாம்பு. பெயருதி-நீங்குக. பொய்ச்சான்று கூறுபவர் குருட்டுப் பாம்பாய்ப் பிறப்பர் என்ற தத்துவத்தை மட்டும் இக்கதையிற் கொள்ளவேண்டும்.

536. சூள் உரை-சாப மொழி. மன்னி-நிலையாகத்தங்கி.

537. நேர் இலாத அனந்தீசுரம்-ஒப்புமையற்ற அனந்தீசுரம். திருத்தி-செம்மையாகச் செய்து. அனைத்தும் ஆனார்-எல்லாப் பொருளுமாக இருக்கும் இறைவன். இயல்-வரலாறு

**வேறு**

538 தருக்கு முத்தியிற் கிரேதமத் தருமத்திற் றிரேத
மருத்த முற்றது துவாபரங் கலியுக காலத்
துரத்து முற்படு கிரேதமே முதலொரு மூன்றும்
வருத்த மற்றிடு பிரமமே முதற்பெறும் வருணம்.

539 ஒருமை யாகநாற் பத்து மூன்றிலக்கத் தினுற்ற
விருப தாயி ரம்வ ருடமா மிவையொரு நான்கும்
அருமை சேரனந் தீசமேல் பாலனைத் தீசம்
பரவி யேயருச் சனைபுரிந் தநுவரம் பராவி.

540 கால நாயக மாக்கி யக்கா லத்தை யெமக்குக்
கோலி யேபிரித் தருளுதி யென்றவை கூற
வாலி தென்றரன் பிரமமே முதல்வரு ணத்தார்க்
கேல வேபகு திப்படும் பங்கினை யெண்ணி.

---

'என்றலும் இவ்வுலகு ஈன்றுள் தக்கன் மகளாய் உதித்த இயல்பும்' (கூர்மபுராணம். 12. 1)

538 தருமத்தில் கிரேதம் தருக்கும். கிரேதம் அத்தருமத்தில் அருத்தம் உற்றது. துவாபரம் கலியுக காலத்து உரத்து முற்படும்: என்று முதற்கண் சேர்க்க. தருக்கும்-செருக்குக் கொள்ளும். அருத்தம்-பாதி. முற்படும்-முன்னைய யுகங்களைப் போலவே பாதி பாதி அழியும். கிரேதம் நிறைவான தருமத்தைப் பெற்றிருக்கும். கிரேதத்தில் அதில் பாதி. துவாபரத்தில் அதில் பாதி. கலியுகத்தில் அதிற்பாதி. (சரியான பாடம் கிடைக்கவில்லை.)

கிரேதம் முதலாகிய மூன்று யுகத்தும் வருணம் வருத்தம் இல்லாமல் இருக்கும். கலியுகத்தில் வருந்தும் என்பதை உய்த்துணர வைத்தார்.

பாகவதம், 'ஒடிவிலா ஊழிதோ றெவ்வொன் றுகால்-அடியொரு மூன்றிழந்து அண்ணல் நல்லறம்-படிமிசையோர்பதம் பாவும் பாலதாய்-விடையுருத்தாங்குபு மெலிந்து நின்றதால்'. என்று கூறும். (பரிட்சித்து கலிகடிந்த. 26)

539. நாற்பத்து மூன்று லட்ச வருடமும் அதற்கு மேல் இருபதாயிர வருடமும் கொண்டது ஒரு சதுர்யுகம். (இது மக்கள் வருடம்) தேவ வருடத்திற்குப் பன்னீராயிர வருடம். நான்கு-(கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்) நான்கு யுகங்கள். (ஆகு பெயர்) நான்கு யுகங்களும் அனந்தீசத்தையும் அனைத்தீசத்தையும் புகழ்ந்து வரம் வேண்டி அருச்சனை செய்தன.

540. காலநாயகம் ஆக்கி-காலத்திற்குத் தலைமைப் பதவி

541 ஆய நான்குமூன் றிரண்டொரு பங்கென வடைவே
பாய தோர்பதி னேழிலக் கத்திரு பத்தெண்
ணுயி ரம்வ ருடங்கி ரேதா யுகம தற்கு
மேய பன்னிரு விலக்கத்தொண் ணூற்ரு ருயிரமே.

542 பரவி யெட்டு லக்கத் தறுபத் துநா லாக
விரவு மாயிரந் துவாப ரங்கலி யுகம்வி ளம்பிற்
கரவு நாலி லக்கத் துமுப்பத் திரா யிரமாந்
தரும மின்ன பாற்ப டுமது நான் குகந் தனிலும்.

543 இன்ன மாநகர்க் கேயியல் வேற்றுமையி லாமன்
மன்னு மென்றனன் சிவனத ளுற்கலி வாதை
துன்னி டாதிது தலத்தினுக் கென்று நூல் சொல்லு
முன்னி யேயினித் திரும யானத் தியலு ரைப்பாம்.

திருமயானம்

வேறு

544 முன்னோர் காலையி லுண்மை நூலினை
முதல்வ னாகிய வெம்பிரான்
பொன்னு லாவிய|மரும னாதி
புராண ரான வருக்கெலாந்
தன்ன தான வகோர ரூபு
தரித்து ரைத்துவி ரித்தன
னன்ன கால மதற்கு நாம
மகோர கற்பம தென்பரால்.

---

கொடுத்து. எமக்கு என்றது நான்குயுகத்தை. வாலிது-தூய்மை யானது. பகுதிப்படும்பங்கு-பிரித்துக் கொடுக்கப்படும் அளவு.

541. முதல் யுகத்துக்கு நான்கு பங்கு. இரண்டாம் யுகத்துக்கு மூன்று பங்கு. மூன்ரும் யுகத்துக்கு இரண்டு பங்கு. நான்காம் யுகத்துக்கு ஒரு பங்கு.

542. பதினேழுலட்சத்து இருபத்தெட்டாயிர வருடம் கிரேதாயுகம். பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூரருயிர வருடம் கிரேதாயுகம்.

எட்டுலட்சத்து அறுபத்து நாலாயிர வருடம் துவாபரயுகம், நான்கு லட்சத்து முப்பத்திரண்டாயிர வருடம் கலியுகம்.

தருமம் இன்னபாற்படும் - தருமமும் இதற்கு ஏற்றபடி யிருக்கும்.

543. இன்னமாநகர்-காஞ்சிபுரம். வேற்றுமை-வேறு பாடு. கலிவாதை-கலியுகத்துன்பம்.

544. உண்மை நூல்-தத்துவ நூல். பொன்-திருமகள்.

545 பரவு கால மதிற்பி றந்துள
பண்ப ளுகிய தானவ
னரிய மாதவ நெடிய நாளள
வயனை நாடி வருந்தினன்
பிரம ளுணையி லகில மாகிய
பெருமை சேர்தரு முயிரெலாம்
விரவி யேயவை யரிய வீரியம்
விரித்திரா வகைபரு குவான்.

546 இவ்வ ரந்தருபிரம ளுதிய
ரெனைய ரும்வலி குன்றியே
கவ்வை யெய்தினர் தீய ராகிய
கயவ ருக்குப காரமே
செய்வ ரேலவ ரெவ்வ நோயது
சேர்வ ரென்பதுதிண் ணமென்
றவ்வி யம்படு நெஞ்ச ராகி
யழிந்த ழிந்துவ ருந்துவார்.

---

மருமன்-திருமார்புடையவன் (திருமால்). புராணர்-பழமையானவர்கள். அகோரரூபு-அகோரரூபம். ரூபம் என்பது, அம் என்னும் சாரியை கெட்டு ரூபு என்று வந்தது. அந்த யுகம் அகோர கற்பம் என்னும் பெயர் பெறும்.

'முன்னொருநாள் முகன் புருடப் பெயர்க்கற்பம் முடிவெய்திப் பின்னுறுசீர் அகோரமாம் கற்பத்து' (சிவஞான-காஞ்சி. கச்சி மயானம் 2)

545. பண்டளுகியதானவன்-பண்டாசூரன். வருந்தினன்-முயன்று செய்தான், ஆற்றின் வருந்தா வருத்தம். (திருக்குறள்.) அங்கும் பரிமேலழகர், வருந்தா வருத்தம்-(கருமத்தை) முயலாத. என்று உரை வகுத்தார். அரிய-கிடைத்தற்கரிய. இராவகை-இல்லாதபடி. (பண்டாசூரன் கதை தத்துவ விளக்கம்.)

546. எனையரும்-எப்படிப்பட்டவரும். (முற்றும்மை) வலி-வலிமை. கவ்வை-துன்பம். கயவருக்கு உபகாரம் செய்வரேல் அவர் நோய் செய்வர் என்று உலகியலைக் கூறுகின்றார். அவ்வியம்-தேவர்கள் பொருட்டாகக் கொடுக்கப்படும் (ஆடு, குதிரை, மனிதர்) பலிப் பொருள்.

547 வேற வர்க்கொரு புகலி லாமையில்
வெள்ளி மால்வரை யெய்தியே
யாறு சூடிய பரம னேவலி
யற்ற னந்துய ருற்றனம்
ஈறி லாவ வனிக்கு முற்பவ
வியல்பி னல்வரு முற்பவப்
பேறி லாவகை பண்ட னென்றொரு
பெயரி னன்வலி புரிகுவான்.

548 வெய்ய னைக்கொலை புரிவ தற்கியல்
வீர சத்தி யிலாமையா
லைய நின்னை யடைந்து ளோமெனு
மளவி லண்ண லு மெண்ணியே
கைய னன்னவ னெங்கு நின்று
கலந்து ளான்பி றி துருவிலான்
பொய்யன் மற்றவ னைப்பெ ருங்கொலை
புரியு மாறது புகலுவாம்.

வேறு

549 அரிபிரமர் முதலசரா சரமுமவி
யாகவே யாக்கி யாமே
பெருமைபெறு காஞ்சிதனி லரியமக
மொன்றுரிமை பெறவே யாற்றிற்
கருதியது முடியுமென விமையவர்
எம்பெருமானைக் கசிந்து போற்றி
யரகரநீ வேண்டியது புரிந்தெமைக்காத்
தருளெனவே யகில நாதன்.

547. வெள்ளிமால்வரை-கயிலாயம். முற்பவம்-முற்பிறப்பு. இயல்பினல் வரும் உற்பவப்பேறு எனப் பிரிக்க. உற்பவப்பேறு-உற்பத்தி செய்யும் பாக்கியம். முதலில் வரும் முற்பவம் என்பதை முன்பவம் என்றுபிரிக்கவும். பின்வரும் உற்பவம் என்பதை உத்பவம் என்ற வடசொல்லின் தற்பவமாகக் கொள்க.

548. வெய்யன் பண்டாசுரன். கையன்-அற்பன். பிறிது உருவிலான்-உங்களினும் வேறுபட்ட உருவம் உடையவன் அல்லன். பொய்யன்-பொய்போன்றவன். இப்பாடல் பண்டாசுர தத்துவத்தை விளக்குகின்றது.

549. அவியாக-தேவர்க்கு வழங்கும் பலிப் பொருளாக.

550 ஆதிபரை யுருவான காஞ்சிநகர்
அதனிடையே யனல மான
சோதிதரு பேரிலிங்க வுருவாகி
மகம்புரியத் துரிசி லாத
வேதியனுந் தானேயாய்த் தனதுகையாற்
குண்டமொன்று விதித்து மேலாம்
போதமுறு தனதுருவே மகவுறுப்பா
யினிதமைத்துப் புரிந்தான் வேள்வி.

551 புரிதருமவ் வேள்வியிடைத் தொழிலெவைக்குந்
தலைமைபெறு புராண ரான
வரிபிரமா முதற்றேவ ரகிலசரா
சரமனைத்து மவியா யோச்ச
மருவியவ ரவையுருவு ணிறைந்திருக்கு
மவுணனவன் மாய்ந்தா னன்று
ளெரியுருவாம் அந்தலிங்கத் தாருயிரா
மவையொடுங்கி யிருந்த தன்றே.

---

சிவபிரான், அரிபிரமர் முதலான சராசரங்களை அவியாக்கி யாகம் செய்யின் கருதியது முடியும் என்று கூறினன். தற்போதம் அழிந்தால் காமம் முதலானவை அழியும் என்ற தத்துவமே இந்தக் கதையின் சாரம்.

550. அனலம்-அக்கினி. துரிசு-குற்றம். மகஉறுப்பு-யாகத்திற்கு வேண்டிய உபகரணம். குண்டம்-ஓமகுண்டம். இதனைத் திருஞானசம்பந்தர் 'பறப்பைப் படுத்து' என்னும் பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளார். வேதியனும் தானே. தனது உறுப்பே மகவுறுப்பு. இங்குச் சிவ-காஞ்சிப்புராணம் 'வேள்வியும் தானே வேள்விப் பொருள்களும் தானே வெய்ய-வேள்விவேட்பவனும் தானே வேள்விகொள் இறையும் தானே வேள்வியின் பயனும் தானே என்பது விளக்கி எம்மான்-வேள்விசெய் தீக்கையுற்றான் விளங்கருட் சத்தியோடும்' என்று கூறும். இங்குப் பிரம்மார்ப்பணம்' என்று தொடங்கும் பகவத்கீதையை அனுசந்திக்கவும்.

551. ஓச்ச-செலுத்த. (இங்கு அர்ப்பணித்தல் என்னும் பொருளைத் தருகிறது) மருவு அவர் உருவுள் என்றும், அவை உருவுள் என்றும் சேர்க்க. உயர்திணையை அவர் என்ற சொல்லாலும் அஃறிணையை அவை என்ற சொல்லாலும் குறிப்பிட்டார். உயிராம் அவை இலிங்கத்து ஒடுங்கி இருந்தது.

552 அத்தகைய விலிங்கமதிங் கிந்நாளு
முற்றிடுவோர்க் கழன்று மேவு
நித்தியமாஞ் சகலவுயி ருருவடங்கக்
கனற்றுதலா னிமல மான
சித்திபெறு மயானமெனப் புகன்றிடுவர்
அதுமிகவுஞ் சிறந்த தான
இத்தகைய திருமுன்ன மாகந்த
மூலமிசைந் திலகும் லிங்கம்.

ஏகாம்பரேசுரம்

553 என்றுரைசெய் சூதமுனி தனையிறைஞ்சி
முனிவரரா மெவரு மீது
நன்றுரைசெய் தனைபதும னுதியிமை
யவர்புவன நாதர் மற்றும்
பொன்றுசரா சரமனைத்துந் திரும்பவிதிப்
படுபகுதி புரிந்த துள்ள
தொன்றொழியா வகையுரைத்தி விரித்தெனவே
முனிவரனு முரைக்க லானுன்.

554 ஈதுபெரு மந்தணமீ தருமறையி
னுரைக்குமுறை யீசன் முன்ன
மாதியிலே போதனுக்குப் போதகஞ்செய்
தருளியதங் கவன்பான் மெய்ம்மை
காதலினல் சனகனுணர்ந் தெனதுகுர
வனுக்குரைப்பக் கருணை யாகி
யோதினனென் றனையுமொரு பொருளாக்கி
முன்னைவினை யுறுதி தேர்ந்தே.

---

552. அழன்று மேவும்-வெப்பத்துடன் இருக்கும். அடங்கக் கனற்றுதலால்-முழுவதும் எரிப்பதால். மாகந்தம் மூலம்-மாமரத்தின் அடியில். 'வம்புலாம் அகில் சந்தனம் வருக்கை மாகந்தம்'. என்பர் வில்லிபுத்தூரார். (உத்தி-கிருட்டினன் தூது. 55)

553. பதுமன்-பிரமன். விதிப்படு பகுதி-படைக்கப்பட்ட இயல்பு. 'மடியாது உயர்ந்த நெடியோர் பகுதியும்' (ஞானமிர்தம்-கரைகாண். 46.3) இங்கு உரையாசிரியர், 'அதில் அழுந்தாதே நீங்கின பெரியோர் இயல்பும்' என்று உரை கூறினர்.

554. மந்தணம்-இரகசியம். போதன்-பிரமன். மெய்ம்மை காத-

555 எத்தனையோ முனிவரற்கு மகிலபுரா
ணமுமுரைத்தே னின்று காறு
முத்தமமா மாக்காதை யுரைத்ததல்ல
நினைத்தனனின் றும்மா லென்னாப்
பத்திமையி னுருவாகிப் பரவசமுற்
றிருவிழிநீர் பாய ரோம
மெத்திமுகிழ்த் துடனடுங்கிச் சிவானுபவத்
தயர்வறவே விழித்து நோக்கி.

556 திருவருளின் றிறம்ஞான குரவனிடத்
தடைந்தவற்கே செப்பற் பால
தருமறைதேர் முனிவிர்! மன நிலைப்படவே
கேண்மினரன் அகிலம் யாவுங்
கருணையினான் முடித்தணுக்க ளெய்ப்பகற்றி
யவைக்குமலங் கழிப்பான் பின்னு
மிருமைபெற வளிப்பதெல்லா மித்தாலத்
தித்தலமே யிருப்ப தந்நாள்.

---

விழைவு - உண்மையின்பால் கொண்ட விருப்பத்தால். எனது குரவன் என்றது வியாசரை. வினைஉறுதி-வைராக்கியம். பொருள் ஆக்கி-மகனாகக் கருதி. 'பொருளும் யாழும் விளரியும் பூவையும்-மருள நாளும் மழலை வழங்குவாய்' (கம்பன். சுந்தர. காட்சி 107)

555. இன்று உம்மால் நினைத்தனன்-இன்றைய தினம் உங்களால் நினைக்கும் பேறு பெற்றேன். பத்திமை-பத்தியின் தன்மை. ரோமம் மெத்தி-(சிலிர்த்த) ரோமங்களால் மூடப்பட்டு. அயர்வு அற-தளர்ச்சி நீங்க.

556. திருவருளின் திறம்-அருட் சக்தியின் கூறுபாட்டை. செப்பற்பாலது - சொல்லத்தக்கது. முனிவிர் - முனிவர்களே, முடித்து-தன்மாயையில் ஒடுக்கி. பணத்தை முடிப்பது ஆடையின் நுனியில். அதுபோல் இறைவன் ஆன்மாக்களைத் தன்னுடைமைப் பொருளாகிய மாயையில் ஒடுக்குவான். அணுக்கள்-ஆன்மாக்கள். எய்ப்பு-தளர்ச்சி. மலம் கழிப்பான்-ஆணவ மலத்தைக் கழிக்கக் கருதி. இத்தாலம்-இவ்வுலகம். இத்தலம்-காஞ்சிபுரம்.

557 ஆதலின்று லகிலதலத் தரனுருவா
மிலிங்கமனைத் தினுக்கு மூலஞ்
சோதிபெறு மகாலிங்கம் வேதாந்த
சித்தாந்தஞ் சுடரும் லிங்கம்
ஓதரிதா மறுதிலிங்கங் காலவலைக்
கற்பனைச்சொல் லுருத லிங்கம்
வேதமுத லானலிங்கந் திருவேகாம்
பரத்தெவையும் விதிக்கும் லிங்கம்.

தனிமாநிழல்

558 பற்பலவா யிரகோடி பிரமர்கணர்
முதலகில படிவம் யாவு
முற்பவமா கியலிங்கம் : உமையாள்பூ
சனைபலகா லுற்ற லிங்கஞ்
சிற்பரம கலையாவு நிறைந்த லிங்கஞ்
சோபனமே திகழ்ந்த லிங்கஞ்
சொற்பிரம மயமான வொருதனிமா
நிழல்மூலஞ் சுடரி லிங்கம்.

---

557. அரன் உருவாம் - சிவபரம்பொருளுக்குத் திருமேனியான. மகாலிங்கம்-தரையையே பீடமாகவும் ஆகாயத்தையே லிங்கமாகவும் கொண்டு விளங்கலின் மஹாலிங்கம் என்றார். 'தரை, உற்றசக்தி: தனிலிங்கம் விண் ஆம்' (திருமந்திரம் 1725) காலவலைக்கும், கற்பனைச் சொல்லுக்கும் எட்டாதலிங்கம். 'காலமும் கணக்கும் நீத்த காரணன்' (கம்பன். சுந்தர).

558. பிரமர்கணர்-பிரம்மவிஷ்ணுக்கள். கண்ணர் என்பது கணர் என்று வந்தது. படிவம்-உலகம். பலகாலுற்ற-பலமுறை செய்த. சித்பரம்-அறிவுக்கு மேலே இருக்கும். கலை-சாஸ்திரம். சோபனம்-மங்கலம். மூலம்-அடி. 'போதிமூலம் பொருந்திவந்தருளி' மணிமேகலை. (வஞ்சிமாநகர். 47)

559 அகிலகற்ப காலமனே கங்கண்ட
வற்புதமா மனக லிங்கஞ்
சகலதத்து வத்தொகையுந் தனதொளியால்
விளங்கிடவே தழைத்த லிங்கம்
மகபரிபூ ரணத்தெரிச னத்தணுக்கள்
மலமகற்றி வயங்கும் லிங்கம்
விகலமின்றி யனைத்தினுக்குங் காரணமா
கியவிலிங்கம் விமல லிங்கம்.

வேறு

560 அரிய லிங்கம்: அத் தனிநகர்க் கபேதமே யாகும்
ஒருதி ருத்தனி மாவதன் பெருமையா ருரைப்பார்?
விரிவு செய்தரன் மாலயற் குரைத்தது மேனாட்
டெரிய வும்மனோர் அறிதரத் தருமுப தேசம்.

561 போத முற்றுயிர் நன்னெறி யறிந்துய்யும் பொருட்டா
லாதி யிற்பொலிந் திவ்விலிங் கத்தினு ளணிசேர்
வேத முற்றுமுற் பவித்தன வவைசிவன் மேன்மை
யோதி யற்புறச் சிவனவை தனைமகிழ்ந் துரைக்கும்.

---

559. கற்பம் அனேகம்-பலயுகம். அனகம்-தூய்மையான. 'அனகன் அங்கணன்'. (கம்பன். அயோத்தி. சித்திர. 1) தத்துவத் தொகை-தத்துவக் கூட்டம். (36) ஆத்மதத்துவம் 24. வித்தியா தத்துவம் 7. சிவதத்துவம் 5. மகாபூரணம் என்பது மகபூரணம் என்று வந்தது. பெரிய நிறைவான என்று பொருள் கொள்க. தெரிசனத்து - தெரிசிப்பதால் (காண்பதால்) அணுக்கள்-ஆன் மாக்கள். மலம்-ஆணவ மலம். விகலம்-வேறுபாடு.

560. அரியலிங்கம் என்றது மேலே கூறப்பட்டதோடு தொடர்புடையது. அபேதமே ஆகும் தனிமா எனச் சேர்க்க. உரைப்பார் யார்-சொல்லவல்லவர் எவர்? மால் அயற்கு-திருமாலுக் கும் பிரம்மனுக்கும்.

561, வேதங்கள் ஆதியில் இந்த இலிங்கத்தில் பிறந்தன. அவை சிவபிரானின் மேன்மையைப் புகழ்ந்து (அவன்பால்) அன்பு கொண்டன. போதம்-அறிவு. அற்புற-அன்புகொள்ள. 'அற்புத்தளையும் அவிழ்ந்தன'. (நாலடி. இளமை. 2)

562 பெருமை சேர்தரு மாதிக்கு நீர்பிர மாண
மரிய தாகயா மவ்வண முறைந்தன மப்போ
துரிய தாகிய வங்கமா யெங்கணு முறைவீர்
கருணை சேரநீர் உறைபொருள் யாம்எனக் கழறும்.

563 அன்ன காலையில் தாணுவா மிலிங்கத் தினருகு
மன்னு தாருவாய் நிழற்றுவான் கருதிமா மறைகள்
பன்னு தாருவிற் பயமலர்ப் பலமிவை பலித்து
மின்னு சோபனம் பெறுவதே தருவினில் விசேடம்.

564 ஆன தென்றிவை யெலாம்பெறு மாம்பர மெனவே
யூன மின்றியே முப்பொருள் முக்குண முலக
மான முத்தொழின் முற்றுமம் மூவகை வருக்கந்
தூன றும்பய மலர்பல மாகவே சூழ்ந்து.

565 அகில வித்தையு மங்கமுஞ் சாகைக ளாகப்
புகலு மாமறை யாம்பர தருவதாய் பொலிந்தே
யுகவை சேருமப் பிரமமே யுள்ளுறு முயிராய்
நிகரி லாதவவ் விலிங்கத் தினிழற்றியே நின்ற.

---

562. ஆதிக்கு-கடவுளுக்கு. பிரமாணம்-அளவை. அரியதாக-சிறந்ததாகக் கருதி. அவ்வணம்-அப்படியே. உறைந்தனம்-வாழ்கின்றோம். அங்கமாய்-உறுப்பாக. யாம், உறைபொருள் நீர்-நாம் தங்கி இருக்கும் பொருள் நீங்கள்.

563. தாணுவாம்-குற்றியாகும். தாருவாய்-மரமாக. நிழற்றுவான்-நிழல் செய்யும் பொருட்டு. பயமலர்-இன்பம் தரும்பூ. பாடற் பயத்தால் கிளர்செவி. (பரிபாடல். 11-69) அங்குப் பரிமேலழகர், பாடல் இன்பத்தால் தங்கள் செவியை நிறைத்து என்று விளக்கம் கூறினர். பலம்-பழம். பலித்து-பெருகி. சோபனம்-மங்களம். 'ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்'. (கம்பன்-யுத்த) விசேடம்-சிறப்பு.

564. ஆம்பரம்-மாமரம். முப்பொருள்-பசு, பதி, பாசம். முக்குணம்-சத்துவம், ராஜசம், தமம். உலகம்-சுவர்க்கம், மத்தியம், பாதளம். முத்தொழில்-படைப்பு காப்பு அழிப்பு. பயம்-பால். மூவகையான பொருள்கள் காஞ்சிபுரத்தில் உள்ள மாமரத்தில் பாலாகவும், மலராகவும், பழமாகவும் உள்ளன.

565. பதினான்கு வித்தைகளும், ஆறு அங்கமும் கிளைகள். (சாகை-கிளை) மாமறை மாமரம். பிரமமே அம்மரத்தின் உயிர். நிழற்றி-நிழலைத்தந்து.

566 அரனை யேமறை பின்செலும்: அம்பரம் ஒன்று
புரவி யாகியும் ஞாளியாய் வேட்டையிற் புகுந்தும்
விரவி நாட்டியத் திடைப்பரி புரமென மிளிர்ந்தும்
மருவு கோவண மாகியுந் தாருக வனத்தில்.

567 மணவ ணிக்கெலா மணியென மேனியில் வசித்துங்
குணித மற்றிடு செயல்புரி தருமறைக் கொள்கைக்
கணித ரத்திரு வேகம்பத் திறையருட் கடையப்
பணிப டத்திகழ் மாவும் மாமறைப் படிவம்.

568 மறையி னுட்பொருள் சிவனென்ப துண்மை யம்மாவி
னிறைத ரும்பர னிதுதனை வேதமே நிகழ்த்தும்
பிறிவி லாதத னுற்றக னஞ்செயும் பிரபஞ்சத்
தறிவு கூர்பிதாச் சிவன்பர மெச்சம தானன்.

---

566. மறை அரனையே பின் செலும்-வேதம் சிவபிரானுக்குப் பின் போகும். அரனை-அரனுக்கு. அம்பரம்-ஆகாயம். புரவி-குதிரை, 'வைதிகப்புரவியும்' (பட்டினத்தார்-கோவில் நான்மணி மாலை) ஞாளி-நாய். நாட்டியத்திடை-கூத்தாடும் சமயத்தில். பரிபுரம்-சிலம்பு,'எழுதரிய மறைச்சிலம்பு கிடந்து புறத்து அலம்ப' என்பர் கவியரசர்-பரஞ்சோதியார் (திருவிளையாடல். விருத்த. 28) இறைவனுக்கு வேதமே கோவணம். 'மறையே நமது கோவண மாம்'. (திருவிளையாடல். உலவாக்கிழி. 9)

567. மணஅணி-திருமண காலத்தில் அணியும் ஆபரணம். அணிஎன-அழகு தருவது என்று கூற. குணிதம் அற்றிடும்-பெருக்கி இவ்வளவு என்று கூற முடியாத. மறைக் கொள்கைக்கு அணிதர-வேதத்தின் லட்சியத்திற்கு அழகு உண்டாக. பணி படத்திகழ்-மலர்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்ற.

568. உட்பொருள்-உள்ளிருக்கும் கடவுள். அம்மாவின் பரன் நிறைதரும்-அந்த மாமரத்தில் பூரணமாயிருப்பான். தகனம் செயும்-எல்லாவற்றையும் எரிக்கும். எச்சமதானன் - எஞ்சி யிருப்பவனாகவுள்ளான்.

'பூமி சமையல் செய்யும் பாண்டம்: ஆகாசம் அதன் மேல் மூடி. சராசரங்கள் அப்பாத்திரத்தில் இடும் பொருள். இரவு பகல் விறகு. சூரியன் நெருப்பு. காலம், மாதம், ருதுக்கள் என்கின்ற கரண்டிகளால் கிளறிப் பக்குவம் செய்கிறது என்று தரும புத்திரன் (வனபருவத்தில்) கூறுவதை இங்கு ஒப்பிடுக. இறைவன் காலகாலன் ஆதலால் எஞ்சி உள்ளான்,

569 என்று மாமறை புகன்றிடு மிதுசுரு திப்பாற்
றுன்று வாசகங் குய்யமன் றியாவரே சுருதி
நன்று தேர்பவ ரவரெலாம் உணர்ந்தது நலத்தால்
வென்றி சேர்முனி வீரிதன் பொருளேயும் விளக்கும்.

570 அதிக மேபர மவனென்க பெருஞ்செல்வத் தாக்கஞ்
சதமெ னுஞ்சொற்பன் னம்பர மச்சதத் துருவாய்க்
கதமு றச்சகங் கன்னறவை யாக்கிய கடவுட்
பதிநி லாவின னென்பதே காம்பரம் பணிமின்.

571 அத்தி ருத்தனி மாநிழ லவிர்ந்தினி தமரு
மித்த னிப்பெரு லிங்கமே காம்பர லிங்க
முத்த மக்குணத் தகிலமு முற்பவ முறவே
சித்த முற்றறி லரன்றன துருவொடுந் திகழ்ந்தான்.

572 அனந்த கோடிய கதிரொ ளிதங்கி டுமமலன்
கனந்த வாதகி லத்திறன் விரிப்பது கருத்தில்
நினேந்த போது தன்னிடப் புறந்தோன் றினணியம
மனந்த வால ளிதைப்பெரும் பிராட்டியர் மாது.

573 அனேய மாதரு ளுருவமாய்த் தோன்றின ளணேந்து
தனியநன் மாநிழற் பரமனே வணங்கவே தழீஇக்கொண்
டினிய நீயகி லப்பெருங் காரண மெவையு
நனித வாதுமுற் புராதனத் தியற்றென நவின்றுன்.

---

569. சுருதிப்பால்-வேதத்தின்கண். குய்யம்-ரகஸ்யம் (குஹ்யம்)

570.

571. உற்பவம் உற-தோன்ற. சித்தம்உற்று-சங்கற்பம் செய்து. தனது உரு-தன்னுடைய சொரூபம்.

572. கோடியகதிர் - கோடிக்கணக்கான சூரியர்கள். கனம்-பெருமை. தவாது-கெடாமல். அகிலத்திறன்-உலகவகைகள். தோன்றினள் நியம மனம் தவா லளிதை. நியமம்-விதி. லளிதை சிவபிரானின் இடப்புறம் தோன்றினுள்.

'வென்ற நல் எழில் விரிந்ததன் மெய்யிடப் புறத்து-மன்றல் வார்குழல் இலளிதையாம் மாதினே உயிர்த்தான் (சிவ. காஞ்சி. திருவேகம்பம் 5).

573. அனேயமாது-அந்த லளிதை. அருள்உருவமாய்-சிவபிரா

## காமாட்சியம்மை

574 கன்னி நெற்றியங் கண்தனிற் காலருத் திரனை
மன்னி டக்கணி லயன்றனை வலக்கணின் மாலைத்
தன்னி யற்றிரு மேனியிற் சராசரந் தன்னை
யின்ன ருட்கொடு தோற்றுவித் தகிலமு மீன்றாள்.

575 ஈன்றி டும்பரா பரையுட னேகம்பத் தியைந்து
தோன்று திவ்வியச் சுடர்விடு சோதியை வணங்கி
மூன்று காரணக் கடவுளர் துதிபல மொழிய
ஆன்ற மாமறைப் பொருளெலா மவர்க்கினி தருளி.

576 இத்த லம்பரை யருளுரு வாமித னிடையே
உத்த மம்பெறு கலையுடன் யாமினி துறைவோ
மெய்த்தி யாதலில் காஞ்சியாம் வேதங்கள் பின்னுஞ்
சுத்த மேபெறு மெய்ப்பர மானந்தச் சொற்கம்.

---

னின் திருவருளின் வடிவமாய். 'இரக்கம் என்றொன்று தானே ஏந்திழை வடிவம்' என்பது கவிச்சக்ரவர்த்திகளின் அனுபூதி. (சுந்தரகாண்டம் காண்க). லலிதாசஹஸ்ரநாமம், பெருமாட்டி வேள்விக் கனலில் தோன்றியதாகக் கூறும். சிவபிரானே நெருப்பாக இருத்தலால் (அதற்கும் இதற்கும்) வேறுபாடோ மாறுபாடோ இல்லை. அகிலம்-உலகிற்கு. புராதனத்து-முன்புபோல்.

574. நெற்றியங்கண்தனில்-நெற்றியில் உள்ள (நெருப்புக்) கண்ணில். இடக்கணில்-இடப்பக்கத்தில் உள்ள (சந்திரன்) கண்ணில், வலக்கணில்-வலப்பக்கத்தில் உள்ள (சூரியன்) கண்ணில், இயல்திருமேனி-மென்மையான திருமேனி. சராசரம்-இயங்கும் பொருள்கள் இயங்காப் பொருள்கள் (உயிர்-சடம்).

575. திவ்வியச் சுடர்-தெய்வத் தன்மை பெற்ற ஒளி. காரணக்கடவுளர்-நோக்கங் கருதிப் படைக்கப்பட்ட மும்மூர்த்திகள். காரணம்-நோக்கம். ஆன்ற-பழமையான.

576. உத்தமம்-மேலான. கலை-அம்சம். மெய்த்தி-உடம்பாக இருப்பவள். சக்தி, இறைவனின் அதிசூட்சும உடம்பு. இத்தலம் பரைஅருள் உருவாம்: (அவள் எமக்கு) மெய்த்தி. ஆதலின் இதனிடை உத்தமம்பெறு கலையுடன் உறைவோம் எனக் கூட்டுக. வேதங்கள் காஞ்சியாம்-இங்கு, பராசக்திக்கு வேதங்கள் ஒட்டியாணமாகும் (அதனால்) அவை சுத்தமே பெறும். ஆதலின் காஞ்சி சொர்க்கம்.

வேறு

577 தேவபுரம் பிரமபுர மயோத்திமுத்தர்
புரமெனவுஞ் செப்பா நின்ற
பாவகமா நாமமும்பற் பலவுண்டு
பொருட்பகுதிப் பண்பி னூலே
மாவிதன்மூ லத்தேகாம் பரநாத
ரென வுறைவோம் ; வரிசை நாம
நாவியலு மிந்நாம மனுவாச
மாகுமது நவிலக் கேண்மின்.

578 மறைமனுக்கா யத்திரிபினங் கிசம்பின்று
வாதசமாம் வாசு தேவ
முறவரியெண் வன்னம் பஞ் சப்பிரமம்
சதகுணித மொன்றி லொன்றிங்
கறைதருமப் பஞ்சவன்ன மனுக்கோடி
கோடிமிகு மதினு மிந்தக்
குறிமருவும் ஏகம்ப நாதன்எனும்
பஞ்சவன்னங் கோடி நன்மை.

---

577. பாவகம்-தூய்மை. வரிசை நாமம்-மேம்பாடான பெயர். 'வரிசை அறிதலில் தன்னும் தூக்கி' (புறம் 140) மனுவாசமாகும்-மந்திரம் ஆகும்.

578. மறைமனு-வேத மந்திரம். காயத்திரி-(இருபத்துநான்கு எழுத்தைப் பெற்ற) காயத்திரி மந்திரம். அங்கிசம்-ஹம்ஸ மந்திரம். (ஸோஹம், என்ற மந்திரம் உரைக்க உரைக்க அது ஹம்ஸம் என்று ஒலிக்கப்படும்). ஹம்சம் என்பதை ஆசிரியர் அங்கிசம் என்றார். வம்சம் என்பதை வங்கிசம் என்று கூறப்படுவதைத் தக்கயாகப் பரணி முதலான நூல்களின் உரைகளில் காண்க. துவாதசமாம் வாசுதேவம்-பன்னிரண்டு எழுத்தைப் பெற்ற மந்திரம். எண்வன்னம் - அஷ்டாட்சர மந்திரம். பஞ்சப்பிரம மந்திரம் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்ற சிவபிரான் ஐந்து திருமுகங்களைக் குறித்த ஐந்து மந்திரங்கள். (தத்துவப்பிரகாசம் 63ஆம் பாடலின் குறிப்புரை). ஒன்றில் ஒன்று-ஒன்றைவிட மற்றையது. சதகுணிதம்-நூறு மடங்கு. பஞ்சவன்னமனு-பஞ்சாட்சரம். அதினும்-அந்தப் பஞ்சப்பிரம்மத்தைவிட, பஞ்சாட்சரத்தைவிட 'ஏகாம்பரம்' என்னும் மந்திரம் கோடிமடங்கு நன்மையைத் தரும்.

579 எண்ணிறந்த மறைப்பிரம வுருவதனு
லித்தகைமை யெய்தா நிற்கும்
வண்ணமுறு கப்பிரமன் காமாரி
யுருத்திரனே மவ்வ தாகுந்
திண்ணமுடன் மூவரையு முதவுவிழி
யுடைமையினுற் றேவி நாமந்
தண்ணளிசேர் காமாட்சி யெனமருவு
நீவிருமித் தலத்தி னூடே.

580 வேதமொரு மாவாக வுறைதலினுல்
வேதவிதி விலகா வண்ணங்
காதலுடன் முத்தொழிலும் புரிந்திடுமி
னெனவவருங் கசிந்து போற்றி
யாதியுருத் திரனயன்மா லணுக்களிளைப்
பாற்றுதலா லவைக்குக் கன்மம்
போதவெளி யியற்றுதலான் மயக்கமறப்
புரத்தலினுற் பிரித்து நாமம்.

---

(சிவ. காஞ்சிப்புராணம்-திருவேகம்பப் படலம் 27—28 பாடல்களைக் காண்க).

579. பிரம உருவதனுல்-பிரம்மமே சிவலிங்கமாக வடிவம் கொண்டதால். க-பிரம்மனையும், ம-உருத்திரனையும் உணர்த்தும். மூவரையும்-மும்மூர்த்திகளையும். உதவு-சிருஷ்டித்த.

580. வேதம், மாமரமாகவுள்ளது. காதலுடன்-விருப்பத்துடன். அணுக்கள்-ஆன்மாக்கள். 1. ஆன்மாக்களின் தளர்ச்சியைப் போக்கல். 2. படைத்தல். 3. மயக்கம் செய்தல் என்னும் முத்தொழிலையும் உருத்திரன் முதலானோர் புரிந்தனர். இளைப்பாற்றுதல்-சங்கரித்தல். கன்மம்போத-கருமம் நீங்க. வெளி இயற்றுதல்-படைத்தல். மயக்கம் அறப்புரத்தல்-அஞ்ஞானம் நீங்கப் பாதுகாத்தல். நாமம்பிரித்து-பெயர்களை வேறுபடுத்தி.

### நல்லகம்பர், வெள்ளக்கம்பர், கள்ளக்கம்பர்

### வாலீசுரம், விண்டீசம்.

581 வேறுவே ருகவவர் தாமடைவே
நல்லகம்பர் வெள்ளக் கம்பர்
கூறுகள்ளக் கம்பர்தமை யருச்சித்தார்
தத்தமது குறியி னின்ருர்:
மாறில்புகழ்ச் சுயம்புலிங்க மற்றுமொன்றங்
கதனைமுன்ஞள் வாலி பூசித்
தேறுபெரு வலிபெற்ருன் அதன்குடபால்
விண்டீச மென்னுந் தானம்.

### அகத்தீசம்

582 கனகசபைத் திருநடனங் காண்பதற்கா
வரிபரவக் காஞ்சி மூதூர்
தனிலரனை யருச்சனைசெய் தால்வருமென்
றசரீரி சொற்ற வங்கண்
வினையமுட னருச்சனைசெய் தெண்ணியது
முடித்ததது விமல மாகு
மினியதற்கு வடபாலா யகத்தீச
மெனவுமொன்றதி யம்பக் கேண்மின்.

### வேறு

583 ஆதி யம்பிகை மணந்தனிற் குறுமுனி யணைநீ
பேதி யாதுதென் றிசையென மணந்தொழப் பெறுவேற்
கீது தீதெனக் காஞ்சியி லுமைமண மியலுங்
காத லாலவண் போற்றென வேவினன் கடிதின்.

---

581. தத்தமது-தங்கள் தங்களுடைய, குறியில்-சிவலிங்கத்தில். நின்ருர்-ஈடுபட்டார். சுயம்புலிங்கம்-தானே தோன்றிய லிங்கம். ஏறுபெருவலி-(பகைவர்களின் பலத்தையும் பெற்று அதனுலே) மிகுகின்ற பலம். குடபால்-மேற்குப்பக்கம்.

582. இப்பாடல் விண்டீசப் பெருமையைக் கூறுகிறது. கனகசபை-பொன்னம்பலம். அரி-திருமால். சொற்ற-சொல்லிய. முடித்தது அது-நிறைவேற்றிக் கொடுத்த இடம் அதுவாகும். (விண்டீசம்).

588. குறுமுனி-அகத்தியன், நீ பேதியாது தென்திசை அணை

584 திருவ ருட்டலை மேற்கொடு முனிவரன் சேர்ந்து
மருவு காஞ்சியிற் றன்பெயர் பெறலிங்கம் வகுத்துப்
பரிவி னலருச் சனைபுரிந் தனனலப் பயனுக்
கருணை சேருமை திருமண வெழுச்சியுங் கண்டான்.

## முழவீசம்

585 தானி யற்றிய செந்தமிழ்ப் பனுவலித் தலத்தின்
மேன்மை யெய்தவு மம்மொழிப் பனுவலை விரும்பி
ஞான நாயகன் அருளவும் வரங்கொடு நடந்தா
னுன தோர்முழ வீசமொன் றதனது வடபால்.

586 நடன நாயக ரருகரி புரிதரு நலத்தாற்
படக மாமிய முழக்கியோ ரொருதினம் பராவி
யிடிகொண் மாமுழ விரட்டுவா னெண்ணியித் தலத்திற்
கடன் வழாதருச் சனைபுரிந் தானுருக் கண்டு.

---

என மாற்றுக. பேதியாது–மனம் வேறுபடாமல். அணை-அடைக. உமைமணம் – உமையம்மையை யாம் திருமணம் செய்துகொள் வது. போற்று-(கண்டு) மனத்தில் நிலையாக வைத்துக்கொள்க.

584. திருவருள் தலைமேற் கொண்டு எனப் பிரிக்க. நலப் பயனால்-அருச்சனையின் பயனாக உமையின் திருமணம் கண்டான்.

585. தான்–அகத்திய முனிவன். செந்தமிழ்ப்பனுவல்-தமிழ் மரபையே காட்டும் அகத்தியம். 'தொல்காப்பியம் வடமொழி மரபையும் ஏற்றுக்கொண்டது; அகத்தியம் தமிழ் மரபையே கூறும்' என்று அடியேனுக்குக் கம்பன் அடிப்பொடி கூறினர். பனுவல்-நூல். (நூல் என்பது இலக்கணத்தையே குறிக்கும்) அதனது வடபால் முழவீசம்.

586. நடனநாயகர்-கூத்தப்பிரான். அருகு-பக்கத்தில். படகம் ஆம்இயம்-படகம் என்று கூறப்படும் அகமுழவு. 'தரித்த மதங்க மொடு மத்தளம் சல்லி-பெருத்த கரடிகையே பேரி-உரத்த-படகம் குடமுழவம் பாங்காய ஏழும்–அடைவே முதற்கருவியாம்', (சுத்தா னந்த பிரகாசம்) சிலம்பின் அடிக்குறிப்பு, (அரங்கேற்று காதை) இடிகொள்-இடியின் தன்மை கொண்ட. 'உரத்தபடகம்' என்ற தொடரை எண்ணியே ஆசிரியர் இங்ஙனம் கூறினர் போலும். வழாது-தவறு உண்டாகாமல். திருமால், கூத்திற்கேற்பப் பாடிய தாகப் பஞ்சமரபு பேசும்.

587 அனைய நன்மையிற் புரப்பிய னிருத்தமே யாற்றும்
புனித மாகிய காக்குநா யகர்பரி புரத்தாட்
கினிமை யாமுழ விசைத்திடப் பெற்றன னெளிதோ
வனிதை பாக னருநட னங்கமாம் வரிசை.

588 உன்னி மால்கயி லையில்வரு நாளவ னூர்தி
மன்ன வாய்தலி னந்திதன் னாசிகால் வருத்த
முன்ன வன்னறிந் திதற்கெனைக் காஞ்சியாம் மூதூர்
தன்னி லர்ச்சனை புரியென வவன்புரி தானம்.

வலம்புரி விநாயகர்

589 கரிப ராவுமத் திகிரியிற் கணபதிக் கடவு
ளுரவு சேர்வலம் புரிவிநா யகனென வுறையும்
அரனு மாதுமுன் குடிலையி னுருவமா யாடற்
புரிய வெய்தின னிபமுக னாகவப் போது.

590 பிள்ளை யங்களி யாகவே யாடலிற் பெயர
வள்ளி மைத்திருப் பாற்கட றுண்டத்தின் வாங்கி
வெள்ள மாகவே விடுத்தனன் விடுத்தலும் வெவ்வே
றுள்ள மாலயன் படைகள் பொன்னுவண னுமுருள.

---

587. புரப்பியல் நிருத்தம்-ஆன்மாக்களைப் பாதுகாத்தலை இயல்பாகக் கொண்ட திருக்கூத்து. 'மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்-சாய அமுக்கியருள் சார்ந்தெடுத்து-நேயமுடன் - ஆனந்தவெள்ளத்தில் ஆன்மாவை நன்கழுத்தல்-தான் எந்தையார் பரதந் தான்' என்று சாத்திரம் பேசும், பரிபுரத்தாட்டு-சிலம்பு அணிந்த திருவடிகளுக்கு ஏற்ப. நடன அங்கமாம் வரிசை எளிதோ? என்று திருமால் பெற்றபேற்றை ஆசிரியர் வியக்கின்றார்.

588. அவன் ஊர்தி-கருடன். நாசிகால் மூக்கு வெளிப்படுத்திய. இதற்கு-இப்பிழைக்கு.

589. கரி-கஜேந்திரன். மாதும்-உமாதேவியும். குடிலையின் உருவமாய்-பிரணவ சொரூபம் ஆகி. இபமுகன் ஆக-யானையின் முகம் உடையவன்ஆக. எய்தினன்-திருவவதரித்தான்.

590. பிள்ளையார் செய்த திருவிளையாடல். களியாக-மகிழ்ச்சியாக. துண்டத்தின்-மூக்கால். ஈண்டு மூக்கு என்றது கையை. வாங்கி-உட்கொண்டு. மால், அயன்படைகள்-திருமாலின் ஆயுதங்

591 எழுந்த மாறன தங்கமா மியாவையு மண்ணி
விழுந்த சங்கது கண்டிலன்: விநாயகக் கடவுட்
டொழுங்க ணுதிபன் கொடுநடா யினனெனத் துணிந்து
கொழுந்து கொண்டெழுங் காதலா லத்தியங் குவட்டில்.

592 வலம்புரிச் சங்கம் தன்பொருட் டால்வலம் புரியே
கலந்த கைக்கண பதிதனை வரித்தனன் கசிந்து
நலந்தி ருத்தியே யருச்சனை விதிமுறை நடாத்த
வலர்ந்த வன்பொடுந் தோன்றின னப்பெருங் கடவுள்.

593 தோன்றி வேண்டிய தென்னென மாயவன் றொழுது
பூன்ற மாமதிச் சங்கினை யருளெ னப்புகழ
வேன்று கொண்டனன் சங்கினை வாங்கின னீய்ந்தார்
ஆன்ற கேள்விய ரறிதரு விநாயகத் தண்ணல்.

---

களும் பிரம்மதேவனின் ஆயுதங்களும். பொன்-திருமகள். உவணன்-கருடன்.

591. மாறனது அங்கம்-மால்தனது அங்கம். கொடு-(எடுத்துக்) கொண்டு. நடாயினன்-போய்விட்டான். கொழுந்து கொண்டு எழும் காதல்-இளகுதலைக் கொண்டு மிகுகின்ற அன்பு. கொழுந்து என்பது இளகுதல் என்ற பொருள் தருதலை, கொழுந்து அன்பு செய்தருள் கூரவல் லார்க்கு-மகிழ்ந்தன்பு செய்யும்' (திருமந்திரம். அன்பு செய்வாரை அறிவான் சிவன் 1) அத்தியங்குவடு-அஸ்திகிரி.

592. வரித்தனன்-வழிபாடு செய்தான். அலர்ந்த-மலர்ந்த (விரிவான). பெருங்கடவுள்-விநாயகப்பிரான்.

593. பூன்ற-பூரணமான. 'பூன்றமாமனத்தன்' வாசிட்டம் (வைராக்கியப் பிரகரணம்) மதிச்சங்கு-அறிவைக் கொடுக்கும் சங்கு (பாகவதம்-துருவன் வரலாற்றில் காண்க). ஈய்ந்தான்-கொடுத்தான். கயிலையும் காணி ஈய்ந்தான் (சங்கரவிலாசம். பிருங்கி 81).

சிவாலயச் சருக்க முற்றும்.

ஆகச் சருக்கம் 2க்கு விருத்தம் 593.

594 ஈதவன் பெறுவலம் புரிவி நாயக னியல்பென்
சூத மாமுனி தாட்டுணை யாரிடர் தொழுதே
யாதி யித்தலத் தரிதிரு முற்றமும் பலவென்
றோதி யுற்றனை யவையுரை யெனமுனி யுரைப்பான்,

595 முன்ன மேமக பதிகுக னொடுபொரமு யன்று
னன்ன நாட்குகன வனயி ராபத மதனைச்
சின்ன மேபடப் புடைத்தலுங் கரியது தியங்கி
யுன்னி யேவல மிலரை யானடைந் தின்ன லுற்றேன்.

596 என்று துன்புகூர்ந் திப்பெருஞ் காஞ்சியி னிடையே
யன்று மற்றைய திசைக்கரி யனைத்தி னொடளாவி
நின்று மைக்குவட் டுருவமாய் முகுந்தனை நினைந்து
நன்று மாதவம் புரிந்தது பற்பல நாள்கள்.

597 கரியி னுற்றுறு றவத்தினை மாயவன் காணூஉப்
பரிவு கூர்தர வேண்டிய தென்னெனப் பகர
வரிய நீயென துருவுகூர் மலையா யதனுக்
குரிய நாமமென் பெயர்படப் புரியென வுவந்து.

598 அனைய திந்தனன் மாலத்தி கிரியெனும் அப்பேர்
புனையு மம்மலை: முன்னொரு நாளயன் புரத்தில்
வினைய மாதவர் வரநதி கலைநதி விசேடந்
தனையு சாவின ரயன்கங்கை நலமெனச் சாற்ற.

---

594. என்சூதமாமுனி-என்று கூறிய சூதமுனிவன். தாள் துணை-இரண்டு பாதங்கள். ஆரிடர்-முனிவர்கள். 'துணைமுலைப் போகம் இன்றி ஆரிடர் நிலைமை தன்னை அடைந்தனர்'. (கந்தபுராணம்-உற்பத்தி காண்டம்).

595. மகபதி-இந்திரன். குகன்-முருகன். தியங்கி-கலங்கி. வலம் இலரை-வன்மையில்லாதவரை.

596. அளாவி-கலந்து பேசி. மைக்குவடு-கரியமலை. முகுந்தன்-திருமால்.

597. காணூஉ-கண்டு. மலையையாய்-மலையை இருப்பிடமாகக் கொள்பவனாய். என் பெயர் பட-என்னுடைய பெயர் உண்டாக.

598. மால் அனையது ஈந்தனன்: அம்மலை அத்தி கிரிப் பேர்

599 எனையி கழ்ந்தன னயனென நாமக ளிகலித்
தனிகு லாவினள்: சலித்தனள் தவஞ்செயத் தணந்தாள்
அனைய காலையி னுன்முகன் விதிவிதி யாமல்
நினைவி னுற்றவங் காசியிற் புரிந்தன னெடுநாள்.

600 புரியு மெல்லையி லுருவிலா மொழியிந்தப் புரியிற்
பரிம கங்களோ ராயிரஞ் செயிலது பலிக்கு
மரிய தன்னது காஞ்சியி லொருமக மாற்றில்
விரியு முன்றொழி லென்றது ககனத்தின் மீது.

601 அலரு ளோனது கேட்டன னக்கண மடைந்தா
னிலகு காஞ்சியின் மயன்றனை அழைத்திப கிரியை
யிலகு சித்திசார் சிற்பம தகந்தனில் விளங்கு
மலகி லுத்தர வேதியா யியற்றென வறைந்தான்.

---

புனையும்; அயன்புரத்தில் சத்தியலோகத்தில். வரநதி-கங்கை. கலைநதி-சரஸ்வதி நதி. முனிவர்கள் பிரம்மதேவனைக் கங்கை உயர்ந்ததா, சரஸ்வதிநதி உயர்ந்ததா என்று கேட்டனர். பிரமன் கங்கையே உயர்ந்தது என்றான்.

[வேறு புராணத்தில்,-திருமகள் உயர்ந்தவளா? சரஸ்வதி உயர்ந்தவளா? என்று தர்க்கம் வந்தபோது பிரமன் திருமகள் உயர்ந்தவள் என்றான். அதனால் கலைமகள் ஊடல் கொண்டாள் என்று கூறும். நிகமாந்ததேசிகரின் மெய்விரத மான்மியம் காண்க].

599. இகலி - மனம்வெறுத்து. தனிகுலாவினள் - தனியாக இருந்து களிப்புற்றாள். பின்பு சலித்தாள். அதன் பின்பு தவம் செய்ய நீங்கினாள். தணத்தல்-நீங்குதல். விதி-படைப்பு. விதியா மல்-செய்யாமல். நினைவினால்-மானஸமாய்.

600. உருவிலா மொழி-ஆகாயவாணி. காசியில் ஆயிரம் அஸ்வமேதயாகம் தரும் பலன் காஞ்சியில் ஒரு அஸ்வமேதயாகத் தால் கிடைக்கும் என்று அசரிரி கூறிற்று. உன்தொழில் என்றது படைப்புத் தொழிலை. விரியும்-சிறப்புறும்.

601. மயன்றனை-அசுரத்தச்சனை. அகந்தனில் சிற்பம் விளங்கும் உத்தரவேதி இயற்று என அறைந்தான் என மாற்றுக. உத்தர வேதி-உயர்ந்த யாக மேடை. இபகிரி-அத்திகிரி. இபம்-யானை. அயன், மயன்பால் இபகிரியை உத்தரவேதியாகப் புரிக என்றான்.

602 அன்ன வண்ணமே யியற்றின மயனய னதிலே
யுன்னி மாயனைப் பரிமகம் புரிந்தன னுறலுங்
கன்னி நாமக ணீத்தெனை யிறைமகங் கனற்ற
லென்னி யாயமென் றறைந்தனள்: சினத்தனள் எழுந்தாள்.

603 வேக மாநதி யுருவொடு மருவலும் விண்டு
தாக மாயய னெம்பொருட் டியன்மகந் தடுக்க
லாகு மோவென வீரிடை கண்படுத் தகற்ற
நாக மார்தரப் பின்னரு மருவியந் நதியும்.

604 சினத்து மாநிசித் திமிரம தகன்றிடச் சென்றின்
றனைத்து மாமொளி விளக்கெனக் காணு மவ்வயினே
தனக்கு நேரிலா விளக்கொளி யெனுந்திருத் தானங்
கனக்கு மந்நதி பின்னரும் விலக்குவான் கருதி.

605 வெற்ற ரைத்திருக் கோலமா யாவரும் வெஃக
முற்ற ரிப்பிரான் கண்படை கொண்டிடு மூங்குப்
பற்றி னர்க்கருள் கூர்தரு வெஃகையாம் பாங்கர்
மற்ற தற்குநா ணுறுநதி விலகியே வயங்கும்.

---

602. மாயனை உன்னிப் பரிமகம் புரிந்தனன். பரிமகம்-அஸ்வ மேதயாகம். எனைநீத்து-என்னை விலக்கி. எந்நியாயம்-எந்த ஒழுங்குக்கு உட்பட்டது? மனைவியின்றி வேள்வி செய்யக்கூடாது. இராமபிரானும் பிராட்டியின் விக்கிரகத்தை வைத்தே அஸ்வ மேத யாகம் புரிந்தான்.

603. வேகமாநதி-வேகவதி. இந்த நதியின் கம்பீரமான நடையழகை வேதாந்த தேசிகர் மெய்விரத மான்மியத்தில் சந்தச்சுவை கொஞ்சப் பாடியுள்ளார். தாகமாய்-ஆசையாய். 'தாகம்புகுந்து அண்மித்தாள்கள் தொழும்'. (தேவாரம்) ஈரிடை-இரண்டிடத்தில். நாகம்-ஆகாயம்.

604. நிசித்திமிரம்-இரவில் வந்த இருட்டு. அவ்வயின்-அவ்விடத்தில். கனக்கும்-பெருக்கெடுக்கின்ற. விலக்குவான்-விலக்கும் பொருட்டு. பின்னரும்-(மூன்றும் முறையாக) மறுபடியும்.

605. வெறு+அரை+திரு+கோலம். வெற்றரைத் திருக் கோலம். (திகம்பரக் கோலம்) முற்று அரிப்பிரான் என்று பிரிக்க. கண்படைகொள்ளல்-உறங்கல். 'கண்படைகொள்ளல் கடல் வண்ணன் கைத்தலத்தே' (நாச்சியார், கருப்பூரம்). ஊங்கு-உவ்விடத்தில். தூரத்தை அவ்விடம் என்றும் பக்கத்தை இவ்விடம்

606 ஆய மாநதி யுருவமாங் கலைமக ளவளை
நேய மாமுறை வழங்கினன் மணந்தவ னியம்பத்
தூய நான்முகன் பரிமகந் துடங்கியே வபையாஞ்
சேய வாகுதி புரிந்திடத் தோன்றினன் றிருமால்.

607 வரத ளுகியே தோன்றியம் மலரவர்க் கருளிக்
கருணை கூர்ந்தனன் முதலுகங் கரியொன்று வேறு
பரிவின் மற்றைய உலகத்தில்ஆ ராதனை பரிவால்
யருமை யாலயு தத்திரு மலரினு லாற்றும்.

608 நாளு நாளுமவ் வழியருச் சனைத்தொழி னடாத்த
நீளு மாரிடைப் போகியே யொருதின நிலாவித்
தாள தாண்மையிற் றிருமலர்க் கொய்யுமத் தடத்திற்
காள மார்தரு கிரியுரு வாமொரு கரவு.

---

என்றும் இடைப்பகுதியை உவ்விடம் என்றும் குறிப்பது மரபு. 'ஊறு, மாகடம்மாஉற ஊங்குஎலாம்' (கம்பன், வரைக்காட்சி 30) வெஃகையாம் பாங்கர்-திருவெஃகாவின் பக்கத்தில். நாணுறு நதி-வெட்கம் கொண்ட நதி.

606. கலைமகள் அவளை-கலைமகளுக்கு. மணந்தவன்-மணம் புரிந்தவன் (கணவன்). பரிமகம்-அஸ்வமேதயாகம். வபை-பசுவின் வயிற்றுக்குள் நாபியின் பக்கத்தில் இருக்கும் உறுப்பு. மெய்விரத மான்மிய உரையாசிரியர், அசுவமேதயாகத்தின் வேதியின்மேல் அக்னியில் பசுவின் வபையை ஹோமம் செய்தவுடன்... புண்ணிய கோடி விமானம் தோன்றிற்று என்று வரைந்துள்ளார். 'அன்று நயந்த அயமேத மாவேள்வி-பொன்ற உரையணங்கு பூம்புன லாய்க்-கன்றிவர ஆதி அயனுக் கருள்செய் தணையாளுன்-தாதை அரவணையான்தான்'. (மெய்விரதமான்மியம் 13).

607. முதல்உகம், வரதனுகிக் கருணைகூர்ந்தனன். மற்றைய யுகத்தினில் வேறு கரி ஒன்று அயுதத் திருமலரினுல் ஆராதனை ஆற்றும், அயுதம்-பத்தாயிரம். 'பொதியவிழ் தெரியலாற்கு உலகு அளிக்கும் நாள் குறை கொள் ஆண்டு அயுதம் சென்றதே' (ரகுவம் சம். திருவவதாரப்படலம்).

608 ஆரிடை-கடுமையான வழி. 'ஆரிடை என்னுய் நீ அரவஞ்சாய் வந்தக்கால்' (குறிஞ்சிக்கலி 2). தாளது ஆண்மையில்-காலின் வன்மையால். தாளம்-கருமை, கரவு-முதலை. 'கரவார் தடந்தொறும் தாமரைக்கயம் தீவிகை நின்று அலரும்'. (திருவாய் மொழி 8 9, 9.).

609 கரிக்க றைப்பெருந் தாளிணைப் பற்றவே கலங்கி
இரைத்து மூலமே யெனவழி படுகடவுளை யெண்ணுப்
பிரித்து நேர்பிளி றியற்றிடு காலையெம் பெருமான்
றரித்த நேமிய னெண்புயத் தொடுமெழுந் தனனால்.

610 எழுந்த தானமெண் புயமெனுந் தானமவ் விடையே
தொழுந்த கைத்திருப் பெருமண மென்பதுஞ் சொல்வ
ரழுந்து சீரவ ணின்றுசக் கரப்படை யதனாற்
செழுந்த டத்தினுட் கராவினை யறுத்தனன் சினத்தால்.

611 வனக்க ரிக்கருள் புரிந்தவ னதுசெயும் வழிபா
டனைத்து மேற்றன னவ்வுகந் துவாபரத் ததன்பாற்
கனத்த பொன்புரி தந்தவா ராதனைக் காணூஉ
வெனைத்தென் றற்கரும் பேரருள் புரிந்தன னெம்மான்.

612 இக்க லிப்பெருங் காலையிற் பாந்தளுக் கிறைவன்
தக்க பூசனை புரிகுவ னின்னமுந் தவாமல்
மிக்க தாமதக் கிரியின துண்மை வெவ்வேறு
புக்க காதைகள் பலபல முடியுமோ புகலில்.

---

609. கறை-உரல். உரல் போன்ற கால். கறை என்பதற்கு இரத்தக்கறை என்றே பழைய உரையாசிரியர் (புறம் 39). உரை வழங்கினர். புறநானூற்று உரையாசிரியர், கறையடி என்பதற்கு உரல் போலும் அடியென்பாரும் உளர் என்று உரைக்குப்பின் குறித்தார். திருமாலை வழிபடும் யானை போர் புரியாது ஆதலின் உரல் போன்ற அடி என்பதே பொருந்தும் என்க. எண்ணு-எண்ணி. பிரித்து-மற்றைய தெய்வங்களின் நின்றும் வேறு படுத்தி.

610. திருமால் எட்டுக் கரங்களுடன் வந்ததால் அவ்விடம் எண்புயம் என்னும் பெயரைப் பெறும். (திருவட்டபுயகரம்). அவண் நின்று-அவ்விடத்திலே நின்று. கரா-முதலை.

611. வனக் கரி-காட்டு யானை. துவாபரத்து அதன்பால்-துவாபர யுகத்துக்குப் பிறகு. பொன்-பிரஹஸ்பதி. எனைத்து-எவ்வளவு. காணூஉ-கண்டு செய்யூ என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

612. பாந்தள்-பாம்பு. இறைவன்-ஆதிசேடன். இன்னமும் பாந்தளுக்கு இறைவன் தவாமல் பூசனை புரிகுவன் எனக் கூட்டுக.

திருப்பெருமணம்-பச்சைவர்ணர்.

வேறு

613 பொங்கு பாற்கடல் போக புரத்திடைப்
பங்க யாசனை யும்பரந் தாமனு
மங்கு மந்தண மாகவி ருப்புழித்
துங்க மாக்கதை யொன்றறி சொல்லுவான்.

614 ஆளு நாயகி தன்னை யரன்பசுங்
காள மேனியை யென்று கழறவ ன்
ளை தாமென நாணுக் கொடுதவச்
சூளி னலம்பொற் சோதி திகழ்ந்துளாள்.

615 என்ன மாயனை யிந்திரை நோக்கியே
மன்ன நீயுமம் மாதம் பிரானது
சன்னி தான வுவகை தனதருள்
மன்னி நீலமுன் மேனிக்கு மாகுமோ.

616 என்ற காலைத் திருவை யிகலியே
சென்று மாயன் றிருநகர்க் காஞ்சியி
லன்று மேவி யரிய வகமதங்
கொன்று சீர்ப்பச்சை வண்ணமென் றேங்குமால்.

---

தவாமல்-தவறாமல். மதக்கிரி-ஹஸ்திகிரி. புகலில்-முற்றும் கூறத் தொடங்கினால்.

613. பங்கயாசனை-தாமரையை இருப்பிடமாகக் கொண்ட இலக்குமி. மந்தணம்-இரகசியம் (தனி) துங்கம்-மேலான.

614. ஆளும் நாயகி-உமாதேவி. 'அண்ணல் பாகத்தினை ஆளும் நாயகி' என்று பெரிய புராணம் பேசும். காளமேனியை-கரிய நிறத்தைப் பெற்றுள்ளாய். கழற-இடித்துக் கூற. அன்னாள் அது ஆம் எனப் பிரிக்க. ஆம்-உண்மையாகும். தவச்சூளினால்-பெரிய சபதத்தால். பொற்சோதி-தங்கத்தின் ஒளி.

615. இந்திரை-இலக்குமி. நீயும் அந்தத் தம்பிரானுடைய திருவருள் பெற்றுளாய். நீலநிறம் உன்மேனிக்குப் பொருந்துமோ என்றாள். தம்பிரான்-சிவபிரான். 'தம்பிரான் தோழனார் நம்பி என்றாள்' (பெரிய-தடுத்தாட் கொண்ட 171). அருள்மன்னி-திருவருள் பதிந்து. ஆகுமோ-பொருந்துமா.

616. இகலி-புலந்து. 'இகலின் இகந்தாளை' (பரிபாட்டு-9)

617 மேவி யவ்விடை வீரட்ட காசத்துத்
தாவினே மித்தடங் கண்டு மூழ்கியே
பூவ தான வயுதப் புவனச
மாவி யான வரடிக் காற்றினுன்.

618 ஆய நன்மையி லம்பவ ளத்துரு
மேயி னுஅவ் விடனது மேன்மையே
பாய சேய பவளவண் ணத்தலம்
மாய னத்திரு மான்றனே நோக்கியே.

619 நீல மாவணம் நீயும் பெறுகெனக்
கால மன்னதிற் காளிய தாயினள்
மால வற்சினே இ மாதவ ளெய்தினுள்
சீல மான பிரளைய சித்தினே.

620 காம பீடக் கனக பராபரஞ்
சேம மாகநி றீஇச்சிவை பூரண
மாமி யோக மனுவினு றுத்தினள்
வாம வம்பையும் வந்துமுன் னின்றனள்.

---

அகம் மதம் கொன்று-உள்ளத்தில் இருக்கும் செருக்கை அழித்து. பச்சை வண்ணம் என்று-பச்சை வண்ணப் பெருமாள் என்று.

617. தாவில்-குற்றம் இல்லாத. நேமித்தடம்-சக்கரதீர்த்தம், அயுதப் புவனசம்-பத்தாயிரம் தாமரைப்பூ. புவனத்தில் (தண்ணீரில்) தோன்றுவதால் தாமரையைப் புவனசம் என்றார் ஆசிரியர். ஆற்றினுன்-அர்ப்பணித்தான்.

618. அம்பவளத்துரு மேயினுன்-அழகிய பவள நிறம் பெற்றான். இடத்தின் சிறப்பே அதற்குக் காரணம் ஆகும். சேய பவளம்-சிவந்த பவளம். அவ்விடம் பவள வண்ணத்தலம் ஆயிற்று. திருமான்-இலக்குமி.

619. திருமால் திருமகளைக் காளியாகக் (கரிய நிறம் பெறும்படி) கூறினார். சினே இ-கோபித்து. பிரளையசித்து-காஞ்சிபுரத்தில் உள்ள தலம். பிரளய காலத்தும் அழியாது வெற்றிபெற்றதால் பிரளயசித்து என்னும் பெயர் பெற்றது. இந்திரசித்து என்ற பெயர் மேகநாதன் பெற்றதைக் கருதுக.

620. கனக பராபர காமபீடம் நிறீஇசிவை மனுவை நிறுத்தினள்-தங்கத்தால் மிகவுயர்ந்த காமபீடத்தை நிறுத்திப் பராசக்தி

621 ஏது வேண்டிய தென்றலும் பங்கய
மாது தன்னுறு காளிய மாய்ந்திட
ஈதி யெற்றெனை ளெம்பெரு மாட்டியுங்
காத லாகிக் கசிந்தருள் செய்குவாள்.

622 கரிய சாந்தெனக் காளமுன் மேனியிற்
பிரிவ தாகப் பிரிந்ததை யாவரே
பரிவ தாகிய ணிபவனர் பாவையுன்
னருள்கு லாவுக வென்றன ளன்றரோ.

623 ஈய காலை யரியிவ ணெய்தியே
மாய மாக மறைந்தன னிற்புழித்
தீய கள்வரிற் சேர்ந்தனை யென்றனள்
தூய வம்பிகை சொற்றிடங் கள்வராம்.

624 பரவி மாலப் பரைதனை யேத்தலும்
பொருக லாதொரு பூதமிப் பாங்கரிற்
றரும நீதி தடைசெய்து வைகுமா
லரிது நீயத னுற்ற லகற்றெனா.

---

யின் மந்திரத்தைத் தியானித்தாள். வாமஅம்பை-சிவபிரானின் இடப்பக்கம் இருக்கும் உமையம்மை.

621. காளியம்-கரியநிறம். மாய்ந்திட-மறைய. 'களிறு மாய் செந்நெல்' (சிந்தாமணி) ஈதி-கொடு. காதல்-அன்பு.

622. கரியசந்தனம் (குளிக்கும் போது) எளிதாக நீங்குவது போல் திருமகளின் கரிய நிறம் போயிற்று. அருள்-திருவருள்.

623. ஈய-கொடுக்க. அரி-திருமால். இவண்-பிரளய சித்து என்னும் இவ்விடத்தை. மறைந்தனன் நிற்புழி-மறைந்து நிற்கும் இடத்தில். கள்வரின்-கள்வரோடு ஒருவராக. ஆதலின் அவ்விடத்தில் உள்ள பெருமானுக்குக் கள்வர் என்று பெயர் வந்தது, 'புள் வாய் பிளந்த புயலே உனைக்கச்சிக்-கள்வா என்று ஓதுவது என் கண்டு'. (நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி)

624. பரை-பராசக்தி. பொருகலாது-போர் செய்யாமல். பாங்கர்-பக்கம். வைகும்-உள்ளது. அகற்று-விலக்கு.

625 பஞ்ச தீர்த்திகைப் பாங்கரப் பூதம்
தஞ்ச வஞ்சிற் றதன்வலி குன்றியே
யெஞ்ச நின்று மிருந்துங் கிடந்துமே
விஞ்சி டாது விலக்கிய காலையில்.

626 அன்று பூத மரற்றி வணங்கியே
யின்று நீவர மீவதொன் றுண்டெனு
நன்று சிவன் னரபெலி யாண்டினுக்
கொன்று வேண்டுமென் றுன்னி யிரந்ததால்.

627 அன்ன தான வரமளித் தான்பினை
முன்னு தானமம் மூவிட மாகுமா
வின்னு மோர்திரு முற்றமி சைக்குவன்
கன்னி நீரெங்குங் கொள்ளுமோர் கற்பத்தில்.

628 நீர்ப்பெ ருஞ்சல திக்குணி மிர்ந்திடும்
பார்ப்ப னத்திரு மார்க்கண்டர் பான்மையால்
ஆர்ப்ப னத்தி லரியவர்க் கண்ணுறீஇச்
சீர்ப்ப வொன்று தெளிதரக் கூறிடும்.

---

625. பஞ்சதீர்த்தம்-சகோதர தீர்த்தம். நின்றும், இருந்தும், கிடந்தும், விலக்கிய காலையில் அதன் வலிகுன்றி தஞ்ச, அஞ்சிற்று எனக்கூட்டுக. திருமால் மூன்று வகையான கோலங்களை மேற் கொண்டான். அதனுல் பூதத்தின் வலிமை சிறிதாகக் குறைந்தது. தஞ்ச-சிறியதாக.

626. நரபலி-மனிதனைப் பலியிடுதல். இரந்தது-வேண்டிக் கொண்டது.

627. தானம் மூன்று-மூன்றிடம், 'நின்றது எந்தை' என்று தொடங்கும் திருச்சந்த விருத்தப் பாடலைக் கருதுக. முற்றம்-கோவில். கன்னிநீர்-அழியாத தண்ணீர். கற்பத்தில்-யுகமுடிவில்.

628. சலதிக்குள்-கடலின் கண்ணே. பார்ப்பனத் திருமார்க் கண்டர்-அந்தணராகிய மார்க்கண்டர். பன்னத்தில் (ஆல்) இலை யில். பர்ணம் என்ற வடசொல் பன்னம் என்று திரிந்து வந்தது. அரியவர்க்கண்ணுறீஇ-திருமாலைக் கண்டு. சீர்ப்ப-சிறப்படைய.

629 அகிலம் யாவு முனதுரு வையமுற்
பகுதி யெங்ஙனம் பற்பல வாருயிர்த்
தொகுதி யெவ்வயிற் சொல்லுதி யென்றலுந்
தகுதி யாகமால் சாற்றுதன் மேயினுன்.

630 அன்ன நம்ம தகட்டிடைப் பாரெனப்
பன்னு நாரதர் பருவதர் மாபெலி
யென்னு மன்பரை வஞ்சனை யேசெய்து
புன்மை சேரப் புணர்த்திய வஞ்சம்போல்.

631 ஈச னன்பனு மென்னையும் வஞ்சனைப்
பூசல் செய்யப் பொருந்துவ தன்றெனு
வீசி நீத்ததின் மேலெழு மாங்கவண்
ஆசை யாற்றிருக் காஞ்சி யடைந்தனன்.

632 அந்த வெல்லையின் மாயனு மவ்வழி
வந்து காஞ்சியி லன்பரை வஞ்சனைப்
புந்தி யாரப் புரிந்தது தீர்தர
வெந்தை யார்தமை யேத்தினன் மேன்மையால்.

633 கள்ள மான கருத்தொழிந் தன்பினு
லுள்கு வாருளத் தானென வுற்றனன்
றள்ளருஞ் சந்திர கண்டத் தாமொன்
றுள்ள வாறது கேண்மி னுரைக்குவன்.

---

629. அகிலம் யாவும்-உலகம் எல்லாம். உனதுஉரு-உனக்குத் திருமேனி. எவ்வயின்-எவ்விடத்தில் உள்ளது.

630—631. அகட்டிடை-வயிற்றில். என-என்று திருமால்கூற. மார்க்கண்டர் திருமாலை நோக்கிப் பருவதர், நாரதர், மகாபலி, முதலானவரை வஞ்சித்ததுபோல என்னை வஞ்சிக்காதே என்று கூறிப் பிரளயத் தண்ணீரை விட்டு விட்டுக் காஞ்சிபுரத்தை அடைந்தார். நீத்தம்-பிரளய வெள்ளம்.

திருமால், பருவதர், நாரதர் என்ற இருமுனிவர்களையும் குரங்கு முகம் பெறச்செய்து, அவர்களின் சாபம் பெற்றனர் என்று சில புராணங்கள் கூறும்.

632. அன்பரை-மார்க்கண்டேயரை. புரிந்தது-செய்த பாவம்.

633. உள்குவார்-நினைப்பவர். என-என்று உலகம் கூற.

634 விண்ணு ளோர்முனம் வேலை கடைந்துழி
யுண்ணி லாவுகரள முருத்தெழத்
துண்ணெ னுவயர்ந் தார்சுர ரானவ
ரண்ணல் மாயனு மஞ்சலெ னுநிறீஇ.

635 வருக ராளந் தடைசெய மற்றது
பெருகு சீற்றத்துப் பேரழல் கான்றெழ
வுருகி வெண்சுதை போலுமொ ளியுருக்
கருகு கண்ணணிக் காஞ்சியி லுற்றுளான்.

636 உற்ற காலையி லுற்ற வருக்கருள்
பெற்ற மேவுபி ரான்றனி மாநிழற்
கொற்ற வன்னருள் கூர்ந்து வரவழைத்
தற்ற மின்றி யருகு நிறுவியே.

637 எரிவி ராவு கரளத் திடர்விடப்
பரிவு கூர்ந்து படர்சடை மீதணி
சொரிநி லாத்திங்கட் டுண்டத்தை வாங்கியே
யரிப ராவுசி ரத்தில ணிந்தனன்.

---

உற்றனன்-காட்சிதந்தான். சந்திரகண்டத்தானம்-நிலாத்திங்கள் துண்டம்.

634. வேலை-கடல். கரளம்-விஷம். அஞ்சல்-பயப்படாதே. (ஒருமை பன்மை மயக்கம்.) அஞ்சலிர் நீரெனு என்பது தவறுபட எழுதப்பட்டது போலும்.

635. சீற்றத்து-கோபத்துடன். அழல்கான்று-வெப்பத்தை வெளிப்படுத்தி. வெண்சுதை போலும்-வெண்மையான அமுதம் போன்ற. உரு கருகு-உருவம் கருகிய.

636. பெற்றம் மேவும்பிரான்-எருத்து வாகனத்தில் வரும் சிவபிரான். அற்றம் இன்றி-அவமானம் இல்லாதபடி. 'அற்றம் மறைக்கும் பெருமை' என்ற குறளைக் கருதுக.

637. கரளத்து இடர்-விஷத்தால் வந்த துன்பம். படர்சடை விரிந்தசடை. நிலாத்திங்கள் துண்டம்-பிறைச்சந்திரன்.

வேறு

638 அத்தகைய பணிப்பிறையை யணிந லாலே
யாலவிட வெப்பமெலாம கற்று தூய
சித்தமொரு மித்தனக மாகி யெற்றுந்
திருவேகாம் பரத்திறைவர் திருவோ லக்கம்
பத்திமையிற் சேவித்துத் திருமுன் னின்முன்
பரந்தாமன் அன்றுமுதற் பலிப்ப தாக
நித்தலுமுத் தமத்திருநாமந் தானே கச்சி
நிலாத்திங்கட் டுண்டத்தெம் பெருமா ளானான்.

ஊரகம்

வேறு

639 மற்ற தூரக மாபெலி யவுணனும் வலியோன்
கற்ற பேர்புகழ்க் காஞ்சியின் மகம்புரி காலை
சுற்றி யேமக வான்முத லிமையவர் துயர்கூர்ந்
துற்ற னுன்புரி யேவலே யாற்றின ருழந்தார்.

640 மாய வன்னது காண்டலு மவன்முனம் பனவ
ளுயி னன்னவற் சூழ்ச்சிசெய் திடவர வறிந்த
தூய னும்புகர் மன்னனைப் பிரித்திவன் சூழ்ச்சி
மேய மாலிதற் கிரங்கிடே லென்றனன் விளங்க.

641 தெள்ளி தாயவத் திருவினு யகனுமெற் சேர்ந்து
கள்ள மாயிரக் கப்பெறி லீவதே கடனென்
றுள்ளி ஞன்றவப் பேறுவே றேவென வுணர்ந்தான்
வள்ளி யோரெனப் பெறுவதிங் கெளியதோ மதிக்கில்.

638. ஆலவிடவெப்பம் - ஆலஹால விஷத்தின் வெம்மை. ஒனகமாதி-தூய்மையாய். 'நிரகத்தாய்! நெடுவரையின் உச்சி மேலாய்: நிலாத்திங்கள் துண்டத்தாய்' என்று பெரியதிருமொழி பாரும்.

639. மற்றது ஊரகம் என்று பிரிக்க. மகம்-யாகம். மகவான்-இந்திரன். உழந்தார்-தளர்ந்தார்.

640. அவன்முனம்-மகாபலியின் எதிரில் பனவன் - பிராமணன். அவற் சூழ்ச்சி செய்திடப் பனவன் ஆயினன். வரவு-வருகை. புகர்-சுக்கிரன். பிரித்து-தனியே அழைத்து. சூழ்ச்சி-வஞ்சம். இரங்கிடேல்-இரக்கங்கொள்ளாதே.

641. எற்சேர்ந்து-என்னை அடைந்து. இரக்கப்பெறில்-

642 முகுத்த மன்னதில் யான்றவம் புரியமூ வடிமண்
பகுத்து நல்குதி யென்றனன் பனவனப் படியே
யகத்து நல்லரு ளெய்தியே யீந்தன னவுணன்
மகத்து வாகியே வளர்ந்துமண் ணளந்தனன் மாயோன்.

643 அத்த லந்தனிற் பாந்தளுக் கரசனு மருச்சித்
துத்த மப்பெரு ஞானமா மியாவையு முணர்ந்தான்
மெய்த்து பாடக மென்றொரு தலமது விரிக்கிற்
புத்தி யால்மிகு விசயனப் பாரதப் போரில்.

644 அரிதி ருப்பதக் கடகமாம் பாடக மவையே
யிருகையிற் பிடித்தெம ரையான்கொலை செய்தற் கிசையேன்
கருணை யுற்றருளென்றனு முண்மைநூற் கருத்தைத்
தெருளு றுத்திமா லிருந்திடு தலமது செப்பின்.

## சக்திபேதங்கள்

645 இன்ன மெண்ணில வரிதரு முற்றமங் கெவரே
பன்ன வல்லவர்: காளிகோட் டங்களும் பலவால்
கன்னி யானதெக் கணுசல வாசினி காஞ்சி
மன்னி வாசினி கீர்த்திமா மதியெனும் வல்லி.

---

யாசிக்கும் பாக்கியம் கிடைத்தால். கடன்-கடமை. தவப்பேறு-தவத்தின் பயன். எளியதோர்-சுலபமா. வேற்றுப்பொருள்வைப் பணி.

642. முகுத்தம் முகூர்த்தம், (ஒன்றரை மணி நேரம்) அவுணன்-மகாபலி. மகத்துவாய்-பெரியவடிவம் உடையவனாய். இவ்வரலாற்றைக் கம்பன் பாலகாண்டத்தில சுவைநிரம்பப் பாடியுள்ள திறம் கண்டு மகிழ்க

643. பாந்தளுக்கு அரசன்-ஆதிசேடன். ஞானமாம் யாவையும்-அறியவேண்டிய யாவற்றையும்.

644. பதக்கடகம்-பாதத்தில் அணியும் வீரக்கழல். பாத கடகம் என்பதே பாடகம் என்று வந்தது என்று அறிந்த ஆசிரியர், பதக்கடகமாம் பாடகம் என்றார் எமரை-எம் உறவினரை, உண்மை நூல் கருத்தை-உண்மையான உபநிடதத்தின் எண்ணத்தை. தெருளுறுத்தி-தெளிவாகக்கூறி- பகவத்கீதையைச் சைவசித்தாந்திகள் உடன்படார். ஆனால் காரிக்கண்ணுடை வள்ளல் மரபினர் கீதையைப் போற்றிப் பரவுவர். அம்மரபில் வந்த சிவஞான வள்ளலார், 'அருச்சுனர்க்காக அமரிடை இருந்தாங்கு-உணர்மெய்ஞ்ஞானம் உரைத்தவன் எவனோ அவனே பிரமம் என்றறிமனனே' என்று கூறினர். (வள்ளலார் சாத்திரம் சத்தியஞானபோதம், இரண்டாம் காண்டம். 6)

645 திருமுற்றம்-திருக்கோவில். காளிகோட்டம்-காளியின்

வேறு

646 பெருங்கருப்பத் தானவசி, கூவ லாளி,
பிரளையமந் தாளிபிட்டா புரத்தி, தோன்றிக்
கருங்கிரணக் கோடிடமா ரனையே, யம்பி
காபுரத்தி, கம்பகம்பா டிக்கங் காளி,
மருங்குசிந்து தடத்துறைவா ளசுகலயோற்காரி
மன்னியகா யாப்புளி, பின் மற்றும் பன்னி
லொருங்குபட வளவுபடாப் பத்திர காளி
யொளிதருமங் குசந்தனிலுற் பவித்த மாதா.

647 சிறப்புடைய பலபலதெய் வப்பா லானோர்
திகழ்ந்தபெருந் திருத்தளியுந் தெளிந்த வேத
மறைப்புறம்பா மருகர்புத்தரி டங்களி யாவும்
வகுத்துரைக்கில் அளவுபடா வன்மைத் தாகு
முறுப்புளயோ கந்தரும மருத்த முற்றி
யுருத்திரமே யனுதிச சாங்க மற்று முண்மை
நிறுத்திடுமா ரியயெனவெண் பீட மேவு
நிமலையுருப் பதிப்பெருமை நிகழ்த்தற் பாற்றே.

---

கோவில். தட்சணைசலவாசினி, காஞ்சிவாசினி, கீர்த்திமதி என்பவை காளியின் பெயர். கீர்த்திமாமதி. (மா. அசை) புத்திமா சேனன்' என்று திருத்தக்கதேவர் பாடினர். (சிந்தா, 2249) நச்சர் அங்குக் கூறிய விளக்கம் காண்க.

646. இப்பாடல் சக்திபேதங்களைக் கூறுகின்றன. பெயர்கள் புலப்படவில்லை. ஒருவாறு அனுமானித்து வரைகிறேன். பிழை இருப்பின் பராசக்தி மன்னிக்க. 1. கர்ப்பஸ்தானவாசி, 2. கூவல் ஆளி, 3. பிரளயமந்தாளி, 4. பிட்டாபுரத்தி, 5 அம்பிகாபுரத்தி, 6. சம்பகம் பாடி, 7. கங்காளி, 8. சிந்துவாசினி. மற்றவை ஆய்க.

647. திருத்தளி-கோவில். வேதமறை-வேதத்தின் முடிவில் இருக்கும் உபநிடதம் ('வேதத்து மறை நீ' என்னும் பரிபாடற் பகுதிக்குப் பரிமேழலகர் வரைந்த உரையைக் காண்க) புறம்பாம்-அன்னியமாகிய. அருகர், புத்தர் இடங்கள் அளவுபடா.

எட்டுப் பீடங்கள் பேசப்பட்டுள்ளன. 1. யோகபீடம், 2. தர்ம பீடம், 3. அர்த்த பீடம், 4. ருத்ர பீடம், 5 அனுதி பீடம், 6. சசாங்கபீடம் (சசாங்கன்-சந்திரன்), 7. சத்திய பீடம். 8. ஆரிய பீடம் நிறுத்திடும் என்ற அடைமொழியை ஆரிய பீடத்திற்குச் சேர்க்க. நிமலை-பராசக்தி.

அரிதிருமுற்றச் சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம் 3க்கு விருத்தம் 647

## 4. தீர்த்தச் சருக்கம்

648 ஆதியிலே காஞ்சியிடத் தாலயத்தின்
பெருமையெலா மறிய வேதன்
மாதவராஞ் சனகாதி யவர்க்குவிரித்
தேயுரைத்தான்; மதியி லாதேன்
ஏதறிவேன் யானறிந்த வாறுரைத்தேன்:
எனச்சூத ரியம்ப மிக்க
காதலுடன் வனமலர்த்தா ளிணைபரவி
முனிவருளங் களிந்து சொல்வார்.

649 மறைதெரிந்த வியாதமுனி புராதனமா
மெவையுமுன்பால் வைத்தான் நீயம்
முறைதெரிந்தெம் பாலிரங்கி யுரைத்தனையால்
அதிலறிவு முதிர்ந்தேம்: உய்ந்தேம்:
இறைதெரிந்த காஞ்சிதனிற் றீர்த்தவிசே
டங்களுண்டென் றிசைத்தா யுண்மைத்
துறைதெரிந்தங் கதுவினவுங் காதலுளோ
மெனமுனியுஞ் சொல்வ தானான்.

### வேறு

650 விஞ்சிய காஞ்சி மூதூர் வியன்பெறு மெல்லைவட்ட
மஞ்சு யோசனையின் பாலென் றறைந்திடும்புராணம் யாவும்
தஞ்ச மாயதன்பா லின்பந் தங்கிடு முதக மெல்லாம்
நஞ்சமார் களத்தான் சூடு நாரமே யுண்மையாகும்.

---

648. வேதன்-பிரமன். வனமலர்-தாமரை. வனம்-தண்ணீர். 'வானே வளியே வயங்கெரியே வனமே மண்ணே யிவ்வைந்தின் உளனே'-(பாகவதம். 4ஆம் கந்தம். 861). வனத்தில் தோன்றிய தால் வனசம் என்று பெயர் பெறும்.

649. புராதனம்-பழமை (புராணம்). இறை-கடவுள். தெரிந்த-தான் தங்குவதற்கு ஏற்ற இடம் என்று தெரிந்து கொண்ட. வின வும் காதல்-கேட்கும் விருப்பம்.

650. வட்டம்-பிரதேசம். யோசனை-நான்கு கூப்பிடு தூரம்

651 ஆயினு முமையாள் வைகு மற்புத
பராப ரத்தின்
வாயொரு பொய்கை பஞ்ச
தீர்த்திகை யெனும்பேர் மன்னுந்
தூயது: புராத னத்திற்
சுதையின துருவ மாக
மேயது: பரமா னந்த
வெள்ளமே யந்த வெள்ளம்.

652 அரனிடை யகலா நாரா
யணரகி லங்கள் யாவு
மருவியே நிறையா நின்ற
வாசுதே வப்பி ரானுர்
பெரியபா லாழிமேவு
பிரத்தியும னெனப்பே ருள்ளார்
குருவரன் உருத்த ராய்வை
குண்டத்தில் உறையும் அண்ணல்.

---

கொண்டது. தூளைப் புகை என்று நிகண்டுகள் குறிக்கும். புகை தெரியும் தூரத்தைப் புகை என்றனர் போலும். உதகம்-தண்ணீர். சூடும் நாரம்-தலையில் அணிந்த கங்கை. அங்கு உள்ள தண்ணீர் யாவும் கங்கையே.

651. பராபரத்தின் வாய்-காமகோட்டத்தில். புராதனத்தில்-பழங்காலத்தில். சுதை-அமுதம். வெள்ளம்-தீர்த்தம். ஓடும் புனலையே தமிழர் வெள்ளம் என்பர். மலையாளிகள் எல்லாப் புனலையும் வெள்ளம் என்பர். இங்கு நிற்கும் புனலை (பொய்கையை) வெள்ளம் என்றது புதுமை.

652. வாசுதேவர் என்ற சொல்லின் பொருளை யாவும் மருவியே நின்ற என்னும் அடைமொழி விளக்குகின்றது. பாற்கடலில் உள்ள பிரானைப் பிரதியும்னன் என்று குறிக்கிறார். பொன்கட் பச்சை என்று பரிபாடல் குறிக்கும். குருவரன்-உருத்தராய்-ஆசாரியர்களுக்குள் மேலான வடிவம் உடையவராய். திருமாலைத் தாயுமானவர். 'விஷ்ணுவடிவான ஞானகுருவே' என்பர். (கருணாகரக் கடவுள் 5).

653 ஆதிபா தலராஞ் சங்க
    ருடணர் விண்டு சத்தி
பேதரா மிவரோ ரைவர்
    பிராட்டியைப் பணிவா னுன்னி
நீதிசேர் பராப ரத்தி
    னிலையமாங் காமக் கோட்டச்
சோதிசேர் வாயின் மேவிச்
    சூழ்ந்தனர் சூழ்ந்த காலை.

654 ஐவரும் வீற்று வீற்றார்
    அரியதாங் குண்டங் கண்டு
தெய்வத மனுவி ஞன்மந்
    திரித்தனர்: புனிதஞ் சேர்த்தி
யெவ்வமி லந்நீ ராடி
    யேத்தின ருமையா டன்னை
யவ்விய னீற தாடும்
    அவர்பெரு முத்த ரென்றூர்.

655 விஞ்சுசீர்க் கண்ண ரைவர்
    மேவியங் கமைத்த தாலே
பஞ்சதீர்த் திகையெ னும்பேர்
    பரவிய ததுவே யன்றி
யஞ்செனும் பூத பேத
    மன்பினுன் மூழ்கி யீசன்
றஞ்சமா ரூப மாகுந்
    தன்மையை யடைந்த வன்றே.

---

653. சக்திபேதர்-பராசக்தியிலிருந்து பேதித்து (பிரிந்து) வந்தவர். பிராட்டி—காமாட்சி சோதி-ஒளி. வாயில்-முற்றம்.

654. வீற்றுவீற்றாய்-தனித்தனியாக. குண்டம்-குளம். மனுவினுல்-மந்திரத்தால். புனிதம் சேர்த்தி—தூய்மையைக் கலந்து. நீர் ஆடி, உமையாள் தன்னை ஏத்தினர் நீறது ஆடும் அவர் முத்தர் ஆவார். ஏத்தினர்-முற்றெச்சம். நீறது ஆடும் அவர்-திருநீறு அணியும் பக்தர்கள்.

655. கண்ணர் ஐவர்-ஐந்து திருமால்கள். பூதமும் அவற்றின்

656 உமைதிரு வுருவு மீச
னுருவமு மிதனு ளென்று
மமைவர விளங்கி யார்க்கு
மனவர தமுமுன் றேன்று
மிமையவ ரமுத வூணி
னினியன வென்று நாளுஞ்
சமைவுற விந்நீ ரார்வர்
தவாதவீ டுறுவர் அன்றே.

657 ஓதிய புகர்வா ரத்தி
னுழுந்தள வுதகந் தீதில்
மாதமோ ராறு யாரே
மாந்தினும் வாத நாவிற்
கோதிலா வாணி யென்றுங்
குடிபுகுந் துலவா நிற்கும்
வேதிய ரருந்தில் வேத
விழுப்பொருட் கிறைவ ராவார்.

658 மீனஞா யிற்றில் வண்ண
வெண்மதி யுறையு வாவி
லானவிந் நீர தாடு
மவர்பிற வியினைச் சேரார்:
பானுவா ரத்தின் மூழ்கில்
மங்கலப் பாவை மாருக்
கானெய் பாலடி சிலூட்டி
லவர்பலன் கணிக்கற் பாற்றே.

---

பேதமும், அத்தீர்த்தத்தில் நீராடி இறைவனின் ரூபத்தை அடைந்தன. பூதம், ஆகாயம், காற்று, நெருப்பு, தண்ணீர், மண், அவற்றின் பேதம், உடல்கள், கரணங்கள், போகங்கள் இதனைப் பௌதிகம் என்பர். 'பூத பௌதிகங்களாலும்' (கைவல்யம். தத்துவ 12).

656. அனவரதமும்-எப்போதும். அமுதவூனின்-அமுதம் ஆகிய உணவை விட. இந்நீரார்வர்-இத்தீர்த்தத்தை அருந்துபவர்.

657. புகர்வாரம்-வெள்ளிக்கிழமை. உதகம்–தண்ணீர். மாந்தினும்-உட்கொண்டாலும். வாதநாவில்-வாதநோயாற் பேச முடியாத நாவின்கண்ணே. வாணி-சரஸ்வதி. (வாக்கு).

658. மீனஞாயிறு -பங்குனி மாதம். உவா - பௌர்ணமி.

659 இதனது மேன்மை யெம்மா
விசைக்கலாந் தகைத்தோ விசன்
பதுமநேர் விழிகண் மூடும்
பார்ப்பதி தனக்கந் நாளின்
முதிர்தரு வினைக ளிங்நீர்
மூழ்கிடற் றீரு மென்றே
மதிமுடி யுடையோன் செவ்வாய்
மலர்ந்த தன்றேவித் தீர்த்தம்.

உலகாணி

660 ஆருமிவ் வுலகின் வண்ண
மாகிமீ துறைத லாலே
பேருல காணி யென்றும்
பேசுவ ரிதன்றீர்த் தத்தி
னேரொரு தரும தான
முஞற்றியே புரிவ ராகிற்
சீரிய சீவன் முத்தர்
திண்ணிய வுண்மை யாமால்.

---

பானுவாரம் - ஞாயிற்றுக்கிழமை. பாவைமார் – பெண்கள். ஊட்டில்-உண்பித்தால். கணிக்கற்பாற்றோ-அளவிட முடியுமா?

659. தகைத்தோ-தன்மை உடையதா? பார்ப்பதி-உமாதேவி. 'நாவலன் பார்ப்பதி நாதன் எண்ணுப்பதம் நண்ணுவரே' (அழகர் அந்தாதி. 25). முதிர்தரு-முற்றிய. மதிமுடியுடையோன்-சந்திர சேகரன் (சிவபிரான்). செவ்வாய் மலர்ந்தது-செம்மை உடைய வாயால் புகழப்பட்டது. பொய் கூறியறியாதவாய் என்பார் செவ்வாய் என்றூர். 'சிறுசெந்நாவே' (புறம் 148) என்ற தொடருக்குப் 'பொய் கூறுமையிற் செந்நா என்றூர்' என்று உரையாசிரியர் விளக்கியமை எண்ணுக.

660. உலகின் வண்ணம்-உலகத் தன்மை. ஓர்-ஆராய்ந்து. ஒரு-ஒப்பற்ற. உஞற்றி-செய்து. புரிவராகில்-அன்புடையவர் ஆனல். புரிவு-அன்பு. சீவன்முத்தர்-உயிருடன் இருந்துகொண்டே முத்தியின்பத்தை அனுபவிப்பவர்கள். இவர்களின் இலக்கணத்தைக் கைவல்யம் அழகுறப் பேசும். 'மாதவம் செயினும் செய்வர். வாணிபம் செயினும் செய்வர்-பூதலம் புறப்பர்: ஐயம்புகுந்துண்பர் சீவன்முத்தர்' என்று பேசும்.

## இட்டசித்தி

### வேறு

661 நவ்வி சேர்கரன் றரவரும் அருமறை நவிலுந்
தெய்வ நீரிட்ட சித்தியென் றுளதொரு தீர்த்தஞ்
சைவ மாகிய வடிவது : தனையுறு மனலத்
தெய்வ நோய்தனை யடுவது : தொடுவது யாரும்.

662 மருவு நாலுபா லாகவப் பொய்கையின் வடபாற்
றரும தீர்த்தமக் கீட்டிசை யருத்தமாந் தடாகங்
கருது தென்புறங் காமகுண் டப்பெயர் கவினும்
பொருவி லாமுத்தி வாவியென் றுரைப்பர்மேற் புறத்தை.

663 வடதி சைப்புறங் காண்பவர் மருவுவர் தருமந்
தொடுவ ரேலதன் கீழ்புறம் பொருளெலாந் துதைவ
ரடைவர் காமத்தைத் தென்றிசை நீர்கொள்ளி லவரே
முடிய வேகுட திசையினீ ராடினர் முத்தர்.

664 பீடு சேர்தரு முதலதா முகந்தனிற் பிரம
னுடி னுனதிற் படைத்திடுந் தலைமையை யடைந்தான்
மூடு செங்கதிர் தானிரண் டாமுக மூழ்கித்
தேடு மும்முறை யுருவமாய் மண்டலஞ் செறிந்தான்.

---

661, நவ்வி-மான். தெய்வநீர்-தெய்வத்தன்மை. சைவம்-மங்களம். அனலத் தெய்வநோய் என்பதை தெய்வ அனல நோய் என மாற்றுக. அனலம்-அக்கினி. யாரும் தொடுவது-மேலானவர்களும் மூழ்குவது.

662. அப்பொய்கை நான்கு பக்கத்திலும் நான்கு பெயர் பெறும். வடக்கில் தரும தீர்த்தம் என்றும், கிழக்கில் அர்த்த தீர்த்தம் என்றும், தெற்கில் காமகுண்டம் என்றும், மேற்கில் முத்திவாவி என்றும் (ஒரே தீர்த்தம்) நான்கு பெயர் பெறும். பாலாக-பகுதியாக' கீழ்+திசை-கீட்டிசை. 'திகடசக்கரம்'போல் வந்தது.

663. துதைவர்-மிகுதியாகப் பெறுவர். குடதிசை-மேற்குத் திசை. 'குடதிசை முடியைவைத்து' (திருமாலை).

664. பீடு-பெருமை. ஆடினுன்-நீராடினுன். மூடு-உலகம் நிகழ்வதற்குக் காரணமான. மும்முறை உருவம்-மூன்று முறையான வடிவம். (மும்மூர்த்தி வடிவம்) 'ஆதலால் உதயந்தன்னில்

665 அரிது வாபரத் தாடினன் காப்பினை யடைந்தான்
பரைபி ரான்றனை யுற்றனள் கலியுகம் படிந்தங்
கிருமை யாகிய நான்கெனு முகத்தினு மிவரே
யுரிய ராயதி தேவதை யாயின ருவப்பால்.

666 இரவி யாடியே பெற்றன னுதிர்ந்திடு மெயிறு
மருவு நோயகன் றரன்முடி யுற்றனன் மதியோன்
குரிசி லாம்பக னிழந்தகண் ணடைந்தனன் குபேரன்
பரையை நோக்கிய கெடுவிழி பொன்னெனப் படைத்
[தான்.

667 வருபு ரூரவா மூழ்கியே குடலினோய் மாறித்
திருவை நேரெனு முருப்பசி யவாவுறத் திகழ்ந்தான்
தருண மாகிய சாம்பனவ் விராகவன் றரும
னருள்கு லாவிய நளனிவ ரிழந்தநா டடைந்தார்.

668 ஆடி கார்த்திகை மாசிவை காசியென் றடுக்கும்
பீடு சேர்திங்கள் மூழ்கினர் பெரும்பல னடைவார்
நீடு கார்த்திகைப் பானுவா ரத்தினங் நீரி
னூடு தோய்ந்தவர் பலன்குணி தப்படா துயரும்.

---

அயன்: நடுப்பகலில் ஈசன்: போதுமா லையின்மா யோனாய்' என்று கருணீகர் புராணம் கூறும் (சித்திரகுப்தர் 5).

665. காப்பு-காக்கும் பதவி. பரை-பராசக்தி. நான்கு யுகத்திற்கும் முறையே இவர்கள் தீர்த்த தேவதைகள் ஆயினர்.

666. இரவி-சூரியன். உதிர்ந்திடும் எயிறு—தக்கன் யாகத்தில் உதிர்ந்த பற்களை. 'உழை உருக்கொடு ஓடும் வேள்வி உயிர் செகுத்து அருக்கர்தம்-விழிகள் மற்றை முப்பதிற் றிரண்டுபல்லும் வீழ்த்தினன்' (சிவ. காஞ்சிப்புராணம். தக்கேசப்படலம் 37) மதியோன்—சந்திரன். நோய்-க்ஷயம். பகன்—சூரியர்களில் ஒருவன். நோக்கிய-(காமத்துடன்) உற்றுப் பார்த்த. கெடுவிழி—அழிந்த கண்களை. பொன்என-தங்கம் என்றும் கூறும்படி.

667. புரூரவா குடற்புண் நீங்கி உருப்பசி விரும்பும் அழகு பெற்றான். சாம்பன்-கண்ணபிரானின் மகன். துரியோதனின் மகளை மணந்தவன். வாணாசுரனுக்கும் சாம்பன் என்னும் பெயருடைய மகன் உண்டு.

668. பெரும்பலன்-முத்தி. குணிதப்படாது உயரும்—பெருக்கிக் கூறமுடியாதபடி அதிகமாகும்.

வேறு

669 ஆனநா ளனைத்தினு மாடி னன்னதிற்
பானுவா ரம்பெரும் பலனுண் டென்பரால்
மானம திழந்தபேர் மிடியர் வஞ்சனை
யீனம துற்றபே ரினிமை யெய்துவார்.

670 தனையரில் லாதவர் தாரமில் லாதவர்
பனிநெடுந் தடமிதிற் பானுவா ரத்தில்
இனிதென வேண்டின ராடி லெய்துவர்
மனுவெனும் புதல்வர்பூ மானென் கன்னியர்.

671 தினமிதில் மூழ்குவோர் தெய்வப் பான்மையோர்
அனையவ ருடலுறு மனிலம் போந்திசை
யினிலுற வெருவுமா லியாவ தாயினு
நினைவரும் பசாசின நெடிய பாரிடம்.

672 இனையது தீர்த்தமொன் றிருக்க நோயுடல்
வினையரை மிடியரை வெறிய ரைப்பெருந்
துனிபடு மலடரைக் காணிற் றுண்ணென
வினியபூ மகணகு மெயிறு காணவே.

---

669. மானமது இழந்த பேர்மிடியர்-பெருமையை இழக்கச் செய்யும் வறுமையாளர். மானம் அது அது பகுதிப் பொருள் தரும் விகுதி. இந்நூலாசிரியர்க்கு இவ்விகுதியின்பால் அளவு கடந்த காதல் போலும். எங்கும் இவ்விகுதியைக் காணலாம்.

670. தனயர்-புதல்வர். ஆடில்; மனு எனும் புதல்வர், பூமான் என் கன்னியர் எய்துவர் எனக் கூட்டுக. பூமான்-மலரில் வீற்றிருக்கும் திருமகள். என் கன்னியர்-என்று புகழ்த்தக்க பெண்கள்.

671. அனிலம்-வாத ரோகம். திசையினில் உற-இந்தத் தீர்த்தம் இருக்கும் திசையை அடைந்தால், பசாசினம் பாரிடம் யாவதாயினும் வெருவும் எனக் கூட்டுக. பாரிடம்-பூதம்.

672. இனையதுதீர்த்தம்-இத்தகைய சிறப்புடைய தீர்த்தம். நோய்-நோய்களால். உடல்வினையர்-வருத்தப்படுகின்ற இயல்பினர். வினையர்-தீவினை உடையவர். வெறியர்-பைத்தியம் பிடித்தவர். மலடர்-மக்களைப் பெறாதவர். எயிறு காணப் பூமகள் நகும் என்க. இலம் என்று அசைஇ இருப்பவரைக் கண்டு மெல்லச் சிரித்த பூமி தேவி, பொய்கையில் நீராடி நோயினின்றும் தப்பிப் பிழைக்கத் தெரியாதவரைப் பற்கள் தோன்றப் பெருகச் சிரிப்பாள்.

673 கள்ளமோ யடுவதுங் கருதி மூழ்கினர்
உள்ளிய தருள்வதும் உரைக்க வேண்டுமோ?
தெள்ளிய கூத்தனூர் திருவ ருட்பெரு
வெள்ளமத் தடமென விளம்பும் வேதமே.

கம்பாநதி

வேறு

674 நெடுநி லாவிடு தரளவான் குகைகளை நிறைவா
னுடுவி ராவிய தெனத்திரைக் கரங்களா லோச்சிக்
கடுவு லாவிய கண்டரை வழிபடக் காஞ்சி
நடுநி லாவுகம் பாநதி யென்றொரு நதியம்.

675 அனக மாகிய வெம்பிரா னட்டமூர்த் தத்தின்
வனமெ னீர்பல வகிலசீ வனமென மருவும்
புனித மாமது நதியின துருவமாய்ப் புராணத்
திணைய காஞ்சியி னெய்திய தெவருமுய் பொருட்டால்.

676 அரனி யாவருமறிதரா தன்புளோ ரறியப்
பரவி மேவல்போல் பாதலத் துலாவரும் பண்பாற்
பெரிய மாதவர் அறிகுவ ரதனது பெருமை
தெரிய வொன்றுமோ? குளமெனச் சிறிதவண் டிகழும்.

---

673. உள்ளியது-நினைத்தவற்றை. அத், தடம் கூத்தனூர் திருவருள் வெள்ளம் என்று வேதம் விளம்பும். தடம்-பொய்கை.

674. தரளவான்குகை-முத்துக்கள் நிரம்பிய குகை. உடு-நட்சத்திரம். கடு-விஷம். குகைகளை வான் எனத் திரைக் கரங்களால் ஓச்சும் கம்பாநதி.

675. அனகம்—தூய்மை. வனம் என் நீர்—வனம் என்று கூறப்படும் தண்ணீர். சிவனம்-ஜீவனம். அது—அஷ்டமூர்த்தங்களில் ஒன்றாகிய நீர். புராணத்து-பழங்காலத்தில். இணைய-இப்படிப் பட்ட. உய்பொருட்டு-பிழைப்பதற்காக.

676. அன்புள்ளோர்க்குச் சிவபிரான் தோன்றுவான். மற்றவர்க்குத் தோன்றான். அதுபோல், கம்பாநதி குளமாகத் திகழும். யாவரும் அறிதராது-யாவருக்கும் அறியப்படாமல். பரவி-விரிந்

677 அதுக மென்பது சலிலமே பாவென்ப தனகம்
பொதுமை யாயதை யடையுநீ ரனைத்தையும் புனிதம்
கதுமெ னப்புரி செயலினு லினைய து கம்பா
நதிய மென்றெருரு பெயர்கொடு முன்னரே நடாவும்.

678 கம்மெ னும்பல வுயிர்த்தொகை யனைத்தையுங் கருதி
யிம்மெ னுமுனம் பாவெனுந் தூய்மைசெய் திடலாற்
செம்மை மேவுகம் பாநதி யென்பருஞ் சிலரா
லம்ம வின்னுமே பற்பல பொருளதற் கறைவார்.

679 இன்ன மாநதிக் காற்றுறு சராசரம் யாவுஞ்
சன்னி தானவீட் டைதரு மென்பது சரதம்:
மன்னி யோகமா தவமதில் குறையுளோர் மணிநீர்
துன்னி யேசல சரமெனப் பினைமலந் தொலைப்பார்.

680 யாவ ராயினும் பிறபிற பதியிடை யிருப்போ
ராவி சோர்வுறு காலையி லவரவர் சிரத்திற்
றாவி யிந்நதி நீர்தெளித் திடுவரேற் றூய்மை
மேவி வெள்ளிமால் வரையவ ருறைவது மெய்ம்மை.

---

677. கம்பா என்றசொல்லுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. கம் என்பது சலிலம்-கம் என்ற சொல் தண்ணீரைக் குறிக்கும். (சலிலம்-நீர்). பா என்பது அனகம்-பா என்பது தூய்மை. அனைத்தையும் தூய்மைப்படுத்துவதால் கம்பா எனும் பெயர் பெற்றது.

678. கம்பா என்ற சொல்லுக்கு மற்றும் ஒரு பொருள் கூறப்படுகிறது. கம் என்பது உயிர்க்கூட்டங்களைக் குறிக்கும். பா என்பது தூய்மை செய்தலைக் குறிக்கும், இன்னும் பற்பல பொருள்களைக் கூறுவார்.

679. நதிக்காற்று—நதியில் தோய்ந்த காற்று. சன்னிதானம்-திருவோலக்கம். சரதம்-உண்மை. மாதவமதில் குறையுளோர்-யோகப்பிரஷ்டர் (கீதையைக்காண்க). சலசரம்-தண்ணீரில் வாழும் உயிர்கள். பி(ன்)னை-மறுபடி.

680. ஆவிசோர்வுறுபோதில்-இறக்கும் சமயத்தில். வெள்ளிமால் வரை-கயிலாயம்.

681 நேரி லாவமு தருந்தினோர் தமதுட னிலைமை
சேரும் அன்னதே யிந்நதி நீரொரு சிறிது
வார மேபுரிந் தயில்வரே லவர்நிரு மலராய்ச்
சீரு லாவிய பரமமா மின்பமே செறிவார்.

682 சால விப்பெரு நீரிடை யாடவே சமைத்த
கால கற்பனை யில்லையெக் காலமுங் காலம்:
ஏல விந்நதிக் கரையெம துறையுளென் றென்றே
யோல மிட்டுமைக் குரைத்தனன் கயிலையி லுறைவோன்.

## சிவகங்கை

### வேறு

683 மாநிழ லுறைவோன் முன்னம்
வைகிய சிவகங் கைப்பே
ரானதீர்த் திகையே யெம்மா
னகிலமுங் கலவை யாகத்
தானொரு வேள்வி யாற்றித்
தலையளி புரிய நாளிற்
றேனகு கமலக் கையாற்
றிருத்திய நெய்யின் குண்டம்.

684 இறையவன் வேள்வி முற்றி
யெஞ்சிய வானஞ் சாலே
நிறைதரப் புரிந்து தூய
நிருமலோ தகமே யாக்கி
யறைதரு சடங்கு முற்றி
யாடுவா னங்கீ ராடி
மறைதரு புவனம் யாவும்
வகுத்தமா தினுக்குக் கூறும்.

---

681. அமுது அருந்தினோர்-தேவர். நிலைமை சேரும்-நித்தியத்துவம் அடையும். நிருமலராய்-தூயவராய்.

682. இந்தத் தீர்த்தத்தில் நீராடக் கால நியதியில்லை. எமது உறையுள்-எமது இருப்பிடம். ஓலம் இட்டு-திருவோலக்கம் கூட்டி.

683. தீர்த்திகை-தூய்மையுடையது. அகிலமும்-யாவையும். கலவையாக-அவிப் பொருளாக (பூர்ணாகுதியாக) தலையளி-கருணை. (சுகரரேசப்படலம் காண்க).

684. ஆன் அஞ்சு-பசுவினிடம் கிடைக்கிற ஐந்து பொருள்.

685 தொல்லைமா ஞாலம் பெற்ற
சூதகந் தீரு மாறு
வல்லையித் தடத்தின் மூழ்கி
வாழியித் தலமீ தென்ன
வொல்லையி லவளுந் தோய்ந்தே
யுற்றனள் பராப ரத்தின்
எல்லையில் முனிவர் பின்ன
ரித்தடக் கரைப்பா லுற்றார்.

686 பொதிதரு மன்ன ராடிப்
பூண்டதம் விரத நோன்பு
பதிதரு தவத்தி னாற்றல்
பரமதத் திமிர பானு
மதிதரு கல்வி யாவும்
வைப்பென விதன்பால் வைத்தே
விதிதரு முண்மை ஞான
விசாலம தடைந்தா ரன்றே.

---

பஞ்சகவ்வியம் என்பர், பால், தயிர், நெய், நீர், சாணம். நிருமல + உதகம்-நிருமலோதகம். தூயதீர்த்தம். மறைதருபுவனம்-வேதங்களில் கூறப்பட்ட உலகம். 'வேதங்கள் அறைகின்ற உலகம்' என்பர் கவிச்சக்கரவர்த்திகள். (ஆரண்யகாண்டம்) மாது-உமையம்மை.

685. ஞாலம்-உலகம். சூதகம்-பிள்ளையைப் பெற்றதால் உண்டாகும் தீட்டு. ஒல்லையில்-விரைவாக. பராபரத்தின் எல்லை-காமக்கோட்டத்தின் எல்லையிலே.

686. பொதிதரும்-நிரம்பிய. அன்னார்-அந்த முனிவர்கள். விரத நோன்பு, தவத்தின் ஆற்றல், கல்வி, முதலான யாவற்றையும் வைக்கத்தக்க இடம் என்று இத்தீர்த்தத்தில் அர்ப்பணித்து விசாலமான ஞானம் அடைந்தனர்.

பரமத திமிர பானுமதி-மற்ற மதமாகிய இருளுக்குச் சூரியனைச் செய்யும் அறிவு. 'பரமத திமிரபானு'—என்னும் பெயருடைய நூலைச் சிலேடையாகக் கூறுகின்றனர் போலும். கண்ணன் எல்லாவிதமான தர்மங்களையும் விட்டுவிட்டு என்னைச் சரண்புகு என்றான். அதனை முனிவர்கள் செய்தனர்.

687 ஆதலா லித்த டாக
மாடினோர் குரவன் பால்மெய்ப்
போதக மடைந்த தன்மை
பொருந்துவர்: தவத்தின் பேறு
மேதக வுடனே சேர்வர்:
மேன்மைசே ருயிர்கட் கெல்லாந்
தீதறு மாசா னாகத்
திருத்திய தீர்த்த மாகும்.

688 இனியமா தத்தின் றோற்ற
மீருவா விதிபா தத்திற்
புனிதமா நன்னீ ராடிப்
புகலென மாமூ லத்திற்
பனிமதி முடியோன் றன்னைப்
பராவிடப் பெறுவர் ஆகில்
துனிதரு பிறவி யன்னார்
துணைப்பதந் தொழுது போமால்.

689 அறிகுந ரேனு மிந்நீர்
அருமையை யறியா ரேனும்
எறிகதிர் மதிய மென்னு
மிருசுட ரரவு தீண்டப்
பெறுமொரு நன்னாண் மூழ்கிற்
பிரானருள் பெறுவ ரன்னார்
உறுபதத் துணைகா ணுற்றோ
ருலகினுக் கிறைவ ராவர்.

---

687. குரவன்பால்—ஆசார்யனிடம். போதகம்-அறிவு. தவத்தின்போது-தவம் செய்வதால் உண்டாகும் இலாபம். திருத்திய-நன்றாகச் செய்யப்பட்ட.

688. மாதத்தின் தோற்றம்—மாதப் பிறப்பு. ஈர்உவா-இரண்டு உவாக்கள். பௌர்ணமி, அமாவாசை. விதிபாதம்-பிரம்ம முகூர்த்தம். புகல்—சரண். மதிமுடியோன்-சந்திரசேகரன் (சிவபிரான்). பிறவி அவர் பதம் தொழுது போகும்.

689. கதிர்-சூரியன். மதியம்-திங்கள். அரவு தீண்டப்பெறும் ஒருநாள்-கிரஹண நாள். தீர்த்தம் ஆடியவர்களின் பாதங்களைப் பார்த்தவர்களும் உலகத்துக்கு அரசர்கள் ஆவார்.

### உமாபத்திரை

### வேறு

690 பரவு மந்நதிக் கரைதனி மாவலப் பாலின்
நிரும லோதகக் கூவலொன் றருந்தவ நிலையம்:
பெருகு சீருமா பத்திரை யென்றதன் பெயராங்
கருணை சேருமை யாளருச் சனைபுரி காலை.

691 பொருவ ரும்படி யாடியே புனிதமாம் பொருட்டுத்
திருவ றம்புரி கரத்தினு லமைத்தது: தெய்வத்
தருவை நேர்வது வேண்டிய துதவலாற் றரணிக்
குரவு நீரது பருகினோர்க் காயுண்மிக் குயரும்.

692 வந்தியா யினோரறு பதுதின மந்நீர் மாந்தில்
எந்தை யாமர னருள்பெறு தனையர்பெற் றிடுவார்
புந்தி யார்தரக் கன்னிய ரநுதினம் பொசித்தால்
நிந்தி யாதபே ராயுவாங் கணவரை நேர்வார்.

### கீர்த்திமா நதி

693 கூவ லன்னதன் வடாதுள தின்னுமோர் கூவ
லாவி நேர்பிரான் கங்கைநீர்த் திருமுடி யாட்டத்
தேவி யாமுமை பரிவினு லமைத்தது: தெய்வ
நாவு பற்பல வுடையரே புகழ்தரு நலமால்.

---

690. மாவலபாலின்-மாமரத்தின் வலப்பக்கத்தில். நிரும லோதகம்-தூய தண்ணீர். கூவல்-கிணறு.

691. பொருவரும்படி - ஒப்புமையில்லாதபடி. வேண்டியது உதவலால் தரணிக்குத் தருவை நேர்வது. தரு-கற்பக விருட்சம். உரவுநீர்-வன்மை தரும் தீர்த்தம். அது பருகினோர்க்கு ஆயுள் மிக்கு உயரும்.

692. வந்தி-மலடி. 'மலடிமை வந்தியாகம்' (பிங்கலம் 942). ஆயு-ஆயுள். 'ஆயு வழியும் அதிகம் இலிங்கமெனின் வீயும் நிதி பீடம் மிகின்' என்று இலிங்கக் குற்றம் கூறும் இடத்தில் மறை ஞானசம்பந்தர் கூறுவர். (சைவ சமயநெறி, பொதுவிலக்கணம் 109). நேர்வார்-அடைவார்.

693 கூவல்-கிணறு. நாவு-நாக்கு

வேறு

694 துளம்பிய கருணை வெள்ளஞ்
சொரிசீ தளம்போ லென்றுங்
களங்கமில் வதன சோதிக்
கவுரிசெய் தமைக்கு மேன்மை
விளங்கிய புகழ்மை நாளு
மிக்குமிக் குயர்த லாலே
வளம்பெறு மதன்பேர் கீர்த்தி
நதியென வுரைப்பா ரன்றே.

695 அரியநீ ரதனு லெம்மான்
அருச்சனை யாற்ற வல்லோர்
நிருமல வுருவ மெய்தி
நித்திய திருத்த ராவர்:
உரவுநீ ரதனைச் சூழ்வோ
ருலகினுக் கரைய ராவர்:
பருகுவோர் ஞான வேத
பராயண ராவ ரன்றே.

சூலதடாகம்

வேறு

696 சூல நீர்த்தட மென்றொரு பொய்கைசெஞ் சோதிப்
பால நேத்திர முடையனும் வயிரவப் பரமன்
ஏலு முத்தலைப் படையினுற் கண்டதிவ் விடையே
சால மெய்ப்பவம் புரிந்துளோர் தமக்கொரு சார்வாய்.

---

694. வெள்ளம் சொரி சீதளம் எனப் பிரிக்க. சீதளம்-தாமரை புகழ்மை–புகழ். 'புகழ்மையாக் கொள்ளாது'. (நாலடி. பொறை 2) அன்றே-அசை.

695. திருத்தர்-திருப்தியுடையவர். சூழ்வோர்–பிரதட்சணம் செய்பவர். பராயணர்-குறிக்கோளாய்க் கொண்டவர்.

696. பாலநேத்திரம்-நெற்றிக்கண். பவம்-பாபம். சார்வாய்–உதவியாய். 'கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்' (குறள் வான்சிறப்பு).

697 அனைய வெம்பிரா னந்தகன் றனைமுன மடர்த்த
வினைய மூவிலைச் சூலத்திற் குருதிநீர் விடவே
யினைய நீரிடைக் கழீஇயின னிருளுவா வெனுமப்
புனித நாளிடை யாதலால் அதுமிகப் புனிதம்.

698 தேடி யத்தட மிருளுவா வெனுமொரு தினத்தி
லாடி யெள்ளிறைத் திடிலவர் தென்புலத் தவர்போய்
வீடு சேர்குவர்: விரிந்தவ ரென்பையவ் விரிநீ
ரூடு வீழ்த்திடி லவையெலா முபலமா யொளிரும்.

699 அத்த டக்கரைத் தென்புலத் தவர்வினை யாற்றின்
உத்த மப்படு மப்புலத் தோர்பெரி துவந்து
நித்த மாகிய திருத்தியை யடைந்துறு நிலையா
லெய்த்தி டாரொரு பிரமகற் பத்தின தெல்லை.

700 தீர்த்த மன்னதன் சிறப்பினை விழிகளாற் றினைத்தோ
ராத்த னாகிய வயிரவப் பிரான்றனை யன்பாற்
பார்த்து ளோர்பெறும் பயன்றனை யடைகுவர்; பணிவா
னிர்த்த டம்படிந் தார்பய னிலைப்படு மளவோ.

---

697—698. அந்தகன்-யமன். அடர்த்த-கொன்ற. குருதிநீர் விட-இரத்தம் நீங்க. கழீஇனன்-கழுவினான். இருள்உவா-அமாவாசை. விரிநீரூடு-பரவிய தீர்த்தத்தின் கண்ணே. உபலம்-பளிங்கு, 'பல நிறங் கவரும் உபலமாய்' (தாயுமானவர். சிற்சுகோதயம்).

699. தென்புலத்தவர் வினை-பிதிரர்களுக்குச் செய்யவேண்டிய சிரார்த்தம் முதலானவை. எய்த்திடார்-வருந்தார். பிரமகற்பம்-பிரமதேவனின் ஆயுள்.

700. விழிகளால் தினைத்தோர்-கண்களால் கண்டு மகிழ்ந்தவர். ஆத்தன்-ஆப்தன். (நம்பிக்கைக்கு உரியவன்) ஆப்தவசனம் என்ற வழக்கை நோக்குக. 'ஆப்தர் மொழி' என்பர் தாயுமானவர். பணிவால்-அடக்கத்துடன். நிலைப்படும் அளவோ-நிச்சயப்படுத்தும் அளவினை உடையனவா?

## சூரியபுட்கரணி

### வேறு

701 பேரிரவிப் பேருடையோன றனதொருபா
னிருகலையின் பிரிவ தான
வோரமுதப் பெருங்கலைய துள்ளுறையாக்
கித்திருத்தி யூர்கோள் போலச்
சீரியபொற் பெருங்கடலிற் றூய்நீராய்
நிறைத்தியற்றுந் தெய்வப் பான்மைச்
சூரியபுட் கரணியெனுந் தீர்த்தமதன்
பெருமை யெவர் சொல்லற் பாலார்.

702 ஆதிமுத லாமரனைப் பூசைபுரிந்
திமையவர்தா மமர ரான
போதிரவி யிலிங்கமமைத் தனனீரே
யமுதமெனப் பொருவி லாமல்
ஏதமற வியற்றியன்று முதலிதனு
லேயெங்கள் பிரான்றன் பூசை
நீதிபெறப் புரியுமவர் அமுதபிடே
கஞ்செய்யு நீர ரென்றான்.

---

701. ஒருபான் இருகலை பன்னிரண்டு கலை. அமுதப்பெருங் கலையை உள்ளுறையாக்கிச் சூரியபுட்கரணி படைக்கப்பட்டது ஸ்வதா' என்பதால் பிதுருக்களையும் அமிருதத்தால் தேவர்களையும் சந்தோஷப் படுத்துகின்றது, (சூரியபுராணம் 29ஆம் பக்கம்). ஊர்கோள்-பரிவேடம். (சூரியனைச் சுற்றி வட்டமாகத் தோன்றும் சக்கரம்).

702. அரனைப் பூசை புரிந்து இமையவர் அமரர் ஆனபோது-சிவபிரானைப் பூசை செய்து கண் இமைக்கின்ற மனிதர்கள் தேவர்களான சமயத்தில் இமையவர் என்ற சொல் மனிதரைக் குறிக்கும் வண்ணம் ஆசிரியர் பிரயோகித்துள்ளார். நீரால் அபிஷேகம் செய்பவர்கள் அமுதால் அபிஷேகம் செய்யும் தன்மை உடையவர் என்றான் சூரியன்.

703 அந்நீரங் கமுதமய மாதலினு
ளுட்கொளவே யருகம் அந்த
நன்னீரின் றிவலைதனைச் சென்னியின்மேற்
றெளிப்பதுவு நலமே யாகும்
என்னீர ராயிடினு மன்னீரா
லுடலைநனைத் திடுவ ராயின்
புன்னீர ராவரவர் பெரும்பாவ
வினையையெவர் போக்கற் பாலார்?

704 பற்பலமா முனிவரன்னீர் ஓரியவை
யுளவளவு பருகி வேதன்
கற்பமள வினிதிருந்து பேரின்ப
வீடுபின்னர்க் கலந்தா ரென்பர்
அற்புதமோ? சூரியன்றன் அமுதகலை
யிற்புரண மான தன்றோ?
பொற்பினுட னமுதருந்திற் கற்பமிருப்
பதுவுமொரு பொருள தாமோ?

## அகில தீர்த்தம்

### வேறு

705 இகலி னுல்வரு பிரளயத் தியாவையு மொடுங்கப்
புகலி லாமையி லித்தலம் புகலென மேவிச்
சகல தீர்த்தமு மிதனிடைச் சார்தரு மதனல்
அகில தீர்த்தமென் றென்றது புராதனத் ததிகம்.

---

703. சூரியபுட்கரணியில் நீராடக்கூடாது. அருந்தவேண்டும். நீராடின் உண்டாம் பாபம் போக்க முடியாது. அருகம்—தகுதி. எந்நீரர் ஆயிடினும்-எவ்வளவு சிறந்த பண்புடையவராயினும். புல்நீரர் ஆவர்-புல்லைப்போன்று அற்பத்தன்மையை அடைவர்.

704. ஓர் இயவை-ஒரு மலைநெல்லின் அளவு. 'இயவைதோரை' பிங்கலம் 298.3. கற்பம்-பிரமனது ஒருநாள். புரணம் ஆனது-நிறைவு பெற்றது. பொருளதாமோ-மதிக்கத்தக்கதா?

705. இகலினுல்-மாறுபாட்டுடன். பிர+லயம்—பிரளயம். நன்ருக ஒடுங்குவது என்பது அச்சொல்லின் பொருள். புகல்-புகுவற்கு. அது புராதனத்து அதிகம்-அத்தீர்த்தம் பழங்காலத்திலேயே சிறப்புப் பெற்றது.

706 ஒருவி டாதர னருச்சனை புரிதரு முமையாள்
வெருவ வேவரு மேழுமா நதிகளு மேனுள்
பரிவி னுலவள் அருள்பெற வேண்டியே பராவிப்
புரிவி னுடவே மேன்மையைத் தந்ததப் பொய்கை.

707 கனகன் மாமகன் கனகனும் பதகனைக் கலாங்கொண்
டனக மாநர மடங்கலா னடும்பழி யதனை
வினைய மாகவிப் பொய்கையின் மூழ்கியே விடுத்துப்
புனித னுயின னதனது பெருமையார் புகல்வார்.

708 சலமு லாங்கம லத்தயன் வழிவருந் தனது
குலமெ லாமுடித் திட்டபா தகப்பெருங் குழுவை
நலமெ லாம்பெற வகற்றினன் வீடண னவைதீர்
பலனு லாவுமிக் குளனிடைப் படிதரும் பயனுல்.

709 அன்ன தாதலிற் பார்ப்பனக் கொலைமுத லனைத்து
மின்ன நீர்திளைத் திடிலகன் றேகிடு மென்றுங்
கன்னி நீரதன் கரையொரு மனுமுறை கணித்தா
லுன்னு சூளுற வெளிதினின் முடிவதே யுண்மை.

710 ஆதி நீரிது தனையெவர் தொடுகினும் அவர்க்குப்
பேத மானமுற் பிறவியிற் கொலைப்பவம் பிரியும்
ஈது திண்ணமித் திறனிது குறித்தியா வருமிப்
போது மக்கொலை கழித்திடு செயலினைப் புரிவார்.

---

706. ஒருவிடாது-நீங்காமல். ஏழு நதிகள்: 1. பம்பை, 2. கம்பை, 3. புண்ணிய நதி, 4. மஞ்சள் நதி, 5. வேகவதி, 6. பாலி, 7. சேயாறு.

707. கனகன்மாமகன்-இரணியனின் மகன் (பிரகலாதன்). அனக மா நரமடங்கல்-தூய்மையான பெரிய நரசிங்கம்.

708. அயன்வழிவரும்–பிரமதேவனின் குலத்தில் வந்த. பாதகப் பெருங்குழுவை-பாபக் கூட்டத்தை. அகற்றினன்-போக்கினுன். நவைதீர்-குற்றம் இல்லாத.

709. திளைத்திடில்-குளித்தால். ஒருமனு-ஒப்பற்ற மந்திரத்தை (பஞ்சாட்சரத்தை). உன்னுசூள்-நிறைவேற்றக் கருதிய சபதம்.

710. பேதம் ஆன-விரோதம் ஆகிய. பிரியும்-நீங்கும். கொலை-கொலை செய்ததால் வந்த பாபம் (ஆகு பெயர்).

711 பரவி மாசிசி பகலொடு படியிலொத் திடுநா
ளிரவி தென்றிசை வடதிசைத் தேர்விடு மிருநாள்
திருவு லாந்திங்கட் டோற்றமித் தீர்த்தத்தி னிடையே
விரவி யாடினர் சிவனுருப் பெறுவதே மெய்ம்மை.

சந்திரபுட்கரணி

வேறு

712 சந்திரபுட் கரணியெனு மொருதீர்த்த
மதனையது தானே நேருஞ்
சுந்தரஞ்சேர் மாமதிய மாதுலனுந்
தக்கனிடு சூளி னாலே
வந்ததொரு குறைதீரத் தனதுபெரு
வள்ளுகிரால் வகுத்தோர் குண்டம்
விந்தமுறத் தனதுபதி னறுகலையி
னமுதுதினம் விடுத்தா னன்றே.

713 பாட்டியலிற் சிவனுருவை யமுதமய
மாகியவப் பள்ள நீரா
லாட்டியடைந் தனன்பெருமை யந்நீரை
யன்றுமுத லாரே யேனும்
வேட்டருந்திற் பெரும்பிணிபோம் : பின்நவமாம்
உருவுவரும் வேத வாய்மை
காட்டுபதி யிதிலுறைவோர் மருத்துவநூல்
வழிநடவு கடனைச் சேர்வர்.

---

711. படியில்-நீராடினால். தென்திசை தேர்விடும் நாள்-தட்சணாயனம். வடதிசைத்தேர்விடும் நாள்-உத்தராயணம். திங்கள் தோற்றம்-மாதப் பிறப்பு. சிவனுருப்பெறுவது-சாரூபம்.

712. மதியமாதுலன்-சந்திரனுக்குப் பெண் கொடுத்த மாமன். சூளினால்-சாபத்தால். குறை-க்ஷயம். வள்உகிர்-கூரிய நகம். குண்டம்-குளம். சந்திரன் தான் உண்டாக்கிய குளத்தில் தனது கலைகளை தினமும் விடுத்தான்.

713. பாடு+இயல்+இல்—பாட்டியலில். தோன்றும் தன்மை யில்லாத. பள்ளம்-தீர்த்தம். ஆட்டி-அபிஷேகம் செய்து, நவமாம்-புதியதான. மருத்துவ நூல்வழி நடவு கடன்—மருத்துவ நூலிற் கூறியபடி நடப்பதால் உண்டான பயன் (ஆரோக்கியம்).

714 நந்தைதனி லந்தமுறு நன்னுண்முத்
திதிகூடு நாளா மந்நாட்
டிந்திர நூன் மனுவாதி யுகாதியெனு
நாள்முத்த டாக மாடும்
புந்தியுளோ ரிந்திரிய மெய்த்தூய்மை
பெறுமனகப் புனித மாகும்
மந்திரமா சித்திவரும் தெய்வமருத்
துவராடி வளமே பெற்றார்.

### மண்ணியாறு

### வேறு

715 மண்ணி யாறென வொருநதி யதுதனின் மனத்தொன்
றெண்ணி யாடுவோ ரெண்ணிய வெண்ணியாங் கெய்துந்
தண்ணி யார்பெருந் திண்ணிய ராய்ப்பகை தணிப்பார்
நண்ணி யாரது விரும்பிடா ருறுபெரு நலத்தார்.

### கலிச்சித்தியாறு

716 ஆழ்கு றுங்கலி சித்தென வொருநதி யதுநீர்
மூழ்கு வோர்கலித் தீங்கணு காவகை முனிவார்
மாழ்கு றுதொளிர் பேரிசை யவரையே மருவும்
ஏழ்கு லாவிய பிறப்பினு மெய்துவ ரினிமை.

---

714. நந்தை-பிரதமை அந்தமுறு நன்னுள்-அமாவாசி. முத்திதி கூடும் நாள் - திருதியை. மனுவாதி - மன்வந்தரங்களின் தொடக்க நாள். யுகாதி, யுகத்தின் தொடக்க நாள். முத்தடாகம்: 1. கம்பை, 2. இட்டசித்தி, 3. சருவதீர்த்தம். 'இத்தகு கம்பை யும் இட்டசித்தியும், தத்துவெண்டிரைப் புனல் சருவ தீர்த்தமும், தொத்தலர் மாசிழற் சூழல்வைகிய, உத்தமன் விழிகள் மூன் றென்ன ஓங்குமால்'. (காஞ்சி-இரண்டாம் காண்டம். தீரத்தவிசே டம் 156). இந்திரியமெய் - ஐந்து பொறிகளைப்பெற்ற உடல்· அனகப்புனிதம்-பாபம் கலவாத தூய்மை.

715. அதுதனில்-அந்த மண்ணியாற்றில். எண்ணிய-எண் ணிய காரியங்களை. தண்ணியார்-தாழ்ந்தவர். 'தண் ஆவாது அடியேனைப் பணிகண்டாய்' (திருவாய்மொழி 4.9.1.) தணிப்பர்-அடக்குவார். உறுபெரு நலத்தார், யார்அது நண்ணி விரும்பி டார் எனக் கூட்டுக.

716. அதுநீர்-அந்நீர் (புதுப்பிரயோகம்) முனிவார்-கோபிப்

### பம்பையாறு

717 பம்பை யாறென வொருநதி யதுதனிற் படிவோ
ரம்பை யாரரு ளெய்தியே யவனியின் பாரஞ்
செம்பை யாடர வாறவே தரிப்பர்சீரடியார்
நம்பை யானன னருளவர் திறப்பட நடாவும்.

### மஞ்சணீர் நதி

718 அரிச னத்திரு நதியுமை யாடுநீ ரமலந்
தெரிச னத்தினி னுதவுமந் நீரையே திளைத்தால்
விரிச னத்தவ ரம்பிகை யுலகினில் விராவிக்
கரிச னைத்தையு நீங்கியே யிருப்பரக் கணத்தில்.

### சிப்பியாறு

719 சிப்பி யாறுபே ரியாறது திளைத்துமா றொன்மீ
னெய்ப்பி யாவது மாறினன் விரதம தியற்றித்
தப்பி யார்தவ றகற்றிடும் படியின்மெய்த் தரும
வைப்பி யாதிது வன்றியே மாநில வரைப்பில்.

---

பார்கள். மாழ்குறு து-மயங்காமல். பேரிசை-பெரும்புகழ். குலாவிய ஏழ்பிறப்பு என மாற்றுக.

717. அம்பை-உமாதேவி. அம்பா என்ற வட சொல்லின் திரிபு. செம் பை ஆடு அரவு ஆற எனப் பிரிக்க. செம்மையான படத்தைப் பெற்ற ஆடுகிற ஆதிசேடன் இளைப்பாற. செம்மை என்றது பண்பை. நிறத்தையன்று. அடியார் நம்பும் ஐயானன்-அடியவர்கள் விரும்புகின்ற ஐந்து முகத்தை உடைய சிவபிரான். 'ஐயானனன் இயல்வாணனை அடிமை கொள மெய்யே-பொய்யாவனம் எழுதும்பதி' (வில்லிபாரதம். அருச்சுனன் தீர்த்த யாத்திரை). திறப்பட-உறுதியடைய. நடாவும்-நடாத்தும். திருவருள் நல்வழியில் நடக்கச் செய்யும்.

718. அரிசனம்-மஞ்சள். தெரிசனத்தினில் அமலம் உதவும். சனத்தவர்-உறவினர். கரிசு அனைத்தையும்-குற்றங்கள் யாவற்றையும்.

719. பேர்யாறு-பெரிய ஆறு. மால்தொல்மீன் எய்ப்புயாவது மாறினன். மீன்-மச்சாவதாரம். எய்ப்பு-தளர்ச்சி, தப்பியார்-தவறு செய்தவர்கள். வைப்பு-இடம். நிலவரைப்பில்-உலக எல்லையில். இது அன்றி தவறு அகற்றிடும் வைப்பு யாது எனக்கூட்டுக.

## தீர்த்தம்—சக்கரத்தடம்

720 சக்க ரத்தட மென்றுமொன் றதுபரந் தாமன்
செக்க ரஞ்சுடர் நேமியா லமைத்தது: திளைத்தே
மைக்க ரும்பெரு வடிவுபோய்ப் பவளமாம் வண்ண
மிக்கி ருந்தன னன்னநீர் மிகப்பெரு விமலன்.

721 தாதை யானபொற் பேரிஞேற் கவனது தனையன்
ஈது நீரினுற் றருப்பணம் புரிந்தவ னென்பைக்
காத லித்ததிற் சேமிக்க வரதமாங் கழுநீர்ப்
போதெ ஞுங்கழ்ந் ததுபல பலவதன் புதுமை.

## காப்புத்தடம்

722 காப்பெ னுந்தடம் படிந்தவர் தமைமிகக் காத்து
மாப்ப யன்றரு மாதலா லிப்பெயர் மருவும்
மூப்பு வந்தடை யாமலே பற்பல முனிவர்
வாய்ப்பெ னும்புரா தனம்புகன் றதன்கரை வசிப்பார்.

## மங்கள தீர்த்தம்

723 எங்க ளம்பிகை சேடியர் மங்களை யியற்ற
மங்க ளந்தரும் மங்கள தீர்த்தமா மணிநீர்
திங்க ளொன்றிதிற் றிளைத்திடும் அவர்தமைத் தெய்வத்
துங்க மங்கையர் தமதுநா யகரெனச் சூழ்வார்.

---

720. நேமியால்-சக்கரத்தால் கருவடிவுபோய் பவள வண்ணம் மிக்கு இருந்தனன். விமலம்-தூய்மையானது.

721. தாதை தந்தை. பொற்பேரிஞேன்-இரணியன். தனையன்-பிரகலாதன். இதில் சேமிக்க-இந்தச் சக்கரத் தீர்த்தத்தில் சேர்க்க. எலும்பு கழுநீர்ப் பூவாக மாறிற்று. எலும்பு மலராக மாறும் அதிசயத்தைத் திருப்பூவண புராணம் 'அற்பு தந்தனை என் சொல்கேன்: மிகும் அறவீர்காள் அரிது அரிது அரோ-பெற்ற தாதை பிறங்கெலும்பு பெருங்கடத்தில் இருந்துதான்-எற்ற இந்த இலஞ்சி நாப்பண் எழுந்து வீழ்ந்து அரவிந்தமோடு-உற்ற பானலதாக யாஞெரு வேனுமே திருவுடைமையேன்' என்று நயம்படப்பேசும் (தருமஞ்ஞன்முத்தி 21).

722. வாய்ப்பு-செழிப்பு. புராதனம் புகன்று—பழைய நிகழ்ச்சிகளைக் கூறி. (முதியவர்களின் இயல்பு).

723. சேடி-தோழி. திளைத்திடும் அவர்-குளிக்கின்றவர்கள். துங்கம்-மேலான,

### புண்ணிய தீர்த்தம்

724 சரத மேன்மைசேர் புண்ணிய தீர்த்தநற் றரும
வுருவ மாகையால் அப்பெயர் பெற்றுள துன்னி
வரத ராடியே சங்கரர் நிருமல வடிவப்
பரம நாயகங் கண்டிடுபெரும்பயன் படைத்தார்.

### வேகவதி

725 சலத்து வேதனை யிகலியே கலைமக டனுது
பலத்து லாயது சோபனப் பாவனப் படிவ
நலத்து வேகவ திப்பெயர் சான்றதந் நதியில்
நிலத்து மேற்படர்ந் தாடினர் நினைவெலா நிகழும்.

### பாலிமா நதி

வேறு

726 தராதல வளமை சேருந்
தண்டகத் திருநா டென்றும்
விராவியே தரும ராசி
விளைத்திடு பயனே போலித்
திராவிடத் தொகைய தான
செழுந்தொடைப் பனுவல் யாவும்
பராவுற மருவா நிற்கும்
பாலிமா நதிய மொன்றே.

---

724. தரும உருவம்-தருமத்தின் வடிவம். வரதர்-திருமால். நிருமலவடிவ-தூய வடிவுடன் கூடிய. பரமநாயகம்-மேலான தலைமை. கண்டிடும்-அடைகின்ற.

725. சலம்-தணிக்க முடியாத கோபம். 'சலம் கொண்ட இரணியன்' (பெரிய திருமொழி). வேதனை-பிரம்மதேவனுடன் (உருபு மயக்கம்). பலத்து-வன்மையுடன். சோபனம்-மங்களம். பாவனம்-தூய்மை. 'பாவன சீதாராம்' (காந்தியடிகள் விரும்பிய பாசுரம்). படர்ந்து-பயணம் செய்து. நினைவு-எண்ணியவை.

726. தண்டக நாடு (செய்யும்) தருமராசி விளைத்திடும் பயன் போல், பனுவல் யாவும் பராவுற பாலிமா நதி ஒன்றே மருவா நிற்கும் எனக் கூட்டுக. தராதல வளமை-உலகத்தில் உள்ள வளங்கள் யாவும். விராவி - மனம் கலந்து செய்த). திராவிடம்-தமிழ். தொகை-கூட்டம். தொடைப்பனுவல்-தொடுக்கப் பட்ட நூல். பராவுற-புகழ.

727 இறந்ததொல் வளங்கள் யாவு
மெய்துவா னெண்ணி விண்ணோர்
சிறந்தவா ரிதியை முன்னங்
கடைதலுந் தேனு வொன்று
பிறந்ததங் கதனை யாரும்
பெரியனும் வசிட்டன் றன்பா
லறந்தவா மகங்களி யாவு
மாற்றுதி யென்று நேர்ந்தார்.

728 அந்திவா னிறத்தெம் மண்ணல்
ஆடுறு மஞ்சும் மற்றுஞ்
சிந்தையா னினைத்த யாவுந்
தருமொரு தேனுத் தன்னை
யெந்தையாம் வசிட்டன் றன்பா
லேற்றன னிருக்கை யான
நந்திமால் வரையை நண்ணி
நன்மக வினைசெய் நாளில்.

729 கல்லுயர் குடுமி நெற்றி
களிப்புமீக் கொண்ட தேனுப்
புல்லுண வருந்தித் தூய
புனிதப்பால் சொரியா நிற்ப
எல்லையில் புவன கோடி
யாவுமாம் இறைவற் றூங்க
வல்லமால் விடையாம் நந்தி
வந்தவண் டோன்றிற் றன்றே.

---

727. இறந்த-நீங்கிப்போன. வாரிதி-கடல். தேனு-பசு அறம்தவா—தருமத்திலிருந்து தவறாத. மகங்கள்-யாகங்கள். நேர்ந் தார்-கொடுத்தனர்.

728. அந்திவான் நிறம்-சிவந்த நிறம். 'செவ்வான் அன்ன மேனி:அவ்வான் இலங்குபிறை யன்ன விலங்குவால்வை எயிற்று' (அகம்—கடவுள் வாழ்த்து) ஆடுறும்-திருமஞ்சனம் கொள்ளும், 'ஆவினுக்கு அருங்கலன் அரன்அஞ்சு ஆடுதல்' (தேவாரம்) ஏற்றனன்-ஏற்றுக் கொண்டனன். மகம்+வினை—மகவினை. யாகத் தொழில்.

729. கல்-மலை. குடுமி-இரண்டு கொம்புகளுக்கும் நடுவில்

730 கண்டது விடையைத் தேனு
கதுமெனக் காமத் தீயுட்
கொண்டது மனங்க சிந்து
குழைந்தது குணங்கள் யாவும்
விண்டது பசந்து மெய்யும்
விளர்ந்தது வெய்ய நஞ்ச
முண்டது போல மாழ்கி
யுறுதுய ருற்ற தன்றே.

731 அருந்தவ முனிவன் செய்யு
மருமறைச் சடங்குக் கன்பாற்
பொருந்திய நல்குந் தேனுப்
பொழுதுநீட் டித்தல் காணூஉத்
திருந்திய திறனை ஞானத்
தெளிவினு ளுடித் தேர்ந்தே
யிருந்தனன் பசுவின் வெந்நோ
யெவ்வணந் தீர்த்து மென்றே.

732 நோக்கின னிதுதான் றேனு
நோயினை நொய்ய போழ்தி
னீக்குவ திதனு லென்றே
நெடிதொரு தருப்பை கொண்டே
யாக்கினன் புனிற்றின் கன்றோன்
றகுதெழுந் துகைத்துத் தாவி
வீக்குறு முவகை துள்ளிப்
பசுவின் மேல்விழுந்த தன்றே.

---

உள்ள மேடானபகுதி, புவனகோடி-உலகத் தொகை. இறைவன் உலகமாக இருக்கிறுன் என்று ஞானிகள் கூறுவர். 'ஒன்ருய் உலகணைத்தும் ஆனுர் என்று அப்பமுனி-பொன்ரு மொழியால் புகன்றிருக்க'. (வள்ளலார் சாத்திரம். சிவஞான-17) மால்விடை-பெருமை மிக்க இடபம்.

730. கதும் என-விரைவில். 'புனலாடு மகளிர்கதும் எனக் குடைய' (பொருநர் ஆற்றுப்படை. 241). விண்டது-நீங்கிற்று. மாழ்கி-மயங்கி.

731. மறைச்சடங்கு-வேதத்திற் கூறப்பட்ட கிரியை. பொருந்திய-ஏற்ற பொருள்கள். நீட்டித்தல்-தாமதித்தல். 'ஊட்டல் என் தீம்பால் பெருகும் அளவெல்லாம்-நீட்டித்த காரணம் என்' (மருதக்கலி. 17) காணூஉ-கண்டு. தீர்த்தும்-நீக்குவோம்.

732. நொய்யபோழ்தில்-சிறிது நேரத்தில். புனிற்றின்-கன்று-

733 மீதுறு கன்றை நோக்கி
விரைவினில் விடைமேல் வைத்த
காதல்போ யகன்று தன்னிற்
களிப்புட னணைத்து மோந்து
சோதிநாக் கொடுதை வந்து
சுரந்துபா லொழுகி நின்ற
தாதலால் மகவி னாசை
யாசையு ளாசை யாமால்.

734 பொழிதரு தாரை வான்போற்
புனிதவான் சொரியு மப்பா
லிழிதர வெள்ள மாகி
யெழுந்துபோய் நந்தி வெற்பிற்
குழுமிய தரள ராசி
செம்பொனின் குப்பை சந்தம்
அழகிய கைமா யாவும்
வாரியே யணைந்த தன்றே,

---

அணிமையில் பிறந்த கன்று. அகுது-அஃது. உதைத்து-உயர எழும்பி. வீக்குறும் உவகை-மிக்க மகிழ்ச்சி. வீங்கு என்ற மென் தொடர்க் குற்றியலுகரம் வன்தொடர்க்குற்றியலுகரம் ஆயிற்று. வீங்குதலை உலகமக்கள் வீக்கம் என்று வழங்குதலை நோக்குக.

733. அணைந்து மோந்து நாக்கொடு தைவந்து, என்று பசுவின் செயலை இயற்கையாகப் பாடிய திறம் பாராட்டற்குரியது. மகவின் ஆசை, ஆசைகளுக்குள் மேலானது என்று மனோதத்துவம் பேசுகின்றார் ஆசிரியர். இப்பசுவின் செயல்'கன்றினையணைத்து விம்மும், முலையினையூட்டி, மென்மை முதுகு, வால், அடிநா நீட்டி அலைதர வளைத்து மோந்து வேட்கையகற்றிய', (சீறாப்புராண) மானின் மெய்ப்பாட்டை நினைக்கச் செய்கிறது. (சீறா. மானுக்குப் பிணை. 51)

734. வான்போல்–மேகத்தைப் போல. இழிதர-இறங்க. தரள ராசி-முத்துக்கூட்டம். குப்பை-குவியல். கைமா-யானை. பால், நதியாகிப் பெருகிற்று. இவ்வரலாற்றைத் தொண்டர்சீர்பரவுவார், 'துங்க மாதவன் சுரபியின் திருமுலை சொரிபால்-பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே-அங்கண் நித்திலம் சந்தனம் அகிலொடு மணிகள்-பங்கயத் தடம் நிறைப்ப வந்து இழிவது பாலி' என்று குறிப்பார். (திருக்குறிப்பு. 21).

735 ஆரிட னதனை நோக்கி
யற்புதப் பால னாகிப்
பேரிடர் புவனி தீரப்
பிறந்ததிந் நதியா மென்றே
நீரிடு முடியான் றன்னை
நினைத்தனன் தவத்தின் பேற்றாற்
பாரிடர் முனிவர் சூழப்
பரனுவ ணுற்றுக் கூறும்.

736 ஞானநூல் வரம்பு கண்ட
நன்முனி யுனது காம
தேனுநின் னருளி னாலே
சொரிதரு தீம்பால் வெள்ளம்
ஆனுறு மஞ்சின் மூன்றுக்
காதியா மாத லாலே
யீனமி னதியா யுள்ள
வெவையினும் புனிதமாமே.

737 வருநதி காஞ்சி மூதூர்
வராகீச மாற்பே றென்னும்
பெருமைசேர் நிலைய மேவு
பெறுதியான் மிகவு மேன்மை
மருவிடும் நதியீ தாடின்
மகவினை நீமு னன்பாற்
புரிபய னனைத்து மன்னூர்
பொருந்துவ தாக வென்றான்.

---

735. ஆரிடன்-முனிவன் (வசிட்டன்). பாலன்-தன்மை உடையுவன். புவனி-உலகம். நீரிடுமுடியான்-கங்கையை வைத்த தலையை உடையவன். பாரிடர்-பூதங்கள். உவண்-இடையில்.

736. நன்முனி-நல்லமுனிவனே. அண்மைவிளி. மூன்றுக்கு-பால், தயிர், நெய் என்ற மூன்று பொருள்களுக்கு. ஆதி-காரணம். (முதற்காரணம்) நதியாய் உள்ள-நதியாக இருக்கின்ற. எல்லா நதியினும் பாலியாறு புனிதம் மிக்கது.

737. பெறுதியால் - பாக்கியத்தால். மகவினை-யாகக்கிரியை. பொருந்துவதாக-அடையட்டும்.

738 தேனுவின் பாலே தீர்த்தஞ்
செழுமலர்த் தவிசின் மேலோன்
மானத குமர னுனை
வசிட்டனை தருளா லுற்றது
ஆனுயர் கொடியோன் வேத
மருளிய திருவாக் காலே
மேனிலை பெற்ற தென்னில்
விளம்பலாந் தகைமைத் தொன்றே.

செய்யாறு

739 வேறுமோர் நதிய முன்னம்
வேலுடைக் கடவுட் செவ்வேள்
சீறுமோர் சூரன் றன்னைச்
செற்றிடச் செல்லு நாளில்
ஏறுசீர்த் தேவ சேனு
பதியென விளையோன் றன்னைக்
கூறியே தமக்கு மேன்மை
குறித்தபி டேகஞ் செய்தார்.

740 புனிதவான் கங்கை யாதி
புண்ணிய நன்னீர் யாவு
மினிமையிற் கொணர்ந்து வேத
மனுவினை யெண்ணி யெண்ணிப்
பனவரா முனிவர் தேவர்
பணித்தபி டேகஞ் செய்ய
அனகனுங் குமர னுடு
மறல்பெரு வெள்ள மாய.

---

738. மலர்த்தவிசின்மேலோன்-பிரமன். 'தாமரைத் தவிசு உறைதரு சதுமுகக் கடவுள்'. (பாகவதம்). மானதகுமரன்-மனத்திலிருந்து தோன்றியவசிட்டன். திருவாக்கு-திருவாய்.

739. செற்றிட-அழிக்க. சேனுதிபதி என்பது சேனுபதி என்று சுருங்கிற்று. 'சினப்போர்ச் சுவேதனைச் சேனுபதியாய்-மனப்போர் முடிக்கும் வகை'. (நான்முகன் திருவந்தாதி. 2.4)

740. வேதமனு-வேதமந்திரம், ஆடும் அறல்-நீராடிய தீர்த்தம். 'அம்செம் சேதா உண் அறல் அமிழ்தே' (ஞானமிர்தம் 40).

741 பிரளையச் சலதி யேபோற்
பெருவிசை யதனாற் செல்லக்
கருதியே முனிவர் தேவர்
கைதொழூஉப் பரவிப் போற்றி
யுரவிய பெருநீர் செவ்வே
லுடையகோ னொடு மங்கீ
ரரகர வென்றுட் கொண்டா
ராடினர் புனித ராஞர்.

742 அறுமுகக் கடவுட் போற்றி
யனைவரு மிங்கீ ராடப்
பெறுகுநர் பாத காதிப்
பெரும்பவந் தீரு மாறுஞ்
செறிகுறி விருச்சி கப்பேர்
சேருஞா யிறுதொட் டேயாண்
டுறுதரு மாரன் மூழ்கி
லுனதுல குறவுஞ் செய்வாய்.

743 எனவரம் பெற்றுக் கந்த
நதிப்பெய ரிதற்கு நாட்டி
வினையமாம் அவுணர் சீற
மேவினா ரனைய ரிப்பாற்
புனிதவிந் நதிக்கும் யாரும்
புகழ்தரப் பாலி யென்றே
நனிவரு நதிக்கு மாக
நடுவுகூ ழெல்லை யாவும்.

---

741. சலதி-கடல். 'தமிழ் எனும் அளப்பரும் சலதிதந்தவன்'. (பாலகாண்டம். தாடகை). தொழூஉ-கையைத் தலைமேலே வைத்து வாழ்த்தி. 'கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி', என்பர் நக்கீரர் (திருமுருகாற்றுப்படை. 252) ஆசிரியர் முருகாற்றுப் படையை இங்கே அனுசந்தித்தார். 'அரகர' சிவபக்தர்கள் உவகைப் பெருக்காற்கூறும் வாசகம். 'மொய்க்குறும் முகில்கண் டரிகரி என்னும் முழக்கும், அரகர என்னும் தக்கவர் முழக்கும் எதிர் எழும் சோணசைலனே கயிலைநாயகனே' (சோணசைலமாலை 68).

742. பவம் - பிறப்பு. விருச்சிகப்பேர்ஞாயிறு - கார்த்திகை மாதம். ஆரல்-கார்த்திகை நட்சத்திரம். 'அரவுக்கண் அணுவுறல் 'ஆரல்மீன்தகைய வொப்ப' (குறிஞ்சிக்கலி 26). உலகு உறவும்-சாலோகம் அடையவும்.

743—744. கந்தநதி பெயர் - சேயாறு. வினையம்-வஞ்சகம்.

744 அந்தரு வேதி யன்றே
யறைகுவர் யமுனை கங்கை
சந்திசெ யிடம தாமந்
தருவேதி தன்னி லீது
முந்திய தென்றே யீசன்
மொழிந்தன னுமைக்கு முன்ன
மெந்தையே காம்ப ரம்பொற்
பரம்பரத் திடம தாகும்.

வேறு

745 இன்ன மெண்ணில தீர்த்தமத் திறனெலா மெவரே
பன்ன வல்லவர் சனகரா தியர்க்கயன் பகர்ந்தான்
முன்ன மென்றன னெம்பெருங் குரவனு முனிவ
னென்ன நண்புட னிசைத்தனன் சூதனு மிறைவன்.

---

சேயாற்றுக்கும் பாலியாற்றுக்கும் நடுவில் உள்ள பகுதியை அந்தர் வேதி என்றுகூறுவர். யமுனை கங்கை சந்திசெய் இடம, திருவேணி சங்கமம். திருவேணி சங்கமத்தில் சரஸ்வதிநதி மறைந்திருப்பதால் அதை அந்தர்வேதி என்பர். அதைவிடக் காஞ்சியில் உள்ள அந்தர் வேதி பழையது. அந்தர் வேதியின் பழமையை இறைவன் உமைக்குக் கூறினன்.

745. எம்பெரும் குரவன் என்றது வியாச மாமுனிவரை. இது சூத முனிவரின் கூற்று.

**தீர்த்தச் சருக்க முற்றும்.**

**ஆகச் சருக்கம் 4க்கு விருத்தம் 745.**

746 அவனுரை வினவிய முனிவரர்கள்
யாவரும் அன்புகெழீஇ யினராய்ப்
புவனியி லதிசய மொளிருதல்
மருவிய புனிதநன் னீர்பலவால்
விவிதம திவையுரை செய்தனை
யெமதுநல் வினைநல மினியடிகே
ளுவமையி லதுபதி முதியபன்
னிருபெய ருளதென வோதினையால்.

747 அன்னது வினவுமவ் வரமுடை
யோமென வருள்முனி யருள்புரிவான்
பன்னிரு பெயரது சிவமனு
வாகிய படனவி சேடநல
முன்னிடு மவர்கரு தியபல
னடைகுவர் மொழிகுவர் சிவகதியே
துன்னுவர் முன்னுப னிடதநனூ
லுரையவை சொற்றது மற்றதுவே.

வேறு

748 காவான பேர்பிரமம் அஞ்சி யென்ப
தடைதல்பாக் கருத்தா தானே
மாவாக வடைதலினுற் காஞ்சியெனும்
பெயர்மருவு மற்றுங் கஞ்சத்
தேவானேன் பெயருமதா மஞ்சியென்கை
பூசைபுரி செய்கை நாளு
மோவாமல் அவன்பூசை புரிவதுகொண்
டப்பெயரு முடைத்து மாதோ.

---

746. வினவிய-கேட்ட. புனித நன்னீர்-தீர்த்தம். விவதம்-வகைகள். (அபிதானம்-பெயர்).

747. வினவும் அவ்வரம்-கேட்கும் நற்பேறு. அருள்முனி-சூதமுனிவன். படனம்-புராணம் படித்தல். 'படன விவேகபரம்பர வேதா'. (திருவருட்பா. 6 ஆம் திருமுறை. அம்பலத்தரசே. நாமாவளி. 6.)

748. காவானபேர்பிரமம்-கா என்றால் வேதம். (வேதத்தைப்

749 அளவுபடாப் பேரின்பங் காவென்ப
அஞ்சியென் பதடைதலாமே
யெளிதடையு மணுக்களெல்லாம் பேரின்பம்
அடைதலினு மிப்பேர் மல்கும்
உளதுசிரந் தனக்குமிப்பேர் அஞ்சியென்ப
துபசரித்தல் உலப்பி லாத
வளநிலவு தலமனைத்துஞ் சிரமாகக்
கோடலினும் வருமந் நாமம்.

750 பரமகக னத்துருவாந் திருக்காமக்
கோட்டத்தின் பாங்கு நீங்கா
தொருதருநின் றப்பதியி னெல்லைமுழு
துந்தழைத்தே யுலவா நிற்கு
மிரவிபடு சாயையிலை யத்தருவி
னற்புதமு மியல்ப தான
பெருமையுமெம் போல்பவராற் பிறித்தறிதற்
களவு படாப் பெற்றித் தாமால்.

---

பிரம்மம் என்பர். பிரம்மத்தை ஓதுவதால் அயன் பிரமன் என்னும் பெயரைப் பெற்ருன்.) அஞ்சி-அடைதல். மா-மாமரம். வேதம் (கா) மாமரமாக அடைந்ததால் (அஞ்சி) காஞ்சி எனப் புகழப்பட்டது.

கா-பிரமன். அஞ்சி-வணக்கம். பிரமன் வணங்கியதாலும் காஞ்சி என்னும் பெயர் பெற்றது. அது என்றது 'கா' என்ற எழுத்தை. கா-வேதம். பிரமன், அஞ்சி-அடைதல். வணங்கல்.

749. பேரின்பத்திற்குக் கா என்று ஒரு பெயர் உண்டு. அஞ்சி-அடைதல். அணுக்கள்-ஆன்மாக்கள். (ஆணவமலத்தைப் பெற்றுத் தன் விரிவுத் தன்மை இழந்ததால் ஆன்மாக்கள் அணு என்று வழங்கப்படும்.) க-சிரம். (தலை) உபசரித்தல்-தலையின் மேல் வைத்துப் போற்றல். தலங்கள் யாவும் காஞ்சியைச் சிரமாகக் கொள்ளுதலால் காஞ்சி என்னும் பெயர் பெற்றது. கோடல்-கொள்ளுதல்.

750. ககனத்து உருவமாம்-ஆகாய வடிவமாகிய. ஒருதரு-ஒப்பற்ற மரம். உலவா நிற்கும்-பரவியிருக்கும். சாயை-நிழல். பெற்றித்து-தன்மையுடையது.

751 மற்றதுசெம் பொற்படிவம் பன்னமிளந்
தளிர்பட்டு வயிர நற்பூப்
பற்றியுறை நறையமுத மரகதங்காய்
மாணிக்கம் பழுக்கா யாவுஞ்
சொற்றவிதற் கீரா று பருவமுமா
மிதன்கனியைத் துய்ப்பா ராகின்
முற்றுமுட லிளமைபெறும் வளமைபெறு
மறிவுமிக முதிரு மாதோ.

752 பெருகுதரு விசேடமதிற் காஞ்சியெனு
மொருபெரும்பேர் பெற்று மேவுந்
தருவதுநின் றிலகுதலி னுலும்அப்பேர்
பெறும் புவன சார மென்னு
மொருபெயரி னுண்மைதனை யுறைத்திடுவன்:
கேண்மினனைத் துலகும் யாரும்
பருவலிசேர் வினையருந்தி மலமகற்ற
வயனகிலம் படைத்து மேவும்.

---

751. அம்மரத்தின் வடிவம் பொன்போல இருக்கும். அதன் இலை, பட்டுப்போல் இருக்கும். இளந்தளிர், வயிரம் போல இருக்கும். அதன் பூவில் அமுதம் இருக்கும். காய், மரகதம் போல் இருக்கும். பழம், மாணிக்கம்போல் இருக்கும். பன்னிரண்டு மாதமும் பழுக்கும். பன்னம்-தழை. பழுக்காய்-பழுத்தகாய். (பழம்)

752. விசேடம்-வகை. இன்னது என்று விளக்க முடியாத சந்தர்ப்பத்தில், அணிவிசேடம், மரவிசேடம் என்று வரைந்து தப்பித்துக்கொள்ள உதவிய ஒரு அற்புதமான சொல். காஞ்சி மரம் இருந்ததாலும் காஞ்சி என்ற பெயர் பொருந்தும். உண்மையான காரணத்தைக் கடைசியில் கூறியது ஆராய்ச்சியாளர்களுக்கு அதிசயம் தரும். பல ஊர்கள் மரத்தின் அடிப்படையில் அமைந்தனவே. தில்லை, மருதூர், வேணுபுரம், வதரி. பராய்த்துறை முதலான பெயர்களை நோக்குக. நான்கு வகையான நிலங்களின் பெயரை ஆய்க.

வினை அருந்தி - வினைகளின் பயனைத் துய்த்து. மலம் அகற்ற-ஆணவத்தை விலக்க. ஆணவ மலம் அழியாது என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. ஆதலின் அழிக்க என்னாது அகற்ற என்றார். அயன் உலகத்தைப் படைப்பான்,

753 கண்ணனவை காத்தளிக்கு மெம்பெருமா
னுரியபெருங் கருணை மேவு
தண்ணளியா னுயிரெவையு மினைப்பாற்றும்
பொருட்டாகிற் சார மாக
வெண்ணகில வுற்பனத்தின் வித்தாய
சத்திதனை யாவு மீன்று
நண்ணுபரா பரமான காமக்கோட்
டத்தினிடை நடுவு சேர்த்தி.

754 ஓங்குசரா சரமனைத்துந் தொலைத்தொருமா
நிழலதன்கீ ழுறையு நாளில்
ஆங்குநெடு நாள்கள்பல போயகல
வமலைதனை யருளி னாலே
பாங்குபெறப் புரிந்தவளால் அயன்றனையுண்
டாக்கியவன் படைக்கு மாறு
தாங்குபுகழ்ப் பராபரத்திற் சகற்சார
முதவுமறைத் தனிமா வுள்ளோன்.

---

753. கண்ணன்-திருமால். (கண்ணன் என்னும் சொல் பெரும்பாலும் யசோதையிளஞ் சிங்கமாகிய கிருஷ்ணனையே குறிக்கும். கம்பன் 'எங்குமுளன் கண்ணன்' என்னும் நம்மாழ்வாரின் தொடரில் மனம் பறிகொடுத்ததால் திருமாலைப் பல இடத்தும் கண்ணன் என்றே குறிப்பான். இராமபிரானையும் கண்ணன் என்பது கவிச்சக்கரவர்த்தி கம்பனின் தனி இயல்பு). இவ்வாசிரியர் கம்பனை அறிந்தவர்போல் தோன்றுகிறது. எம்பெருமான்-உருத்திரமூர்த்தி. உற்பனத்தின்-தோன்றிய பொருள்களின். வித்தாய சத்தி-காரணமாகவுள்ள மூலசக்தி.

754. தொலைத்து-மலத்துள் ஒடுங்கச்செய்து. புரிந்து-விரும்பி நோக்கி. பர+அம்பரம்—பராம்பரம், சிதாகாசம். சகற்சாரம்-உலகசாரம். மறைத்தனிமா-வேதமாகிய மாமரம். தனிமாவுள்ளோன் அயனை உண்டாக்கி, படைக்குமாறு, சகற்சாரம் உதவும் எனக் கூட்டுக.

755 பங்கயனங் கதுகொடகி லம்படைக்கு
மீதுபரம் பரையாய் நீடு
மிங்கிடுகா ரணமதனுற் சகற்சார
மெனவொருபே ரிலகா நிற்கும்
பொங்குபுகழ்ப் பதியிதனைப் பிரளயசித்
தெனவுநிலம் புகழு மென்று
மெங்குமிலற் புதப்பகுதி யானதிறன்
அதனையுநீ ரியம்பக் கேண்மின்.

756 சொற்றதொரு பேரிறுதிக் காலமென
ஞானமிசைத் தொடர்வு பூணு
மற்றுமொரு பெருங்கற்ப முடிவுபடு
கடைநாளின் மதியி னுலே
யிற்றெனயா வருமுணர்தற் களவுபடா
வகிலமெலா மீறு செய்தான்
முற்றுமுல கனைத்துமொரு நொடிவரையிற்
பெருநீத்த மூடிற் றன்றே.

757 அகலிடமே முதலகில தலமுழுதுங்
கொண்டுவரு மதனை நோக்கி
மகபதியே முதலமர ரெவருமுனி
வோருமந்த மறலி தானு
மிகைதருமிந் நீத்தமிதற் கேதுசெய்வோ
மெனநடுங்கி வெருவந் தேங்கிப்
புகலிடமிக் காஞ்சியென வடைந்தனரக்
காலமற்றும் புகலுண் டாமோ.

---

755. பங்கயன்-பிரமன், ஊங்கு-பிறகு. அதுகொடு-அந்த சகற்சாரத்தை கொண்டு. பிரளய சித்து, என்று காஞ்சிபுரம் போற்றப்படும். அதன் காரணத்தைக் கூறத் தொடங்குகிறுர் முனிவர்.

756. பேரிறுதிக்காலம்-மகா சங்கார காலம். அற்றம்-சமயம். நொடிவரையில்-கை விரலை நொடிப்பதற்குள். நீத்தம்-வெள்ளம்.

757. மகபதி-இந்திரன். வெருவந்து-பயந்து. 'வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன்' (திருக்குறள் 563). புகல்இடம்-தப்பு வதற்கு அமைந்த இடம். 'அஞ்சினன் புகலிடம்' பற்றிய குறிப்பு களைச் சைன சமயத்தில் காண்க.

758 ஆவதுகண் டிரும்பெருநீ ரிதுபொழுது
முடிவுபடா தருளுந் தானம்
பூவினுயர் காஞ்சியதின் மற்றுமுள
தலத்துறைவோர் புகுதா வண்ணம்
காவல்புரிந் திடுதுமெனத் தொடருதலு
மனையரெலாங் கலங்கி யுள்புக்
காவியென மாவினொரு தனிமூல
நாதனரு கடைந்தா ரன்றே.

759 வெஞ்சினமீக் கொடுபரந்து புவனிமுழு
தொருநொடியில் வேறிதே யாக்கி
யெஞ்சலிலாப் பெருநீத்த மெமையடுவான்
குறித்துவரு மிதனை நீக்கித்
தஞ்சமென வடைந்தவெமைக் காத்தருள்வா
யெனச்சூதத் தனிமூ லத்தோ
னஞ்சலென வருள்புரிந்தா னவனலது
மற்றெவரே யருள்செய் கிற்பார்.

760 அன்னவரை யஞ்சலென வருள்புரிந்து
கண்டசண்ட வடன்மீக் கொண்ட
மின்னுருவு தருமெயிற்று வெறித்திடுசெக்
கர்ச்சடில வெங்க ராளப்
பன்னகவெம் பணித்தொடையற் பாழிபடு
மூழியந்தீப் படிவத் தாற்றற்
கொன்னுனைமுக் குடுமியடற் படையணங்கு
தனைப்பரமன் குறிப்பிற் பார்த்தான்.

---

758.—மற்றவர்கள் வந்தால் இடம் போதாது என்று காஞ்சி முக்கள் தடுக்க முற்பட்டனர். இங்கனம் தடுக்கப்பட்டவர்களிற் சிலர் எப்படியோ மாமரத்தின் அடியில் எழுந்தருளியுள்ள பெருமான் பக்கல் உற்றனர், காவல் புரிந்திடுதும்-தடை செய்வோம்.

759. அடுவான்-அழிக்கும் பொருட்டு. தஞ்சம்-அடைக்கலம்: சூதம்-மாமரம். செய்கிற்பார்-செய்யும் வல்லமை உடையவர். கில் ஆற்றலை உணர்த்தும் இடைச்சொல்.

760. இப்பாடல் துர்க்கா பரமேஸ்வரியின் பயங்கரக் கோலத்தை விவரிக்கிறது. கண்டசண்ட-ஆபத்தை உண்டுபண்ணும் வேகமான. எயிறு-பல். செக்கர்ச்சடிலம்-செஞ்சடை.

761 பார்த்தளவில் அவ்வணங்கு பார்த்தனண்முத்
தலைப்படையைப் பகுவா யார
வார்த்தனள் வெள் ளெயிறதுக்கித் தின்றனள்பின்
னகைத்தனள் பேரச்ச மெங்கும்
போர்த்தனள்பா தலநடுங்க வகிலமுழு
வதுநடுங்கப் புவனி யாவும்
பேர்த்தனளா மெனக்கடிதிற் பிறங்குமணி
நூபுரத்தாள் பெயர்த்துச் சென்றாள்.

762 சென்றதனை முடிவுசெயுங் கொடுங்கால
வடவனலஞ் சீறிச் சீறி
யன்றுசுவ றிடக் குடித்தா லெனச்சினத்து
நோக்குதலு மனைய நீத்த
மின்றெமது பெருவலியு மிற்றதுகொ
லெனவெருவந் தேங்கி யுள்ளங்
குன்றியலம் வந்துநெடி துள்வாங்கி
நடுங்கிமிகக் குலைந்த தன்றே.

763 ஆற்றல்பெறு நீத்தவடி வதுநீத்துத்
தெய்வவடி வாகி நேர்நின்
றேற்றமிகு மித்தலமல் லாலெவையு
மாற்றுவதிங் கெனது செய்கை
போற்றியிந்தத் தலனிடையே மற்றையரும்
புகுதுவதோ ? புகுதா வண்ண
மாற்றுவனெம் பிரானாணை மாற்றுதியோ
வெனவணங்கு மறுத்துச் சொல்லும்.

---

கராளபன்னகம்-விஷப்பாம்பு. தொடையல்-மாலை. அடற்படை-ஆற்றல் மிக்க சூலம். எயிற்றையும், சடிலத்தையும், தொடையலையும், படையையும் உடைய அணங்கு. கண்களினாற் கருத்தைத் தெரிவிப்பதைக் குறிப்பில் பார்த்தல் என்பர்.

761. பெருமான் துர்க்கையைப் பார்த்தான், துர்க்கை சூலப் படையைப் பார்த்தாள். ஆர-மிகுதியாக. ஆர்த்தனள்-ஆரவாரித்தாள். போர்த்தனள்-மூடச் செய்தாள். பேர்த்தனள் ஆம் என-பெயர்த்துவிட்டாள் என்று கூற. நூபுரம்-சிலம்பு. 'நூபுரமும் மேகலையும் நூலும் அறல் ஓதி' என்று கம்ப நாடகம் பேசும்.

762. வடவனலம்-வடவாமுகாக்கினி. சுவறிட—வற்ற. உள் வாங்கி—பின் வாங்கி. 'ஒருநான்று நீஉயர்த்தி உள்வாங்கி நீயே, அருநான்கும் ஆறெய்அறி' (நான்முகன் திருவந்தாதி 5).

763. நீத்தவடிவு-வெள்ளவடிவம். தெய்வவடிவாகி-தெய்வத்

764 இந்தமுது பதியடைந்தோர் வீடடைவ
தன்றியுன்னு லிறுதல் செய்யார்
சிந்தையா லவரையட நினைத்தனையுன்
வலிதொலையச் செறுப்பே னின்றுன்
புந்திதனி லிந்நகரிற் புகுதுவது
கருதினையாற் பொறுத்து ளேன்யான்
உய்ந்தனைநீ யினிப்போதி போதியென்றுள்
ஊழிக்கு மூழி போல்வாள்.

765 வையமெல்லாங் கொள்ளவரு மெந்நாளு
மிந்நகரில் வளமை மேவு
செய்யவைந்து யோசனைப்பால் வந்தடைந்தோர்
நீவணங்குந் தெய்வப் பாலோ
ரையமிலை யென்றலுமே பெருநீத்தம்
வணங்கியுன தருளே செய்வன்
உய்யுநெறி யளித்தனையென் றந்நெறியே
தவறும லுலாவிற் றன்றே.

766 பேராண்மைத் தலைப்படுத்தப் பிராட்டியவள்
வந்திறைஞ்சப் பெருமா னன்புற்
றேராகத் தமதுவலப் பாலிருக்க
விருக்கையளித் தெவரும் போற்ற
வாராது பிரளயத்தைத் தடுத்ததொரு
பெருந்திறமை வளமைப் பாலால்
ஆராத வுவகையொடு பிரளயம்வந்
தாளெனும்பேர் அவட்கு நேர்ந்தான்.

---

திருமேனியுடன். மாற்றுவது-சங்காரம் செய்வது. எம்பிரான் ஆணை-சிவபிரானின் கட்டளை. (இது பிரளயத்தின் கூற்று).

764. இறுதல்—அழிதல்- நினைத்தனை-எண்ணினுல், செறுப்பேன்-அழிப்பேன், இந்தப் புண்ணிய நகரில் வந்தவரை வாட்டக் கூடாது என்று பொறுத்தேன். இனி உய்ந்தனை போதி போதி-இப்போதே தப்பிப்போ! போ! ஊழிக்கும் ஊழிபோல்வாள்-எல்லாவற்றையும் அழிக்கும் ஊழிக்காலத்துக்கும் ஊழிக்காலமாக இருப்பவள் (துர்க்கை).

765. கொள்ளவரும் நாள்—ஊழிக்காலம். தெய்வப்பாலோர்-தெய்வத்தன்மை உடையவர்கள். அருள்-கட்டளை. உய்யும்நெறி—பிழைக்கும் வழி.

766. ஆண்மைத் தலைப்படுத்து-ஆண் தன்மையினுல் மேம்

767 எண்டிசையு மீதலமும் பாதலமு
மொருங்குபட விறுதி நீத்தம்
மண்டிவரு பொழுதிலிந்தத் தலமிருந்த
பரிசெவரே வழுத்தற் பாலார் ?
தண்டருவெண் பளிக்குவரை யிந்நகர்க்கோர்
கோயிலெனச் சமைத்தா லொக்கு
மண்டவமா மண்டலத்தை யப்புவெனு
மண்டலஞ்சூழ் வதுவு மேய்க்கும்.

768 செறிதருமக் காலதன்னின் மார்க்கண்ட
னென்னுமொரு செம்ம லங்கீ
ருறுதரங்கக் கரமதனுன் மகத்துயிலத்
துயிற்றுதல்போ லோச்சா நிற்ப
அறிதரவெம் பெருமானு ரருள்ஞான
வாரியென வறிஞர் சொற்ற
குறிபெறுநே யத்தமிழ்ந்திப் பிரளயத்தில்
அமிழ்ந்தாமற் குலவினனே.

---

பாடுற்று. ஏர்-அழகு. இருக்கை-இருப்பிடம். ஆராத-தெவிட்டாத. உவகை-மகிழ்ச்சி. சேர்ந்தான்-சூட்டினன்.

767. இறுதி நீத்தம்-ஊழிக்கால வெள்ளம். பரிசு-தன்மை. பளிக்குவரை-பளிங்குமலை. இந்த நகருக்கே ஒரு பளிங்குக் கோவில் கட்டியதுபோல் இருந்தது. மண்டலமாம்-மண்ணுற் செய்யப்பட்ட. மண்டலத்தை-உலகத்தை. அப்புஎனும் மண்டல்-தண்ணீராகிய வட்டம். 'தார்தாங்கிச் செல்வது' என்று தொடங்கும் குறளுக்குப் (படைமாட்சி 7) பரிமேலழகர் உரையை நோக்கின் உண்மைப் பொருள் புலனாகும். வியூகவகை நான்கனுள் தலைசிறந்தது மண்டலம். மண்டலமாவது பாம்பு மண்டலம் இடுவதுபோல் சேனையை வளைவாக நிறுத்துவது. (சக்கரவியூகம்) ஊழிவெள்ளம், போருக்கு மண்டல வியூகத்துடன் வந்ததுபோல் இருந்தது.

768. செம்மல்-பெருமைமிக்கவர். தரங்கக்கரம்-அலைகளாகிய் கைகள். மகத்துயில-குழந்தை உறங்க. துயிற்றுதல்போல்-தூங்கப் பண்ணுவதுபோல, 'மன்னுயிர் எல்லாம் துயிற்றி' திருக்குறள்—காமம். ஓச்சாநிற்ப-மெல்லென்று வருட. அந்நீர், மகத்துயிலத் துயிற்றுதல்போல் ஓச்சா நிற்ப எனச்சேர்க்கவும்,

769 சென்றுறுமவ் வளவையிடைப் பெருநீத்தஞ்
செயம்புரிந்த திருத்தா னத்தின்
வென்றிதொடு பதாகையெனப் பிரளையமுங்
கடந்தெழுந்து மீச்சென் றோங்கி
மன்றலுறு கடுக்கையந்தார்ப் பெருமானு
ரரசிருந்து வனப்பு நீடு
கன்றிடமா முடிக்கவடு விலகுபெருஞ்
சினைபொதுளிக் கவினக் கண்டான்.

670 கண்டுபவப் பெருவெள்ளத் திடைப்படுவோர்க்
கூற்றமெனக் கவின்ற மாவுட்
கொண்டதுதன் மீதுநின்று கீழுக்கு
மளவையினிற் கோலச் செம்பொன்
மண்டபமுஞ் சூளிகையு மாளிகையுஞ்
சாளரமு மணிப்பேரி யாறு
மெண்டொகையிற் கடவுளர்தம் பேரிருக்கை
நிலையமுமங் கெய்த நோக்கி.

---

ஞானவாரி-அறிவுக் கடல். நேயத்து அமிழ்ந்தி-அன்பிலே மூழ்கி. துயிலத் துயிற்றி என்பன போன்ற பிரயோகத்தைக் (துயில) கேவல பத மாத்திரையாய் நின்றது என்பர் வடநூலார். (பிரயோக விவேகம்: சமாகம் 9).

769. நீத்தம் செயம்புரிந்த-பிரளய வெள்ளத்தை வென்ற. பதாகைஎன-கொடிபோல. 'காண்டகும்பதாகை' (பாரதம் உத்தி. வாசுதேவன்) மீச்சென்று-மேலேபோய் கடுக்கை-கொன்றை. 'கரந்தைமத்தமோ டெருக்கலர் கடுக்கை—நிரந்த பொற்சடை நின் மலக் கொழுந்து'. (இராமாவதாரம். பால. அகலிகை. 52) கன்று இடமாம்-இளமைக்கிருப்பிடமான. விலங்கு முதலானவற்றின் இளமைப்பெயரைக் கன்று என்பர். சிந்தாமணியில் தேவர் 'கருப்புரக்கன்று'. என்றார். (பதுமை)

770. ஊற்றம்-பற்றுக்கோடு. 'உள்முதல் பொருட்கு எலாம் ஊற்றம் ஆவன' (கம்பநாடகம். அயோத்தி. திருவடி. 74) சாளரம்-பலகணி. 'சாளரம் தோறும் தோன்றும் சந்திர உதயம் கண்டார்'. (கம்பநாடகம்) சூளிகை-நிலாமுற்றம். இருக்கை கோவில், 'நீடிய தொல்புகழ் நீவி இருக்கை நாடினன்'. (கந்த. மார்க்கண்டேய. 144).

771 இன்னகர மதிசயமுற் றிருந்ததென
மருண்டமர ரிருக்கை யான
பொன்னகரோ? நிதிக்கிறைவன் பொதுநகரோ?
வோராழிப் புரவித்தேரோன்
மன்னகரோ? பசுங்கதிர்த்தண் மதிநகரோ?
வென்னிலவை மறிந்து போன
வுன்னவரி திதன்பெருமை யெவராலு
மித்திறனின் றுரைக்கற் பாற்றே.

772 இன்னபல பன்னிமறைச் சிறுமுனிவன்
றருவதனின் றிழிந்து போகி
யன்னகரி லைங்கருமத் தரசுசெயு
மேகம்பத் தடிக ளாரித
முன்னமுறப் பணிந்தெழுந்து பற்பலவும்
பரவிநின்று முதல்வ னேயென்
றின்னகரின் றன்மையெனக் கரிவரிதாற்
பேரச்சம் நடாவும் இன்றே.

773 அருள்புரிதி யித்தலத்தின் றன்மையினைக்
கருணையினு லடியேற் கென்னக்
கருணைபுரிந் திறைவன் இவண் டிருக்காமக்
கோட்டமுதற் கடவுட் டானப்
பெருமையெலா முரைத்திடலும் வினவிமுனி
யுண்மைநெறி பெறும்பே றுட்கொண்
டொருதனிமா நிழற்பரம னிருதிருத்தா
ளினைபரவி யுறைந்தா னன்றே.

---

771. அமரர் இருக்கை-தேவலோகம். ஓராழிப்புரவித்தேரோன்-ஒற்றைச் சக்கரத்தையும், குதிரைகளையும் பெற்றதேரை உடையவன். (சூரியன்) என்னில்-என்றுகருதினல். மறிந்து-அழிந்து.

772. மார்க்கண்டேயர் என்றும் பதினாறு வயதோடிருப்பதால் சிறிமுனிவன் என்றார். ஐங்கருமம்-ஐந்து தொழில். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அளித்தல். பேரச்சம்-மாயம். நடாவும்-விலகச் செய்யும்.

773. இவண்-இவ்விடம். வினவி-கேட்டு. 'மேயாயே போல வினவிவழிமுறைக்-காயாமல் வேண்டுவல் யான்'. (மருதக்கலி. 17.) நச்சர் உரைகாண்க.

## திருக்காம பீடம்

774 ஆயபல வூழிதொறும் பிரளையஞ்சேர்
செயம்புரியும் அதனுன் மேன்மை
மேய்பிர ளையசித்தென் றொருதிருப்பேர்
புவியின்மிசை விளங்கா நிற்குந்
தூயதுநற் றிருக்காம பீடமெனும்
பேரதுவுஞ் சொல்லக் கேண்மின்
தேயமிசை யெவர்செவிப்பாற் படினுமவ
ரெண்ணமெல்லாஞ் செறிப்ப தாகும்.

### வேறு

775 மாத வன்மக வான்மல ராசன்
நாத வன்கமலாரிசு ராசுரர்
காதல் கூர்தரு தத்தங் கதியெலா
மீது மாபதி யெய்திய டைந்துளார்.

776 அன்ன தாக வறம்பொரு ளின்பம்வீ
டென்னு நான்கினு மெண்ணிய வெண்ணியாங்
குன்னி யுன்னி யுலக மியாவுமே
மன்னு மிப்பதி வண்மையி னெய்துமால்.

777 கூறு மாதரு மஞ்சில கூர்ந்திடு
மீறி லாத்திரு வீயுஞ் சிலசில
மாறில் காமம் வழங்குவ துஞ்சில
வேறு வேறு வியன்பதி யாவையும்.

---

774. எண்ணம்எலாம் - நினைத்தவையாவும். செறிப்பது-நிரம்பக் கொடுப்பது.

775. மகவான்-இந்திரன். கமலாரி-சந்திரன். கமல-அரி-கமலாரி (தாமரைக்குப்பகைவன்) ஈதுமாபதி-இந்தப் பெரியதலம். (புதுப்பிரயோகம்).

776. உலகம்யாவும், இப்பதி வண்மையால் நான்கினும் எண்ணிய எண்ணியாங்கு எய்தும் எனப்பிணைக்க. வண்மையின்-வள்ளல் தன்மையால்.

777. வேறுவேறு பதியாவையும், சிலதருமம் கூர்ந்திடும். சில திருஈயும்: சில காமம் வழங்கும். வியன்பதி-பெரியதலங்கள். கூர்ந்திடும்-நிரம்பத்தரும். ஈறுஇலா-அழியாத. காமம்-இல்லற இன்பம். 'காமத்திற் செம்பாகம் அன்று'. (திருக்குறள்).

778 முத்தி யீயு முதுபதி யுஞ்சில
இத்த ராதலத் திப்பெருங் காஞ்சிதா
னுய்த்தி யாவு முதவு மொருகதை
நித்தி யானந்தர் கேண்மி னிகழ்த்துவாம்.

779 வரத நீதி வயங்கு மகதநாட்
டிரத மாகிய விம்மைப் பயனையே
சரத மாவெனுந் தன்மையன் வேறிலா
விரத மாவிர தன்னெனும் வேதியன்.

780 பனவ னறிரு சைவப் பகுதிநூன்
முனிவு றாது முழுதுந் தெரிந்தன
னினைய னயினு மின்மையிற் பட்டுளான்
வினையின் பான்மை விலக்கப் படுபவோ?

781 ஆய்ந்த னன்விர தம்பல வாற்றினன்
றோய்ந்த னன்புவித் தூயநன் னீரெலாஞ்
சேர்ந்த நன்பல தேயந் திரிந்தனன்
ஓய்ந்த னன்னெறி யூழும் விலகுமோ.

---

778. முதுபதி-பழையதலம். தராதலம்-உலகம். உய்த்து யாவும் உதவும்-சுமந்து கொண்டுதரும். 'உய்த்துரைத்தல்'. என்ற தொடருக்குப் பரிமேலழகர் (கயமை என்ற அதிகாரக் குறளில்) கூறிய உரைகாண்க. ஆனந்தர்-அண்மைவிளி.

779. வரதம்-வரம் கொடுப்பது. இரதம்-புணர்ச்சி. சரதம்-நிலையானது.

780. ஆறு இருசைவம்-ஆறு பெரியசைவம்: 1. சைவம் 2. பாசுபதம். 3. மாவிரதம். 4. காளாமுகம். 5. வாமம். 6. வைரவம். 'சைவம் பாசு பதமா விரதம்-காளா முகத்தொடு வாமம் வைரவம்-இவையகம் சமயம் என்ன இயம்புவர்' (பொருட்டொகைநிகண்டு, 573) வேறுவிதமாகவும் கூறலாம். அஃது இங்குப் பொருந்தாது. முனிவுறாது-வெறுக்காமல். இன்மை-வறுமை. வினையின்-விதியின்.

781. தூயநன்னீர்-தீர்த்தங்கள். தோய்ந்தனன்-நீராடினன். ஓய்ந்தனன்-தளர்ந்தான்.

782 ஆசை யென்னு மளக்கர்ப் படீஇயவன்
காசி யெய்தியே கங்கை நீராடினன்
மாசி லாத மனுமுறை யாவையும்
பேசி மாதவஞ் செய்தனன் பெற்றியான்.

783 அனையன் முன்னநின் றத்தலத் தெய்வதம்
நினைவி யாதுநி கழ்த்தருள் வேனென
வினைய மாக வறம்பொரு ளின்பம்வீ
டினைய நான்கு மெனக்கருள் என்றனன்.

784 தேடி யார்தம தீவினை தெய்வநீ
ராடி னோருக் ககற்றுவ னென்னிடை
வீடி னார்க்குயர் வீடும ளிக்குவ
னொடி யெய்துதி யென்றுந வின்றதால்.

785 தரும மாதி தருகலை யாலிவண்
கரும மேதெனக் காசி விடுத்தொரீஇ
யருமை யாற்சண் பகாடவி யென்னுமோர்
பெரிய மாவனம் பேணியங் கெய்தினன்.

---

782. *அளக்கர்*-கடல். 'கரைகாண் கல்லாக் கற்பனை அளக்கர்'(ஞானமிர்தம் 46) படீஇ-படிந்து.(நீராடி) மனுமுறை-மந்திரக் கிரமம்.

783. தெய்வதம்-தெய்வம் (கடவுள்) வினையம்-உபாயம். 'வினையம்வல்லான்' (கம்பன். யுத்த. இலங்கைகேள்வி) இனைய நான்கு-இந்த நான்கு.

784. *தீவினை*-தீவினைகளை. (இரண்டாம் வேற்றுமைத்தொகை) 'ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின், மெய்யுருபு தொகா இறுதியான' (வேற்றுமை மயங்கியல்) என்று தொல்காப்பியர் வரையறை செய்தது பொருள் மயக்கம் உண்டாகாமல் இருத்தற்காகவே. ஈண்டு சிறுமயக்கம் தரினும் கூர்ந்து நோக்கின் தெளிவுண்டாம். ஆதலின் பிழையில்லை என்க.

*வீடினார்க்கு*-இறந்தவர்க்கு. *எய்துதி*-அடைக. 'காசியில் இறக்க முத்தி கயிலையிற் பிறக்க முத்தி-தேசுறு தில்லை மன்றம் தெரிசிக்க முத்தி' என்று சிவஞான வள்ளலார் பகர்வர்.

785. *தருகலை*-தரமாட்டாய். ஆல்-ஆதலால். கருமம்-செய்யக் கூடியது. சண்பகாடவி-திருக்குற்றாலம். 'செங்கைமான் மழுவினர் செண்பகாடவியினர்' (திருக்குற்றாலத். தேவர்கள் 29).

786 சற்று மாசை தணிந்திலன் முன்னமே
யுற்ற காதலு ருதயர் வெய்தினுன்
பெற்ற பேறும் பிரானரு ளன்றியே
கற்ற நூலிற் கவலை தெளியுமோ?

787 ஆன காலை அவன்செவி ஊடுசெந்
தேனின் மாரி யெனத்திகழ் காஞ்சியே
தான மாக எவையும் தருமென
வானி னூடொரு வாக்கெழுந் திட்டதே.

788 ஆர்த்த வோசை செவிப்புல னுர்தலும்
வேர்த்த நெஞ்சிடை வீக்கு முவகையின்
போர்த்த னன்மெய்ப் புளகம் புறனெலா
நீத்த வெந்துயர் ஆனவை நீங்கினுன்.

789 நீங்கு மந்தண னீடிருக் காஞ்சியின்
பாங்க ரெய்திப் பராவின னிற்குமஞ்
ஞாங்கர் யாவு நவமணிப் பொன்மழை
யோங்கியே பெய்ய வுள்ள முவந்தனன்.

---

786. காதல்உருது-விரும்பியதைப் பெருமல். பெற்றம்-எருது. 'பெற்றங்கள் மேய்க்கும் பிராஞர் பேணும் திருக்கோயில்' (பெரியாழ்வார் 5.2.6). பிரான்-வள்ளல், கவலை-கலக்கம். 'அவலக் கவலை கையாறு அழுங்கல்-தவலா வுள்ளம் தன்பால் உடையது' (மணிமேகலை 4,118-119) வேற்றுப் பொருள் வைப்பணி.

787. செவியின்ஊடு - செவியின்கண். தேனின்மாரி-தேன் மழை. வாக்கு-சொல். 'இருவிசும்பின் அகடுகிழித்து எழுந்ததால் ஒருவாக்கு' (திருவிளையாடற்-பழியஞ்சின 33).

788. ஆர்தலும்-நிரம்புதலும். வேர்த்த-அஞ்சிய. 'வேர்த்தார் அதுகண்டு விண் உறைவோர்' (கம்ப நாடகம். யுத்த. அதிகாயன்). வீக்கும்-மேலும் மேலும் பெருகும். புளகம் போர்த்தான் என மாற்றுக. துயர்ஆனவை-துன்பங்கள். (ஆனவை, முதலாம் வேற்றுமையின் சொல்லுருபு என்பர்).

789. ஞாங்கர்-இடம். ஓங்கியே-அளவுக்கு அதிகமாய்.

790 பேதி யாது பெரும்பொரு ளெய்துமே
லாதி யாய்முடியாதுமொன் றுள்ளதோ
நீதி யாக நினைந்ததெல் லாமுடித்
தோதி யானவ னுற்றன னென்பவே.

791 ஆம தாதலி லாரிடர் விண்ணுளோர்
நேமி மானிட ரெண்ண நிகழ்த்தலாற்
காம பீடமெ னும்பெயர் காசினிக்
கேம மாக வினிதுறும் மந்நகர்.

792 செயிரி லாத சிவபுர மென்றுளோர்
பெயரு லாவப் பிறங்கிடு மன்னது
மயர்வி லாம லறைகுவன் கேண்மினோ
முயலு மாதவ முற்றுமுனி விர்காள்.

793 எண்ணி லாவு தயில மியைந்தென
மண்ணி லாவெவ் வயினுமெக் காலையும்
அண்ண லாதி யகில சராசரத்
துண்ணி லாவி யுறைந்திடு முண்மையால்.

---

790. பேதியாது—வேறுபாடு அடையாது. ஓதியான்-(நூல்களைக் கற்று) ஞானம் (சொல் அளவில்) பெற்றவன். நவம் உற்றனன்-புதுமை எய்தினன். என்ப-அசை.

791. ஆரிடர்-முனிவர். எண்ணம்-விருப்பம். நிகழ்த்தலால்—நிறைவேற்றுவதால். ஆரிடர் முதலானவர்களின் விருப்பத்தை (காமம்) நிறைவேற்றுவதால் (காஞ்சி) காமபீடம் என்றும் பெயர் பெறும்.

792. செயிர்-குற்றம். ‘செயிரறச் செப்பிய திறமும் கேட்டு’ (மணிமேகலை 27. 240). உலாவ-எங்கும் வியாபிக்க. ‘ஓதிய உடம்பு தோறும் உயிர் என உலாயதன்றே’ (இராமாவதாரம் பால. ஆற்று). மயர்வு-மயக்கம். ‘மயர்வற மதிநலம் அருளினன்’ (திருவாய்மொழி 1).

793. எள்நிலாவு தயிலம் இயைந்தென எனப்பிரிக்க. திலத்திலிருந்து (எள்) எடுக்கப்படுவது தயிலம். எள்ளிலிருந்து எடுக்கப்படுவது எண்ணெய். வடமொழிக்கும் தென்மொழிக்கும் உள்ள ஒருமைப்பாட்டைக் காண்க. மண்ணிலா-மண்ணில் மாத்திரமா? எவ்வயினும்-எல்லா இடங்களிலும். அண்ணல் ஆதி—சிவபிரான். அகில-எல்லா. சராசரத்து - இயங்கும்பொருளிலும் இயங்காப் பொருளிலும்.

794 அகில பூரண ளுகிலு மெம்பிரான்
மகித லத்தில் வரம்பெறு புண்ணியத்
தகுதி சேருந் தலங்கள் இலங்கவே
மிகுதி சேர்ரவி விளங்குவ னென்பவே.

795 முரசு லாவ முழுதுல காள்பவ
னுரிமை செய்வ னொருபதி யங்கதி
லரையன் மாமனை யன்புறு மீதிலும்
புரிவு கூர்தரு மந்தப் புரந்தனில்,

796 அன்ன தென்ன வகிலமு மாயவன்
மன்னு புண்ணிய வண்பதி தன்னிலும்
இன்ன காஞ்சியி லெய்து மிதனிலு
மின்னு மந்தரு வேதியி லெய்துமால்.

797 வேதி தன்னிலு மிக்கு விளங்கிடு
மாதி வேதவ ருங்கலை யாவுமாய்ப்
பூத பேத புவனம் பிறந்திடுஞ்
சூத நீழற் சுடர்விடு சோதியாய்.

---

794. மகிதலம்-பூமி. வரம்பெறு-உயர்வுபெற்ற. இலங்க-எங்கும் புலப்பட. மிகுதி-பொலிவு.

795—796. அரசனுக்கு அரண்மனையிடத்தில் ஆசை அதிகம். அதனைவிட அந்தப்புரத்தில் அன்பு அதிகம். அதுபோல் சிவபிரானுக்குக் காஞ்சியின்பால் விருப்பம் அதிகம். காஞ்சிநகரத்தைவிட மாமரத் திண்ணையில் ஆசை அதிகம்.

உலகு ஆள்பவன் - அரசன். ஒருபதி - ஒரு நகரத்தை. உரிமை செய்வன் – தலைநகராகக் கொள்வான். அதில் - அந்த நகரத்தைவிட, மாமனை - அரண்மனை, ஈதிலும்-இதைவிட, அந்தப் புரத்தில் பரிவு கூறும் என மாற்றுக. 796. அகிலமும் ஆயவன்-எல்லாவுலகாகவும் இருப்பவன். வண்பதி-க்ஷேத்திரங்கள். மின்னும் அம் தருவேதி எனப் பிரிக்க. தரு-மாமரம். வேதி-திண்ணை. 'உத்தர வேதிசெய் என்று உரையணங்கு இறை உரைத்தான்' (மெய்விரதமான்மியம் 8).

797. வேதிதன்னிலும்-மேடையை விட. வேதங்களாய், அவற்றின் கலைகளாய் இருந்து. பூதங்களும், அவற்றின் பேதங்களும் பிறப்பதற்கு இடமாகிய சூதம். (மாமரம்) நீழல்-நிழல்;

798 பரிவு சேரப் பராபர மாமுமை
யரண மாகிய வந்தப் புரமது
தருண சோம தரனவ் விடைமிகப்
புரண மார்நலம் புதுமைப் படுவதோ,

799 மாது முன்க யிலைத்திரு மாமலை
மீது நாதன் விழித்துணை மூடுமப்
போது தீர்வு புரியப் படுமதற்
கீது மாதல மென்றரன் சொற்றநாள்.

800 ஆற்றல் சாலு மகில கலையுட
னேற்ற மாக வினிதவண் மேவுதும்
போற்று நீயெனப் பூசை புரிந்தன
ளூற்ற மாக வுமையவ ளங்ஙனம்.

சிவபுரம்

801 ஆன்ற மாமறை யாம்பர மூலத்திற்
பூன்ற மான பொலிவு விளங்கிடத்
தோன்றி யென்றுஞ் சுடர்விடு சோதியாய்
ஏன்று கொண்டவ ணெய்தின ளென்பவே.

---

798. பரிவுசேர-அன்பு அதிகரிக்க. பராபரமாம் உமை-எல்லாவற்றிற்கும் மேலே இருக்கும் உமாதேவி. அரணம்-காப்பு. தருணம்-இளமை. சோமதரன்-சந்திரனைத் தரித்தவன். சோமன்-சந்திரன். 'பாதிச்சோமன்புனையப் பற்றுது என்றோ எமது-மீதிச்சோமன்பறிக்க வேண்டினீர்' (சுந்தரர் வேடுபறி 114). புரணம்-நிரம்பிய. நலம்-அன்பு. 'நலங்கனிந்து உருகி நின்றாள் நாமவேல் காமர்கண்ணாள்' (சிந்தாமணி-சுரமஞ்சரி 66) புதுமைப்படுவதோ-புதுமையின் பாற்பட்டதா?

799. மாது-உமாதேவி. நாதன்-சிவபிரான் தீர்வுபுரிய-பிராயசித்தமாக.

800. அகிலகலையுடன்-எல்லா அம்சத்துடனும். மேவுதும்-தங்கி இருப்போம். ஊற்றம் ஆக-உறுதியுடன்.

801. மறை ஆம்பரம் – வேதமாகிய மாமரம். 'பன்னுமெய்ப் பொருட் பிரம்மாம் வேதம்-ஒற்றைமா எனப் பணைத்தது கண்டீர்-அன்னதற்கிறையாகிய யாமே-இலிங்கமாய் அதன் அடித்தலத் துறைகேம்' (சிவ. காஞ்சி. திருவேகம்பம் 26) பூன்றம்-பூரணம். அவண்-அவ்விடம்.

802 அம்மை மேவுமந் தப்புர மாதலான்
மும்மை யாமுல கத்தினு முந்துற
நன்மை யாள்பவ னண்ணி யுறைதலாற்
செம்மை சேருஞ் சிவபுர மென்பரால்.

### விண்டுபுரம்

#### வேறு

803 மண்டலம திற்பெரிய வன்பதி யதற்கே
விண்டுபுர மென்றுமொரு மெய்ப்பெயர் விளங்கும்
பண்டகில முஞ்செறி பரம்பரை திரும்பக்
கண்டவை பிறந்தடை வொடுங்குமொரு கற்பம்.

804 இப்பதி யொழிந்தெவையு மீறுபட நீடு
மப்பொழுது சூதநிழ லாளுமொரு நாதன்
மெய்ப்புவன முற்பட விதித்திட மதித்தான்
றிப்பிய நலப்படொரு தெய்வத வணங்கை.

805 அன்னவளி யாவதும ளித்திடவ ரிப்பேர்
மன்னுகட வுட்டனை மதித்திறைவ னீயே
யின்னகரி னுக்கிறைவ னிப்பதி யிருந்தே
பன்னுபுவ னத்தொகைப ரித்திடுதி யென்றான்.

---

802. அந்தப்புரம்-அரசி இருக்கை. 'இவற்கு முகிலூர்தி-அந்தப்புரத்தில் ஆராமம் அந்தப்புரத்துக்கு ஆராமம்'. (பாரதம். திரௌபதி 41).

803. அகிலமும்-யாவும். பரம்பரை - வமிசத் தொடர்பு. கண்டு-அருட்கண்ணாற் பார்த்து. அடைவு-முறைப்படி. ஒடுங்கும்-மலத்தில் ஒடுங்கும். 'ஒடுங்கி மலத்துளதாம்' (சிவ. போதம் 1) 'அதுதான் எப்படி யென்றக்கால் அநாதியாம் சீவர் எல்லாம். பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும் அவ்வியங் தன்னில்-இது கால தத்துவப்பேர் ஈசனுட் பார்வையாலே முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே' என்று கைவல்யம் பேசும். கைவல்யம் 'உட்பார்வை' என்று கூறிற்று. புராணம் 'கண்டு' என்று கூறிற்று.

804. ஈறுபட-முடிவு அடைய. விதித்திட-படைக்க. மதித்தான்-சங்கற்பத்தாற் படைத்தான். திப்பியம்-தெய்வத் தன்மை. அணங்கை மதித்தான் என மாற்றுக.

805. அளித்திட-பாதுகாக்க. மதித்து (திருமாலையும்)

806 அற்றையது நாண்முத லரிக்கவில சத்தி
பெற்றிபடு மூலதல மிப்பதி பிரானுர்
சொற்றது தவாதுசெய்,தொழிற்கிறைவன் மாலென்
றுற்றுமறை யாவுமிக வோலமிடு மன்றே.

807 நேசமுடன் மாயனை நினைத்தலரு ளோன்மு
ஞசில்பரி மேத மகமாயிர மியற்றக்
காசியிடை யெண்ணு மதுகாலை யகல்வானத்
தோசைபடு மோருரை யுதித்ததவ ணன்றே.

808 ஆயிரமி யாகமிது காசியி லமைக்குஞ்
சேயபல னுண்டொரு மகந்தெளி வினுர்க்குத்
தாயவட வம்புரி தலத்தினிடை யாற்றிற்
றூயதென வவ்வுரை துணிந்தய னெழுந்தான்.

809 இத்தல மடைந்துபரி மேதையெனி யாக
மத்திகிரி யுத்தரமென் வேதியி லமைத்தான்
கைத்திகிரி யோனஃது காலையிலும் வந்தே
நித்தனரு ளாலய னினைத்தது முடித்தான்.

---

படைத்து. இப்பதி-இத்தலம். புவனத்தொகை-உலகக் கூட்டங்களை. பரித்திடுதி-சுமப்பாயாக. (பாதுகாத்தலைச் செய்க) பார் பரித்த சேடன்யான் (பாகவதம். விபூதிஉரைத்த அத்தியாயம் 24).

806. அற்றை (அது) நாள்முதல்-அன்றைய நாள் தொடங்கி. அது, பகுதிப் பொருள் விகுதி. பிரானுர்-சிவபிரான். இறைவன் மால் என்று மறை ஓலமிடும்-பரம்பொருள் திருமால் என்று வேதம் உரக்கக் கூறும்.

807. அலர்உளோன்-மலரில் வாழும் பிரமன்.

808. சேயபலன்-தூரத்தில் வழங்கும்பயன். தாயவள் தவம் புரி எனப்பிரிக்க. தாய்-உமாதேவி. ஆகாயவாணி கூறியதை மெய் விரதமான்யம் 'எத்திசை நிலனும் எய்து இருந்தவம் செய்த அந் நாள்-சத்திய விரதம் செய்வாய் என்ற தோர் உரையின் சார்வால்' என்று சுருக்கிக் கூறும். உரையாசிரியர் 'சத்யவிரத க்ஷேத்திரத்தில் செய்யப்படும் ஓர் அஸ்வமேதயாகம் ஆயிரம் அஸ்வ மேதத்தின் பலனைத்தரும்' என்று விளக்கி உள்ளார்.

809. பரிமேதை என்யாகம் எனப்பிரிக்க. பரிமேதை-அஸ்வமேதம். உத்தரம் என்வேதி-உத்தரவேதி. (என்-என்று கூறப்படு

## பிரமபுரம்

810 அன்றுமுதல் விண்டுபுர மானபெயர் மேவும்
பின்றைநெறி யொன்றுபிர மன்புரம தென்று
மொன்றுளது நாமமது ரைத்திடுது மேனுள்
நன்றிபுரி வேதன்முனம் நற்பதி யிதன்கண்.

811 பற்றொடு சிருட்டி செய் பதத்தினை நினைத்தே
கற்றமறை சொற்றபடி கச்சப தலத்தே
யுற்றரனை யர்ச்சனைசெய் துட்டெளி வினிற்சீர்
பெற்றவதி பத்திபுரி பெட்பொடு சரித்தான்.

812 சிந்தனை முடிப்பது சிவன்செய லெனக்கா
மந்தரு தலத்திடை வசிப்பது மதித்தே
யெந்தையவ னுற்றனதி யற்கையெவ னென்னச்
சந்ததம் விரித்திடு தலுக்குதவு கென்றான்.

813 அருள்குலவு மிப்பதி யருத்திபெற நாளும்
பிரமபுர மென்றொரு பெயர்ப்பட நடாவும்
வரமுமுன தருளுமொரு மைப்படவ ளித்தாள்
பரமவென வப்படி பணித்தன னிருந்தான்.

---

கின்ற). திகிரியோன்-சக்கரம் ஏந்தியவன். (திருமால்) 'தீதற விளங்கிய திகிரியோனே. (நற்றிணை 1)

810. புரமான பெயர் என்பதில் ஆன என்பது, முதல் வேற்றுமையின் சொல்லுருபு. ஒன்று உளது நாமம் என்பதை, நாமம் ஒன்று உளது என மாற்றுக. உரைத்திடுதும்-சொல்வோம்.

811. பதம்-பதவி. கச்சபதலம்-கச்சபேச்வரம். அதிபக்தி-மிக்க பக்தி- பெட்பொடு-விருப்பத்துடன். பிணையும் பேணும் பெட்பின் பொருள என்ற (சொல்) சூத்திரத்திற்குச் சேனாவரையர் வரைந்தவுரையின் கட்டளையால் இங்ஙனம் பொருள் கூறப் பட்டது. அது வந்தவழி கண்டு கொள்க என்றார். வந்தவழி இங்கே காண்க,

812. காமம் தருதலம்-விருப்பத்தை வழங்கும் க்ஷேத்திரம். இயற்கை-விருப்பம். விரித்தலுக்கு-படைப்பதற்கு.

813, அருத்தி-விருப்பம். இப்பதி பிரமபுரம் என்று பெயர் பெறவும், யான் உனது திருவருள் பெறவும் அளித்தருள்க என்றான். நடாவும்-நடக்கின்ற. பணித்தனன்-கொடுத்தருளினான்.

## மும்மூர்த்திபுரம்

814 ஆதியய னேவரம தாய்நிறுவ லாலே
யீதுபிர மாபுரமெ னப்பெயர் விளங்கும்
மூதறிவு மேவினர்மும் மூர்த்திபுர மென்று
மோதுவர் புராதன முரைத்துமது கேண்மோ.

815 யாவதுமழிந் திறுதி யெய்துமொரு நாளின்
மாவினொரு மூலநிறை வள்ளலரு ளாலே
தேவிலளி தாமுதல்வி செவ்விபெற நல்கப்
பூவினனன் மால் முதல்வர் புங்கவ ரணைந்தார்.

816 ஆயவரை யன்புசெய் தருட்படிவ மாமத்
தூயவள் மதித்தவர் தொழிற்பட நடாவு
நாயகம ளித்தகில சத்திபட நாளு
நேயமுட னிப்பதிநி லாவியருள் கூர்மின்.

817 வாலிதுநும் மெய்த்தொழில் வருத்தனை குலாவுங்
காலனை யுதைக்குமிறை காணியென வேயிப்
பாலுறைவி ரித்தகைய பண்பிலிது மூதூர்
மூலநல முற்றதிரி மூர்த்திபுர மென்றாள்.

---

814. வரமதாய்-மேலானதாக. மூதறிவு-பழமையான அறிவு. புராதனம்-பழைய வரலாறு.

815. லளிதா-லலிதாதேவி· லலிதையை லளிதா என்று சிவ ஞான முனிவரும் கூறியுள்ளார். 'இலங்கு பூண்முலை இலளிதைப் பிராட்டி' என்பர். (திருவேகம்பப்படலம். 6) பூவினன் நன்மால்-பிரமன் திருமால். புங்கவர்-சிறந்தவர். அணைந்தார்-தோன்றினர்.

816. அருட்படிவமாம்-சிவத்தின் திருவருள் வடிவமான. 'அருளது சத்தியாகும் அரன் தனக்கு: அருளையின்றித்-தெருள் சிவம் இல்லை: அந்தச் சிவம் இன்றிச் சத்தியில்லை'. (சிவஞான சித்தியார். 229) தொழில்பட-முத்தொழில் உண்டாக. நாயகம்-தலைமை. அகில சத்தி·எல்லாவிதமான ஆற்றலும்.

817. நும் மெய்த் தொழில் வாலிது. வாலிது - தூய்மை யானது. வருத்தனை குலாவும் காலன்-வளர்ச்சி நிரம்பிய யமன். இறைகாணி என-இறைவன் வழங்கிய உரிமை.

### தபோமயம்

818 என்றுபரை சொற்றிட வியற்கைநல மேயாய்
நின்றவர் திருப்பதி யதிற்குலவி நேர்வார்
வென்றிபெறு மப்பெயர் விளங்கியது மூதூர்
நன்றிபெறு மற்றுமொர் தபோமயமெ னும்மம்.

819 தற்புருட கற்பமது தன்னிலயன் அந்நாள்
பிற்பட விடிந்தொளி பிறங்குபொழு தன்னேன்
விற்புருவ நெற்றிநடு விற்புகழ் விளங்கச்
சிற்பரனு ருப்படுசி றப்பினை நினைந்தான்.

### வேறு

820 அகில மானபுவி சலில பாவனையி
லமிழமூழ் கியது நெடிதெனு
விகலி லாம லவைபுரி தனுடியிறை
புருடமா மனுவை யெண்ணியே
தகுதி யேசுருதி நெறிதவா துபுகழ்
தவமா யாவது மியற்றினு
னுகவை யாகியவவ் வுருவோ டேபரனு
முற்றனன் கருணை முற்றுவான்.

---

818. திருப்பதியதில்-சிறந்த காஞ்சிபுரத்தில். நேர்வார்-தங்கி இருக்க உடன்படுவார் ஆயினர். நன்றிபெறும்-சிறப்பாகப் பெற்றிருக்கும்.

819. தற்புருடகற்பம்-தத்புருஷன் பெயரால் விளங்கிய கல்பம். சிவபிரானின் ஐந்து திருமுகங்களில் தற்புருஷம் பொன் நிறம் உள்ளதாய்க் கிழக்குத் திசை நோக்கி இருக்கும். அந்நாள் பிற்பட-அந்நாளின் (இரவின்) பின்பகுதி தோன்ற. நெற்றி நடுவில்-புருவமத்தியில் சிற்பரன்-சிவபிரான்.

820. சலில பாவனையில்-பிரளயத் தண்ணீரின் சங்கற்பத்தால். புரிதல்-படைத்தல். புருடமாமனு-தற்புருஷசூக்தம் என்ற மந்திரத்தை. தவம் யாவதும்-எல்லாத் தவங்களையும். உகவை-விருப்பம். பரன்-சிவபிரான்.

821 பொருவி லாததவ முற்றியே யெமது
புருடமா மனுவு சொற்றுளாய்
கருதி யேயுனது செயல தானவியல்
கடிது கூடுமென வற்றைநாள்
வரைவி லாதுபல படிவ கோடிகள்
வகுத்து ளானயன் வகுத்தலுந்
தரணி மீதி லணுமுழுது மேன்மைநெறி
தக்கவா னுருவு தொக்கதே.

822 திருவு லாவிய பெண்ணுரு வுருதவகை
தேறி மாறுபடு செய்கையால்
மருவி யேபரை பிரானொ டொன்றியுறை
வடிவு நாடுதவ முறுதலு
முருவு கூரரிவை பிரிவு ருவடிவி
னுடன ணைந்துபர னுடையதன்
றருண மாமிடது புறனை நாடவுமை
தனது நாலிலொரு பிரிவதாய்.

823 ஓரணங் கினிய பத்தி ரைப்பெய
ருளாளடைந் தனளவ் வொண்ணுதற்
காரணங் குலவு கருணையால் தனது
கனகமா முருவை யலருளோ
னரணங் கொடுபிறித்தலுமவ னுமா
டன்மே வுசத ரூபையும்
பாரடைந் தனைய வாண்மை பெண்மை
யிருவடி வமல்கி நிலைபட்டதே.

---

821. சொற்றுளாய்-துதித்துள்ளாய். கடிது கூடும்-விரைவில் நிறைவேறும். படிவகோடிகள்-உருவத்தொகைகள். வகுத்துளான்-பிரமன். அணு முழுவதும் வானகத்தில் கூடிற்று.

822. பெண்உரு உருத வகை-பெண்ணின் வயிற்றில் தோன்றாத தன்மை. பரை-சக்தி. பிரான்-சிவன். ஒன்றிஉறைவடிவம்-அர்த்தநாரீஸ்வரக் கோலம். நாடுதவம்-விரும்பிச் (பிரமன்) செய்த தவம்.

823. உமாதேவியின் நான்கு அம்சத்தில் ஒரு அம்சமாகப் பத்திரை வந்தாள். அவ்வுருவைப் பிரமன் வேதத்தைக் கொண்டு பிரித்தான். சதரூபை பூமியில் வந்தாற் போல இரண்டு வடி-

824 பங்க யன்புரி தவப்பயன் குலவு
பண்பி னுலுமை பரிவினு
லிங்கணேந் துதவ முயனுநா ளிருவர்
திருவுநா மகளு மெய்தியே
சங்கை யின்றி மிகுதவ முயன்று
தமதலே வரன்புசெ றிதலினுமித்
துங்க முந்து தவமயபு ரப்பெயர்
துடங்கு மிப்பதி துலங்கவே,

### சகலசித்திபுரம்

825 அகில சித்திதர புரமெனப் பெயரு
மறைவரிப் பதியை யறிவுளோர்
உகவையிற் பரவி முனிவர் பற்பலர்மு
னுபநி டத்திலணி மாதியாஞ்
சகல சித்திகளு மணுகி நித்தமுறு
தலேமைபெற் றனரிவ் விடையிலே
விகல மற்று முதிர்சித்த வர்க்கரள
விலரி ருப்பரிடை விடுகிலார்.

---

வங்கள் அங்கே வெளிப்பட்டன. அவ்வடிவங்கள் ஆண்மை பெண்மையாக இருந்தன.

'உற்றதண் மலரோன் மெய்யினேர் கூற்றின் உதித்தனள் எழில்சதருபை-மற்றொரு கூற்றின் உயர் சுவாயம்பு மனுவெனும் மன்னவன் பிறந்தான். (பாகவதம். சனகாதியர் தோற்றம். 12)

824. பங்கயன்-பிரமன். திருவும் நாமகளும் உமையின் அருளால் தங்கள் தலேவர்களின் அன்பைப் பெற்றனர். அதனுலும் தபோமயம் என்ற பெயரை அப்பதி பெற்றது.

தமதலேவர்-தங்கள் கணவன்மார்கள்: திருமால், பிரமன். அன்புசெறிதலின்-அன்பை மிகுதியாகப் பெற்றதனுல், காஞ்சி புரம் தபோமயம் என்று பெயர் பெற்றதற்கு மற்றொரு காரணத்தைக் கூறியுள்ளார்.

825. உகவை-விருப்பம். உபநிடதம் என்பதே பெருவழக்கு. ஆசிரியர் உபநிஷத் என்ற சொல்லே உபநிடத் என்றே கையாண்டார். மகாகவி பாரதியாரும் 'பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே' என்று பகர்ந்தமை கருதுக. இவ்விடை—இவ்விடம். சித்த வர்க்கர்—சித்தர் கூட்டத்தார்.

**வேறு**

826 மருவினரொன் பதிமர்பெருஞ் சித்தரவ
ரித்தலதெய் வத்தைப் போற்றிக்
கருதுநவ நாதசித்த ரெனும் பெருமை
பெற்றனரோர் கதையுங் கேண்மின்
அரதனமா புரியெனுமப் பெரும்பதியி
னிரவிகுலத் தரசர் கோமான்
பெருமைபெறு மிராச்சியவர்த் தனனெனவே
கவினுமொரு பெயரு முள்ளான்.

827 அன்னவன்கோ தாவிரிநீர்க் கரைப்பாங்கர்
தினகரனை யாற்றல் சாலப்
பன்னிநெடு நாளரிய தவமுழந்து
நோற்றிடலும் பானு வானே
னின்னருளா லணிமாதி சித்தியவன்
வேண்டிடலு மீந்தா னீய்ந்து
நன்னியமம் நீயகலி லவையகலு
மென்றுமொன்று நவின்று சென்றான்.

828 அத்தகைய சித்தியெல்லாம் பெற்றுடையோ
னரைக்கணத்தி னவனி யாவு
முய்த்துநெடுந் தேர்நடவிப் பேராணை
நேமிசெல வொழுகு நாளில்
வித்தகநூ லறிவலியாற் பேரகந்தை
மீப்படவே விடுத்தா னேன்பும்
பத்திமையு மொழுக்கமுமற் றியாவரையு
மிகழுநெறி படர்ந்தா னன்றே.

---

826. நவநாதசித்தர், பழைய இலக்கியங்களிற் காணப்படா விடினும் சித்தர் நூல்களிற் பேசப்படுகின்றனர். 'ஞானகருணைகர முகம் கண்ட போதிலே நவநாத சித்தர்களுமுன்-நட்பினை விரும்புவார்'என்று தாயுமானவர் மௌனகுருவணக்கத்திற் கூறியுள்ளார். 'சித்தர் ஒன்பதின்மர். சத்தியநாதர், சகோதரநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் (பொருட்டொகைநிகண்டு. 770). இரவிகுலம்-சூரியவம்சம்.

827. தினகரன்-சூரியன். பானு-சூரியன். நியமம்-ஆசாரம் (ஒழுக்கம்).

828. உய்த்து-(உலகத்தார்க்குத் தன்னுடைய உயர்வை

829 இரவிபுகல் சூளறவால் அணிமாதி
யனையனைநொந் திகழ்ந்து போய
வரிசைபெறு பேரரசும் பகைஞர்கொள
வரசனிவன் வறிய னானா
னரிதரிது பெருந்திருவுற் றிடுபொழுது
மகந்தையிலா தவனி காத்தல்
கிரணமதி நதிமுடியோன் றனதருள்பெற்
றவர்க்கலது கிடைத்தி டாதே.

830 அவ்வரச னாசானும் வசிட்டனைநேர்ந்
தனையசெய லறைய வன்னான்
செவ்விதிசெய் திலையுனது வினைவலியா
லின்னுமொரு செயனீ செய்வாய்
எவ்வகையு மெண்ணியது தருமுமையாள்
காஞ்சியத னிடைநீ சென்று
வெவ்வினைதீர் தரத்தவமே யாற்றுதியச்
சித்தியெல்லா மேவு மென்றான்.

831 கடைப்பிடித்தம் மொழிமன்ன னுயர்காஞ்சிப்
பதிய ணுகிக் காம கோட்டத்
திடைப்பொருவிற் பராபரமாந் தெய்வவணங்
கினைப்பரவி யேத்த லோடுஞ்
சுடர்ப்படிவ முறத்தோன்றி யம்மையணி
மாதிசித்தித் தொகையை யெல்லாந்
திடப்படவே யெய்துதியென் றருள்புரிந்தா
ளவனுமவை சேர்ந்தா னன்றே.

---

தெரிவித்து. 'உற்றது எல்லாம், அவ்வழி அரசர்க்கு உய்த்தார்க்கு அரசனும் அவலம் எய்தி' (சிந்தாமணி. பதுமை 242) ஆணை-நேமி-ஆக்கினை சக்கரம். (கட்டளை) அறி-அறிவு. 'அறிகொன்று அறியான் எனினும்' (திருக்குறள்) வலி-வன்மை. மீப்பட-அதிகரிக்க. நோன்பு-விரதம்.

829. சூளுறவால்-ஆணையால். வரிசை-உயர்வு. பெருந்திருவுற்றிடு பொழுது அகந்தையிலாது அவனிகாத்தல் அரிது. மதிநதி முடியோன் - சந்திரனையும் கங்கையையும் தரித்த சிவபிரான். அகந்தை நீங்கவேண்டும் எனில் இறைவன் திருவருளை நாடவேண்டும் என்னும் உயரிய தத்துவம் பேசப்பட்டுள்ளது.

830. நேர்ந்து-அடைந்து. வினைவலியால் செவ்விதி செய்திலை என்று மன்னன் மனம் நோவாமற் பேசிய வசிட்டரின் நயத்தக்க நாகரிகம் கருதத் தக்கது. தீர்தர-நீங்க.

831. கடைப்பிடித்து-உறுதியாகப்பற்றி. பராபரமாம்-

கன்னிகரப்பீடம்

832 சித்தியெனு மத்தொகையை யெய்தியவ
ரெய்துமவர் திரிகா லத்துந்
தத்துவமித் தலத்திலென்கை சரதமத
ஞலிதுபேர் சான்ற தாகும்
புத்திளமைக் கன்னிகைகாப் பெனவுமொரு
பெயருளது புகலக் கேண்மின்
அத்துவசுத் திப்பெரும்பே றுற்றவரே
கேட்கலுறும் அளவைத் தாமால்.

833 அந்தரவா னத்தவர்பல் லாண்டிசைப்ப
முனிவர்மறை யறிவிற் போற்ற
விந்திரன் மால் அயன்முதலோர் தமதுகுறை
தீர்த்திடுமா றெண்ணி யேற்ற
மந்தரமா மலைமீது நமதுசிரு
ரிருவர்பெரு மகிழ்ச்சி கூரச்
சந்திரசே கரப்பெருமா னிமையமக
டனேடுந் தருக்கு நாளில்.

---

மேன்மையான பொருள் யாவற்றினும் மேலான, சுடர்ப்படிவம்-சூரியனைப் போன்ற திருமேனி. அம்மையின் மேனியை உதயசூரியனின் ஒளிக்குச் சமமாகக் கூறுவர் 'உத்யத்-பானு-ஸஹஸ்ர-ஆபா' (உதிக்கும் கதிரவனுக்கு ஒப்பானவள்) லலிதா ஸஹஸ்ரநாமம்.

832. எய்தியவர்-முன்பே சித்திகளைப் பெற்றவர். எய்துமவர்-இனிமேல் பெறுபவர்கள். தத்துவம்-உண்மை. சரதம்-உறுதி. பேர்சான்றது-பெருமை நிரம்பியது. புத்திளமைக்கன்னி-புதுமையும் இளமையும் பெற்ற கன்னி. அத்துவசுத்தி-அத்துவா சுத்தி. அத்துவா-வழி. மந்திரம் பதம் வன்னம் என்னும் சொற்பிரபஞ்சத்தாலும், புவனம், தத்துவம், கலை என்னும் பொருட்பிரபஞ்சத்தானும் ஆன்மாவைச் சேர்ந்த அழுக்கை நீக்கிச் சுத்தி செய்தல் அத்துவசுத்தி. 'அழிவிலாக் கிரியையினுன் ஆதல்' சத்திமத்தானுதல், அத்துவா சுத்திபண்ணி மலம் அகற்றி' (சிவஞான சித்தியார். 558) அளவைத்து-பெருமை உடையது.

833. மறையறிவு-வேதஞானம். சிறுர் இருவர் - விநாயகப்பிரான், முருகப்பிரான். தருக்கும் நாளில்-பூரித்திருந்த தினத்தில். இறைவனை அன்பர்கள் அவரவர்கள் இயல்புக் கேற்பப் போற்றுவதைக் கூறும் திறம் பாராட்டற்குரியது.

834 சாமளையா முமையையரன் முறுவலித்துக்
காளியெனச் சாற்ற லோடு
நாமுறுமோர் பெருநாணி னுடலொடுங்கிச்
சிறுதுயரின் நடாவ நாடிச்
சோமமதா முறப்படநீ சொற்றிலையுன்
கவினுருவு தொடப்பெறு ருதே
னேமவுட லேமவண மெய்துவனென்
றேமகிரி யினைச்சேர்ந் தற்ருள்.

835 உரிமைபெறு வரையதன்மேற் றருநன்னீர்
புனிதமுற வுமையா ளாடித்
திருவுருவில் வெண்ணீறு பொலிதரச்செந்
தீக்கடவுட் டிசைநான் கோங்க
விருவிழியு மிரவியொளி யுற்ருெளிரச்
சிவனைமனத் தெண்ணி நோற்ரு
ளரனுமிகுத் தொருபெரிய திருவிளையாட்
டாகவுன்னி யங்க னுற்ருன்.

836 ஞானவிழி யுமைநோக்கிப் பரவுதலுந்
தழீஇக்கொடுநன் னலஞ்சொற் றுன்ரு
லானசெயல் அனைத்துமுயிர்த் தொகை பிழைக்கு
மாறுகுறித் தன்ருே வென்ன
மானவள்பைம் புறநீவத் திருமேனிக்
கருமையொரு வடிவ மாகிச்
சூனிலவு கருமுகில்போற் சண்டிகையென்
பேரணங்காய்த் தோன்றிற் றன்றே.

---

834, சாமளையாம்உமை-கரியநிறம் பெற்ற உமை. காளி-காள நிறம் பெற்றவள். (காளம்-கருப்பு) நாம்-அச்சம். சோமம் மது ஆமுற-சோமம் என்று கூறப்படும் மதுவின் மயக்கம் உண்டாக. சொற்றிலை-கூறவில்லை. (அன்போடு பேசவில்லை) ஏமவுடல்-பொன் உடல். ஏமவணம்-பொன்நிறம். ஏமகிரி–பொன்மலை (மேடு).

835. நீர்புனிதமுற - தீர்த்தம்தூய்மையடைய. மற்றவர்கள் புனலால் தூய்மைபெறுவர். இங்கு அம்மையால் குளம் தீர்த்தம் ஆக மாறிற்று. ஐந்து தீ பேசப்படுகிறது. நான்கு புறத்தில் உள்ள தீயும் விண்ணில் உள்ள சூரியன் வெயிலும் சேர்ந்து ஐந்து தீ ஆகிறது.

836. நலம் சொற்று-மங்கல வார்த்தையைக் கூறி.

837 அன்னவடி வாமணங்கை யிருவருங்கண்
ணுற்றவணீ யணுகி யாங்கு
மன்னுபிசி தாசனரைக் கொலைபுரிந்தே
யுலகாணி வடபான் மேவிக்
கன்னிதிருக் காஞ்சிநகர் புரந்துறைவாய்
நாடோறுங் கடிதி னென்றார்
நன்னியம மெனவணங்கி யப்புரியே
புரந்துறையு நாளு நாளும்.

துண்டீரபுரம்

838 கருணைபுரி பெருந்திறல்சேர் கன்னிபுரப்
பதனாலே கன்னி காப்பென்
றுரியதொரு பெயர்விளங்குந் துண்டீர
புரமெனவு மொருபேர் மல்குந்
திருமலையா கியவெள்ளி யங்கிரிமேற்
கவின்குலவித் திகழா நின்ற
தரணிபல கோடியுதித் தெனக்கிரண
மணிதிகழ்ந்தானத் தரணி தன்னில்.

839 ஈசனிய லேவல்புரி கணநாதன்
றுண்டீர னிமயப் பாவை
நேசமுறு மாலதியென் சேடியிவர்
தமதுமுன்னை நீர்மை யாலே
பாசமொடு காமநுகர் தருபார்வை
கூருதலும் பரம னோக்கி
யூசலெனப் புவனியிடைப் பிறந்திறந்து
காமநுகர்ந் துறைதி ரென்றான்.

---

மானவள்-பெருமைக்குரிய பராசக்தி. பைம்புறம்-பசுமை நிறம் பெற்ற உடல். தேவியின் கருமையானது சண்டிகை என்னும் பெயருடைய பெண்ணாக மாறிற்று.

837. பிசிதாசனர்-இறைச்சியை உண்போர். (அரக்கர்) பிசித+அசனர்—பிசிதாசனர். பிசிதம் - இறைச்சி. 'பிறவியிற் பெரிய தோற்றப் பிசிதம் உண்டு உழலும் பெற்றி' (கம்ப நாடகம். நாகபாசம்) அசனம் - உணவு. அசனமிடுவார்கள்மனை (திருப் புகழ்) உலகாணித் தீர்த்தம். நியமம்-கட்டளை.

838. புரப்பதனால்-பாதுகாப்பதால். மல்கும்-பிரசித்தமாகப் பேசப்படும். கவின்-அழகு. தரணி-சூரியன். தரணி-பூமி.

839. இமயப்பாவை உமாதேவி. முன்னை நீர்மையால்-பழம்

840 அய்யனஃது ரைத்தலுமே வெருவரலுற்
றுளநடுங்கி யவலித் துங்கள்
செய்யதிரு வடிபிரியி லுய்யுநெறி
படருகிலோஞ் சினப்பா யல்லை
பையவெம தரியபிழை பொறுத்தியெனப்
பராவுதலும் பரிவு கூர்ந்து
மெய்யனெம திடதுபுற வடிவாகுங்
காஞ்சிநகர் மேவு மென்றான்.

841 காஞ்சியெனக் கயிலையெனப் பேதமிலை
யெமக்கிதிலுங் கனம தான
வாஞ்சையுள தவ்விடைநீர் அறிதிரவ
ணுற்பவிக்கின் மரிக்கின் மேன்மை
யாஞ்சரத மேகுமென்ன நலமென்றே
போற்றிசெய் தவனன் றட்டோர்
பூஞ்சிகரப் பதியரசன் புண்ணியசீ
லன்றனது புதல்வ னானான்.

842 தணவாம லவனுதித்த பொழுதுபெருந்
தகையாவான் றன்னை நாடிக்
கணநாதன் றுண்டீர னையனிவ
னென்னவுள்ளங் களித்து மேன்மைக்
குணராசி தனையெண்ணித் துண்டீர
னெனுமொருபேர் கொடுத்தா னன்னோன்
பணவாள ராவணியும் பிரானருள்போல்
வளர்ந்துகவின் படைத்தா னன்றே.

---

பிறப்பின் தன்மையால். நுகர்தரு—அனுபவிக்கவேண்டும் என்னும் விருப்பத்தைத்தருகின்ற. கூருதல்-அதிகரித்தல். ஊசல்-ஊஞ்சல். பிறவிக்கு ஊசலைப் புலவர்கள் உவமையாக்குவர். 'ஊசல் வடம் போல் ஊர்ச்சகடம் போல் ஒழியாமே-நாச உடம்போடு ஆவி சுழன்றே நலிவேனோ' (திருவரங்கக்கலம்பகம்).

840. அவலித்து-வருந்தி. படருகிலோம்-அடையமாட்டோம். சினப்பாய் அல்லை-கோவிப்பவன் அல்லவே. அரியபிழை - ஒரு முறை செய்த குற்றம். இடதுபுறவடிவு-உமாதேவி. காஞ்சிபுரம் உமாதேவியின் சொரூபம் என்று பல இடங்களில் கூறப் பட்டுள்ளது.

841. இதிலும்-இந்தக் கயிலாசத்தைவிட. மரிக்கின்-இறந் தாலும். சரதம்-உறுதி. பூஞ்சிகரம்-பொலிவுடைய சிகரம். பதி-தலைநகர்.

842. தணவாமல்-நீங்காமல். துண்டீரன் ஐயன்-துண்டீரன்

843 அரதனமாம் புரியினிடைச் சுவாகுவெனு
மறையன்மக ளாகி யன்று
ளுரியதொரு மவ்வல்லா பொன்மணக்கா
மாலதியென் றொருபேர் பெற்று
ளிருவர்பெரு மணமிசைந்து காஞ்சிநக
ரரசியற்றி யெம்பி ரான்றன்
பொருவில்பெரும் பூசைவிழா வெமதுபிரா
னடியரைப்போற் றுவித் தானல்.

844 கவினுமொரு திருக்காஞ்சி செகற்சாரம்
பிரளயசிற் காம பீடஞ்
சிவபுரம்பின் விண்டுபுரம் பிரமபுரந்
திருமூர்த்தி வாசஞ் செய்ய
தவமயமச் சகலசித்தி கரங்கன்னி
காப்பிலகு தன்னி னாளு
முவமையில்சீர்த் துண்டீர புரமெனும்பன்
னிருபெயரு முடைத்து மாதோ.

---

என்னும் பெயர் பெற்ற தலைவன். குணராசி-குணங்களின் தொகுதி. பணவாளரா-படத்தையும் ஒளியையும் உடைய பாம்பு. 'பணவாளரவின் அரங்கேசர்தாளின்' (திருவரங்கத் தந்தாதி-தனியன்).

843. மவ்-மல்லிகை. வல்லா-(ஒப்புமையாவதற்கு) வன்மை யுடையதன்று. (மவ்வல் என்ற சொல் விகுதி நீங்கி மவ்மாத்திரம் இருந்து மலரை உணர்த்துகிறது.) பொன்மணக்கா-தங்கம்வாசனை வீசாது. ஆதலால் மாலதிக்கு உவமை சொல்லப் பொருள்கள் இல்லை என்று ஆசிரியர் கருதுவதாகத் தெரிகிறது. வேறுஉரை கிடைப்பின் நன்று.

844. காஞ்சி, செகத்சாரம், பிரளயசித், காமபீடம், சிவபுரம், விண்டுபுரம், பிரமபுரம், திருமூர்த்திவாசம், தவமயம், சகலசித்தி கரம், கன்னிகாப்பு, துண்டீரபுரம்—என்னும் பன்னிரண்டு பெயரை அப்பதி பெற்றுள்ளது. தன்னின்-தன்னைப்போல. ஆளும்-பிரயோகிப்பதற்கு.

845 மன்னுமிது பன்னிருபேர் மந்திரமா
யந்திரமாய் வரைந்து யாருஞ்
சென்னியின்மே லணியிலவ ருடலமுதா
சனருடல்போற் சிறப்பு மேவு
முன்னுமிம்மா மனுவுரைத்து நினைத்ததெல்லா
முற்றினரு முடிவி லாதோ
ரன்னவரிற் சிற்சிலர்தம் புராதனமாங்
காதையுள தறையக் கேண்மின்.

846 தாமரதி யெனுமறையோ னிப்பெயரா
மனுவைவட தருவி னீழல்
ஏமமென வுரைத்தலுமே அத்தருவி
லுறைபிரம ராக்க நீசன்
மாமனுத்தன் செவிப்புலனு மளவிலெழின்
மருவுமொரு மறையோ னாகிக்
காமமுடன் மனுவுரைத்த மறையோனை
வணங்கியொன்று கழற லானான்.

847 வேததரு மாவெனது பெயர்மறையு
மகிலகலை விதமுந் தேர்ந்தே
னுதலினால் அந்தணரை யிகழ்ந்தெண்ணி
முனிவருறை யவையை மேவி
மூதறிவு காட்டியவர் தமைமதியா
திருக்கவெனை முனிந்து நோக்கிப்
பேதையினீ பிரம ராக்கதனு
குதியெனவே பெருஞ்சூள் சொற்றார்.

---

845. மந்திரமாகவும் யந்திரமாகவும் இப்பன்னிரண்டு பெயரையும் எழுதித் தலையில் தரித்தால் அவருடம்பு தேவர் உடம்பாகும். அமுதாசனர்-தேவர். அமுத+அசனர்—அமுதாசனர். அமுதத்தை உண்பவர். மாமனு-சிறந்த மந்திரம். புராதனமாம் காதை-பழையகதை.

846. ஏமம்-பாதுகாப்பு. பிரமராக்கநீசன்-பிரம்மராட்சசாக மாறிய இழிவானவன். காமம் விருப்பம்.

847. அகிலகலையும்-எல்லாக் கலைகளையும். மூதுஅறிவு காட்டி-பெரியவர் கூறிய அறிவைக் காண்பித்து. சூள்சொற்றார் -சாபம் இட்டனர்.

848 சாபமது வந்தணைய வவர்த்தொழுது
பெரிதிரங்கித் தணிவீ ரின்ன
கோபமெனப் பராவுதலுங் கல்விகற்ப
தடங்குவது குறித்தே யன்றோ
நீபெரிது மகந்தையுற்று யுனதுவினை
வலியையெவர் நீக்கற் பாலார்
சோபமிது திருக்காஞ்சி மனுவைநவி
லேகுமெனச் சொற்று ரன்றே.

849 அத்தகைய மனுவையுன்னல் வினவியிது
பெருஞ்சாபம் அகன்றே னீது
சத்தியமென் றனையனுய்யு மாறடைந்தா
னின்னுமொன்று சாற்றக் கேண்மி
னுய்த்தபுகழ்ச் சுவணபுரித் தனஞ்செயனு
மொருபெயரை யுளனோர் மன்னன்
பித்தனெனச் சூதாலுங் காமத்தாலுந்
திருவைப்பி ரிந்தா னன்றே.

850 பெரியரமைச் சினருரையும் வினவுகிலான்
பகைஞரடு பெற்றி யாலே
முரிவுபுரி தரைவிடுத்துத் திரிதருவான்
வழியிகந்தோர் முளரி சேர்ந்தான்
பரிபவனவ் விடைவனத்தீக் குள்ளாய
பாந்தளொன்று பகுவா யார
வரிதரற்றக் கண்டுகன றனையவிக்கப்
பிழைத்தரவ மவர்க்குக் கூறும்.

---

848. அவர்த்தொழுது-அவரை வணங்கி. (வேற்றுமை உருபு இடையில் உள்ளது என்பதைக் காட்ட ஒற்றுமிகச் செய்தனர்). தணிவீர்-சாந்தம் அடையுங்கள்! கல்வி கற்பது அடங்குவது குறித் தன்றோ. இந்தத் தொடர் திருக்குறளைப்போல மதிக்கத்தக்கது. சோபம்-சோகம்.

849. இது பெருஞ்சாபம்-இந்தப் பெரிய சாபம். அனையன்-அந்த பிரம்மராட்சதனாக இருந்த வேததருமன்.

பித்தன் என-அறிவு திரிந்தவன் என்று கூறும்படி. திருவை-செல்வத்தை. பிரிந்தான்-இழந்தான்.

850. வினவுகிலான்-கேட்கமாட்டான். அடு-அழிக்கவேண்டும் என்கின்ற. முரிவுபுரிதரை-பலர் நடந்து அதனால் புற்கள் எல்லாம்

851 தரைபுகழுங் காஞ்சியிலோர் பிலத்துறைவே
னெனதுபெயர் சங்கசூட
னுருகுதிருக் காஞ்சியின்பேர் பன்னிருமா
மனுவுமெனக் குபதே சித்தான்
கருடபய மதுதீர்ந்தேன் மறந்தனனிவ்
விடையரவக் கண்ணி காமம்
பரவியிடா வாதலினித் துயரடைந்தே
னுய்ந்தனனுன் பரிவி னுலே.

852 மன்னவநீ செய்நலனுக் கியான்புரிகைம்
மாறிலையம் மனுவை யிப்போ
துன்னினனிற் குறுத்துவனங் கதுகணிக்கி
னினைந்தவெலா முடனே முற்று
மென்னவது செவிப்புலனுக் கியதரவு
வேந்துமஃ தெண்ணிச் சோரு
நன்னலமும் பெருந்திருவு மெய்தியர
சருளுயர்ந்தா னுளு நாளும்.

முரிந்த வழி. வழியிகந்து-திரும்பும் வழியைத் தாண்டி. முளரி-காடு. 'எழுதரிய மொழி முளர் இறை' (சேதுபுராணம். அகத்திய தீர்த்தம் 27). வேதாரணியம் என்பதை நிரம்ப அழகிய தேசிகர் எழுதரிய மொழிமுளரி இறை என்றார். பாந்தள்-பாம்பு. அரிது அரற்றக் கண்டு-காப்பவர் இல்லாமல் புலம்புவதைப் பார்த்து.

851. பிலத்து-வளையின்கண். உருகு-மக்கள் வீணே கெடுகின்றாரே என்று நினைந்து உருகுகின்ற. பெருமான் அடியவர்பால் அருள் காட்டுவது போல் அவன் வாழும் தலமும் அடியவரை நினைந்து உருகும். மறந்தனன்-அப்பெயரை மறந்து விட்டேன். கண்ணி காமம் என்பதைக் காமக்கண்ணி என மாற்றுக. காமக் கண்ணி-காமாட்சி. உன்பரிவினுல்-உன்னுடைய அன்பால்.

852. நலனுக்கு-நன்மைக்கு, கைம்மாறு-பிரதி உபகாரம். உன்னினன்-நினைவிற்குக் கொண்டு வந்து விட்டேன். நிற்கு-உனக்கு. உறுத்துவன்-மனத்தில் படியச் செய்வேன். கணிக்கில்-ஜெபித்தால். சோரும் நன்னலம்-கைவிட்டுப் போன அரசு முதலான நன்மைகளும். பெருந்திரு-ஞானம். நாளும் நாளும்-தினந்தோறும்—இவ்வரலாற்றைக் கவிராட்சசர் கச்சியப்ப முனிவர் காஞ்சிப் புராணத்தில் (இரண்டாம் காண்டம்) விரிவாகப் பாடியுள்ளார்: அதற்கும் இதற்கும் வேறுபாடுகள் உள்ளன.

853 எனப்புகலுஞ் சூதமுனி தனைவணங்கி
யாரிடரா மெவரும் போற்றித்
தனக்குவமை யில்லாவிப் பன்னிருபேர்
மனுவினவித் தகைமை சான்றேம்
முனிப்பெரும வுமையிவண்வந் தரியதவம்
பெருந்தரும முதல்வன் பூசை
யனைத்துமியற் றினளென்று யவைபுகல
வேண்டுமென வருளிச் செய்வான்.

வேறு

854 வேத வந்தமு நடுவுமா தியுந்திகழ் விமலன்
பாத வந்தனை யெளிதினிற் பராவுறப் பசுக்கண்
மாத வந்திரண் டனையது வெள்ளிமால் வரையம்
ஆத வன்றன தொளிவெளி புகாவகை யவிரும்.

855 விலங்க லன்னது வெள்ளிதழ்க் கமலமீ மிசையே
பொலன்செய் மாமணிச் சித்திர நிலையமப் பொகுட்டு
நலங்கு லாவிய தெனத்திகழ்ந் திடுமதன் நாப்பண்
இலங்கு மெம்பிரா னரசிருந் திடுகவி னிருக்கை.

---

853. ஆரிடர்-முனிவர். வினவி-செவியில் கேட்டு.

854. அந்தம்-முடிவு. விமலன்-சிவபிரான். பாத வந்தனை-திருவடியை வணங்கல். பசுக்கள் மாதவம்-ஆன்மாக்களின் தவம். வரையம்-மலை (அம்சாரியை). ஆதவன் (சூரியன்) ஒளிபுகாதபடி (நெருங்கியசோலைகள் இருத்தலால்) விளங்கும். 'பாம்பணைப்பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்-வெயில் நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்' (பெரும்பாண் 373-374).

855. விலங்கல்—(கயிலை) மலை. பொலன் செய்-பொன்னால் செய்யப்பட்ட. பொன் என்ற சொல்லே பொலன் என்று வந்ததாக இலக்கணிகள் கருதுவர். 'பொன் என் கிளவி' என்று தொடங்கிய தொல்காப்பியம் காண்க. இதைச் சொல்லாய்வாளர் உடன்படார். பொகுட்டு-விதை. இருக்கை-கோவில்.

856 அருண மாமணி திகழ்தரு மண்டபம தன்மேற்
புரண மார்கவின் றொகையெலாம் பணிப்படப் பொலிய
வருண சீதளச் சோதிதிக் கனைத்துமா வரிக்கத்
தருண கோளரிக் கடவுளாந் திருவணை சாலும்.

857 இரவி மாமதி மகபதி யளகையா னிவர்க்குப்
பரவு பேரொளி நவநிதி தருவெனப் பகருந்
திருவெ லாந்தரு மம்மலை மண்டபந் திகழு
மரிய ணைப்பொலி வெம்மனோர் புகழ்தருமளவோ.

858 அனைய தெய்வதப் பீடிகை யுறைதரு மமலன்
புனித மெய்க்கவின் யாவரே புகழ்தரு புலனோர்
வினைய மாமறை யுரைத்திடப் படாதென விடுத்த
மனிதர் தம்முளு மேழையே னெனக்கது வசமோ.

859 வரம்பி லாக்கவி னுடையவ னிமையமா மகடன்
அரும்பு போலிய முறுவலா லிலகியே யமர்ந்தான்
இரும்பி ரானது பேரவைத் திருவிழா வெனலும்
பெரும்பு ராதன வாயிலி னந்தியெம் பெருமான்.

---

856. அருணமாமணி-செம்மணி. கவின்தொகை-அழகின் கூட்டம். அருண-செந்நிறமான. ஆவரிக்க-(மற்றைய ஒளிகளை) மறைக்க. 'சுத்தமாம் ஆன்ம சித்தைத் துகளுடல் மறைத்த தென்னின்' (சித்தி 209) என்னும் பாடலுக்குச்சிவாக்கிர யோகிகள் உரைவகுக்கும்போது, மறைத்தது என்னின்–நின்மலமான ஆன்ம ஞானத்தைச் சகலாமான தேகம் ஆவரித்தது. அந்த உபாதியினால் அவத்தாதிகள் உண்டாம் எனில்-என்று உரை வகுத்தமை நோக்குக. தருணம்-இளமை. கோளரிக் கடவுளாம் திருவணை-சிம்மாசனம். ஆவரிக்க, காலும் எனக் கூட்டுக. சாலும்-போதும்.

857. இரவி-சூரியன். மகபதி-இந்திரன். அளகையான்-குபேரன். நவநிதி-ஒன்பது செல்வம். தரு-கற்பக மரம். தரும்மலை என்று, யாவற்றையும் கயிலைக்கு அடைமொழியாக்குக. பொலிவு-விளக்கம். அளவோ-பிரமாணத்துக்குட்பட்டதா?

858. பீடிகை-பீடம். மெய்க்கவின்-திருமேனியின் அழகு. புலனோர்–அறிவுடையவர். ஏழையேன்-அறிவற்றயான். வசமோ-அடங்குமா?

859. போலிய-போன்ற. (புதுப்பிரயோகம்). இலகி-ஒளி பெற்று. சக்தியின் பார்வையால் சிவன் ஒளி பெறுகிறது என்று

860 விரைந்தெ மூந்துகை குவித்துமெய் வளைத்ததி வினயம்
புரிந்து சென்றவண் பயப்பயத் திருவடி போற்றிச்
சுரந்த பேரருண் முகந்தெம திறைவநிற் றொழுவான்
பரந்து மாலயன் புரந்தரா திபரவண் படர்ந்தார்.

861 சீல முந்துநின் றிருவருட் பெருவெள்ளந் திளைப்பார்
மேலும் வந்தனர் பற்பல நாளெலா மேவக்
கால மின்றியே யேகினர் உன்னது கருணைப்
பால தன்றியே யவர்செய னடந்திடப் படாதால்.

862 அத்த வுன்னது சேர்வையங் களித்திட வேண்டுஞ்
சித்த மென்னெனப் பராவலுந் திருவருள் செய்தான்
பத்தி மைப்பட வனையர்போற் பெருந்தவம் பயிலு
முத்த மர்க்கலா லவனது சேர்வைவந் துறுமோ.

863 நந்தி தேவனார் பெருந்திரு வாயிலி னணுகி
யெந்தை யாரரு ளேகுமி னென்றலு மெழுந்து
முந்தி யேகினா ரரணன் றிறம்புரி முறையாற்
புந்தி யார்தரப் பங்கயன் புரந்தரன் புகுந்தார்.

---

தந்திர சாஸ்திரங்கள் பேசும். (சௌந்தரியலகரி முதற் பாடலும் இதனை குறிப்பாகப் பேசும்). புராதன வாயில்-பழைய முற்றம்.

860. நந்தியெம் பெருமான் சிவபிரான் முன் நிற்கும் மெய்ப்பாடு நயமுறப் பாடப்பட்டுள்ளது, அதிவினயம்-மிக்க ஒடுக்கம். பயப்பய-மெல்லமெல்ல. 'விடரகங்களும் வேய்செறி கானமும், படரும் சில் நெறி பைப்பய நீங்கினர்' (கம்பன். ஆரண்ய. அகத்தியப் படலம்). நிற்றொழுவான்-நின்னை வணங்கும் பொருட்டு. படர்ந்தார்-கூட்டமாக வந்துள்ளனர்.

861. சீலம்-எளிமை. திளைப்பார்-அனுபவிக்க விரும்பி. கருணைப்பாலதன்றி-கருணையின் கூறுபாடு இல்லாமல். நடந்திடப் படாது-நிகழாது.

862. சேர்வை-தரிசனம். (பார்வை என்பது பாவை என்று வந்தாற்போல் சேர்வை என்பதே சேவை என்று வந்தது. மொழியியல் உணராதவர் சேர்வை என்ற சொல் பாமர வழக்கு என்பர். (சேர்வைக்காரர் என்ற சொல்லை நோக்குக). சித்தம்-திருவுள்ளம். (எண்ணம்) பத்திமை-பக்தி. அவன்-சிவபிரான்.

863. அருள்-கட்டளை. 'பெருமாள் அருளப்பாடு முதலான

864 பின்ன ரம்முறை பிறழ்ந்தன நிறைந்தனர் பெரிதுந்
துன்னெ டுங்கட வுட்டொகை நோக்கியே சுளிந்து
பொன்னெ டுங்கவின் மகுடகோ டிகளிறப் புடைத்தான்
றன்னெ டுங்கரச் சூரலா னந்தியந் தலைவன்.

865 புடைத்து மெல்லென வன்னவர் தொகையையுட் போக்கி
யடுத்து வீற்றுவீற் றவரபி தானமுற் றறைய
விடைத்த னிப்பிரா னனையவர் செயலெலாம் வினவிக்
கொடுத்து ளானவர் வேண்டிய தியாவையுங் குணித்து.

866 போது மற்றதி லுமையவள் புரிவிளை யாடற்
கேது முற்றிய பிரசமா மலர்வனத் திடையே
பாத வத்தொகை யலர்தரு நிலைமையைப் பாரா
வாத ரத்திலவ் வனம்படு கடவுள ரடைந்தார்.

---

வரிசைகளை ஆழ்வார்களுக்குச்சாதித்து' (கோயில் ஒழுகு 44 ஆம் பக்கம்) திறம்-மரியாதைக்கிரமம். புரந்தரன்-இந்திரன்.

864. முறை பிறழ்ந்தன-வரிசைக்கிரமம் அழிந்தது. கடவுள்-தேவர். 'கரந்து உருஎய்திய கடவுளாளர்' (மணிமேகலை 1. 15). சுளிந்து–கோபித்து. 'சுரும்பெர்டு வண்டு பாடச் சுளிவொடு நின்றதன்றே' (சிந்தாமணி 1076) சூரல்-பிரம்பு. 'சாரற்சூரல் தகைபெற வலந்த-தழலும் தட்டையும் தளிரும் பிறவும். (குறிஞ்சிப்பாட்டு 42-43). மகுடகோடி-கிரீட வரிசை. 'மகுடகோடி திணையளக்க வைத்தகாலும் நாழியும்' (திருவரங்கக் கலம்பகம்).

865. அபிதானம்-பெயர். 'அபிதான சிந்தாமணி' என்னும் நூற்பெயர்க் காரணம் கருதுக. வினவி-விசாரித்து. குணித்து-பெருக்கி (மிகுதியாக). கொடுத்துளான்-மிகுதியாக வழங்கினன். இடையில் உள்ள 'உள்' மிகுதி என்ற பொருளைத் தருகிறது. உள் கொடுத்தான் என்று மாற்றுக.

866. ஏது-காரணம். பிரசம்-தேன். 'பிரசமாமலர்ச் செண்பகப் பொதும்பரிற் பிறந்து' (திருக்குற்றாலத் தல புராணம். மந்தமாருதம் 37). பாதவம்-மரம். வனம்படு கடவுளர்–வனதேவதைகள். 'மஞ்சே பொழிலே வனதேவதைகாள்' (கம்பநாடகம்–ஆரண்யகாண்டம்)

867 தெய்வ நந்திதன் னருளினாற் பிரானது திருமுன்
னவ்வி யம்படா மனத்தினர் வணங்கி வானதனைத்
தைவ ரும்பெரு மலர்வனஞ் செவ்வியிற் சமைந்து
நைவ னம்பட விரும்பிய விரும்பிய நலத்தால்.

868 இறைவ வென்றலு முமையவ டிருமுகத் தெழுந்த
சிறிய புன்முறு வற்பெரு நிலவொளி சிதற
மறுவி லன்புறீஇக் கடவுளர் தொகையினை மகிழ்ந்தே
குறைவில் நன்மையால் அவர்க்கெலாப் பெருவிடை
கொடுத்தான்.

869 அனையர் யாவரு மெம்பிரான் அருளௌமக் கழகி
தினைய நாண்மிகச் சுதினமென் றேகின ரிப்பால்
நனைகு லாவிய மலர்வனங் காணிய நயந்து
வினைய மார்தர எழுந்தன னுமையுடன் விமலன்.

870 மின்னு மாமணி வாயிலின் புறத்தணை வேலை
தன்னை நேர்தரு கும்பன்நி கும்பன்வே தண்ட
னின்ன ரேமுதற் பெருங்கண நாதரா மெனையர்
துன்னு பற்பல கோடியர் சூழ்வந்து தொழுதார்.

---

867. அவ்வியம்-வஞ்சகம். வான் அதனைத் தைவரும்-ஆகாயத்தை அளாவும். சமைந்து-பக்குவம் உற்று. நைவனம்-நடனம். 'மலர்வனம் நலத்தால் நைவனம்பட விரும்பிய' எனக் கூட்டுக.

868. உமையவள் புன்னகை எம்பிரான் முகத்தில் அன்பைப் பெருக்கிற்று. அன்புறீஇ-அன்பு மிகச் செய்து.

869. இனையநாள்-இந்த நாள். சுதினம்-நல்ல நாள். நனை-தேன். 'நனைமலர் அலங்கல் கேது' (சூளாமணி 1142).

வினையம் ஆர்தர-தேவபாணி நிரம்ப. (வாழ்த்துப்பாடல்) சிலம்பு. வேனிற்காதை, 26, 27 (உரை காண்க). உமையுடன் விமலன் என்றது 'மங்கையோடிருந்தே யோகுசெய்யும் சதுரப்பாட்டைக் கருதி. (கருவூர்த்தேவர் பாசுரம் காண்க).

870. எனையர்-பலர். கோடியர்—சிவிகைசுமப்பவர். சிவிகையைக் கொங்குவேளிர் 'கோடியல் ஊர்தி' என்பர். (உஞ்சை. 37, 219)

871 விசையை யேசெயை மங்கலை சண்டிகை விஜயத்
தசைவி லாதிவர் முதலினோ ராயிர மடவார்
இசைய வேயுமை தாட்டுணை பிறிதரா தேவற்
பசைய வேபுரி யணங்கினர் சூழ்ந்தனர் பணிந்தார்.

872 யாழி னுள்ளன வீணைதீங் குழன்முத லியற்றிச்
சூழ மாதவம் புரிசில சூரர மகளிர்
ஏழி னின்னிசை மும்முறை யோசையி னெழுப்பி
வாழி யோதிடு கானவிஞ் சையிற்பல மடவார்.

873 காட கப்பெரு மறைபுகல் கடமையைக் கடவா
மாட கப்பணி யாழிசை மொழியினர் மதியோ
ராட கத்தினி லியற்றிய பாவையி னணிசேர்
நாட கத்திறல ரம்பையர் யாவரு நண்ண.

874 வேலை வட்டம திடையடை மதியமா மேன்மைக்
கோல வட்டவாண் முகத்தியர் யாவருங் குறுகிச்
சீல வட்டம திருபுடை மனவுசித் திரித்த
வால வட்டமுஞ் சாய்மரைத் தொகுதியு மசைப்ப.

---

871. விசயை, செயை, மங்கலை, சண்டிகை முதலானவர்கள் பரமேஸ்வரியின் பணிப் பெண்கள். பசைய-அன்புடன்.

872. சூழ-சூழ்ந்திருக்க. (சாமீபம் என்பர்) சூரரமகளிர்-தெய்வப் பெண்கள். (திருமுருகாற்றுப்படை காண்க) ஏழின் இன்னிசை என்றது 1. குரல். 2. துத்தம். 3. கைக்கிளை. 4. உழை. 5. இளி. 6 விளரி. 7. தாரம் என்பனவற்றை. 1. சட்ஜம். 2. ரிஷபம். 3. காந்தாரம். 4. மத்திமம். 5. பஞ்சமம். 6. தைவதம். 7. நிஷாதம் என்பதே இன்று வழக்கில் உள்ளது. மும்முறை என்றது 1. உதாத்தம். 2. அனுதாத்தம். 3. சுவரிதம். என்பவற்றை. 1 உதாத்தம்-எடுத்தல் ஓசை. 2 அனுதாத்தம்-படுத்தல் ஓசை. 3 சுவரிதம் நலிதல் ஓசை.

873: காடு அகப்பெருமறை-காட்டிலே முனிபுங்கவர்களால் இயற்றப்பட்ட வேதம். (ஆரண்யம் என்ற பெயரை ஆய்க). மாடகம் யாழின் முறுக்காணி. 'நல்யாழ் இடந்தழீஇத் தெறித்துத் தாக்கிக் கண்டுமாடகம் திரித்துக் கௌவிப திவவிற்பாவ-விண்டு தேன் ஒழுகிற்றென்ன வீக்கி மென்சுருதி கூட்டி' என்பர் கவியரசர் பரஞ்சோதியார். (திருவிளையாடல், விறகு விற்ற படலம். 27) ஆடகத் தினில்-பொன்னாலே.

874 வேலைவட்டம்-கடல். முகத்தியர்-முகத்தை உடைய

875 கலாத் திகழ்ந்திடு பாழிசே ரூழியாங் கற்பங்
குலாப் படுங்கவ னத்திறத் தவனியைக் குறித்தே
யுலாத் தியுண்டிடு சண்டகுண் டோதர னுவப்பா
னிலாச் சொரிந்திடு சித்திரச் சத்திர நிழற்ற.

876 தருண மாமிமி லுடைவிடைப் பிரான்மிசை தன்னில்
அருண மாமணிப் பொற்றவி சிலகிட வதன்மே
லுருவு கூர்தரு மெம்பெரு மாட்டியா முமையா
ளருகு சேர்தர வேறிவீற் றிருந்தன னையன்.

877 யாவு மாகிய சிவனையு மெம்பிராட் டியையுந்
தாவி லாவகை தரித்திடு விடைப்பிரான் றனையே
தேவ தேவென வழிபடிற் றிரிமல மகல்வர்
மேவு தத்துவா தீதரா குவரிது மெய்ம்மை.

878 தெழிக்கு மால்விடை யேறியே யிருவருஞ் செலவின்
வழிக்கொள் வேலையி லவ்வனக் கடவுளர் மகிழ்ந்து
முழுக்க மெய்ப்புள கத்தரா யவர்திரு முன்னர்ப்
பழுக்கு மன்பினர் வணங்கின ரெதிர்ந்தனர் பராவி.

---

பெண்கள். மனவு-மணி. 'மனவிரி அல்குலார்தம் மனத்தொடு மயங்கி'. (சிந்தாமணி. கோவிந்தை. 58) ஆலவட்டம்-பெருவிசிறி. சாய்மரை-வெண்சாமரை.

875. கலாத்திகழ்ந்திடு-கலை என்கின்ற தத்துவம் மட்டும் விளங்கும். குலாப்படும்-மகிழ்ச்சியடையும். அவனியை உண்டிடும் சண்டன் குண்டோதரன். சித்திரச் சத்திரம்-அழகிய குடை. 'சத்திரம் ஏந்தித் தனி ஒரு மாணியாய்-உத்தரவேதியுள் நின்ற ஒருவன்' (பெரியாழ்வார் திருமொழி).

876. தருணம்-இளமை. இமில்-திமில். 'இகல் கொள்புள்ளைப் பிளந்ததும் இமில் ஏறுகள் செற்றதும்'. (திருவாய்மொழி. 501) விடைப்பிரான்-ருஷபதேவர். தவிசு மெத்தை.

877. ருஷப தேவரை வழிபடுவோர் மும்மலம் நீங்கி தத்துவா தீதர் ஆவர். திரிமலம்-ஆணவம் கன்மம் மாயை என்னும் மும் மலம். 36 தத்துவங்களையும் கடந்து உயர்குவர்.

878. தெழிக்கும்-முழக்கும். 'வலம்புரி வாய்வைத்து ஆங்க வன் தெழித்தலும்' (சிந்தாமணி. 2308) பழுக்கும்-முற்றிக்கனிந்த. 'நின் சேவடி சேர்ந்து அமைந்த பழுத்த மனத்து அடியர்'. (திருவாசகம். அடைக்கலப்பத்து 1)

879 காவி லுட்படு தருக்கொடி செடியெலாங் கடவுட்
பாவ கப்படு மாதலிற் கருங்கணீர் பாயத்
தேவி னைத்தளிர்க் கரத்திறுற் பன்மலர் சிதறி
யோவி யப்படத் தலையசைத் திசைத்தன வுவகை.

880 மந்த மாருதந் தடமெலா மூழ்கியே வாசச்
சந்த னுடவி தருணமா மலர்வனந் தடவிக்
கொந்து சேர்நறைக் குழுவெலாம் வாரியே கொணர்ந்து
சிந்தை யார்தரப் பயப்பய வணங்கியே திகழும்.

881 விடையி னின்றிழிந் திருவருங் காவினுண் மேவி
நடுவு பன்மணி குயிற்றிய சினகர நணுகிக்
கடவு ளெம்பிரான் மழுக்கையா லமைத்தமாங் கன்றின்
வடிவு காணிய வுற்றன ளிமயமா மயிலும்.

882 அந்த ளிர்த்தன திருக்கையா லமைத்தமா லதியைச்
சிந்தை செய்தன ளரனருள் பெற்றவண் சேர்ந்து
சந்து குங்கும நரந்தமாம் வரம்புறச் சமைத்துச்
சிந்து வார்தரும் அமுதமே நீரெனத் தேக்கி.

883 வளர்த்த மாலதிக் கோழிலைக் கொழுந்துபோய் வளர்ந்து
கிளைத்த வெண்முகை நகைமுகஞ் செய்துமேற் கெழுமி
விளைத்த செவ்விகண் டளவறு முவகைமேல் விரியத்
தளைத்த வன்புறீஇ விசையையா மணங்கொடு சாற்றும்.

---

879. பாவகம்–தியானம். கருங்கணீர்பாய–கண்ணீர் சொரிய. கள்நீர்-மது. ஓவியப்பட-அழகு உண்டாக. இசைத்தன-கூறின.

880. தடம்-குளம். சந்தனுடவி-சந்தன மரம் நிரம்பிய சோலை. நறைக்குழு-வாசனைத் தொகுதி. 'பொங்கரில் நுழைந்து' என்று தொடங்கும் திருவிளையாடற் புராணப் பாடலை இங்கே கருதுக. (தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

881. பன்மணிகுயிற்றிய-பலமணிகள் பதித்த. சினகரம்-கோவில். மழுக்கையால்-மழுஏந்தியகையால். (மழுவான் பூமியைத் தோண்டி நட்ட) காணிய-காண்பதற்கு.

882. அம்தளிர்த்தன-அழகு தளிர்விட்டாற்போன்ற. திருக்கையால்-அழகிய கைகளினாலே. சந்து-சந்தனமரம், நரந்தம்-வாசனைப்புல். சிந்து-(பாற்) கடல். தீவின தகலமும் சிந்து வட்டமும். (சூளாமணி. 388) மாலதி-காட்டுமல்லிகை.

883. கோழிலை-வளமான இலை. 'கோழிலை வாழைக்கோண்

884 இந்த மாலதி மீதுறு மன்புமீக் கொண்டான்
கந்த வேளெனுஞ் சிறுவன்மே லன்பினுங் கரிய
தந்தி மாமுகப் பிள்ளைமே லன்பினுந் தழைத்து
மைந்து மேவிய துண்மையா யெனமுக மலர்ந்து.

885 கால முற்றிடா தெம்பிரான் வளர்த்தமாங் கன்றிற்
கேலு மித்தகை வளமையி னெழுதரு மிந்த
மால திச்சிறு குழவியாம் கடனை வதுவைப்
பால மைத்திடு வோமெனா வெழுந்தனள் படர்வாள்.

886 அளவில் பற்பல சேடிய ரரம்பைய ரமரா
வளமை முற்றிய மடந்தையர் முனிவர்தம் மகளிர்
தளத ளத்திடு குழைகள்வில் லிடவனந் தன்னில்
பளப ளத்திடு மலர்பறித் தாடுவான் படர்ந்தார்.

---

மிகு பெருங்குலை'. (அகம். 2) முகை-அரும்பு. 'நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்'. (குறுந்தொகை. 53) செவ்வி-பருவம். 'செவ்விகொள்வரகின் செஞ்சுவல்கலித்த' (குறுந்தொகை. 282) விசயை-உமாதேவியின் தோழி. 'முடிவிலான் இவை உரைத்தலும் விசையை முகம் நோக்கி' (கந்தபுராணம். தவங்காண் படலம் 8)

884. சிவபிரான் முருகன்பாற் கொண்ட அன்பினும், விநாயகன் பாற்கொண்ட அன்பினும் இந்த மாலதிக்கொடியின் பால் கொண்ட அன்பு அதிகம் என்று தேவி கூறினள். மீக்கொண் டான்-மிகுதியாகக் கொண்டுள்ளான். தந்தி-யானை. மைந்து-விருப்பம், 'துணிபுனலாகத் துறைவேண்டுமைந்தின்' (பரிபாடல் 6.30)

885, காலம் முற்றிடாது பருவம் முதிர்வதற்கு முன். வதுவை-திருமணம். சிவபிரான் வளர்த்த மாங்கன்றுக்குத் தான் வளர்த்த மாலதியை மணம் முடிக்க அம்மை விரும்பினுள். எழுந் தனள் படர்வாள்-எழுந்து நடந்தாள்.

இங்கு. 'மன்னும் எம்பிரான் குடங்கையால் வளர்த்த மாங் கன்றும்—அன்னை தன்கரத் தம்பினுல் வளர்த்த மாலதியும்' என்று காஞ்சிப்புராணம் (இரண்டாம் காண்டம் 163) கூறுவதைக் கருதுக.

886. சேடியர் தோழிமார்கள். அமரா-விரும்பி. குழைகள்-காதணிகள். 'இழைகளும் குழைகளும் மின்ன முன்னமே' (கம்ப நாடகம் பாலகாண்டம்) ஆடுவான்-விளையாடுவதற்கு. படர்ந் தார்-நீங்கினர்.

887 வதுவை முற்றுவா னெழுதரு முவகையே வலிதிற்
கதுமெ னக்கொடு சேறலு முமையவள் கருத்தி
லதிச யப்படு திருவினை யாடலோ வன்றி
யெதுநி னைத்தன ளோவறி வுறுத்துதற் கிசையா.

888 எண்டி சைக்குளித் தென்றிசை பெருமை பெற்றிடவோ
மண்ட லத்திலித் தொண்டைநன் னாடுறும் வரமோ
தண்ட மிழத்திருக் காஞ்சியம் கடவுள்செய் தவமோ
முண்ட கத்தனுந் தெளிதரற் கொண்ணுமோ முன்னில்.

889 விரத முண்டிடு மேனியள் விரைவினின் மேவி
யரத னந்திகழ் மண்டபத் தபரமா யணைந்து
கரத லங்களா லெங்கணுங் கண்ணெனக் கவினும்
வரத னெம்பிரான் றன்திரு விழியையு மறைத்தாள்.

---

887. முற்றுவான்-நிறைவேற்றுவதற்காக. திருமணம் கருதிச் சென்ற அம்மை எதுநினைத்தாளோ? அறியோம். அதனைக் கூற வொண்ணாது. அறிவுறுத்துதல்-பிறர் அறிவில் தங்கக் கூறுதல்.

888. மண்டலத்தில்-நாடுகளுக்குள். கொங்குமண்டல சதகம், சோழமண்டல சதகம், தொண்டை மண்டல சதகம்' முதலான நூற் பெயர்களைக் காண்க. காஞ்சியம் கடவுள்-காஞ்சிபுரத் தேவதை. (இதனை நகர்த் தெய்வம் என்பர். சிலப்பதிகாரத்தில் மதுரைமா தெய்வம் பேசப்படுகிறது. காஞ்சிபுரத் தேவதையும் உண்டு என்பதை முன்பும் கண்டோம்). முண்டகத்தன்-தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவன். தெளிதரற் கொண்ணுமோ-அறிந்துகொள்ள முடியுமோ.

889. விரதம் உண்டிடுமேனியள்-விரதங்களால் இளைத்த திருமேனியை உடைய உமாதேவி. உமையம்மையின் தவச் சிறப்பைப் பெரியதிருமடலில் திருமங்கையாழ்வார் சிறப்புறப் பேசியுள்ளார். அரதனம்-ரத்தினம். அபரம்-பின்புறம். 'பெருமாட்டி வெரிந்புறத் தெய்திவல்லே-செம்மற்பிறை வேணியனார் திருக்கண் புதைத்தாள்' என்பது சிவஞானயோகிகள் காட்டும் ஓவியம். (தழுவக்குழைந்த படலம். 26) 'குலம்புரிமஞ்ஞை செம்பொன் குன்றினை அணைந்தால் என்ன-வலம்புரி மிடற்றார் கேள்வன் வெரிந்புடை மறைந்து நண்ணி'. (262, செழுநலக் கலவியாற்றும் செவ்வியின் ஒளிகான்றுள்ளம்-முழுவதும் நாணச் செய்வ இவை என முனிவாள் போலப்-பொறிகதிர்ச் சுடர்ப்பூங்கண்கள் இரண்டையும் பூங்கை நீட்டிக்-கழிகளி யகத்துப் பொங்கக் கது

890 இரவி மாமதி யவ்விழி யவைமறைந் திடவே
தரையி ருண்டது பாதல மிருண்டது தடவம்
பரமி ருண்டது மால்விழி யிருண்டது அம்பகமாந்
திரளி ருண்டது பங்கையா சனற்கெனிற் செயலென்.

891 மாலு மாலயன் முதலினோர் மிகவெரு வந்து
கால மீறுறு கணக்கிலே யேது காரணமோ
வேலு மாறிது புந்திசெய் துணர்வுற வெளிதோ?
சூல பாணிதன் னருளினு லன்றியே தோன்ரு.

892 என்று கூறலு மெம்பிரான் றிருவுளத் திரங்கி
யொன்று நல்லற மாமக மறைநெறி யொழுக்கம்
பொன்று மேயெனக் குளுந்ததி சீதளம் பொருந்த
வென்றி மேவிய நெற்றியங் கண்ணினை விழித்தான்.

---

மெனப்புதைத்தல் செய்தாள் (263) என்பர் கவிராட்சசர். (காஞ்சிப்புராணம். இரண்டாம் காண்டம். திருக்கண் புதைத்த படலம்) பழைய காஞ்சிப் புராணத்தைக் கவிராட்சசர் கச்சி யப்பரே மிகமிகப் பின்பற்றுகிருர். ஒப்பிட்டுப் பார்க்கவும்.

890. இரவி, மாமதி அவ்விழி-சூரியனுகவும் சந்திரனுகவும் உள்ள கண்கள். தட+அம்பரம்-தடவம்பரம். தடவம்பரம்-பெரிய ஆகாயம். (தடவு+அம்பரம் என்றும் பிரிக்கலாம்). தடவு-பெரிய. அம்பகம்-கண்கள். பங்கையாசனன்-பிரமன். பங்கயன் என்பது பங்கையன் என்று வந்தது போலி.

891. மாலும் மால்-மயக்கம் உற்ற திருமால். அயன்-பிரமன். வெருவந்து-அஞ்சி. சூல பாணி-சூலம் ஏந்திய சிவபிரான். சிவ பிரான் திருவருள் இன்றேல் எவையும் தோன்ரு. அருளால் எவை யும்பார் என்ருன். (தாயுமானவர் ஆனந்தக் களிப்பு.) கணக்கு-முறை. அளவு என்றும் கூறலாம்.

892. அறம், ஆகமம், மறை பொன்றுமே எனச் சீதளம் பொருந்தக் கண்விழித்தான். இறைவன் நெற்றிக்கண் திறந்தால் உலகம் அழியும். ஆதலின் நெற்றிக்கண்ணின் வெப்பத்தைக் குளிரப் பண்ணித் திறந்தான். குளிர்ச்சியின் மிகுதியைக் காட்ட ஆசிரியர், குளுந்து அதிசீதளம் பொருந்த என்ருர். குளிர்ந்து என்பது குளுந்து என்று நாட்டு வழக்காயிற்று,

893 விழித்த காலையிற் கனற்சிகை மதியென விளங்கிச்
செழித்த வத்திமி ரத்தொகை யழிவுறச் சீறி
முழுக்க திர்ப்பெரும் பகலிரா விற்குல முழுதும்
பழித்து மெய்யொளி பரப்பிய துலகெலாம் பரவ.

894 ஆதி நாயகன் றிருமுகத் தமுதமா மதியஞ்
சோதி சேர்தரு மிரவியெம் பிராட்டியின் றூய
போது நேர்கரம் பொருந்திட வெயர்வதிற் பொடித்து
மாது செங்கையி னங்குலி யாவினும் வழிந்த.

895 மதியி லெண்ணியே யுமையவள் கரத்தினை வாங்கப்
புதிய துள்ளியா யொழுகிடு மமுதநீர் பொருளாய்ச்
சிதற வேதெறித் திடுதலு மதுதிசை திசைபோய்
விதியி னுலொரு பதுநதி யாகவே விரிந்த.

896 வழுவை யீருரி யுடையவன் வதனமண் டலத்தின்
விழியி லம்மைதன் கரத்திலுற் பவித்தலால் விரிநீர்
பழைய தாகிய பாவனை பவித்திரம் பார்மேன்
மொழிய நின்றிடு புண்ணிய நீர்க்கெலா முதன்மை.

---

893. கனல்சிகை-நெருப்பின் கொழுந்து. திமிரத் தொகை-இருளின் கூட்டம், 'இந்திரன் வெண்பகடோடு உடையாத் திமிரக் கடல் புக' (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 40). இரவின் குலம் முழுதும் பழித்து-இராத்திரியின் கூட்டம் யாவற்றையும் இகழ்ச்சி செய்து, இரவுக் கூட்டம் என்றது, இருளையும், இரவில் உலாவும் பேய், பிசாசம் முதலியவற்றையும் என்க. மெய்யொளி-உண்மையான ஒளி. சூரியனும், சந்திரனும். நட்சத்திரங்களும் வழங்கும் ஒளி பொய் ஒளி என்று உணர்க. பரவ-புகழ.

894. மதியம், இரவி, பிராட்டியின் கரம் பொருந்தி வெயர்வு பொடித்து அங்குலியாவினும் வழிந்த. பொடித்து-அரும்பி. 'திலகத் திருநுதல் வியர் பொடித்திழிய' (பெருங்கதை, உஞ்சை 46 160). அங்குலி-விரல். 'செஞ்சுடர் போன்ற அங்குலி நுழையா' (பெருங்கதை, இலாவாண. 3. 114).

895. துள்ளி-துளி. 'வானத்தின் துள்ளி அல்லால் வருந்தினும் விரும்பல் செல்லா-மானத்தை உடைய புள்ளின் மைந்தர்கள் மறுத்து நிற்ப' (மேருமந்தர புராணம். வைசயந்தன் 121). அமுத நீர்-அமுதமாகிய தண்ணீர். இருபெயர் ஒட்டு. திசைதிசை போய்-திக்குகள் தோறும் சென்று. வியர்வைத் துளிகள் பத்து நதிகளாய் உருக்கொண்டன.

896. வழுவை-யானை. உரி-தோல். பாவனை பவித்திரம்-தியா

897 வரந திப்பெருங் கங்கைநீ ரதுதனை மதித்துப்
பிரமன் மான்முத லோரெலாம் பிறித்தனர் பேணிச்
சரத மேவுதத் தம்பதம் புனிதமே தழைக்க
முரிவி லாதுகொண் டேகின ரிதுகங்கை மூலம்.

898 ஈச னுக்கொரு கால்வரு காலிரே சிக்கிற்
றேசு முற்றிடு மாயனுக் கிறுதியச் செயலாற்
பாச முற்றுமை யரன்விழி மறைக்குமப் பருவம்
நாச முற்றது பற்பல கற்பமந் நாளில்.

வேறு

899 படியி ருண்டதுங் கனலொளி பரந்ததும் பாரார்பைங்
கொடிய சைந்தொசிந் தெனவர னதுதிருக் குறிப்பெண்ணித்
தொடியி லங்குசெங் கைகுவித் தச்சமுஞ் சூழ்போத
அடியி றைஞ்சியென் விளைந்ததென் றொருபுடை யயனின்றாள்.

---

ளிப்பதாலேயே தூய்மை தருவது. முதன்மை மொழிய நின்றிடும் எனக் கூட்டுக.

897. அம்மையின் கைவிரல்களில் தோன்றியது கங்கை. சரதம்-உண்மை. முரிவிலாது-நீங்காமல். இங்கு 'பங்குறை உமையவள் பாணியின் வரு-கங்கை எவ்வுலகமும் கலந்ததாம் என' என்று கந்தபுராணம் கூறுவதை நோக்குக, (கந்தபுராணம். உற்பத்தி. திருவவதாரம் 57), இந்தக் கங்கையே விஷ்ணுலோகத்தில் விரஜா நதியாயும், பிரம்மலோகத்தில் மானத தீர்த்தமாயும், இந்திர லோகத்தில் தேவதீர்த்தமாயும் பெருகின என்பர் பாம்பன் சுவாமிகள்.

898. இறைவன் ஒருமுறை இரேசகம் செய்தால் அது திருமாலுக்கு இறுதியாகும். வருகால்-வந்த காற்றை. இரேசித்தல்-சுவாசத்தைப் புறத்து விடுதல். பற்பல கற்பம் அந்நாளில் நாசம் உற்றது எனக் கூட்டுக.

899. பார் ஆர் பைங்கொடி-பூமியில் தோன்றிய கொடி. குறிப்பு-எண்ணம். தொடி-வளையல். ஒருபுடை அயல் நின்றாள்-ஒரு பக்கத்தில் ஒதுங்கி நின்றாள்,

900 ஒன்று கேளுமை நீவிளை யாடலி னுவப்போடு
மின்று மேவிநம் மிருவிழி புதைத்திடு மியல்பாலே
நன்று கூர்தரு முத்தொழில் யாவதும் நடவாது
சென்று போயது பற்பல காலமிச் செகமீதே.

901 மறைம றந்தனர் நியமமு மறந்தனர் மகமாற்றுந்
திறம றந்தனர் பூசனை மறந்தனர் சிவயோகத்
துறைம றந்தனர் மாமனு மறந்தனர் துகளில்லா
அறம றந்தனர் முப்புவ னத்துளோ ரனைவோரும்.

902 அச்ச மெய்த லீயென்கையெக் காலுமுன் னருளாற்கு
மிச்சை ஞானமா கிரியையென் றுரைத்திடு மிவைமூன்றுங்
கொச்சை யாருயிர்த் தொகைமல மகற்றிடுங் குறிப்பன்றே
நிச்ச மாயினு மிதற்குநீ தீர்வுசெய் நிலையுண்டால்.

---

900. உவப்போடு-காதலுடன். புதைத்திடும்-மூடிய. யாவதும் நடவாது-சிறிதும் நிகழாமல். செகம்-உலகம். சகம், செகம் என்று வரும். தசரதனைத் தெசரதன் என்றார் கவியரசர் திருக்குருகைப் பெருமாள். கயிலையில் சில நிமிடங்கள் பற்பல யுகங்களாக உலகில் விரியும். 'சூட்டு நன்மாலைகள்' என்று தொடங்கும் திருவிருத்தப் பாசுரத்தை (நம்மாழ்வார்) இங்கு உரையுடன் காண்க.

901. நியமம்-நாள்தோறும் செய்ய வேண்டிய கடமை. அட்டாங்க யோகத்துள் ஒன்றாகிய நியமும் எனினும் ஒக்கும். 'நியமம் ஆவது தவம் தூய்மை தத்துவம்-நூலை ஓர்தல் மனமுவந்திருத்தல்-தெய்வம் வழிபடல் என்னச் செப்பும்'. (பொருட்டொகை நிகண்டு 643). மகம் ஆற்றும் திறம்-வேள்விகளில் செய்யப்படும் சடங்கின் கூறுபாடுகள். மாமனு-மஹாமந்திரம். ஈண்டு பஞ்சாட்சரம்.

902. அச்சம் எய்தல்-அஞ்சாதே. நீ என் கை-நீ என்னுடைய கைகளாக இருப்பவள். திருவருட்சத்தியின் இச்சையாலும், ஞானத்தாலும், கிரியையாலும் ஆன்மாக்களின் மலம் நீங்கும். கொச்சை-இழிவு, கொச்சைமானிடர் (கம்பன். யுத்த. மந்திரப் படலம்). மலம்-ஆணவம். 'நம் கையினால் நாமனைத்தும் செய்தல் போல் நாடனைத்தும் - நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்' என்று திருக்கடவூர்-உய்யவந்த தேவநாயனார் திருக்களிற்றுப் படியாரிற் பகர்ந்தது கொண்டு எம்பிரான் பராசக்தியை நீஎன்கை என்றான். நிச்சம்-நிச்சயம். (உறுதி) 'நிச்சம் எனும் கவசந்தான் நிலைநிற்பதன்றி-அச்சம் எனும் ஈது ஆருயிர்க்குத் துணை ஆமோ'

903 என்று கூறலு மெம்பெரு மாட்டிநொந் தெனதார்வ
நன்று கூர்ந்தில விவ்விள மாலதி நற்சூத
மன்ற லோவிடை யூறுபட்டதுமுன மகாராகத்
துன்று மாருயிர்த் தொகையொரு காலையிற் றுனிகூர்ந்தே.

904 தக்க மன்றலுக் கியலிடை யூறுசெய் தலும்பாவ
மக்க ளுக்குவெந் துயருறுத் துவதொரு மகாபாவ
மிக்க விப்பிழை பெரும்பிழை யாகவே விளைந்திட்ட
அக்கு மாலையாய் பொறுத்திநீ யெனப்பின்னு மறைகிற்பாள்.

905 பெரிய மாமுனி வரரிமை யோர்முதல் பிறராஞேர்
தரும மாதியாய்ப் புரிகரு மத்திறந் தடையாய்
பரம வீதெனக் கேவல மோபெரும் பரிகாரம்
புரிய வேண்டிடுஞ் செயலதற் கிடமெலாம் புகலென்றுள்.

---

(கம்ப நாடகம். ஆரண்யம். கரன்வதை 142). தீர்வு-பிராயச்சித்தம். (கழுவாய்). செருக்கொடும் சிவநிந்தை செய்வாய்க்கிலை தீர்வு. (பிரபுலிங்க லீலை. கயிலாச கதி 40).

903. கூர்ந்தில-நிறைவு பெறவில்லை. 'மாலதிக்கும், மாங்கன்றுக்கும் யான் செய்யக் கருதிய திருமணத்திற்கு இடையூறு வந்துவிட்டதே' என்று அம்மை வருந்தினள். மாலதி-முல்லை. சூதம்-மாங்கன்று. மன்றல்-திருமணம். மகளிர் மரங்களையும் கொடிகளையும் வளர்த்து மகவு போலப் பேணுதலைச் சிந்தாமணியிற் கண்டு மகிழ்க. (பதுமையாரிலம்பகம்).

904. மன்றலுக்கு இடையூறு செய்தல் பாவம். பெற்ற மக்களுக்குத் துயர் செய்வது மகாபாவம். பிழை பெரும்பிழை ஆயிற்றே என்று அம்மை வருந்தினள். அக்குமாலையாய்-எலும்பு மாலை அணிந்த பெருமானே. 'அக்கு அரவம் புனைந்தார் அயனார் இடையாய்' (திருவரங்கத்தந்தாதி 28).

905. தருமம் ஆதியாய்ப்புரி கருமம்-அறம், பொருள், இன்பம், வீடு என்று கூறப்படும் செயல்கள். கருமத்திறம்-செயல்வகைகள். கேவலமோ-சாதாரணமா. பெரும்பரிகாரம்-பெரிய பிராயச்சித்தம். பரிகாரம் செய்வதற்கேற்ற இடத்தைப் புகல்க என்று அம்மை வேண்டினள்.

906 மாது கூறலுந் தூயதென் றிறைவனிவ் வகைமேவுந்
தீது தீர்ப்பதாருயிர்த்தொகைக் கியன்றிடுந் திறமன்றால்
நீதி யாகவே யகற்றிடப் படுவது நீயன்னை
வாதி யாதுநோய் புதல்வரை யன்னையே மருந்துண்ணில்.

907 புத்தி யிற்படர் வினைக்குநீ தீர்வினை புரிதந்தால்
சத்தி யத்தணுத் தொகைப்பவஞ் சிந்தியே தகைமேவும்
பத்தி யிற்புரி தருபரி காரமும் பலபேத
முத்த மப்படு மெமதருச் சனையிகு துபதேசம்.

908 இப்பு விக்குளே பாரத கண்டமென் றிசைமேவச்
செப்பு மவ்விட நியுதம்உண்டு அனகமாம் சிவத்தானம்
அப்ப திக்குமே லாயிரத் தெட்டதி னூற்றெட்டுண்
டொப்பி னற்பதி யதிலறு பத்துநான் குயர்வாகும்.

---

906. ஆருயிர்க் கூட்டம் பிராய சித்தம் செய்யும் ஆற்றல் அற்றது. அதற்குப் பதிலாக நீயே செய்க. தாய் மருந்துண்டால் அது குழந்தைக்கு நன்மை செய்யும். உயிர்க்கூட்டம் செய்யவேண்டிய கடமைகள் செய்யாமையால் உண்டான பாபத்திற்கு (உயிர்களின் தாயான) நீயே பிராய சித்தம் செய்க என்றான் இறைவன். அன்னை மருந்து உண்ணில் புதல்வரை நோய் வாதியாது என மாற்றுக. 'பால் உண் குழவி பசுங்குடர் பொறுதென-நோயுண் மருந்து தாய் உண்டாங்கு-மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்பத்-திருமாண் சாயல் திருந்திழை காணச்-சிற்சபை பொலியத் திருநடம் புரியும் அற்புதக் கூத்த' என்பர் குமர குருபரர். (சிதம்பர மும்மணிக்கோவை 2).

907. படர்வினை-துன்பந்தரும் தீவினை. தீர்வினை-பிராயசித்தம். அணுத்தொகை-உயிர்க்கூட்டம். பவம்சிந்தி-பாபம் நீங்கி. தகைமேவும்-தகுதி பெறும். (பெருமை) பலபேதம்-பலவகை. எமது அருச்சனை உத்தமப்படும். பிராயச் சித்தங்கள் பலவற்றுள் சிறந்தது அருச்சனை ஆகும். இகுது-இஃது. (புதுப்பிரயோகம்)

908. அனகமாம் சிவத்தானம் நியுதம் உண்டு-தூய்மையான சிவஸ்தலம் லட்சம் உண்டு. நியுதம்-லட்சம். உயர்வாகும்-சிறப்புடையதாம்.

**வேறு**

909 பயன்முந்து பதியின் மேன்மை
படைத்திடும் பதியோ ரேமுண்
டியவந்தி துவரை மாயை
யயோத்தியே மதுரை யென்னுஞ்
செயன்முந்து காசி காஞ்சி
யெனுந்திருப் பதியின் மிக்கு
நயமுந்துங் காசி காஞ்சி
நகரமங் கவையி னுள்ளும்.

910 சிறந்தது காஞ்சி யென்னுந்
திருநகர் புகலக் கேணீ
யறந்தரு பதியு ளெல்லா
வணுத்தொகை யுய்யும் ஆற்றால்
உறைந்தினி தமர்வோர் ஞான
யோகர்தா மெளிதி னுய்வர்
நிறைதவப் பதியின் சீரா
னிருமலம் பெறுவர் யாரும்.

---

909. மேன்மை படைத்திடும்பதி-முத்திவழங்கும் ஸ்தலம். மேன்மை-முத்தி. அவந்தி, துவரை, (துவாரகை) மாயை, அயோத்தி, மதுரை, காசி, காஞ்சி. இவற்றை முத்திதரும் தலம் என்பர். ஏழுதலங்களுள் சிறந்தது காசி, காஞ்சி. அவந்தி-உச்சயினி. உஞ்சை அவந்தி (திவாகரம். இடப்பெயர்.) ஆசிரியர் அவந்தியை யவந்தி எனக்கொண்டு யகரம் மொழிக்கு முதலில் வாராது என்று நினைத்து இயவந்தி என்றார். (புதுப் பிரயோகம்), மாயை-மாயாபுரி. மாயூரம்.

910. அறம்தருபதி-தர்மத்தை வளர்க்கும் ஸ்தலம். எல்லா அணுத்தொகை-எல்லா உயிர்கூட்டங்களும். ஆற்றால்-முறைப்படி. இனிது அமர்வோர்-இல்லறத்தார். யாரும்-கீழான மக்களும். இழிவு சிறப்பும்மை. நிருமலம்-தூய்மை. 'நித்தநிரு மலசகித நிஷ்பரபஞ்சப் பொருளே. (தாயுமானவர். திருவருள் விலாசம். 3)

911 உற்றவவ் விடைச்சா லோக
முயர்ந்தசா மீப மென்னும்
பெற்றியை யடைவர் காசிப்
பெரும்பதி மரிக்கப் பெற்றோர்
பற்றுசா ரூப மென்னும்
பலன்றனை யடைவர் திண்ணம்
மற்றிது காஞ்சி மேயோர்
வீட்டின்ப மருவு வாரே.

912 திறம்பெறு தலங்கள் யாவுஞ்
சிரமெனக் கோட லாலே
பிறங்கிய காஞ்சி யென்னும்
பேரது பெற்ற தாகும்
அறம்புரிந் தொன்று செய்யி
லாயிர மாக நீளும்
மறம்படு செய்கை யன்றோர்
குய்யமும் பேசக் கேட்டி.

913 உடலுயிர் விடும்போ தார்க்கு
மூச்சியி னின்று நீங்கப்
படுமது யாவு நீங்கத்
தனஞ்செயற் பற்றி நின்றே
கடமது கனலும் போது
கபாலத்திற் பிரம நாடி
வெடிபடு வழியே யேகி
மேவிடுங் கருமப் பாலாய்.

---

911. சாலோகம்-இறைவன் உலகில் வாழ்தல். சாமீபம்-இறைவன் பக்கத்தில் வாழ்தல். சாரூபம்-இறைவனின் வடிவம் பெறுதல். காஞ்சிமேயோர் வீட்டின்பம் (சாயுச்சியம்) பெறுவர்.

912. கோடலால்-கொள்வதால். காஞ்சி என்றால் தலையின் மேல் வைத்துப் போற்றத்தக்கது என்பது பொருளாகும். புரிந்து அறம் ஒன்று செய்யின் ஆயிரமாக நீளும் எனச் சேர்க்க. விதை ஒன்றாயினும் நன்னிலத்தில் ஆயிரமாக மிகும். ஈண்டு அதைக் கருதுக. 'ஒருகளிறு படியும் சீறிடம்-எழுகளிறு புரக்கும் நாடு' என்று புறம் பேசும். மறம்படு செய்கையன்று-மயக்கத்துடன் கூடிய நிகழ்ச்சியன்று. உண்மை. குய்யம்-இரகசியம்.

913. தனஞ்சயன்-பத்து வாயுக்களுள் ஒன்று. மனிதர்கள்

914 அறிவினில் வீடு சேர்வோர்
ஆவியக் கணத்திற் றனே
நெறிபடு கபால நின்று
நீங்கிடுஞ் சாற்றும் பின்னை
வெறிதுடல் கனலும் போது
வெடிபடா கபால மின்ன
துறுதியிக் காஞ்சி மூதா
ருறைபவர் முத்த ராவார்.

915 ஆதலா லவர்தம் மாவி
வீடுமக் கணத்திற் றனே
மேதக வுடனே சென்று
வீட்டினை யடையு மங்கந்
தீதெறக் கனலும் போது
கபாலமோ திறத்த லின்றும்
பேதியா தென்று மீது
பெருமைபெற் றிலகு மன்றே.

---

இறந்த பின்னும் உடலில் தங்கியிருந்து பிறகு நீங்குவது. இதன் விளக்கத்தைச் சிலப்பதிகார உரையில் 'தனஞ்சயன் பிராணன் போன பின்னும் உடம்பை விடாதே நின்று மூன்றும் நாள் உதிப் பித்து உச்சந்தலையிற் பிற்கூற்றிலே மூன்று நெற்கிடை வெடித்துப் போம் என்று அறிக' என்று விளக்கினர் அடியார்க்கு நல்லார்.

உச்சியினின்று நீங்கப்படும் அது என்றது மற்றைய வாயுக் களை. கடம்-உடல். கனலும் போது-எரியும் சமயத்தில். வெடிபடு பிரமநாடி என மாற்றுக. கருமப்பாலாய்-வினைக்குத் தக்கபடியாக. இங்கனம் நிகழ்வது மறுபிறப்பை அடைபவர்களுக்கே.

914. வீடு சேர்வோர் ஆவி-முத்தி அடைபவரின் உயிர். அக் கணத்தில்-இறந்த போதே. கபாலம் நின்றும் நீங்கிடும்-தலை உச்சி யிலிருந்து வெளிப்படும். உடல் கனலும் போது வெடிபடா-உடம்பு எரியும் பொழுது கபாலம் வெடிக்காது. இன்னது உறுதி-இது நிச்சயம்.

915. வீடும் அக்கணத்தில்-உடம்பை விட்டு நீங்கியதும். மேதகவுடன்–மிக்க சிறப்புடன். அங்கம்-உடம்பு. தீதெற-நெருப்பு எரிக்க. என்றும் ஈது பேதியா-எப்போதும் இந்நிகழ்ச்சி பிறழ்வ தில்லை.

916 சொற்றகாஞ் சியிற்க பாலந்
துண்ணென வெடியா வாறும்
மற்றய பதிக பாலம்
வெடிப்படு மாறு மீதா
மிற்றிது வேத வாய்மை
யாம்புகன் றுள்ள தென்றுஞ்
சிற்பரை யுனது மேன்மைத்
திருவுரு வந்த மூதூர்.

917 வெள்ளியங் கிரியிற் செய்த
வினைப்பரி கார மாற்ற
லுள்ளிய தெய்து மம்மூ
தூரினி லன்றி யுண்டோ?
தெள்ளிதின் முன்ன மிங்கே
செய்வினை தீர்வ தாக
வள்ளலங் கழனி மூதா
ராற்றினர் பலரு முண்டால்.

918 பிரளைய கற்ப மொன்று
பிறந்தது முன்ன மந்நாள்
தருமமெய்க் கடவு ளஞ்சித்
தனிவிடை யுருவ தாகி
யரணென வெம்மைச் சார
வபயமங் கதற்கு நல்க
வுரிமைசே ரியான மாக
வுறைந்ததிவ் வரையின் பாங்கர்.

---

916. சொற்ற-புகழப்பட்ட. துண், என்பது ஒலிக்குறிப்பு. சிற்பரை, விளி. பராசக்தியின் வடிவமாகக் காஞ்சிபுரம் உள்ளது என்பது வேறு சந்தர்ப்பங்களிலும் கூறப்பட்டுள்ளது.

917. வினைப்பரிகாரம்-தீவினைக்குப் பிராயசித்தம். உள்ளியது-நினைத்த செயல். உண்டோ - ஒகாரம் எதிர்மறைப் பொருளை உணர்த்துகிறது. வினைதீர்வதாக-வினைகள் நீங்க. அள்ளல்-சேறு. கழனி-வயல். ஆற்றினர்-நோன்பு நோற்றவர்கள்.

918. பிரளயகற்பம்-உலகம் அழியும் கற்பகாலம். கற்பம் என்பது நானூற்று முப்பத்திரண்டு கோடி கொண்ட பிரமனது ஒரு நாள். தரும மெய்க்கடவுள்-தர்மதேவதை. விடை உருவதாய்-

919 ஆயது காலை யெம்மி
னருளினைப் பெறுவா னெண்ணி
மாயவ னுவண மேறி
வரைப்புற னிழிந்தெம் பாலின்
மேயின னங்கண் வைகி
மேம்படு மகந்தை மீக்கொண்
டேயின னுவண னிந்த
வியல்பினை யினிதி னோக்கி.

920 ஒருதனி விடைச்சு வாச
மோச்சிநூற் றைம்பான் காதம்
வருவது போவ தாக
வலித்தலு முவண னெந்து
பரிபவ முற்று மாயற்
பரவியே விளிக்கு மோசை
விரவவே மாலை நோக்கி
யென்னென வினவி னோமால்.

921 இம்மலைச் சார லென்னோ
டெய்திய வுவணர் கோமான்
மம்மர்கொண் மனத்தி னாலே
மதித்தனன் றன்னை யென்றே
வெம்மைசெய் விடைப்பி ரான்ற
னுயிர்ப்பினில் விரவி நொந்து
சும்மைசெ யரவ மென்று
தொழுதன னுரைத்த காலை-

---

ஏருது வடிவத்துடன். அரண் என-பாதுகாப்பாயாக என்று. யானம்-வாகனம். 'இந்திரன் யானம், அளிக்கலாய நீர்வறந்திட்ட கலா ஆசை அந்தத்தின் ஒளிக்க'. (ரகுவம்சம். திக்குவிசயம் 10)

919. பெறுவான்—அடையும் பொருட்டு. உவணம்-கருடன். 'உவணச்சேவல் உயர்த்தோன் நியமமும்'. (சிலம்பு 14.8) அகந்தை ஆணவம். 'அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர்' (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். வருகை.9)

920. சுவாசம்-மூச்சு. ஓச்சி-பாயச் செய்து. 'ஒரு புனிற்று போற்றும் அவன் மேல் மருப்பு ஓச்ச' (பெரிய. சண்டேசுரர்) வலித்தலும்-வருந்தும்படியாகச் செய்தலும். பரிபவம்-அவமானம். மாயற்பரவி—திருமாலைப் புகழ்ந்து. விளிக்கும்-அழைக்கும்.

921. மலைச்சாரல்-மலை அடிவாரம். 'தினைவிளைசாரல் கிளிகடி

922 நந்தியை யேவ நந்தி
நமது பாலுய்த்த லோடும்
உய்ந்தனன் கலுழன் நாமவ்
வொள்ளிய விடையை நோக்கி
யெந்தம தருளா லன்றிக்
கலுழனை யிடுக்கண் செய்தல்
புந்திய தன்று தீர்வு
புரிதிரு காஞ்சி தன்னில்.

923 என்றனம் விடையு மங்க
ணெய்தியே சிவகங் கைப்பா
னன்றிசெ யிலிங்க மொன்று
பெருவிடை நாத னென்றே
பொன்றிகழ் தரச்செய் தெம்மைப்
பூசனை புரிந்த தாகு
மின்றரு கயிலை யிற்செய்
வினையவ னன்றி வீடா.

---

பூசல்'. (மதுரைக் காஞ்சி. 291) மம்மர்-மயக்கம். 'மம்மர் எய்திய மடவமாந்தரும். (ஞானமிர்தம்-42) மதித்தனன்-செருக்குக் கொண்டான். உயிர்ப்பினில்விரவி-மூச்சுக்காற்றில் அகப்பட்டு. சும்மைசெய்அரவம்-கூக்குரல்.

922. நமதுபால்-நாம் இருக்கும் இடத்தில், உய்ப்ப-கொண்டு வர. ஒள்ளிய-நல்ல. (இகழ்ச்சிக் குறிப்பு) அருளால் அன்றி-உத்தரவு இல்லாமல். புந்தியதன்று - அறிவுடைமையாகாது. காஞ்சிதன்னில் தீர்வு புரிந்திரு-காஞ்சிபுரத்தில் பிராயசித்தம் செய்துகொண்டு இருப்பாயாக. புரிந்திரு-ஏவல்வினைமுற்று.

923. சிவகங்கை என்றது காஞ்சியில் உள்ள பொய்கையை. பொன்திகழ்தர-பொலிவு உண்டாகும்படியாக. மின்தருகயிலை-ஒளிமிக்க கயிலாயம். அவண் அன்றி-அந்தக் காஞ்சிபுரத்தில் அல்லாமல். வீடா-நீங்கா.

924 நீயுமான் மாக்கள் யாவு
நிமலமாம் பொருட்டு மேவித்
தூயது காஞ்சி தன்னிற்
சொற்றதந் திரத்தி ைலே
நாயக மான பூசை
நடாத்துதி யகிலம் யாவு
மேயினம் பிறிதி னில்லை
யெனதுன தினிய தன்மை.

925 ஆருயிர் வருக்கம் யாமே
யறிவினை யுறுத்தி னன்றிப்
பேரறி வுறுத லில்லை
பெருமல மறைத்த லாலே
தாரணி தனிலெம் பூசை
தவம்பெருந் தருமம் யாவுங்
காரணி நீயே செய்யிற்
கடைப்பிடித் தவையு முய்யும்.

---

924. நிமலமாம் பொருட்டு-தூய்மை அடைவதற்காக. தந்திரத்திைலே-தாந்திரீக சாஸ்திரப்படி. நாயகம்-தலைமை. அகிலம் யாவும் மேயினம்-உலகம் முழுவதும் நிரம்பியுள்ளோம். 'ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே' என்பர் ஞானமேவடிவான திருநாவுக்கரசர். பிறிதின் இல்லை - அகிலத்தினும் வேறுபட்ட பொருள்களில் யாம் தங்கியிரோம், 'சகமலா தடிமையில்லை' என்பதை நினைக. அகிலத்தினும் வேறுபட்ட பொருள் யாதோ? 'பிறியாத சிவன்தானே பிறிந்து வந்து பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்க் காட்டி' என்று சித்தியார் பேசும்.

925. ஆருயிர்வருக்கம்-சிறந்த ஆன்மாக்கள். உறுத்தின் அன்றி-செலுத்தினல் அல்லாமல். பெருமலம்-ஆணவமலம். ஆன்மாக்கள் தோறும் நிரம்பியிருத்தலின் பெருமலம் என்றார். 'ஒன்றதாய் அனேக சக்தி உடையதாய் உடனாய் ஆதி-அன்றதாய், ஆன்மாவின்றன் அறிவொடு தொழிலை ஆர்த்து' என்று சித்தி பேசும் (170). ஆன்ம அறிவை மறைப்பது ஆணவம். அத்துடன் தன்னையும் மறைத்துக்கொள்ளும். 'ஒரு பொருளும் காட்டாது இருள்: உருவம் காட்டும்: இருபொருளும் காட்டாதிது என்றும் பலரைப் புணர்ந்தும் இருள் பாவைக்கு உண்டு என்றும்-கணவர்க்கும் தோன்றாத கற்பு' என ஆணவ மலத்தின் அதிரேக மாயத் தன்மையைத் திருவருட்பயன் பேசும் (இருள் மல நிலை). 'நீயே

926 அன்னது குறித்து மேவி
யரும் பெருங் காஞ்சி மூதூர்
தன்னிலப் பஞ்ச தீர்த்தத்
தடத்திற்போ யாடு கென்ன
மின்னிடை வணக்க முற்றி
விடைகொண்டு மலர்ப்பூங் காவின்
பொன்னெடு வாயின் முன்பு
புக்கனள் புக்க காலை.

927 வரதனை யுமையா ணீங்கி
வழிக்கொள்வா னினைந்த காலை
யரிபிர மாதி விண்ணோர்
சராசர மாண்மை பெண்மை
பரிவகன் றுருவி ஞானப்
பான்மையர் போன்றார் என்றும்
புரணமாம் புவன முற்று
மவர்செயற் புணர்ப்பே யன்றோ.

---

செய்யின் அவையும் உய்யும்' என்ற தொடரைக் காணும்போது கண்ணபிரான் கீதையில் கூறியது நினைவுக்கு வருகிறது. 'பெரியவர் பயின்ற படியலால் பயிலார் பின்புளோர்: என்பது அன்றாகில்-உரியவுவ் வுலகம் மூன்றினும் எனக்குச் செய்யவேண்டுவதும் ஒன்றுண்டோ-அரியவை என்னால் உறாதவும் உறுதற்பாலவும் யாவையிங்கையா-பரிய இவ்வுலகம் மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற்கு என்னையும் பாராய்' என்று கீதாசாரியன் கூறியதை இங்கு நினைவு கூர்க. (பகவத்கீதை. கர்மயோகம் 13)

926. ஆடுக என்று-நீராடுக என்று. வாயில்-முற்றம். இல்வாய் என்பதே வாயில் என்று வந்தது. 'பொருநர்க் காயினும் புலவர்க்காயினும் - அருமறை நாவின் அந்தணர்க் காயினும் - அடையா வாயில்' (சிறுபாணாற்றுப் படை 203. 204, 205).

927. வழிக்கொள்வான் - பயணம் செய்வதற்கு. 'அழுக்கம் உற்று எழுந்து இசைவலான் அடுத்ததன் பண்டர்-குழுக்களும் குலை குலைந்திட இருள்வழிக் கொண்டான்'. (திருவிளையாடல். விறகு. 18). ஆண்மை பெண்மை பரிவு அகன்று என்றது காதல் வேட்கையற்றிருத்தலை. சக்தியும் சிவமும் நீங்கின் உலகில் வேட்கை தோன்றாது. (கந்தபுராணம் காண்க). 'காரண முதல்வன் மோனக் காட்சியால் அமரர் எல்லாம்-சூர் அர மகளிர் எல்

928 அரிதிரு மார்பி னின்று
மகன்றனள் திருமா னந்த
விரணிய கெற்ப ஞவி
னிழிந்தனள் கலைமான் செம்பொற்
புரமக வானை நீத்தாள்
புகவருஞ் சசிமான் என்றுல்
அரிவையர் கணவர் தம்மை
யகல்கிலா தெவரே யன்ஞள்.

---

லாம் துணைமுலைப் போகம் இன்றி-ஆரிடர் நிலைமை தன்னை அடைந்தனர் அளக்கர் சூழ்ந்த-பாரிடை உயிரும் காமப்பற்றுவிட்டிருந்த தன்றே' (கந்தபுராணம். மேருப் படலம் 17). 'போகம் ஈன்ற புண்ணியன்' என்ற சிந்தாமணித் தொடருக்கு (நாமகள் 333). நச்சிஞர்க்கினியர் 'தான் சத்தியும் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின' என்று விளக்கம் தந்தமையை இங்குக் கருதுக. புவனம் முற்றும் அவர் செயற் புணர்ப்பேயன்றே-உலகம் முழுவதும் அவர்கள் (சக்தி சிவம்) செய்யும் சூழ்ச்சியல்லவோ?

928. அரி-திருமால். திருமான்-திருமகள். இரணியகெற்பன்-பிரமன். நாவின் இழிந்தனள்-நாவிலிருந்து இறங்கிஞள். செம்பொற்புரம்-தேவலோகம். மகவானை - இந்திரனை. சசிமான்-இந்திராணி. அந்நாள் கணவர் தம்மை அகல்கிலா அரிவையர் எவர் எனக் கூட்டுக.

———

## 7. உமைவரு சருக்கம்

929 பலமாதர்கள் புடைசூழ்தரு திருமாதுப ராவுங்
கலைமாதுயர் சாவித்திரி காயத்திரி சசிமா
னுலவாதறு பத்தாறினு முயராயிர மடவா
ரலையாழியி லமுதோடுறு மவர்சூழ்தர வந்தார்.

930 சுதையாமருந் ததிமானன சூயைப்புகழ் மடமான்
றிதியேயதி திப்பூவையு லோபாமுத் திரைப்பெண்
முதலாரிட முனிவோர்செயன் முற்றும்படி துணையாய்ப்
பதிமாவிர தப்பேதையர் பலவாயிர ருற்றார்.

931 அறுகோடிம காமாயைமி னூர்பற்பல ரடலே
பெறுமூவிலை யயிலபற்றுபி டாரித்தொகை நாளுங்
கறைசேர்தரு முனைவாள்பயில் காளிப்பெரு வர்க்கம்
விறலார்தரு மகயோகினி மிகுடாகினி வெள்ளம்.

---

929. உமையம்மையைத் தெய்வ மங்கையர் சூழ்ந்து வந்தமை பேசப்படுகிறது. திருமாது, கலைமாது, சாவித்திரி, காயத்ரி, சசிமான், அறுபதாயிரத்தினும் மிக்க பெண்கள் அம்மையுடன் வந்தனர். அமுதோடுறும் அவர்-பாற்கடலில் அமுதத்துடன் பிறந்த பெண்கள்.

930. சுதையாம் அருந்ததிமான்-அமுதம் போன்ற அருந்ததி. அனசூயை-அத்திரி முனிவரின் பத்தினி. புகழ்மடமான்-புகழ் மடந்தை. திதி, அதிதி-காசிப முனிவரின் பத்தினிகள். ஆரிட முனிவோர்-ரிஷிகள். 'ஆரிடர் நிலைமை தன்னை அடைந்தனர்'. (கந்த. மேரு, 17). விரதப்பேதையர்-நோன்பை மேற்கொண்ட பெண்கள்.

931. அறுகோடிமகாமாயை உண்டு என்பதை மணிவாசகர், 'ஆறுகோடி மாயா சக்திகள்-வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின' என்ற தொடர்களால் குறிப்பிட்டார். அயில்பற்று-வேல் ஏந்திய. 'அயில்புரை நெடுங்கண் அம்பணைத் திரள்தோள்-மயிலியற் சாயல் குயிலியற் கிளவி' (ஞானாமிர்தம் 40). பீடையை அரிப்பதால் பிடாரி என்ற பெயர் வந்தது (கிராம தேவதை). கறை-இரத்தக்கறை. யோகினி-காளிக்குப் பணிவிடை செய்யும் தெய்வப் பெண்கள். 'புணரும் மைத்ரி முதலான பொருள் உள்ள பரிசே-உணரும் மார்க்கம் வரு மாதவர்கள் யோகினிகள்- (அஞ்ஞவதைப் பரணி. உட்பரிவாரம் 3). டாகினிகள்-காளியின் கணத்தைச்

வேறு

932 கின்னரர் விஞ்சைப் பேரோர்
கெருடர் கந்தரு வராதி
மின்னிடை மடவார் நாக
கன்னியர் வியன்பா தாலத்
தன்னமென் னடையார் மற்று
மாயினோர் கயிலை மீது
துன்னின ருமையே மேவில்
யாவரே துன்னி டாதார்.

933 சேடிமா மடவா ராய
விசையையே செயையே வண்மை
நீடுமங் கலையே கீர்த்தி
நிலவுசண் டிகையே யாதி
யேடவிழ் குழலார் முப்பா
னிராயிர வருஞ்சூழ் போகி
யூடிய மாதி யுள்ள
முவகையா லேந்திச் சென்றார்.

---

சேர்ந்தவர்கள். 'அப்பொழுதைக் கப்பொழுதும் அதிசயமாம் அதுவே கொண்டு-எப்பொழுதும் அதிசயமாய் இருப்பார் இடாகினிகளே' (மோகவதைப் பரணி. பலிபீடம் 7).

932. கின்னரர், மனித உடலும் குதிரை முகமும் உடைய (யாழிசைவல்ல) தேவசாதியர். 'கின்னர மிதுனங்களும் தம்தம் கின்னரம் தொடுகிலோம் என்றனரே' என்பர் பெரியாழ்வார். (பெரியாழ்வார் திருமொழி. 3. 6. 5). விஞ்சைப்பேரோர்-வித்யாதரர். கருடர், கந்தருவர்–தேவகணத்தவர். துன்னிடாதார்யாவர்-வாராது இருப்பவர் எவர்.

933. சேடிமாமடவார்-தோழியர்கள். அவர்கள், விஜயை, ஜெயை, மங்கலை, சண்டிகை முதலானவர்கள். தேவியின் தோழிகள் முப்பத்திரண்டாயிரவர். ஊடு இயம் ஆதி எனப் பிரிக்க. இயம்-இசைக் கருவிகள். கவிச்சக்கரவர்த்திகள் பல்லியம் என்றும் பின்னியம் என்றும் இராமாவதாரத்தில் குறிப்பனவற்றைக் காண்க.

934 வயிணவி பிரமி மாகே
சுரிமகேந் திரிகு மாரி
சயவலி மிகுவ ராகி
சாமுண்டி எழுவர் மற்றும்
பயிரவி மதங்கி சூலி
பார்க்கவி வருண சண்டி
யயுதமாம் புவனி காவல்
அடல்படு மாதர் பல்லோர்.

935 எழுமழுத் தண்டு பிண்டி
பாலமே யெறியு முட்கோல்
சுழிதரு கிடுகு வாள்வேற்
றோமரஞ் சூல சாலம்
வழுவிலாப் படைக ளேந்தி
வானமண் ணுதி யாவுந்
தொழுதகு சினத்தின் பாலாய்த்
தோன்றினர் சூழ்ந்து கொண்டார்.

---

934. சப்தமாதர்கள் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. 1. வைணவி, 2. பிரமி, 3. மகேஸ்வரி, 4. மகேந்திரி, 5. கௌமாரி. 6. வராகி, 7. சாமுண்டி. பயிரவி-பயிரவரின் சத்தி. (பயங்கர மானவள்) மதங்கி-மதங்கமுனிவரின் புதல்வியாகப் பிறந்த சக்தி. அயுதம்-லட்சம். அடல்படும்-வீரம் மிக்க.

935. எழு-தூண். பிண்டிபாலம்-எறிபடை வகைகளைச் சார்ந்தது. 'பெருவரை முகம்புகும் பிண்டி பாலமே' (சூளாமணி, அரசியல் 270). முட்கோல்-குதிரையைத் தூண்டும் தாற்றுக்கோல். 'முட்கோல் வலக்கையில் தாங்கி' (சிந்தாமணி 794). கிடுகு-கேடகம். தோமரம்-தண்டாயுதம். 'தோமரவலத்தர்'-(பதிற்றுப்பத்து 54). சூலசாலம்-சூலங்களின் கூட்டம். சினத்தின்பாலாய்-கோபம் உடையவராய். மகளிரைப் பாதுகாப்போர் கோபத்துடன் செல்வது மரபு. 'காரணம் இன்றி யேயும் கனல்எழ விழிக்கும் கண்ணார்' என்பர் கவிச்சக்கரவர்த்தியார். (இராமாவதாரம், பாலஎழுச்சிப் படலம் 67).

936 பிரமதன் பானு கம்பன்
அனுகம்பன் பினுக பாணி
வரதன்வே தண்ட னாதி
வலிகெழு கணநா தப்பே
ருருகெழு சீற்றத் துப்பி
னுருத்திர வடிவ முள்ளோர்
பரமத திமிர பானு
வனையர்பற் பலரும் புக்கார்.

937 இவ்வியல் பதனை நோக்கி
யிந்திர திருவின் மிக்க
திவ்விய விமான மொன்று
செங்கதி ருதய பானு
நொவ்வுற விரிக்குஞ் சோதி
நோன்மையின் மிக்க தாகு
மவ்வது மிசையி னேறி
யருளில் வீற் றிருந்தா ளன்றே.

938 கருணைசெய் தருகு சூழுங்
கன்னியர் தம்மி னாமான்
றிருமயில் புலோமி சைப்பெண்
ணெனுமிருந் தெரிவை மாரைப்
பரிவுசெய் குறிப்பா னோக்கப்
பணிந்திரு புறனு மேறி
யிருவர் சாமரை யிரட்டச்
சசியடைப் பையினை யேந்த.

---

936. பிரமதன்-சிவகணத் தலைவன். இவனைத் தலைமையாகக் கொண்டமையால் சிவகணத்தைப் பிரமதகணம் என்பர். 'சங்குகன்னன் முன்னான வென்றிப் பிரமதகணம்' என்பர் கவி யரசர் பரஞ்சோதியார். (மெய்க்காட்டிட்டபடலம் 23) பானுகம் பன், அனுகம்பன், பினுகபாணி, வரதன், வேதண்டன்-இவர்கள் கணநாதர்கள். உருத்திர வடிவம் உள்ளோர்-ருத்ரசாரூபம் பெற்ற வர்கள். பரமதம்-மற்றைய புறச் சமயங்களாகிய. திமிரம்-இரு ளுக்கு. பானுஅனையர்-சூரியனைப் போன்றவர்கள்.

937. இந்திர திருவின் மிக்க-இந்திரனின் செல்வம் போன்ற விமானத்தினும் சிறப்புற்ற. உதயபானு-உதயசூரியன். நொவ்வுற-(நமக்கு இத்தகைய ஒளியில்லையே என்று) வருந்த. அவ்வது மிசையின்-அந்த விமானத்தின் மேல்.

938. நாமான்-கலைமகள். திருமயில்-திருமகள். புலோமிசை-

939 மற்றையர் கோடி கோடி
மணிப்பணி விமானந் தேர்மாச்
சொற்றவெம் பகடு, யாளி,
யாளியஞ் சுகம்,பைந் தோகை,
கொற்றமால் விடையே, சேனங்,
குணிக்கலா யான மான
பற்பல மிசைக்கொண் டம்மை
பதத்துணை பரவிச் சென்றார்.

940 குழுமணிப் படகந் தக்கை
குடமுழாத் திமிலை பீலி
யழகிய சங்கம் பேரி
யருங்கர டிகையே கண்டை
தழுவிய பதலை பாண்டி
றண்ணுமை முரசம் யாவு
மெழுகடல் முழக்க மென்ன
வெங்கணு மியம்பிற் றன்றே.

---

இந்திராணி. புலோமன் மகள் ஆதலின் புலோமிசை எனும் பெயர் பெற்றனள் என்பர். 'பொருவது விண்ணின் வேந்தன் புலோமசை நலம் துய்த்தானன்'. (பாகவதம். மருத்துக்கள் பிறப்பு. 5) இருவர்-திருமகள், கலைமகள். சசி-இந்திராணி. அடைப்பை-வெற்றிலைப் பை. 'அருங்கயல் அடைப்பை அங்கையின் ஏந்தி'. (பெருங்கதை. உஞ்சை. 46. 229)

939. மற்றைய மகளிர், விமானம், தேர், யானை, எருமை, யாளி, சிங்கம், கிளி, மயில், எருது, பருந்து, முதலான வாகனங்களில் வந்தனர். மா–யானை. பகடு-எருமை. யாளி-சிங்கம், சுகம்-கிளி. தோகை-மயில். சேனம்-பருந்து. குணிக்கலா-அளவிடமுடியாத.

940. படகம்-சிறுபறை. இது ஒரு முகம் உடையது. 'ஒரு விரல் தெறித்தும் ஐவிரல் குவித்தும் பெருவாய் ஒரு முகப் படகம் பெருக்க'. (கல்லாடம். 8) தக்கை-(டக்கா.) தோற்கருவி. 'திமிலை குடமுழா தக்கை கணப்பறை. (சிலப்பதிகாரமேற்கோள். அரங்கேற்றுக்காதை) குடமுழா-குடத்தையே மத்தளமாகக் கொண்டு இசைக்கப்படுவது. 'படகம் குடமுழவம் பாங்காய ஏழும்-அடைவே முதற்கருவியாம்'. (பஞ்சமரபு. 94) திமிலை-திம் என்ற

941 உமைபரா பரையே வந்தாள்!
உம்பரைப் பயந்தாள் வந்தாள்!
கமைவடிவா வாளுள் வந்தாள்!
கடலுல களித்தாள் வந்தாள்!
சமையமா முதல்வி வந்தாள்
தண்ணளி யுடையாள் வந்தாள்!
இமையமா மடந்தை வந்தாள்!
என்றன சின்ன மெல்லாம்.

942 செல்லுமக் காலை நாமான்
செங்கையிற் கவரி தன்னை
யொல்லென விசையை வாங்கி
யுரைவழித் திறனி யாவு
மெல்லென வென்னுஞ் சொல்லின்
விரகினுற் கல்வி மாது
சொல்லினள் வழியின் வண்மை
தொடர்ந்தன ளேகுங் காலை,

---

ஓசை உடைய தோற்கவி. 'நிசாளம் துடுமை முரசே பேரிகை-தேசிதிமிலை' (பஞ்சமரபு மேற்கோள். 123. பக்) பீலி-பெருஞ் சவளம். (சிறு சின்னம் என்றும் கூறுவர்) கரடிகை-கரடியின் குரலைப் பெற்ற தோற்கருவி. கண்டை-சிலம்பு. பதலை-ஒற்றைக் கண்ணைப் பெற்றமாக்கிணை. 'பதலை ஒருகண் பையென இயக்குமின்' (புறம். 152) பாண்டில்-கஞ்சதாளம். 'இடிக்குரல் முரசம் இழும் என் பாண்டில்'. (சிலம்பு. வஞ்சி. 194) தண்ணுமை-மங்கள வாத்தியம். 'ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி. (முதலாயிரம். திருப்பள்ளி எழுச்சி. 9) வைணவ உரையாசிரியர்கள் திருவரையில் சாத்தினபறை என்று விளக்கினர்.

941. இப்பாடல் திருச்சின்னப்பாடல். தலைமக்களின் விருதுகளைக் கூறி ஊதப்படும் எக்காளம், திருச்சின்னம் எனப்படும். வேதாந்த தேசிகர் திருச்சின்னமாலை என்னும் பெயருடன் ஒரு பிரபந்தம் இயற்றி உள்ளார். கமை-பொறுமை. சமையமா முதல்வி-சமயங்கள் யாவற்றிற்கும் தலைவி. 'ஆறுசமயத்தி' என்பர் அனுபூதிச் செல்வர் அருணகிரிநாதர்.

942. நாமான் கையில் இருந்த கவரியை விசயை (உமையின் தோழி) வாங்கிக்கொண்டு வழியின் வளங்களைக் கூறக் குறிப்பித்தாள். கலைமகளும் அப்படியே கூறினுள். ஒல்என-விரைந்து. மெல்

943 தாமரைச் சரணம் போற்றிச்
சங்கரி தன்னைச் சூழ்ந்த
தேமுறு மடவா ரெல்லாஞ்
சென்னெறிப் படரும் வேலை
யேமமா ரெசுருச் சாம
மிருக்கதர் வணமு மான
மாமறை முழக்க மல்கு
மகதநன் னாடு கண்டார்.

வேறு

944 அன்னா டழல்கூர் தருமா ரணியத்
தின்னா முழுதும் படவெய் திமுகிற்
பன்னா ளுறையொன் றுபடா தொழியப்
புன்னீர் மைபொலிந் துபுலந் ததுவே.

945 சலமே செய்துபொய்க் கரிசாற் றினர்தங்
குலமே யெனமேன் மைகுலைந் துகரிந்
திலமே வுநெருப் புநிரப் பியிடுங்
கலமே யெனநொந் துகரிந் ததுவே.

---

என–மெதுவாகக் கூறுக. இங்குச் சௌந்தரியலகரி 29 ஆம் பாடலுக்கு எல்லப்ப நாவலர் வரைந்த உரைக் குறிப்பைக் காண்க. 'வினை எஞ்சு கிளவியும் வேறுபல்குறிய' என்பது கொண்டு அமர அமர வர வர. என்னும் வினை எச்சங்களை வியங்கோள் முற்றாகக் கொள்க என்று விளக்கினர். [அம்மை விடையில் பயணம் மேற்கொண்டதாகக் காஞ்சிப்புராணம்-இரண்டாம் காண்டம் கூறும்]

943. சங்கரி-உமையம்மை. தேம்-இடம். (தேயம் என்ற சொல்லின் திரிபு) தெவ்வர் தேம் (புறம். 6) தேம் என்பதற்கு இனிமை என்றும் பொருள் கொள்ளலாம்.

944. மகத நாட்டின் வறுமை பேசப்படுகிறது. கச்சியப்ப முனிவர் இங்குத் தன்புலமைத் திறம் தோன்ற விவரித்ததைக் கல்லாதார் கல்லாதவரே. (காஞ்சிப்புராணம். இரண்டாம் காண்டம்)

அழல்கூர்தரும்-வெப்பம் மிகுந்த. ஆரணியம் - பாலைநிலம். இன்னா-துன்பம். பட-அடைய. முகில் எய்தி உறை ஒன்று படாது ஒழிய, புன்னீர்மை பொலிந்து புலந்தது எனப்பிரிக்க. உறை-நீர்த்துளி. புன்னீர்மை–அற்பத்தன்மை. புலந்தது-காய்ந்தது.

945. சலம்-வஞ்சகம். பொய்க்கரி-பொய்யானசாட்சி. இலம்-

946 வெள்ளிற் பனையோ மைவிரிந் ததலைக்
கள்ளிப் புதலோ டுகனன் றுவெறுஞ்
சுள்ளிப் படவற் றியசோ ரிபடும்
பொள்ளற் றசையாக் கைபறைப் படுமே.

947 கற்பிற் பசையொன் றுகலந் திடவே
வற்புற் றிடுமா ருயிர்வர்க் கமெலாம்
பொற்பற் றுவறந் துபுலர்ந் துடல்வீழ்ந்
தெற்புக் குவையா கியவெங் கணுமே.

948 கண்டா ளுமைமா மகதத் திருநா
டெண்டா வுமுயிர்த் தொகையிற் றிடுமா
றண்டா தவருட் கடலன் னையவட்
குண்டா யதிரக் கமொருப் படவே.

---

இல்லம். (வீடு) நெருப்பு நிரப்பியிடும் கலம்-நெருப்பைப் பாது காத்து வைக்கும் பாத்திரம். மகதம் பொய்க் கரிசாற்றினர்தம் குலமே எனக் கரிந்தது.

946. வெள்ளில்-விளாமரம். ஓமை-உகா என்ற குத்துச்செடி சோரிபடும்-இரத்தம் சிந்திய. பொள்ளல்-உள்ளே ஒன்றும் இல்லாத. பரணியில் பாலையைப் பாடும்போது புலவர்கள் மனத்தில் தோன்றும் மரங்கள் வெள்ளில் முதலானவை. 'அடர்புன்கு தொடர் சூரை அழல்கள்ளி விழல் வெள்ளில் அதர்சேர்உகாய்-படர் இண்டு களவீரை பலவன்னி என இன்ன பலதுன்னுமே'. (இரணிய வதைப்பரணி. காடுபாடியது. 62)

947. கற்பின்பசை - கல்வியாகியபசை. (யாசிப்பது கூடாது என்று நீதி நூல்கள் கூறியதைக் கற்ற மனப்பண்பு) வற்பு-மனத்திண்மை. உயிர்வர்க்கம் - உயிர்க்கூட்டம். வறந்து - வற்றி. புலர்ந்து-உலர்ந்து. எற்புக்குவை-எலும்புக்குவியல். யாசிப்பது கூடாது என்ற மானஉணர்வால் உயிர்க்கூட்டங்கள் எலும்புக் குவியல்கள் ஆயின. கச்சியப்பர் எப்படியாவது வாழ்ந்தால் போதும் என்று கருதும் வறுமையாளரைக் காட்டினார். இவர் மானம் பெரிது என்று கருதி மாண்புடையாளரின் எலும்புக்குவியலைக் காட்டினார்.

948. மகதத் திருநாடு உயிர்த்தொகை இற்றிடும் ஆறு உமை கண்டாள். அருட்கடல் அன்னை அவட்கு இரக்கம் உண்டாயது.

949 கன்னிக் கலைமா திதுகா ணியகீ
பின்னிப் பசிநோ யடுபெற் றியினு
லின்னற் படுமா ருயிர்யா வுமிவண்
அன்னக் களைகே வலமன் றதனல்.

950 இன்னு டுதுனிப் படவே குமதோ
சின்னு ளிவணன் புசெயற் படவே
யன்னு தியளித் தறன்முற் றியதன்
பின்னு கநடப் பதுபெற் றிமையே.

951 என்ரு ளுமையென் றலுமிக் கலைமா
னன்ரு மதுவென் றலுநண் புமரீஇப்
பொன்ரும் வரையிற் பொலிமா னமதில்
நின்ருர் வமோடுற் றனர்நீ ணிலமேல்.

952 வாரம் பெறுமன் புமைவைத் தலுமே
யாரம் பழுகிற் குலமத் தனையுஞ்
சோரும் புயல்மெத் தியதுண் ணெனவே
சீரின் பொலிவுற் றதுதே சமெலாம்.

---

எண்தாவும்-எண்களின் வரம்பைக் கடந்த. (தாவுதல் என்ற சொல்லை நயமுற அமைத்துள்ளார்) இற்றிடும்ஆறு-அழிந்த தன்மை. அண்டா – அளவுகடந்த. ஒருப்பட உண்டாயது-ஒரு முகப்பட்டுத் தோன்றிற்று.

949. கலைமாது, விளி. காணிய-காண்க. இன்னல்படும்-துன்பம் அடையும். அன்னக்களை-அன்னம் இன்றிக் களைத் திருப்பது. கேவலம்–இழிவு. மன்ற+அதனல்-மன்றதனல். மன்ற-நிச்சயம்.

950. துனிப்பட - துன்பம் அடைய. ஏகுமதோ-செல்வதா. அன்பு செயல்பட-அன்பானது காரியப்பட. அன்னுதி-உணவு முதலானவைகள். அன்ன+ஆதி—அன்னுதி. அறன்முற்றியதின் பின்னுக-தரும் செய்து முடித்த பிறகு. பெற்றிமை-நற்பண்பாகும். இங்கு ரஷ்யஞானி டால்ஸ்டாய் கருத்து நிரம்ப வரைந்த, இரண்டு எருசலயாத்திரிகளின் கதை நினைவுக்கு வருகிறது.

951. கலைமான் நன்ரும் என்று அம்மையின் செயலை உடன் பட்டுப் புகழ்ந்தாள். பொன்ரும்வரை-அழகிய மலையின் அடி வாரம். ஆர்வமொடு நீள் நிலம் மேல் உற்றனர் என்க.

952. வாரம்பெறும் அன்பு-பயணத்தடை செய்யும் பேறு

953 பலன்முற் றுதொழிற் புரிபான் மையினுக்
கலகற் றிடுமா னிடரா னவர்போல்
வலியற் றமையுன் னிவலித் தறமே
சிலபற் பகல்செய் தனள்சே யிழையே.

954 எம்மா யறமே செயவெண் ணினளென்
றம்மால் பிரமா தியரா ணையினுற்
கைம்மா முகில்போல் அளகைப் பதியோன்
விம்மா தரவா லவண்மே வினனே.

955 நெற்கூ டரிசிக் குவைநீ ணிதியப்
பொற்கோ யில்பொருட் பலபொற் புறவே
யற்கா வியல்பிற் செயவைத் தனனுற்
சற்கா ரமதற் கொருதாழ் வுளதோ.

---

பெற்ற அன்பு, 'வாரம் என் இனிப் பகர்வது' என்பர் கவிச் சக்ரவர்த்திகள். (அயோத்தி, மந்திரப்படலம்) (நுட்பம் எண்ணு மல் இங்கு வாரம் என்பதற்கு அன்பு என்று உரைகூறினுரும் உளர்) ஆரம்பமுகில்-மழை பெய்யத் தொடங்கிய மேகம். துண் என மெத்தியது-விரைந்து வானில் மொய்த்தது. பொலிவுற்றது-வளம் பெற்றது.

953. பான்மை-தன்மை. அலகு அற்றிடும்-அளவற்ற. மானிடரானவர் போல்-ஆண்களைப் போல. வலித்து-உடன்பட்டு. மகத நாட்டு மக்கள் வலிமையற்றமையை நினைத்து அவர்களுக்கு உதவ உடன்பட்டாள் அம்மை என்க. பற்பகல் சில செய்தனள் என்று கூட்டுக.

954. எம்ஆய்-எம்முடையதாய். (உமையம்மை) மால்பிரமன் முதலானவர்களின் கட்டளையால். கை மாமுகில்போல்-கைகளைப் பெற்ற மேகம் போல. அளகைப்பதியோன்-குபேரன். விம்மு-நிரம்பிய. 'விம்ம அங்கு அமரர்க்கு அமுது அளித்த அமரர் கோவே' (பெரியாழ்வார் திருமொழி. தாய்ப்பால் உண்ண அழைத்தல். 9) அவண்-அங்கு.

955. நெற்கூடு-குதிர்' 'மாமாவின் வயின் வயின் நெற்கூடு கெழீஇய நாடு' (பொருநர் ஆற்றுப்படை) அரிசிக்குவை-அரிசிக் குவியல். நிதியப் பொற்கோயில்-செல்வம் நிரம்பிய அரண்மனை. அற்கா-குறையாத. சற்காரம்-உபகாரம். 'சார்ந்த உனைக்கண்டு எழுந்து சற்காரம் செய்து-அன்னுன் தன்குறங்கு இருத்தி விடுத்தனன்' (பிரபோதசந்திரோதயம். இடம் பாங்காரம். 87.)

956 மறுகா வவுணு ருயிர்வர்க் கமெலாம்
வெறிதா யபெரும் பசிவீ டுறுமா
றுறுகா லமியா வதுமோ வறவே
சிறுகா வுணவுண் டுதெவிட் டியதே.

957 காமா ரியருட் பெறுகா ரணியே
யாமா முதலிற் படணங் கினரைத்
தாமா யையிலம் மகதத் தினுளோர்
மாமா னிடமா கமதித் தனரே.

958 பொழுதத் திருநா டுபுரப் பவனோர்
இழுதைத் தனமன் னனிசைப் பதெனே
யழிதக் கவனென் பவனு ளமிகப்
பழுதுற் றதுவாய்ப் பகரப் படுமால்.

---

956. மறுகா அவண்-(அம்மை வந்தமையால்) துன்பம் இல்லாது போன அவ்விடத்தில். வெறிதாய-(அறிவு ஆற்றல் முதலானவை) இல்லாது செய்த. (பசிமிக்கவனுக்கு வேதங்கள் மறந்து விடும் என்று உபநிடதம் கூறுகிறது.) வீடுறுமாறு-நீங்கும்படி. ஓவற-ஒழிவு இல்லாமல். 'ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி'. (திருமுருகாற்றுப்படை. ஐயர் அவர்களின் அடிக்குறிப்பைப் பார்க்கவும்) சிறுகா உணவு-சிறுமையற்ற உணவு. சிறுமையாவது, இட்டோர்க்குச் செருக்கும், ஏற்போர்க்கு இழிவும். தெவிட்டியது-தேக்கிட்டது, 'தொண்டின் சுவடு அறியாமல் விடுகிறேனோ? எனக்குத் தெவிட்டி விடுகிறேனோ' (திருவாய்மொழி. ஈடு. 170.) (வெறுப்புற்றது என்று பொருள் கூறின் அம்மை வழங்கிய பிரசாதத்துக்கு இழிவாம்.)

957. காமாரி-சிவபிரான். (காமனை அழித்தவன்) முதலிற்படு-முதன்மையாகக்கொண்ட. அணங்கினரை - தெய்வப் பெண்களை. தெய்வப் பெண்களை. மகத நாட்டவர் மானிடமாகமதித்தனர். காரணம் தேவியின்மாயையே 'மானிடன் அல்லன் என்பர்'-என்று கம்பநாடனுற் காட்டப்பட்ட மக்கள் சிலரே.

இவ்விடத்தில் கச்சியப்ப முனிவர் (காஞ்சிப் புராணம்) இரண்டாம் காண்டத்தில் தேவியின் கருணையை அழகுறப் பேசுவார். 'இரக்கம் உள்ளகத் தூற்றெழ இனையநாடனைத்தும்-சுரக்கும் நீர் உணவு ஆதியால் துயரெலாம் துரந்து-புரக்க வேண்டும் என்று உன்னினள்: போதலைத் தணந்தாள்: பரக்கும் வின்மணிச் சாலைகள் நிருமித்தாள் பலவும்'. (கழுவாய்ப்படலம். 78)

958. பொழுது-(அந்தச்)சமபத்தில். இழுதைத்தனம்-குற்றத்-

959 அறச்சா லையினுட் படுமப் பொருளின்
றிறச்சார் பதுகண் ணுறுசெய் கையினாற்
குறிச்சான் வலிதிற் கவர்கொள் கையினை
யுறச்சால் பிலரவ் வகையுற் றனரால்.

960 நெறிநீ தியிலா நிருபன் றிருநா
டுறுமா றியல்பன் றெனவுன் னிநிலா
எறுழ்மே வுவிமா னமதே றிவளம்
பெறுகா சியடைந் தனள்பே ரருளால்.

961 மலமே துமிலா வரன்மா துமையா
ளுலகோர் செயல்போற் சிலவுற் றிடுமா
றிலகா ருயிரித் திறமெண் ணில்வினைப்
பலமோ வுறுபான் மையெனப் படுமால்.

---

துடன் கூடியதன்மை. அழிதக்கவன்-அழியவேண்டியவன். ஆள-ஆட்சிபுரிய. பழுதுற்றது-வறுமை உற்றது. 'தாள் நிழல் மருங்கில் அணுகுபு குறுகித் தொழுதுமுன் நிற்குவிராயின் பழுதின்று'. (பொருநர் ஆற்றுப்படை. 149,150)

959. கொடிய மன்னவன் தேவியின் அறச்சாலையில் உள்ள பொருள்களைக்கவர ஏவலாளர்களை அனுப்பினன். பொருளின் திறச்சார்பு-பொருள்களின் வகைகள். கண்ணுறு செய்கையினல்-பார்த்தமையால் குறிச்சான்-எண்ணினன். குறித்தான் என்ற சொல் குறிச்சான் என்று வந்தது. உற-மிகுதியாக. சால்பிலவர்-பெருந்தன்மையற்றவர்கள்.

960. நெறி-நல்வழி. நீதி-ஒழுக்கம். இயல்பு அன்று-முறைமை ஆகாது. எறுழ்மேவு-வலிமைபெற்ற. 'எறுழ்வலியாகும்'. (தொல். சொல். உரியியல். 388)

மன்னன் பொருள்களைக் கவர முனைந்தபோது அவை சிறகுகள் பெற்று வானிற்பறந்து சென்றன என்றும், பின்னர் மன்னவன் திருந்தி அம்மையை வணங்கி உய்தி பெற்றனன் என்றும் கூறுவர் கச்சியப்பர். (காஞ்சிப்புராணம். இரண்டாம் காண்டம்)

961 மலம் ஏதும் இலாஅரன்-அநாதிமலரஹிதனாகிய சிவபிரான், மாது-பத்தினி. இத்திறம்-இத்தன்மை. வினைப்பலன்-நல் வினையின்பயன். ஓவுறும்-நீங்கும். பான்மை-தகுதி.

962 தருமப் பொருடா னியஙீ டியமெய்க்
கருவிச் சிறைபெற் றுயர்கா யமிசைக்
குருவித் திரள்போ லெழில்கொண் டுமையைத்
துருவிப் பெயர்வுற் றதுசூ ழலொடும்.

963 இவ்வற் புதமியா வதுமெய் தியிடக்
கவ்வைப் படுமன் னதுகண் டுமுனைச்
செவ்விப் படுநல் வினைசேர் தலினு
ணெவ்வுற் றுமனத் துநுனித் துயர்வான்.

964 அணங்கா கியதெய் வதவா யைநடுக்
குணங்கா ரணமின் றியகோ மளையா
முணங்கா வகையெய் தினளோர்ந் தவடாள்
வணங்கா மலிகழ்ந்த தென்வல் வினையே.

965 என்னத் தளர்வெய் தியெழுந் தவடன்
பின்னுற் றனனுற் றிடுபெற் றியனோ
சின்னப் படநீ ளடிதேய்ந் திடவு
முன்னிப் பலகா வதமோ டினனால்.

---

962. தருமப் பொருள் - (அம்மை) அறம் செய்யும் பொருட்டுச் சேர்த்துவைத்த பொருள். கருவிச்சிறை-பறப்பதற்குச் சாதனமான சிறகுகள். காயம்-ஆகாயம். (விண்) 'விண்என வரூஉங் காயப் பெயர் வயின்-உண்மையும் உரித்தே அத்தென் சாரியை'-(தொல். எழுத்து. புள்ளி 18) துருவி-தேடி. சூழலொடும் பெயர்வுற்றது எனக் கூட்டுக. சூழல்-இடம்.

963. கவ்வைப்படும்-பழிச்சொல் பெற்ற. செவ்விப்படு-சந்தர்ப்பம் நோக்கியிருந்த. நொவ்வுற்று-மனம் வருந்தி. நுனித்து-ஆராய்ந்து. 'நூல் வினை நுனித்த நுண் தொழிலாளர்' (பெருங்கதை. உஞ்சை, யாழ்கை வைத்தது. 143) உயர்வான்-சிறப்படையக்கருதி. வானீற்று வினை எச்சம்.

964. தெய்வதஆயை - தெய்வத்தன்மைமிக்க தாயை. யாம் உணங்காவகை-தவம் முதலானவற்றைச் செய்து நாம் வருந்தாமலிருக்கவும்' ஓர்ந்து-(பராசக்தி வந்துள்ளாள் என்பதை) ஆராய்ந்து. இகழ்ந்தது-நிந்தித்த காரணம்.

965. அவள் தன் பின்னுற்றனன்-அவளைத்தேடிப் பின்பற்றிச் சென்றான். பெற்றியனோ-தவத்தைச் செய்தவனோ. சின்னப்பட-இழிவு உண்டாக, உன்னி-நினைந்து.

966 அரக்கா யுருகித் தனடித் துணைபோய்
மரக்கா லவைகட் டிமரீஇ யினனப்
புரக்கா வலனற் புறுபொற் பதனு
லிருக்கா ரணியன் பையுமெய் தினனே.

967 காசிப் பதிமே வியகன் னிநலம்
பேசிப் பரமா னபிரா னுருவம்
பூசிப் பதுமப் பதிபுக் கநலம்
நேசிப் பதுமா கிநிலா யினளே.

968 பொன்போ லொளிர்மே னியள்பூ ரணமா
மன்பால் விசுவே சுரனு ரருள்பெற்
றென்பான் மணிமா னமதுற் றனளாய்த்
தென்பா லுறுமா திசைசென் றனளே.

969 நதியா யினகோ டிமினுர் பலருங்
கதிரார் கவரிப் படுகா லசையா
மதுரா முதவா ழிவழங் கிடவே
யதிரா சதமா கவடைந் தனளே.

---

966 அரக்காய்-அரக்கைப் போல. மரக்கால் கட்டிக்கொண்டு மன்னன் தேவியைத் தேடிச் சென்றது நம் மனத்தை உருக்கு கின்றது. புரக்காவலன் - அரசன். அற்புறு - அன்பு நிரம்பிய. இருக்கு ஆரணி-இருக்கு என்ற வேதத்தின் உட்பொருளாகிய பராசக்தி.

967. கன்னி-பரமேஸ்வரி. பவன்பிரமசாரியாகும், பான்மொழி கன்னியாகும் என்று சாத்திரம் முழங்கும். (சித்தியார்) பரமான பிரான்-விசுவநாதன். நிலாயினள்-தங்கி இருந்தாள்.

968. பூரணம் ஆம் அன்பு-நிரம்பி முற்றிய அன்பு. மணி மானம்-மணிகள் பதித்த விமானம். விமானம் என்ற சொல்லின் முதற்குறை. 'இரண்டு மானமும்' இலங்கை மாநகரமும் இழந்து போனுன்'. (கம்பநாடகம். யுத்த. இலங்கை கேள்வி. 56 )

969. நதியாயினமினுர்-நதிகளாகிய பெண்கள். கதிரார்-ஒளி நிரம்பிய. கால்-காற்றை. அசையா-அசைத்து. மதுர அமுத(ம்) ஆழிவழங்கிட-இனிய அமிர்தத்தைக் கடல் கொடுக்க. அதிராசத மாக-மிக்க ராஜஸகுணத்துடன் (ஆடம்பரமாக)

970 அரம்பைத் திருமா மகளா தியராய்
வரம்பெற் றுயர்தெய் வதமா மடவார்
பரம்பப் பரதப் படிபா டனடம்
விரும்பிப் பரிவோ டுமைமே வினளே.

வேறு

971 செம்ப யோதர மாதர் திரளெலாம்
வம்பு லாமலர் கொண்டு வழிபட
வும்பர் துந்துமி யேயொலி மீக்கொள
வம்பை மேவி யடைதரு மெல்லையில்.

972 அன்னை பூசனை யாற்றிட மேவுவாள்
பொன்னு லாவுரு காஞ்சி புரத்தென
மன்னு மோகை வழங்கி யெழுந்தரன்
முன்ன மான புவன முழுதினும்.

---

970. வரம்பெற்று-தேவியினிடத்தில் வரத்தைப் பெற்று. பரதப்படி-பரதசாஸ்திரப்படி. பால்-பக்கத்தில். பரம்ப-விரிவாக. விரும்பி-ஆசையொடுபார்த்து.

971. செம்-செம்மையான. பயோதரம்-கொங்கை. 'பஞ்சார் அமளிப் பிரிதலுண்டோஎம் பயோதரமே' (திருக்கோவையார், பரத்தையர்ப் பிரிவு. 27) வம்புலாமலர்-மணம் நிரம்பிய பூக்கள். 'வம்புலாம்சோலை மாமதிள் தஞ்சை- (பெரிய திருமொழி-முதற் பதிகம்) மீக்கொள-அதிகரிக்க. அம்பை-பார்வதி.

972. இப்பாடல் விளக்கம் பெறவில்லை. சரியான பாடம் கிடைக்கவில்லை. அன்னை காஞ்சியில் தவம்புரிகிறுள் என்று சிவ பிரான் புவனம் முழுவதிலும் இருந்து நீங்கி காஞ்சிபுரத்தை அடைந்தான். அன்னை, பூசனையாற்றிடக் காஞ்சிபுரத்து மேவு வாள் என அரன், புவனம் முழுதினும் ஓகை வழங்கி, எழுந்து என மாற்றுக. எழுந்து என்பது முற்று. பாவைப் பாடல்களில் பின்வரும் சொல்லைப்போல் கொள்க. மார்கழி நீராட மகிழ்ந்து. என்ற இடத்தைச் சொல்லாராய்ச்சி கொண்டு பொருள் காண்க. திருமால் நம்மாழ்வார் வந்த நிலையை இங்ஙனம் விளக்கினுர். (திருவாய்மொழி 167. ஈட்டுரை காண்க)

973 தங்கள் வெங்குறை தீரத் தனித்தனி
யெங்கண் மாநிழ லாளரை யேத்தியே
துங்க மும்பத மும்பெறு தூயராம்
பங்க யத்தவி சோன்முதற் பண்ணவர்.

974 யாரு மோரிடை யெண்ணி யடைந்தனர்
பேரு லாவு மளகைப் பிரான்றனைச்
சீரி தாகிய தெய்வதத் தச்சனைப்
பார மாக விளித்துப் பகருவார்.

975 அகில காரணி யாமெம் பிராட்டியே
சகல மாருயி ருய்தரு தன்மையா
னிகரில் காஞ்சி நிருமலன் பூசனை
விகல மின்றிப் புரிதர மேவுவாள்.

976 தேவ நாயகி சேர்தர வந்நகர்
நீவி ரேகி நிலைப்படு பேரணி
யோவி லாமலு ஞற்றிநீ ருய்ம்மினென்
றேவி னார்நல மென்றவ ரேகினர்.

---

973. வெங்குறை-விருப்பமான மனக்குறை. 'தம்குறை தீர்வுவுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம் - வெங்குறை தீர்க்கிற்பர் விழுமியோர். (நன்னெறி. 10) தீர-நீங்க. மாநிழலார்-மாமரத்தின் நிழலில் இருப்பவர். (ஏகாம்பரநாதர்). துங்கம்-உயர்வு. பங்கயத் தவிசோன்-தாமரை மலரை ஆசனமாகக் கொண்ட பிரமன்.

974. ஓரிடை-ஒரு இடத்தில். 'எவ்வாய் மருங்கினும் இடையறக் குழீஇ'. (பெருங்கதை. உஞ்சை. 38. 84) அளகைப்பிரான்-குபேரன். தெய்வதத்தச்சன் - விஸ்வகர்மா. பொருள் நல்கக் குபேரனும், பணிசெய்யத் தச்சனும் வேண்டியிருத்தலின் இங்கு அவ்விருவரும் அழைக்கப்பட்டனர். பாரம்-பெருமை.

975. அகிலகாரணி-எல்லா நிகழ்ச்சிகளுக்கும் காரணமாக இருப்பவள். விகலம்-வேறுபாடு.

976. நிலைப்படு-நிலையான. ஓவிலாமல்-ஒழிவில்லாமல். உஞற்றி-செய்து. 'உற்ற தந்திரத்தால் முறை பூசனையுஞற்றல்'. (பாகவதம்- 11. ஆம் கந்தம். 10. பூசனை. 4) உய்ம்மின்-வாழ்வு பெறுங்கள்.

977 ஒருகு பேர னுயர்மய னென்பவ
ரரிய தாக வலங்கரித் தேர்செயப்
புரியெ லாம்புகழ் தக்க புரியது
திருவு பேரணி யாற்சிறு மைத்ததே.

978 பிரம லோகம் வைகுண்டம் பெரும்பொனாற்
புரியி னுடு புரப்பவர் யாவருந்
தரணி மீதுவந் தந்நகர் சார்ந்துபின்
மரியி னரப் பதமுறும் வானுமே.

979 அன்ன வர்க்கெலாம் அப்பத மவ்வர
சின்ன விற்படா தீய்ந்தவ னெம்பிரான்
றன்ன தின்னரு ளானற் சமைந்ததிப்
பொன்ன கர்ப்பதி யென்னும் புராணநூல்.

980 திருவி னுயகன் சேனைப் பெரும்பிரான்
வரச ரோருகன் மந்திர நாயகன்
பரசு பாணிப் பரன்றனி மாநிழல்
அரசு வீற்றிருக் கின்றதம் மாநகர்.

---

977. அலங்கரித்து ஏர்செய்து – அலங்காரம் செய்து நன்மையை உண்டாக்கி. ஏர்–நன்மை. 'ஏர் அளவில்லா அளவினர் ஆகுவர் ஏந்திழையே' (திருக்கோவை. ஓதற்பிரிவு 1) பேராசிரியர் ஏர் என்பதற்கு நன்மை என்று உரை கூறினர். புரிஎலாம்-அரச நகர்யாவும். புகழ்தக்க - புகழத்தக்க. புரி-இந்திரன்நகர், சிறுமைத்து-இழிவு பெற்றுவிட்டது. காஞ்சிபுர அலங்காரத்தால் இந்திரனின் நகரும் சிறுமை உற்றது.

978. பொன்னுல்புரி இன் நாடு-தேவலோகம். தேவலோகத்தைப் பொன்நாடு என்பது புராண மரபு. மரியினர்-மறந்துவிட்டனர். (திசைச் சொல். தெலுங்கு). அந்நகர் சார்ந்துபின் பதமுறும் வானும் மரியினர் என்க.

979- அன்னவர்க்கு-பிரமன் முதலானவர்களுக்கு. ஈய்ந்தவன்-கொடுத்தவன், 'கணங்களுக்கரசு நல்கிக் கயிலையும் காணியீய்ந் தான்'. (சங்கரவிலாசம் பிருங்கிபிரதெக்கணம். 81) இன் அருளால் நற்சமைந்தது எனப்பிரிக்க. நகர்ப்பதி–நகரக்கோவில்.

980. சேனைப்பெரும்பிரான்-தேவ சேனாதிபதியாகிய முருகன், சரோருகன்-தாமரையினில் வீற்றிருக்கும் பிரமன். மந்திரநாயகன்-

981 சொற்ப ழித்துச் சுரரிடை யிற்பொலி
கற்ப கத்தருக் காவின் புறனெலாம்
அற்ப கற்பட லாற்பசுங் காய்கனி
யுற்ப வித்தெப் பருவமு மோங்குமால்.

982 அள்ள லங்கழ னிக்கமு காடவி
யுள்ளி லங்குபைங் காய்பழுக் காயுதிர்
வெள்ள மங்கண் விரவவிண் ணுடியர்
தள்ள ரும்மனை யென்னத் தயங்குமால்.

983 நெடிய தென்னை வான்நிமிர்ந் தேகிவான்
றொடவு யர்ந்து பழுக்குலை தூங்கலில்
உடுவு லாவுல கோர்கடம் மாளிகைக்
கடிகொள் பொற்குட மென்னக் கவிப்பரால்.

984 நாக நீடு நறுமலர்த் தேனிறூல்
மாக மீது மிளிர்தர வான்மதி
யேகி யெம்பத மெம்மனை யோர்பத
மாக வுற்றது கொல்லென வையுறும்.

---

விநாயகப்பிரான். (மந்திரங்களுக்குத் தலைமையாக இருப்பது ஓங்காரம். ஓங்கார வடிவமாக இருத்தலின் விநாயகன் மந்திரப்பிரான் என்று கூறப்பட்டனன். பரசு-மழு. 'பரசு பாணியைப் பத்தர்கள் அத்தனை' (ஞானசம்பந்தர் தேவாரம். 2 ஆம் திருமுறை) தனிமா-ஒற்றை மாமரம்.

981. சொல்-புகழ். சுரர் இடையில்-தேவர்களுக்கு நடுவில். அல்பகல்பட-இரவுப் போதிலும ஒளி உண்டாக. எப்பருவமும் காய்கனி உற்பவித்து ஓங்கும் என்க.

982. அள்ளல்-சேறு. கழனி-வயல். கமுகாடவி-பாக்கு மரத் தோட்டம். பைங்காய் - பச்சைக்காய். பழுக்காய்-பழுத்தகாய். வெள்ளம் - மிகுதி. விண்ணுடியர் - தேவலோகத்தவர். தள்ளரும்-ஒதுக்க முடியாத. தயங்கும்-விளங்கும்.

983. வான் நிமிர்ந்து - ஆகாயம் அளாவி. பழுக்குலை - பழுத்த குலைகள். உடு உலாவு உலகோர்கள்-நட்சத்திரங்கள் இயங்கும் விண் உலகத் தேவர்கள். பொற்குடம் என்ன பழுக்குலைகளைக் கவிப்பர் என்க.

984. நாகம்-தேவலோகம். மலர்த்தேன் இறூல்-மலரிலிருந்து ஈட்டப்பட்ட தேன்நிரம்பிய தேன் கூடுகள். எம்அனையோர்பத

985 பொதுளு மாப்பல பூங்கத லிக்குழு
கதிர்கொள் வானள வோங்கிக் கனித்தொகை
சிதற விண்ணிடைப் பண்ணவர் சேர்வுறீஇச்
சுதையி னுசை வெறுத்துச் சுவைப்பரால்.

986 தண்டு லக்கதி ரிற்படு சாலிகள்
விண்ட லத்தெழு வீக்கம் பலபல
மண்ட லத்திர விக்குவெண் சாமரை
யெண்டொ கைப்பட தீட்டிய போலுமால்.

987 இரவி திங்க ளெழுமிரு போதினு
முரவி தாக வலர்ந்திடு முற்பல
மரிய பங்கய மங்குமு தங்களிற்
பெரிய வற்புதம் பின்னெவ ணுண்டரோ.

988 இட்ட ஞான்று வளர்ந்தெழுந் தேகியே
மட்டு வீசும் மலர்ப்பசுங் காய்கனி
பட்டு மேன்மை பலிக்குந் தருவெலா
மட்ட திக்கிலிவ் வற்புத முள்ளதோ.

---

மாக-எம்போன்றவர்களின் பதவியாக, (சந்திரபதவி). உற்றது கொல்-பொருந்திற்றே. ஐயுறும்-சந்தேகம் கொள்ளும்.

985. பொதுளும்-நெருங்கும். 'பொன்மலர் பொதுளிய சின் மலர் பழிச்சுதும்' (மதுரைக் கலம்பகம் 1). கதலி-வாழை. சேர்வு றீஇ-ஒன்று சேர்ந்து. சுதை-அமுதம். மாங்கனியையும், வாழைக் கனியையும் உண்டு அமுதத்தையே வெறுப்பார்கள். காஞ்சிபுரத் தின் மண் வளம் கூறிற்று.

986. கதிரில் தண்டுலம்படு சாலிகள்-கதிர்களிலே அரிசியைப் பெற்ற செந்நெல்கள். தண்டுலம்-அரிசி. 'தருமணல் மணிமுத் தாகத் தண்டுலம் இயற்றி' (சூளாமணி. 10. 277) சாலி-செந்நெல். 'சாலி மேவினர் பலரே: பலர் அதன்-வாலிய விந்துவும் மருவா தோரே' (ஞானமிர்தம். 20) வீக்கம்-மிகுதி. இரவிக்கு-சூரியனுக்கு. ஈட்டியபோலும்-தொகுத்துவைத்தாற் போலத் தோன்றும். சாலி கள் இரவிக்குச் சாமரை ஈட்டிய போலும் என்க.

987. இரவி-சூரியன். உரவிதாக-வன்மையுடன். பகலிலும் இரவிலும், நீலோற்பலம், பங்கயம், குமுதம் மலரும் அற்புதம் எங்கு உண்டு. எவண்-எங்கு.

988. விதைகள் இட்டதும் வளர்ந்து எழுந்து, மலர், காய்,

989 கொய்து கொய்து குவித்திடப் பின்னரு
மைது போதிற் பசும்பயி ராய்விளைந்
தெய்து நன்னெல் முதலிய யாவையுஞ்
செய்யின் வண்மை தெரிக்கப் படுபவோ.

990 நல்ல மாமறை மாநடுச் சுற்றுறு
மெல்லை யைந்தனி யோசனைப் பாலது
தொல்லை மாமதில் சூழ்ந்த துயரறு
மல்லல் ஞாலம் வளாய்மலை யென்னவே.

991 இறுதி நீத்தமங் கெய்தப் படாவகை
நிறுவு பேரணை யென்னநி லாவிடும்
மறுவில் கால வரையறை யின்மையால்
உறுதி யும்முயர் வுஞ்சொல வோண்ணுமோ.

992 மணிப்பொ ளூர்தரு வாயில்க ளுன்கினுங்
குணிப்பி லாருயிர் வெள்ளங் குலாவுறும்
தணிப்பி லாதயன் றன்முக நான்கினும்
பிணிப்பி லாது பிறத்தலை மானுமே.

---

கனி, பட்டு மேன்மை பலிக்கும் தரு அட்டதிக்கில் உள்ளதோ? இட்டஞான்று-ஊன்றியபோதே. ஏகி-மேல்நோக்கி வளர்ந்து. மட்டு-வாசனை. பட்டு-உண்டாகி. 'நாளின் வித்தும் அன்றே பயன் நல்கும் ஓர் கழனி' (காஞ்சி. விம்மிதம். 9)

989. கொய்து கொய்து-அரிந்து அரிந்து. ஐதுபோதில்-சில நிமிடங்களில். செய்யின் வண்மை-வயல்களின் வள்ளல் தன்மை. வயல்கள் அரிய அரிய நெல்விளையும் அதிசயம் சொல்லில் அடங்குமோ? என்கிறார் ஆசிரியர். 'மீள மீளநெல் அரிதொறும் விளைவதோர் பழனம்'. (காஞ்சி. விம்மிதம். 9)

990. மறைமா-வேதமாகிய மாமரம். ஐந்தனியோசனை-ஐந்து யோசனை தூரம். மதில், ஞாலம் வளாய் மலை என்னவே சூழ்ந்த என்க. மதில் உலகைச் சுற்றி உள்ள மலைகள் போல் உள்ளன.

991. இறுதி நீத்தம்-பிரளய வெள்ளம். நிறுவு-நிர்மாணிக்கப் பட்ட. (நிறுத்தி வைக்கப்பட்ட) அணை-கரை. 'உவகை வெள்ளம் ஆர்வத்தால் அணையை நூக்கிச் சென்றவர் வெள்ளம் போலும்' (பெரியபுராணம். திருஞானசம்பந்தர், 723) காலவரையறை-கால எல்லை. உறுதியும் உயர்வும் மதிலின் இலக்கணம். உயர்வு, அகலம், திண்மை, அருமை இந்நான்கின்—அமைவரண் என்றுரைக்கும் நூல்' என்று அரணியல் கூறும். (திருக்குறள். 743)

992. வாயில்கள்-கட்டடத்துள் நுழையும் இடம். இல்லின்

993 நிதியி ளுனணி யால்வெள்ளி நீர்மையால்
வதியு மண்டப மாளிகை சூளிகை
புதிய தாகும் புராதன மாயினும்
பதியி ளுயிரம் வீதி பயிலுமால்.

994 குறிய வீதி குணிப்பிலே யவ்விடை
நறிய பூந்தொடை பொற்சுண நானநெய்
பொறிகொள் மாமணிப் பூணணி யாவையும்
வெறுநர் வீசிய வெள்ளிடை யெங்கணும்.

வேறு

995 மல்ல லாவணங் காண்வரு மகபதி யொருகால்
நல்ல தாயதன் சின்னதச் சரக்கறை நாடி
யில்லை யிவ்வள மெனக்குறை யாவு மிவ்விடையே
யொல்லை யேகொணர்ந் தேகின னிரப்பின னுவந்தான்.

---

வாய் போன்றது ஆதலின் இல்வாய் என்று வழங்கப்பட்டு வாயில் என்று முன்பின்னுக மாறியது. இன்று வாசலாக உருப்பெற்று வேறுபொருள் தருகிறது. வாயில்களில் மக்கள் வெளிவருவது நான்முகனின் நான்கு வாய்களிலிருந்து மக்கள் பிறப்பதைப் போன்றுள்ளது.

மணி, பொன் ஆர் தருவாயில்-மணிகளும் பொன்னும் நிரம்பிய வாசற்படிகள். குணிப்பில்-குறிக்கமுடியாத. தணிப்பிலாது-எண்ணுக்குள் அடங்காமல். பிணிப்பு இலாது-கட்டுப்பாடு இல்லாமல். மானும்-ஒக்கும். 'வீரன்மேனியை மானுமிவ் விங்குநீர்'. (கம்பநாடகம். சுந்தரகாண்டம்).

993. நிதி-செல்வம். அணி-அலங்காரம். வெள்ளிநீர்மை-தூய தன்மை. சூளிகை-செய்குன்று. 'மலையுறழ் கோபுரம் மன்றம் சூளிகை-நிலைகெழு செய்யதேர் நிழற்று மண்டபம்'. (கந்த. உற்பத்தி. 8. 7) புராதனமாயினும் புதியதாகும் எனமாற்றுக. புராதனம்-பழையது. காஞ்சிபுரம் ஆயிரம் வீதிகளைக் கொண்டது.

994. குறியவீதி-சந்துகள். தொடை-மாலை. சுண்ணம்-வாசனைப் பொடி. நானம்-கஸ்தூரி. 'நானநீர் கலந்து உகுத்தமாலை' (சூளாமணி. 506) வெறுநர்-வெறுத்தவர்கள். வெள்ளிடை-வெற்றிடம். வீசிய-வீசப்பட்ட பொருள்களே உள்ளன.

995. காண்வரு-கண்டுவந்த. மகபதி-இந்திரன். நல்லதாய் அதன் சின்னது அச்சரக்கறை எனப்பிரிக்கவும். சரக்கறை-

996 அருண மாமணி மாளிகை விளங்குத லகில
வருண மேருவே முதலிய வரைகடம் மரபிற்
கருணை கூர்தரு முமைதவம் புரிவது காண்பான்
புரண மாமிவண் மருவிய வாமெனப் பொலியும்.

997 வழாப்பெ ருஞ்சுரு திக்கலிப் பொற்பணி மணியாழ்க்
குழாப்ப டின்னிசை முதற்படு மியம்பல முழங்க
விழாப்பொ லிந்துயா ணர்க்கட வுட்பெரு விமானக்
குழாத்து நீடிய பதினறு யிரஞ்சிவன் கோயில்.

998 பனக மெய்ப்பணு டவிக்குல மணியிழை படுமா
கனக முற்றுறு சித்திரப் பித்திகை கவினி
யனக முச்சிகைச் சக்கரப் படையினே னமருஞ்
சினக ரத்தொகை பன்னிரா யிரமவண் சிவணும்.

---

பொருள் வைக்கும் களஞ்சியம். 'சிவந்த ஆடிய பொடி நீறும் சிரமாலை சூடி நின்று-தவம் தான் இருக்கும் சரக்கறையோ என் தனி நெஞ்சமே' என்று திருநாவுக்கரசர் திருவாய்மலர்ந்தருளினர். (சரக்கறைத் திருவிருத்தம். 112. 11) குறையாவும் - தன்பால் இல்லாத பொருள்கள் யாவற்றையும். ஏகினன், நிரப்பினன், உவந்தான் என்க.

996. மாளிகைகள், மலைகள் யாவும் தங்கள் மரபில் அவதரித்த உமையம்மையின் தவத்தைக் காண வந்தாற்போல் உள்ளன. அருணம்-செந்நிறம். அகிலம்-உலகில் எங்கும் உள்ள. காண்பான்-காணும் பொருட்டு. புரணமாம் இவண்-நிறைவான இந்த இடத்திற்கு. மருவியவாம் என-வந்து தங்கினாற்போல.

997. சுருதிக்கலிப்பு-வேத முழக்கத்தின் எழுச்சி. பணி மணி-நாகரத்தினம் பதிக்கப்பட்ட. குழா-கூட்டம். முதற்படும் இயம் - முதன்மையான இசைக்கருவி. கடவுட்பெருவிமானக் குழாத்து-தெய்வத்தன்மை பெற்ற விமானக் கூட்டங்களின் நடுவில். பதினாறு ஆயிரம் சிவன்கோயில் காஞ்சியில் உள்ளன. (காஞ்சிப்புராணத்திற்கு சிவத்திரு. வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முதலியார் வரைந்த முன்னுரை காண்க.) பதினறுயிரம் என்பது பதினாறுயிரம் என யாப்பு நயம் கருதிக் குறுக்கப்பட்டது.

998. பனகம்-பாம்பு பணஅடவி-படவரிசை. கனகம்-பொன். சித்திரப் பித்திகை-அழகியசுவர். அனகம்-தூய்மையான. முச்சிகை-மூன்று நெருப்புக் கொழுந்தைப்பெற்ற. அமரும்-விரும்பும். சினகரம்-கோவில். சிவணும்-பொருந்தியிருக்கும்.

999 மலைய மாமிப முகநிசா சரன்பெரு மரபோ
டுலைய மோதுமோ ருலவையிற் பாரத வுரையைச்
சிலைய மேருவி னெழுதிடு விநாயகச் செம்மல்
நிலைய மாகவே யலரியிற் பொலியுமோர் நியுதம்.

1000 மறவர் வற்கமெய்ப் புனிதமாம் பொருட்டவண் மருவுஞ்
சிறுமி பத்தினிப் பிராட்டி தன் னருள்வெள்ளத் திவலை
பெறும தற்கட விக்குளே திரிதரு பெருமை
யறுமு கப்பிரா னிலையமா ருயிர மதன்கண்.

1001 மூலி யாமறப் பயிரினை நிசாசர முசுக்கள்
கோலி யார்தரா வகைசுடர் முத்தலைக் கொலைவேற்
சூலி யாய்ப்பெருந் தாருகற் காய்ந்திடத் தோன்றும்
நீலி யாலைய மாகவை யாயிர நிலவும்.

1002 வைய மேலுயிர் மையலைச் சேர்தர வலியே
செய்ய மேவுபை சாசமே முதலிய சினக்கு
மைய ஞகிய வரிகர புத்திர னமருஞ்
சைய நேர்சின கரமுநாற் பான்படு சதகம்.

---

999. இபமுக நிசாசரன் - கஜமுகாசுரன். மரபோடுஉலை-வமிசத்துடன் அழிய, ஓர்உலவையில்-ஒற்றைக் கொம்பால். 'தாம மால் ஓடையானைத் தரளநீள் உலவை என்றும்' (காஞ்சிப்புராணம். இரண்டாம் காண்டம். கழுவாய்ப்படலம். 397) அலரி-சூரியன். நியுதம்-இலட்சம்.

1000. மறவர்வற்கம் - வேடர் கூட்டம். சிறுமி பத்தினிப் பிராட்டி-வள்ளிநாச்சியார். அருள்வெள்ளத்திவலைபெறும் அதற்கு-அருட்கடலிலே ஒரு சிறு திவலையைப் பெறுவதற்காக. அடவிக் குளே-காட்டின் கண்ணே. வள்ளிநாச்சியார்பால் முருகன் கொண்ட காதல் பேசப்படுகின்றது. 'சுனையோடு அருவித்துறையோடு, பசுந்-தினையோடு இதணோடு திரிந்தவனே' (கந்தர் அனுபூதி. 40) 'காடும் புனமும் கமழும் கழலே' (அனுபூதி, 44)

1001. மூலியாம் அறப்பயிரினை-மருந்தாக இருந்து உதவுகின்ற தர்மமாகிய பயிரை. நிசாசரர்-அரக்கர்கள். முசுக்கள்—கருங்குரங்குகள். கோலி—சூழ்ந்து. ஆர்தராவகை-உண்ணமுடியாதபடி. சூலியாய்-சூலத்தை ஏந்தியவளாய்; நீலி-காளி. 'சூலி நீலி மாலவற் கிளங்கிளை' (சிலம்பு-மதுரை. வேட்டுவவரி. 68)

1002. மையலைச் சேர்தர-மயக்கத்தையடைய. பைசாசம்-

1003 சித்தி ரித்துவெண் பளிங்கறுத் தடுக்கியே செறித்த
பித்தி கைத்தொகை மீப்படு பான்மணி பெற்ற
கைத்தி ருத்துமூ விலைப்படை வெற்றரைக் கடவு
ணித்தி யப்படு முத்திறத் தாயிர நிலையம்.

1004 இரவி யாலயந் திருமகள் கலைமக ளிருக்கை
யுரவு வாட்படை காளிகோட் டம்மெனு முறையுள்
விரவி யாயிர மாயிரம் பரவியே விளங்கும்
பரவு மப்பதி நிலையத்தின் குணிதமார் பகர்வார்.

1005 பொன்னு மாமணி குயிற்றிய புராதன நிலைய
மின்ன பான்மையி னுலப்பிலா வகையினு லிலங்குங்
கன்னி மாமதிற் பதியிது வன்றியே ககனத்
துன்னு பாதலத் தவனியின் மற்றும் வேறுளதோ.

1006 சாதி வேதியர் புரவலர் வணிகரே சதுத்தர்
பேதி யாவனு லோமரே பிரதிலோ மப்பேர்
ஏதி லாவந்த ராளரே விராத்திய ரென்பர்
நீதி யாவையும் பிறழ்தரா துரைப்படி நிற்போர்.

---

பிசாசு. முதலிய-முதலானவற்றை. ஐயன்-சாஸ்தாவின் பெயர். 'ஐயன்பாழியில் யானை போர்க்கு உரித்தாம் அன்றுயிற்று'. (திருவாய்மொழி. முதற்பத்து. 5 நம்பிள்ளை ஈடு) சையம் நேர்-மலை போன்ற. சினகரம்-கோவில். 'தேவர் வாழும் சினகரம் முன்னரும்' (பிரம்மோத்தரம். வஞ்சனை. 15)

1003. சித்திரித்து-அலங்காரம் செய்து. பித்திகை-சுவர். கைதிருத்து-கைப்பயிற்சி பெற்ற. வெற்றரைக் கடவுள். (நிர்வாணமாயுள்ள) வைரவமூர்த்தி. நித்தியப்படும்-நித்தியப்பூசை நடக்கின்ற.

1004. இரவியாலயம் - சூரியன் கோவில். இருக்கை-இருப்பிடம். உரவு-வலிமை. காளிகோட்டம்-காளியம்மையின் கோவில். நிலையத்தின் குணிதம்-கோவில்களின் எண்ணிக்கை.

1005. பொன்னும் மாமணி குயிற்றிய-தங்கத்தாலும் மாணிக்கத்தாலும் செய்யப்பட்ட. 'பொன்னினும் மணியினும் குயிற்றி' (ஞானாமிர்தம். 13) உலப்பிலா வகை-அளவுகடந்த பிரிவுகளை உடையதாய். 'குடைந்து உலகு அனைத்தையும் நாடும் கொப்பினல் மிடைந்தவர் உலப்பிலர்' (கம்பநாடகம். சுந்தர. உருக்காட்டு. 23) ககனத்து-விண் உலகத்திலும், பாதலத்து - கீழ்உலகத்திலும். அவனியின்-பூமியின்கண்ணும். வேறு உளதோ-(சிறப்பாக) வேறு ஒன்று உள்ளனவா?

1006. சதுத்தர்-வேளாளர். அனுலோமர்-உயர்குல ஆட

வேறு

1007 முன்னமே யெம்பெருமா னிப்பதியைத்
தன்னதருண் முழுது மாக
இன்னிலமே லமைத்திடுநா ளைங்கோணச்
சக்கரத்தி னியல்ப தாக
வுன்னியே யமைத்தனனன் னீர்மையினுற்
றிசைமயக்க முற்று மேவுங்
கன்னிமா னகர்ச்சங்குத் தாபனஞ்செய்
தம்பமது கச்சிக் கல்லே.

வேறு

1008 இரவிலே யிரவி யாயு
மிரும்பகன் மதியம் போன்றும்
பரவுமோர் தீபம் பின்னர்ப்
பகலெலா மிரவே யாயும்
வருமிராப் பகலே யாயும்
வழங்கிடு மிரண்டு தானந்
தரணியோர்க் கன்ன நன்னீர்
தருமொரு தெற்றி தானே.

---

வனுக்கு இழிகுலப் பெண்ணிடம் பிறந்தவர்கள். பிரதிலோமர்—உயர்குலப் பெண்ணுக்கும் இழிந்தகுல ஆடவனுக்கும் பிறந்தவர்கள். பிரதிலோமத் தந்தைக்கும் அனுலோமத் தாய்க்கும் பிறந்தவர்கள் விராத்தியர். அனுலோமத் தந்தைக்கும் பிரதிலோமத் தாய்க்கும் பிறந்தவர்கள் அந்தராளர் பிறழ்தராது-மாறுபாடு அடையாதபடி.

1007. இந்நிலமேல்-இந்தப் பூமியின்கண். ஐந்து கோணங்களுடன் கூடிய சக்கரத்தின் தன்மை பொருந்த. நன்னீர்மை-நல்ல பண்பு. சங்குத்தாபனம்-சங்கை அடியில் வைத்து ஸ்தாபித்தல். தம்பம்-தூண். கச்சிக்கல்லின் விளக்கம் கூறப்பட்டுள்ளது. திசை மயக்கம் காஞ்சிபுரத்தில் உண்டாகும் என்று புராணம்பகரும்- ‘மேவினர்க்குத்திசை மயக்கம் எய்தும் ஒன்றில்’ (காஞ்சிப் புராணம். முதற்காண்டம். விம்மிதப்படலம். 14)

1008. இரவியாயும்-சூரியனுகியும். மதியம்—சந்திரன். தானம்-இடம். தரணி-பூமி. தெற்றி-திண்ணை. ‘ஊங்கு அணைந்தவர்க்கு அமுதுநீர் உதவிடும் ஒன்று-தெற்றியும் உளவாம்’ (விம்மிதம். 8)

1009 ஊமரைப் பேசச் செய்ய
ஓர்தெற்றியு லோபர் மேவிற்
சேமமாய் நகைக்குத் தெற்றி
யென்றிவை தெற்றி மூன்றும்
பாமணி யுத்தி பெண்ணை
வேங்கடம் பவளக் குன்ற
மேமத்தா லிவைதீ மைப்பா
லிறங்கிடா வரணம் நான்கே.

1010 நிருமலத் தனிமா வொன்ற
னீழல்நாட் பறவை யாவுஞ்
சுருதியின் பொருள்வி னைய
சொற்றிடு முனிவர் தேறத்
திருமலர் காயி லாதோர்
புளிசெழுங் கனியே நல்கு
மரிதது துய்த்தோர் யாரு
மணிமாதி சித்தி சேர்வார்.

1011 மருமலர்ப் பேதம் யாவு
மலருமோர் மதூகம் பொற்பூ
விரிதரு மத்தி யத்தை
மிலேச்சி னெருமப ராவர்
பெரிதது தவனைச் சூழ்ந்த
தன்னிழற் பிரியாக் காஞ்சித்
தருவிவை யஞ்சுந் தெய்வத்
தருவினுக் குதவும் வண்மை.

---

1009. ஊமர்-ஊமைகள். உலோபிகள்-கருமிகள். 'மூங்கை பேசவும் பேசினேன் மூங்கையாய் உறவும்-ஆங்கு அளிப்ப தொன்று' (விம்மிதம். 8) பாமணி-பரவிய மாணிக்கம். உததி-கடல். பெண்ணை-பெண்ணையாறு. ஏமத்தால் - பாதுகாப்பினாலே. அரணம்-மதில்.

1010. நிருமலத்தனிமா-தூய ஒற்றை மாமரத்தில். நாள்-அதி காலையில். 'நாட்காலே நீராடி' (திருப்பாவை) வினைய-கேட்கும் ஐயங்கட்கு. சொற்றிடும் - விடைகூறும். ஓர்புளி, மலர், காய் இலாது கனி நல்கும். அரிது அது-கிடைப்பதற்கு அரிதான அதனை. சித்தி எட்டுவகைப்படும். 'பூவாவது காயாது கனிகள் நல் கும் பூம்புளி'. (காஞ்சி. விம்மிதம். 11)

1011. மலர்ப்பேதம்-பூ வகைகள், மதூகம்-இருப்பை மரம்.

1012 மணிகளா மெவையு நல்கும்
வளம்பெறு மன்னம் பின்னைக்
கணிதநூ லுரைக்கு மாந்தை
காசினி தனிலே யும்ப
ருணவினை யுதவு மங்கோர்
சாதக முரைக்கு மேன்மை
பணிபட நூல்கள் யாவும்
பகர்ந்திடுங் கிள்ளை யொன்றே.

1013 குறைவரிற் புவிக்கந் நாளிற்
கூவிடா திருக்குங் கோழி
யுறைபுனல் வறந்த நாளி
லார்த்துவா னழைக்கு நேமி
முறைபடு பறவை யாறு
முதிரறி வளிக்குங் கம்பை
பறையொலி யெந்த நாளும்
வழங்கியே முழங்கும் பம்பை.

---

'நீதிமா மதூரக நீழல் நெட்டிலையிருப்பை என்றோர்—காதல் கூர்பனுவல் பாடும் கபிலன்' (பழைய திருவிளையாடல். ஞனோபதேசம். 3) 'பல்வகைப் போதும் தரும் மதூரகம்' (காஞ்சி.விம்மிதம். 11) பூவிரி தரும்-பூமலரும். அத்தி-அத்திரம், (அத்தி பூவாது. பூவாது காய்க்கும் மரமுமுள என்று சான்றோர் கூறியது இதனையே. 'அத்தி மலரும் அருங்காக்கை வெண்நிறமும்' என்று வழங்கும் பாடல் யாரும் அறிந்ததே.) 'தாவாத செம் பொன்மலர் அத்தி ஒன்று'. (காஞ்சி. விம்மிதம். 11) மிலைச்சினோர்-அணிந்தவர். நிழல் பிரியாக்காஞ்சி-நிழல் காலையிலும் மாலையிலும் மரத்தை விட்டு விலகி இருக்கும். இந்தக் காஞ்சி மரம் அப்படிப்பட்டதன்று.

1012. மணிகளை அன்னம் நல்கும். கணித நூல்-கணக்கு நூல். உம்பர் உணவு-அமிர்தம். மேன்மை பணிபட-செருக்குத்தணிய. கிள்ளை-கிளி. 'கிள்ளை அடையாத-பெரியதனம் வீண் அன்றோ பேசாய்' (அழகர் கிள்ளை விடு தூது. 32) 'மறை நூல் எல்லாம் எய்யாமையின்றி உணர்கிள்ளை ஏனைக் கணித நூல் எனைத்தும் எடுத்துரைக்கும் ஆந்தை' (காஞ்சி-விம்மிதம். 13.)

1013. குறை—தீமை. உறைபுனல்-துளிக்கும் தண்ணீர். வறந்த நாளில்-வற்றிய காலத்தில். வான்-மேகம். நேமி-சக்கரவாகப் பறவை. மழையை வரவழைக்கும் பறவை மயில் என்று காஞ்சிப்புராணம் கூறும். பெய்யாத காலத்தின் அகவிக் கொண்மூ

1014 ஆடிலக் கணமே பூமான்
அருடரு மஞ்ச ணன்னீர்
கூடிய வுததி வண்மை
கொடுத்திடுஞ் சிப்பி மூழ்கிற்
பீடுபொன் மயம தாக்குங்
கலிச்சிமுற் பிறப்பி னுண்மை
நாடியே யுதவு மன்றி
நற்கவி யருளும் வெஃகா.

1015 எழுநதி யிவையத் தேவ
ரிசைத்திடு மொழிகள் கேட்குந்
தொழில்பட நாளுந் தெய்வத்
துந்துமி முழங்கு மன்ற
மழிவுறு முயலொன் றானை
யணைந்திடிற் றுரத்து மன்ற
மொழிவறப் பாதா ளத்தி
னுரையெலாம் வினவு மன்றம்.

1016 வானவ ருலகங் காட்டும்
வழங்குமே ழிசையின் றன்மை
தானவின் றருளும் புக்கோர்
தமக்குவே றுருவு நல்கு
மானதோர் தெய்வ ஞான
மளித்திடு மன்ன தான
பான்மையெண் பொதுவா மிக்க
பயனெலாம் விரிக்கற் பாற்றே.

---

வருவிக்கும் பெருமஞ்ஞை' (காஞ்சி. விம்மிதம். 13) கம்பை அறிவு வழங்கும். பம்பை மறை முழங்கும்.

1014. ஆடில்-நீராடினால். பூமான்—பூமிதேவி. உததி-கடல். சிப்பி-சிப்பியாறு. மூழ்கில் பொன்மயம் ஆக்கும் கலிச்சி. முற்பிறப்பின் உண்மை-முற்பிறப்பு உள்ளதை. 'மூழ்குநர்க்குப் பொன் உருவம் அளிக்கும் ஒன்று' (காஞ்சி. விம்மிதம். 15)

1015. தேவர் மொழிகள் கேட்கும் மன்றம். துந்துமி முழக்கும் மன்றம். முயல் யானையைத் துரத்தும் மன்றம். பாதாள ஒலி கேட்கும் மன்றம்- 'வானுடர் வார்த்தை செவிப்புலனும் ஒன்றின்- மதகரியை முயல் ஊக்கித்துரக்கும் ஒன்றின்; பாதலத்தோர் கழறு மொழி கேட்கும் ஒன்றில்' (காஞ்சி. விம்மிதம் 14).

1016. வானவர் உலகு-தேவலோகம். தெய்வஞானம் - சிவ

1017 பிணியினை யகற்றும் பொய்கை
பேரர சாஞேர் மாளுந்
துணைநிறம் வேரும் பொய்கை
தொன்றுமுக் காலப் பொய்கை
யணைபவ ரெண்ண மியாவு
மளித்திடும் பொய்கை செம்பொன்
மணிநிற முதவும் பொய்கை
மூப்பினை மாற்றும் பொய்கை.

1018 குரக்குரு வருளும் பொய்கைக்
குளிக்கிலவ் வுருவை மாற்றித்
தருக்கிய வடிவை நல்குந்
தண்ணறும் பொய்கை யார்க்கும்
பொருக்கென மகவான் செல்வம்
புரிந்திடும் பொய்கை யின்ன
தருக்கருள் பொய்கை யொன்பான்
சந்தத வியப்பா மன்றே.

---

ஞானம். எண் பொது–எட்டு மன்றங்கள். (சபை) 'மேல் நாகர் உலகுவிழிப்புலனும் ஒன்றில்: ஆனது துந்துமிகள் முழக்கும் ஒன்றில்'. (காஞ்சி. விம்மிதம். 14).

1017. அரசு ஆஞேர் மாளும் துணை-அரசர்கள் இறக்கும் சமயத்தில். செம்பொன்மணிநிறம்-பொன்னைப் போல் அழகிய நிறம்.

1018. குரக்குஉரு–குரங்கு வடிவம். 'குரக்கரசு ஆவது அறிந்தோம் குருந்திடைக் கூறைபணியே' (நாச்சியார் திருமொழி. 3 ஆம் பதிகம். 4) தருக்கிய-செருக்கு அடைவதற்குரிய. பொருக்கென-விரைவாக. 'புதுக்கோல் கொணர்ந்து பொருக்கென நீட்ட'. (பெருங்கதை. மகத 15.32) மகவான் - இந்திரன். (சிவஞான முனிவர் அதிசயப் பொய்கை எட்டு என்பர்) 'முழுகுநர்க்குப் பொன் உருவம் அளிக்கும் ஒன்று-முழுமணி ஏர்தரும் ஒன்று, விண்ணோர் கோமான்-வாழ்வளிக்கும் ஒன்று: மனக்கினிய வெல்லாம் தரும் ஒன்று: வேண்டியதை வழங்கும் ஒன்று: வீழ்தகைத்தா மெய்ஞ்ஞானம் அளிக்கும் ஒன்று: வீடுதவும் ஒன்று: வினைப்பிணி நோய் முற்றும் பாழ்படுத்தும் ஒன்றென்ன, மலங்கள் மாற்றும்-பனிமலர்ப் பூம் பொய்கை இரு நான்கு மேவும்'. (காஞ்சி, விம்மிதம் 15)

1019 சீவசஞ் சீவி யாக்குஞ்
சேர்ந்தவை செம்பொ னுக்கு
மாவிட மகற்று மெய்யில்
வரும்பிணி மாற்று முற்றோர்
யாவருந் தேவ ராக
வினிதருள் புரியு மென்றுந்
தாவறச் சந்தி செய்யுஞ்
சந்தான கரணி யாகும்.

1020 மன்னியே மெய்ம்மை யாக
வழக்கினைத் தோன்றச் செய்யும்
உன்னிய கெடுதி காண
வுணர்வினை யுறுத்து ஞானம்
பின்னமாய் மறந்த யாவு
முணர்த்திடும் பெரிய பாவம்
அன்னிய மாகச் செய்யு
மவைசிலை யொருபா னுமே.

---

1019. சீவசஞ்சீவியாக்கும்-நிலையற்ற உயிரை நித்தியமாகச் செய்யும். சேர்ந்தவை-அடைந்த பொருள்களை. சந்தி செய்யும்-பிளவுபட்ட புண்களைக் கூடச் செய்யும். சந்தானகரணி, மூலிகையின் பெயர். 'உடல் வேறு வகிர்களாகக் கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்' (கம்பநாடகம். யுத்த. மருத்துமலை. 27) அடியார்க்கு நல்லார், சல்லியகரணி, சந்தானகரணி, சமனியகரணி, மிருதசஞ்சீவினி, என்று நான்கு மூலிகைகளைக் குறிப்பிடுவர். (சிலம்பு. புகார்க்காண்டம். 5. 224-34)

1020. வழக்கு-விவகாரம். கெடுதி-காணாமற்போன பொருள். காண-கண்ணுக்குத் தெரிய. உணர்வினை உறுத்தும்-அறிவில் தோன்றச் செய்யும். ஞானம் பின்னமாய் - அறிவு சிதைந்து. அன்னியமாக-தொடர்பற்றுப்போக. ஒரு பானும் – பத்தாகும். சிலைபத்து என்று சிவஞானமுனிவர் பகர்வர். 'வழக்கனைத்தும் நடுவாய்நின்று அறுக்கும் ஓர்கல். (காஞ்சிப்புராணம். விம்மிதம். 16)

1021 உள்ளம்வே ருய தீயோ
 ரும்பரே யாகச் செய்யுங்
கள்ளரைச் சுழற்றும் எல்லாக்
 கலைகளும் வழங்கு முற்றோ
ரெள்ளரும் வன்ன பேத
 மெலாமுறப் புரியுஞ் சேர்ந்தோர்
விள்ளரு மயக்கம் யாவும்
 வீட்டியே யுண்மை கூறும்.

1022 தேவர்த முலகத் துய்க்குத்
 திருப்பெலத் துவாரஞ் சேருந்
தாவற மணியின் மாரிச்
 சந்ததம் பெய்யா நிற்கும்
மேவினோ ரார்க்குங் காணு
 மேன்மையை யுதவும் முன்போய்
கூவிய வரவந் தற்சூழ்
 கொள்கையர் வினவா தாக்கும்.

1023 அனைத்துள படையு முற்றோர்க்
 கன்பிரு லுதவும் விண்ணோர்
தனித்துணு மமுதம் போத
 சாதகற் கென்று மீயு
மினைத்தெனற் கரிய மன்ற
 மிவைபதி னொன்று மென்பர்
முனிப்புக றறவி யாரே
 முடிவுறப் பகர வல்லார்.

---

1021. உம்பரேயாக-தேவராக. சுழற்றும்-சுழலச் செய்யும். வன்னபேதம்-வர்ணவகைகள். வீட்டி-போக்கி. கூறும்-தெரிவிக்கும்.

1022. பெலத்துவாரம்-பிலத்துவாரம். (பாதாளம்) தாவு+அற—தாவற-இடையீடில்லாமல், 'மூவகை முற்றியதனின் இருவகை-தாவா துறுப்பில் தங்க. (ஞானமிர்தம். 14) சந்ததம்-எப்போதும். 'சந்ததம் இளமையோடிருக்கலாம்' (தாயுமானவர் பாடல்) அரவம்-ஒலி, வினவாதாக்கும்-கேட்கமுடியாதபடிசெய்யும். 'பாதலம் சேர் பிலத்தைக் காட்டும்' பொன்மாணிக்க மழை பெய்யும்' (காஞ்சி-விம்மிதம், 18)

1023. படை—ஆயுதம். போதசாதகற்கு-அறிவுமிக்க மாணவனுக்கு. முனி-சூதமுனிவர். தறவு-அற்புதம்.

வேறு

1024 வீற்றுவீற் ருகத் தேனெய்பா லமுதம்
வியனுறு கபிலையஞ் சிவைகள்
ஊற்றுறச் சுரக்குங் கூவல் பற்பலவும்
உள்ளவங் கவ்விடை யன்றிச்
சாற்றிய பூசை பெருந்தவந் தருமந்
தணப்பற முடிவது மற்ருேர்
ஆற்றல் சேரொருபான் றிசையினு மாதல்
அரிதரி தெளிமையி னமையா.

1025 பருவம தடைந்து குரவன தருளின்
பான்மையாற் றிருவருண் மருவி
விரிதரு முப்பாற் பொருளுநாற் பாத
வெறுக்கையுந் தெளிந்தன ரன்றிப்
பெருகிய மலஞ்சேர் மன்பதை யில்லைப்
பிரானம ரிப்பதிக் குருவந்
திருவரு ளுருவ மாதலிற் புவிக்கோர்
சின்மய மாமெனத் திகழும்.

---

1024. வீற்றுவீற்ருக-தனித்தனியாக. தேன், நெய். அமுதம் பஞ்சகவ்வியம் சுரக்கும் கிணறு. கூவல்-கிணறு. தணப்பற-நீங்குதல் அற்றுப்போக. ஒருபான் திசையிலும்-பத்துத் திக்கிலும்.

1025. பருவம்-பக்குவம். திருவருள்மருவி-சத்திநிபாதம் பெற்று. முப்பாற்பொருள்-என்றது பதி, பசு, பாசங்களை. நாற்பாதம்-என்றது சரியை, கிரியை, யோகம், ஞானங்களை. 'அருமறை எவையும் திருமிகு ஞானம்-இலங்கு ஒளி யோகம், நலங்கிளர் கிரியை, சரியை எனவுரை விரிதரு பாதம்' (ஞானமிர்தம். 7) வெறுக்கை-செல்வம். 'எண்ணரும் பல்லுயிர் எய்தும் வெறுக்கையுள்-பெண்டிருள்மிக்க பெரும்பொருள் இன்மையின்' (பெருங்கதை. உஞ்சை. 38. 265.266) மலஞ்சேர்மன்பதை-மலத்தின் வயப்பட்ட மக்கள். இப்பதிக்குஉருவம்-இந்தத் தலத்துக்கு வடிவம். சின்மயம்-அறிவின் நிறைவு.

1026 புறனுரு வுண்மை வைப்பிதஞ் செழுத்தும்
புலப்படு மரவமெக் காலுஞ்
செறியுமிவ் வரவஞ் செவிப்புலன் படவுந்
திருவருட் பதியதி லுறவும்
பெறுநகர் விலங்கு பறவை முன்னுகப்
பேதமற் றுயிர்த்தொகை யெவையு
நிறுவுவா சகமே பரிசமே யென்ன
நிலவிய பெறுதியே பெறுமால்.

1027 பரமத மதனை நெருக்கிடு தருக்கம்
பலபல சொற்றிறம் யாப்பு
விரிபொருட் பகுதி யணிமத பேதம்
வியன்றரு புராதனப் பனுவல்
அரியது வடநூற் றென்கலை முதலா
மனைத்துள பாடையில் யாவுந்
தெரிதரக் கிளியும் பூவையும் புகலு
மென்னிலச் சிறப்பையார் தெரிப்பார்?

---

1026. இது உண்மை வைப்பு-இந்தக் காஞ்சிநகர் சத்திய மாகிய சிவத்துக்கு இருப்பிடம். அஞ்சு எழுத்தும் எக்காலும் புலப் படும் எனக் கூட்டுக. அருள்பதி-திருவருள் வீழ்தல் (சத்திநிபா தம்). நிறுவு-(உயர்ந்தது என்று) தர்க்கித்து முடிவுசெய்யப்பட்ட, பரிசமேஎன்ன-பரிச தீட்சை என்று கூறும்படி. பெறுதி - அடை யத்தக்க பொருள். (வீடு) மறைகளின் இறுதியறுதியிடவரிய பெறுதியை-(திருப்புகழ். 928) இப்பாடல் காஞ்சிமாநகர உயிர்க் கூட்டங்கள் யாவும் சிவஞானம் கைவரப் பெற்று அடைய வேண்டிய முத்தியைப்பெறும் என்று கூறுகின்றது.

1027. பரமதம் - புறச்சமயம். உலோகாயதம் முதலியன. நெருக்கிடும்-இடித்துக்கூறும். வியன் தரு-விரிவான. புராதனப் பனுவல் - புராணம். வடநூல் - வடமொழி, தென்கலை - தமிழ். பாடை-மொழி. கிளியும் பூவையும் சொல்திறம், யாப்பு. அணி, மதபேதம், புராணம் முதலானவற்றைப் பன்மொழியில் கூறும் திறம் பெற்றுள்ளன.

1028 முனிவர ரொருவ ரொருவரோ டிகலி
முடுகிய கடாவினுக் கிடையே
வினையம தடைய நிருத்தர மாக
விடைபுகன் றிடுந்திருக் காஞ்சி
கனிநுகர் பறவை யென்னிலவ் விடையே
கல்வியின் பெருமையார் கணிப்பார்
நனிமலர் மடவார் தவம்புரி தலத்தின்
ஞானமுந் திருவுமெண் ணரிதே.

1029 தயாவின ரெவருந் தருமரே பலருஞ்
சமநெறி யுளர்எனை யோரு
நியாயகா ரணரே யகிலரு மனக
நிமலமா மறிவினர் எலாரும்
வயாவிலாத் தனையர் செறிதரு கரத்தர்
வனிதையர் முழுவதும் மக்க
ளியாவரு பனகா பரனரு ளதனால்
இயற்பெருங் கொடையுளோ ரெவரும்.

---

1028. முடுகிய-வேகமான. கடா-வினு. 'காரணம் இன்மையின் முரண்மிகு கடாவிடை-அறிமதி' (ஞானமிர்தம் 62) வினையமதாக-அடக்கத்துடனும் ஒடுக்கத்துடனும். நிர்+உத்தரம்-நிருத்தரமாக. பதில் கூறமுடியாதபடி. முனிவர்களின் கடாவிடைக்கிடையே மென்மையான கனிநுகர்பறவை ஆராய்ந்து முடிபு கூறும் சிறப்புமிக்கது காஞ்சி. மலர் மடவார்-சரஸ்வதி, திருமகள். கலைமகள் தவம் புரிதலால் ஞானமும், திருமகள் தவம் புரிதலால் செல்வமும் நிரம்ப உண்டு. அளவிடமுடியாது.

1029. தயாவினர்-கருணையுடையவர். எனையோரும்-எப்படிப்பட்டவரும் (இழிவுசிறப்பும்மை) நியாயகாரணர் - நியாயத்திற்குக் காரணராக இருப்பவர். அகிலரும்-அனைவரும். அனகநிமலம்-பாபம் அற்றதூய்மை. வயா-கருப்பகாலத்து உண்டாகும் மயற்கை. (மசக்கை என்பர்) தனையர்-மக்கள். பனகாபரன்-சிவபிரான். பன்னகம்-பாம்பு. பன்னக+பரன் - பன்னகாபரன். ஆச்சிரமம் என்பது ஆச்சிராமம் என்று வந்தாற்போலவந்தது.

1030 அற்புதம் பெறுமிப் பதிதிரு வுறுத்தற்
கணைதரு மளகையர் பிரானு
மெற்பரி வுகந்து நிதியமும் பதமு
மியக்கரிற் றலைமையு மளித்துக்
கற்பனை புரிந்த சிவனுறை காஞ்சி
கனகமா மணிப்பெருங் கவினைப்
பற்பல வியந்து பழிச்சினன் அளைத்தன்
பதியினை யச்சமும் படர.

1031 யானிவண் மருவிப் புனிதம துற்றே
னிப்பதிக் குதவியொன் றிலையே
யானதென் றெண்ணிக் கிடைத்திடா மணிபொன்
னும்பெய லெழுதின மளவுந்
தேனுவுந் தருவு மணியுமா நிதியுந்
திரளுடன் மருவியே சொரியும்
பான்மையிற் சொரிந்து பரவினன் அகன்று
படர்ந்தனன் றனதுயர் மூதூர்.

---

1030. திருவுறுத்தற்கு - செல்வம் நிரப்புவதற்காக. அணை தரும் - அடைந்த. அளகையர்பிரான் - குபேரன். எல்பரிவு-ஒளியோடு கூடிய அன்பு. நிதியம்-செல்வம். பதம்-பதவி. இயக்கர்-யட்சர். கற்பனை புரிந்த – சங்கற்பம்செய்த. (நினைப்பாற்செயல் புரிவது பரம்பொருளின் இயல்பு) பற்பலவியந்து - பலவற்றைக் கண்டு ஆச்சரியப்பட்டு. பழிச்சினன்–துதித்தான். 'வலமுறை வந்து பலமுறை பழிச்சி' (பெருங்கதை. உஞ்சை. 46.105) காஞ்சியைக் குபேரன் துதிப்பதுகண்டு அளகைமாநகர் தன்னைத்துறந்து விடுவானோ என்று அச்சம் அடைந்தது.

1031. புனிதம்-தூய்மை. ஆனது-செய்யக்கூடியது. மணி பொன்னும்பெயல்-மணிமழை பொன்மழை. பெயல்-மழை. 'பெயலிடைப் பிறழும் மின்னேர் சாயலர்'. (பெருங்கதை. இலாவாண. 7-96) தேனு-காமதேனு. தரு - கற்பகமரம். பரவினன் – புகழ்ந்தனன்.

1032 மயனுமித் தலனைக் கவினுறுத் திடுவான்
வருகுறை தீர்தரப் போற்றிக்
குயிலுமத் திறனிற் பலபல பயிற்றிக்
குறிப்புற வுணர்வினி னிறுத்தி
யயனெனக் குறுத்திற் றிலனிவை யவனிவ்
வணிப்படத் திருத்துமா றறியான்
பயனுற வெவையு முணர்ந்தவன் சிவனே
பதியுமன் னோன்செய லென்றான்.

1033 எத்தனை கோடி கடவுள ரிருக்கை
யெத்தனை திருப்பொலி வீதி
எத்தனை மாட மாளிகைத் தொகுதி
யெத்தனை கோபுர நிலையம்
எத்தனை தடாக மெத்தனை நதியம்
எத்தனை யற்புதக் காட்சி
யித்தனை யணியு மெம்மனோர்க் கியற்றற்
கெளியதோ வென்றுபோ யினனால்.

---

1032. கவின் உறுத்திடுவான் - அழகை மிகுதிப்படுத்தும் பொருட்டு. குறைதீர்தர-தன்னுடைய சிற்பப்புலமையின் குறைவுகள் நீங்க. குயிலும் அத்திறன்-செய்கின்ற தன்மை. பயிற்றி-கற்பித்து.

1033. கடவுளர் இருக்கை - கோவில். எம்மனோர்க்கு - எம் போன்ற சாதாரண மானவர்களுக்கு. எளியதோ - சுலபமோ. போயினன்-திரும்பிப்போனான்.

1034 காலமன் னதிலெம் பிராட்டியா முமையாள்
காஞ்சியம் பதிவர லெண்ணி
வாலிதென் றகில புவனரா சிகளின்
வரனுறு புவனநா யகராம்
பாலினோர் கால வங்கியின் பெயரோர்
பரிவுசெய் கூருமாண் டத்தர்
கோலமார் ஆட கேசுரர் வீர
பத்திரர் குணிப்பில்சே னையினோர்.

1035 மற்றுள கணங்க ளரியயன் மகவான்
மருவுமுப் பத்துமுக் கோடி
யுற்றிடு கடவுட் டொகையினோ ரியக்க
ருரகர்விஞ் சையருயர் கருடர்
சுற்றிடு மளவிற் பரிசன ரியாருஞ்
சூழ்ந்திட வந்தன ரெதிர்ந்தார்
பெற்றிடு மன்னை வரவெதி ரேற்கும்
பெருமிதம் பிள்ளைகட் கியல்பாம்.

---

1034. வாலிதென்று - தூய்மையானதென்று. புவனராசி-உலகத் தொகை. காலஅங்கியினோர்-காலாக்கினிருத்திரர். ஆடகேசுரர்-பாதாள உலகில் உள்ளருத்திரர். சிவகணங்களைப் பரஞ்சோதியார் திருவிளையாடற்புராணத்தில் (திருமணப்படலம்) விவரித்துள்ளார். அஞ்சுயோசனை புகைந்து இருமடங்கு அழன்றவர் என்றும். (81) பாரிடப்படையுடைக் கூர்மாண்டர் என்றும். (82) மேருவின் அவிர்சுடர் ஆடகர் என்றும் (83) கூறும் பகுதியைக் காண்க.

1035. உரகர்-நாகலோகத்தவர். பரிசனர்-பரிவாரம். 'விடயப் பல்பரி சனமும் மிடையா' (ஞானமிர்தம். 10) எதிர்ந்தார் - எதிர்கொண்டு உபசரித்தனர். 'துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்-விருந்து எதிர்கோடலும்' (சிலம்பு. 16.72) பெருமிதம்-உள்ளக்களிப்பு.

1036 ஒலிகெழு காஞ்சித் தலத்தினர் தவத்தோர்
யோகினர் சித்தர்மற் றுள்ளோர்
பலபல விலக்கத் தறுபத் தாயிரமாய்ச்
பன்னுமா லயப்பரி கலத்தோர்
வலனுய ராடல் பாடலிற் சிறந்தோர்
மடவர லியர்பெரு வெள்ளம்
நிலனிடைப் பொலியக் கடவுளர் தொகையி
னிலாவினர் விராவினர் பெயர்ந்தார்.

வேறு

1037 உளத்து மீப்படு மூவகையர்
புவனமூன் றுள்ளவர் எனையோரும்
விளைத்த வன்பினர் மயிர்புறம்
பொடிப்புற வீக்கிய வடிவுள்ளோர்
துளித்த கண்ணினர் எம்பெரு மாட்டியைத்
தொழுதெழு பெரும் பேற்றின்
தளத்த காதவன் சந்நிதிப்
பட்டனர் தவத்தினும் பெரிதுண்டோ.

1038 ஞான மாதவ ருமைதனை வணங்கியே
நனிமிக வருசேனைப்
பானி லாவிய பெரும்புவ
னதிபர் பங்கயத் தவிசுள்ளோ
னேனை மாதவன் புரந்தரன்
பேரெலா மிசைத்தனள் குறிகூறித்
தானை காவல்பெற் றுடையளாம்
விசையையே தனித்தனி நலஞ்சொற்றாள்.

---

1036. காஞ்சிபுரத்தில் பணிசெய்வோர் இலட்சத்தாறுயிரத் தறுவர். விராவினர்-கலந்தார்:

1037. மீப்படும்-அதிகரிக்கின்ற. மயிர்புறம் பொடிப்புற - புளகம் உண்டாக 'மெய்மயிர் பொடித்துத் தன்முதல் கலங்கி, (ஞானமிர்தம், 54) சந்நிதிப்பட்டனர்-திருமுன்பு வந்து சேர்ந்தனர்.

1038. விசயை வணங்கவந்த தேவர்களைத் தேவர்களுக்கு அறிமுகப்படுத்தினள். குறி - அடையாளம். தானைகாவல்-சேனைப் பாதுகாப்பு.

1039 இன்ன வண்ணமே யாரிட
மடந்தைய ரிமையவர் மடமாதர்
துன்னு பேரொளி விமானம
திடைபடத் துதிவிடுத் துலகுய்யும்
பொன்ன லந்திகழ் துலாப்படு
திங்களிற் பூரமா நன்னாளிற்
கன்னி யம்பிகை யுவகையி
னடைந்தனள் காஞ்சியம் பதிமூதூர்.

1040 அடையு மெல்லையி லத்தலத்
தெய்வத மாயநன் மலர்மாரி
புடைப ரந்திடக் கம்பைமா
நதிமுதற் பொலிதரும் பேரியாற்றி
னிடைவி ராவிவிண் டொடுகமு
காடவி யிருள்மரக் காவுள்ளே
தடைப டாதெழு தென்றலோ
டெதிருறத் தாழ்ந்தது திருமுன்னம்.

1041 அம்பை யத்தல மடைதலு
மளவிலா வணிகமற் புதமெய்தச்
செம்பொன் மாமணித் தெய்வத
விமானநின் றிழிந்தனள் செம்பஞ்சி
னும்பர் முச்சிய வணிமணிப்
பாதுகை யுவந்தனள் மிதித்தூன்றி
யிம்பர் முற்புரித் தவத்தினி
லேகின ளியாவரு மகிழ்ந்தேத்த.

---

1039. ஆரிடமங்கையர் - ருஷிபத்தினிகள். விமானத்தை விட்டுத் தேவி காஞ்சிநகரில் திருவடிவைத்த மாதத்தையும் நட்சத்திரத்தையும் குறிப்பிடுகிறார். துலாப்படுதிங்கள்-ஐப்பசி மாதம். பூரமா நன்னாளில்-பூரநட்சத்திரத்தில். 'செங்நிலைசேர் ஐப்பசியில் பூரநாள் சிறந்தோங்கும் அன்றைஞான்று-' (காஞ்சிப்புராணம். இரண்டாம் காண்டம். கழுவாய்ப்படலம். 224)

1040. காஞ்சிநகர்த்தெய்வம் தேவியை உபசரித்த திறம் பேசப்படுகிறது. மலர்மாரி-மலர்மழை. கம்பை முதலான நதிகளில் கலந்து பாக்குமரச்சோலையில் புகுந்து வருகின்ற தென்றலுடன் தெய்வம் தேவியை வணங்கிற்று. கமுகாடவி - பாக்குமரத்தோட்டம். இருள்மரக்கா-இருண்ட (மரங்கள் நிரம்பிய) சோலை. தெய்வம் எழுவாய். தாழ்ந்தது பயனிலை.

1041. அனிகம்-சேனை. உம்பர்-தேவர். தேவி தேவர்களின்

1042 வாழ்ந்து ளோமென விருமல
ராசன வனிதையர் முறையாகச்
சூழ்ந்து ளங்களி கூர்தர
வறம்புரி சூடகக் கரமேந்தப்
போழ்ந்த மாமதி நுதலியர்
பற்பலர் புகழ்ந்தன ரிசைபாடத்
தாழ்ந்து சேடிய ரூழிய
மியாவையுந் தனித்தனி புரிந்தேக.

1043 அந்த ரங்கமாய் வருதிரு
மாயவன் அணிமணித் தண்டேந்திப்
பந்தி பந்தியா யனிகமுன்
னெருக்குருப் படியிரு பாலோச்ச
முந்தி நான்முக னுசியி
லிருவிழி மூசுறக் கரங்கூப்பி
யெந்தை யம்மவென் றத்தலத்
தற்புத மியாவையு மிசைக்கின்றான்.

---

மணிமுடிகளாகிய பாதுகையில் சென்றனள். முச்சிய-உச்சியில் உள்ள. அணிமணி - அழகிய (கிரீடத்தில் உள்ள) மாணிக்கம். இம்பர்-இந்த உலகம்.

1042. இரு மலராசன வனிதையர்-மலரையே ஆசனமாகக் கொண்ட இரண்டு மகளிர். (திருமகள், கலைமகள்). அறம்புரி-முப்பத்திரண்டு தருமங்களைச்செய்த. சூடகக்கரம் – வளையல் அணிந்த கரங்கள். 'சூடகம் துளும்பவும் சுரும்பு சூழ்ந்து பாடவும்' (சூளாமணி. 4.55) போழ்ந்தமாமதி-பிறைச்சந்திரன். ஊழியம்-பணிவிடை.

1043. அந்தரங்கமாய்-உள்ளன்புடன். தண்டு-பிரம்பு. அனிகம்-கூட்டம். ஓச்ச-ஓங்க. (அடிப்பதுபோற்காட்டல்) நாசியின் இருவிழிமூசுதல் யோகத்தின் அடையாளம்.

வேறு

1044 இவைகரி முகன்வைப் பிவைசிவ னிலைய
மிவையரி திருமுற்றம்
இவையறு முகனிட மிவைநீ லியினுறை
யிவைமா சாத்தனதுள்
ளவைவயி ரவனக மவைசூ ரியனுழி
யவைபல வமையவயி
னவையவ மகில கலைப்பய னாகிய
வணிமா நிழலிதுவே.

1045 நிருமல மாகிய பரமா காசநி
ராமய மெவ்வாயி
னரணிது பற்பல வற்புத நற்பொரு
ளமரிட மிவையேயென்
றுரைதர வப்பதி யிற்பெரு மைத்திற
மென்றெழி யாவகையாற்
றெரிதர வுடல்வளை வுறநனி யற்பொடு
செப்பினன் ஞெப்புறவே.

---

1044. கரிமுகன்-விநாயகப்பிரான். வைப்பு-தங்கும் இடம். நீலி-காளி. உள்-இடம். சூரியன்உழி-சூரியன் இருக்குமிடம்.

1045. பரமாகாசம்-சிதம்பரம். நிராமயம்-நோயற்றது. எவ்வாயின்-எல்லா இடத்திலும். உடல்வளைவுற-(பிரமன்) தன்திருமேனி வளைத்து (குனிந்து.) நனியற்பொடு - மிக்க அன்புடன். ‘மன்னு முயா அற்பொடுவாழ்நாளில்’ (திருவாலவாயுடையார் திருவிளையாடல் 62-26)

1046 இன்ன வண்ணமங் கயனுரை
வினவியே யெழுதரு மகிழ்தூங்கப்
பொன்ன லங்கல்சூழ் மணிமறு
கூடுபோய்ப் புதுவனப் பிலநோக்கி
மின்னு பற்பல கொடிகள்சுற்
றுறவிளங் கியதொரு பொற்கொம்பர்
அன்ன வம்பிகை தன்னுரு
வாகிய பராம்பர மடைந்துற்றாள்.

1047 அனக மாகிய நிராமய
பராம்பர வற்புதந் தனைநோக்கி
யினைய தாரண வுறுதியி
னுட்பொரு ளிதுசிதா காயத்துட்
சனக ராதியர் தெளிதர
வரனுரை தருமனோ லயவுண்மை
கனக மாமய நிலையென
மறைபுகல் கதியிது வேயாமால்.

---

1046. அயனுரைவினவி-பிரமன் மொழிகளைக்கேட்டு. மகிழ் தூங்க-களிப்பு நிரம்ப. 'உழந்தவரும் நோக்கி மகிழ்தூங்க' (சிந்தா மணி. 597) மறுகூடு-வீதிவழியாக. கொடிகள் சுற்றுற விளங்கும் கொம்பு போன்ற அம்பிகை. 'அம்பிகை பாகன் தன்பால் விடுவதற் கடுத்த தென்றே' (பிரமோத்தரம். விபூதி. 39) பராம்பரம்-காமக் கோட்டம். தேவியின் இருப்பிடம்.

1047: அனகம்-தூய்மை. நிராமயம்-நோயின்மை. தாரண உறுதியின் உட்பொருள் இது-தாரணைசெய்வதால் தோன்றும் பரம்பொருள் இது. சிதாகாயத்துள்-அறிவுவெளியில். மனோ லயம்-மனம் ஒன்றுபடுதல். 'மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம் மனோலயம் வந்தது ஒத்தான்' (இராமாவதாரம். யுத்த. மீட்சி.319) கனகமாமயநிலை-பொன்னை ஒத்துப் பிரகாசிக்கின்ற நிலைமை. சிதம்பரத்தைப் பொன்அம்பலம் என்று கூறுவதைக் கருதுக. கதி-ஆதாரம்.

1048 என்ற தன்புறம் புவனியி
னுருவமாம் பஞ்சதீர்த் திகைப்பாங்கர்
சென்று நம்பிரான் சென்னியி
னீர்திளைத் திடத்தகு நீர்போலு
நன்றெனப்புகழ்ந் தவ்விடை
முனிவரர் நான்மறை நெறிகூற
வொன்று காதலி னுபநிட
தப்படி யாடின ளுமைதானே.

1049 என்ன மாதவஞ் செய்தன
னியானென விருந்தட மெழுந்தாடி
மன்னு வெள்ளியங் கிரிமிசை
யெம்பிரான் வாய்மலர்ந் தருள்கூரத்
தன்னை நேருமை திளைத்திட
விப்பெருந் தகைமைபெற் றனனென்னக்
கன்னி தற்பண வினைமுடித்
தெழுந்தனள் கவினுறப் பொலிகுற்றாள்.

1050 நீறு மாமனுப் புகன்றணிந்
தங்குள நியமமா மவைமுற்றி
யேறி நன்மணிப் பொன்னுரு
வாகவே யிலகிய திருக்காஞ்சி
மாறி லின்னிழற் றன்னின்முக்
கோணமாய் வயங்குபொற் றவிசின்பால்
வீறு வீற்றிருந் தருளினள்
செயையைநல் விசையையே வலின்வைக.

---

1048. தீர்த்திகை-தீர்த்தம். 'தீர்த்திகைக் கங்கை தன்னில் திகழ்சர வணத்தில் வந்த-மூர்த்தி'. (கந்த. உற்பத்தி திருவவதாரம் 114) சென்னியின் நீர்-கங்கை. திளைத்திடத்தகும் - நீராடுவதற்குத் தக்க. கங்கையே தன்னைப்புனிதப்படுத்தும் பொருட்டு நீராடுவதற்கேற்ற தகுதியுடையது பஞ்ச தீர்த்தம். ஆடினள்-நீராடினாள்.

1049. அம்பிகை நீராட யான் என்னதவம் செய்தேனோ? என்று தீர்த்தம் மகிழ்ந்தது. திளைத்திட-மூழ்கி மூழ்கி மகிழ்ந்து அனுபவிக்க. தற்பணம்-தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிதிர்களுக்கும் வழங்கும் நீர்க்கடன்.

1050. மாமனு-பஞ்சாட்சரம். நியமம்-கடமை. காஞ்சி மரத்

1051 தேவி மங்களை சண்டிகை
யென்னு மத்தெய்வத மடவாரைத்
தாவி லாதுமுப் பானிரு
கோடியா மியக்கியர் தற்சூழ
நீவிர் பேரறம் புரிமினென்
றருயிர் நிமலமாம் பொருட்டுன்னி
ஆவ லாகியே திருவறச்
சாலையொன் றமைத்தன டியானத்தால்.

1052 அமைத்து நீடுதன் னருளினு
லிருத்தியே யறப்பெருஞ் சாலைக்கு
ளிமைக்கு மெல்லையிற் புவனமூன்
றுளவுயி ரியாவையும் பசிதீரச்
சமைக்கு மேன்மையக் கலனுத
கக்கலன் றன்னையு மளித்தீது
நிமித்த மாகமுப் பானிரு
தருமமு நிறுவுகற் பனைசெய்தாள்.

---

தின் நிழலில் முக்கோணமான ஆசனத்தில் தேவி எழுந்தருளினுள். வீறு-தனியாக. வீற்றிருந்தருளினள்-பெருமிதத்துடன் இருந்தாள். ஏவலின்வகை-ஏவலின்படி பாதுகாத்திருக்க.

1051. தாவிலா-கெடுதல் இல்லாத. 'தாவாத இன்பம்' (சிந்தாமணி 1) முப்பான் இருகோடியாம் இயக்கியர்-முப்பத்திரண்டு கோடியட்சர்கள். ஆருயிர் நிமலமாம் பொருட்டு நீவிர் அறம் புரிமின் என்று அறச்சாலை தியானத்தால் அமைத்தனள். தியானம்-சங்கற்பம்.

1052. சமைக்கும்கலன்-சமையல் செய்யும் பாத்திரம். உதக்கலன்-தண்ணீர் வைக்கும் பாத்திரம். ஒரு தலைவர் அளித்தருளும் உலவாத பாசனம் ஒண்சராவம் தம்மால், பொருவரிய அண்டமெலாம் களிதூங்க அறம்பலவும் போற்று நின்றாள். (காஞ்சி-கழுவாய். 137). நிறுவு-நிலைநிறுத்துகின்ற.

முப்பத்திரண்டு அறங்களை விவரிக்கிறார். கச்சியப்பமுனிவர் இங்கு அறங்களை 32 பாடல்களில் இனிதே விவரிக்கின்றார். பொருட்டொகை நிகண்டு முதலானவை இவ்வறங்களை இங்ஙனம் கூற வழிகாட்டின.

1053 இல்லி டம்பொருட் டுணைமகப்
பெறுமவர்க் கீந்திடல் படிப்போர்க்குச்
செல்லு நன்பொருள் சொல்லுவிப்
பார்தமை செறிப்பது சிவனேசர்
புல்லு நன்மடஞ் சாத்திரம்
வெற்றறம் புதுக்குதல் பேரைய
மொல்லை யேயறு சமையமும்
வரைந்திடா துதவுமூ ணிடுமுந்நூல்.

1054 இறுதி சேருயிர் மீட்டிடல்
சிறையுண வியாவர்க்குந் தின்பண்ட
நிறுவு மாடியாப் புரந்திடல்
காக்குளன் மணம்புரி நிலையெண்ணெ
யறவு முத்தம தானமவ்
விலங்குண வறப்பிண மீடேற்றல்
செறியு நீர்ப்பந்தல் கணிகையர்
போகமே திகழ்மருத் துவமாக்கல்.

---

1053. மகப்பெறும் அவர்க்கு இல்முதலானவை உதவல். (மகப்பெறுவித்தல். பொருள்-நிகண்டு) படிப்போர்க்குச் செல்லும் நன்பொருள். (ஓதுவார்க்கு உண்டி. பொருள். நி) சொல்லுவிப்பார்–கற்பிப்பவர். செறிப்பது-தங்கச் செய்தல். வெற்றறம்-அழிந்த தர்மத்தை. பேரையம் ஒல்லையே அறும் சமயம்-பெரிய ஐயங்களை விரைவில் போக்கும் ஆறு சமயம். (இங்குச் சமயம் என்றது சமயத்தைப் பின்பற்றும் மக்களை) வரைந்திடாது-ஒதுக்காமல். (அறு சமயத்தோர்க்கு உணவு. பொருள். நிகண்டு).

1054. இறுதிசேர் - நோயால் மரணத்தறுவாயிலிருக்கின்ற. உயிர் மீட்டிடல்-மருந்து வழங்கி உயிரை மீட்பது (நோய் மருந்து. பொருள். நிகண்டு) சிறை உணவு-சிறையில் இருப்பவர்களுக்கு உணவு வழங்கல். சிறைச்சோறு ஐயம் தின்பண்டம் நல்கல். (பொருள். நி). ஆடி-கண்ணுடி வழங்கல். ஆப்புரந்திடல்-பசுவைப் பாதுகாத்தல். 'கண்ணுடி' (பொருள். நிகண்டு) ஆவுரிஞ்சுதறி. (பொருள். நி), கா-சோலை. குளன்-குளம். மடம் தடம் சோலை. (பொருள். நி) அறப்பிணம்-உறவினர் இன்றி இறந்தவர்களைச் சுடுதல். 'அறவைப்பிணம் சுடல் (பொருள். நி) நீர்ப்பந்தல்-தண்ணீர்ப் பந்தல் வைப்பது. 'தண்ணீர்ப்பந்தல்' (பொருள். நி) கணிகையர் போகம்-மணமற்றவர்களுக்குக் கணிகையரால் இன்பம் வழங்கல். 'பெண்போகம்' (பொருள். நி)

1055 ஆன வம்முறை கண்டிகை
நீரர னருச்சனை யுறுப்பாடை
தான மேகடன் தீர்த்திடல்
குருவினுற் றத்துவ வுபதேச
மூன மின்றியே யிவையெலாம்
புரிந்திட வுரைத்தன டன்கையாற்
போன மேமுத லிடுதரு
சட்டுவம் புகழ்ந்தன ளினிதீய்ந்தாள்.

1056 பரவு மங்களை சண்டிகை
மாதர்முப் பானிரா யிரமாக
விரவி யக்கிய ராயிர
மாயிரம் வீற்றுவீற் றுறச்சேர்த்துப்
பரிவு கூரமுப் பானிரு
தருமமும் பாற்படுத் தினிதாகப்
புரிய முப்புவ னத்துயிர்
அருந்தின புனிதமுற் றனவன்றே.

வேறு

1057 சிற்பரா னந்த வேதாந்
தத்தினிற் றெளிவே யான
சொற்பரா வியப ராகா
யம்பலத் துவார நித்த
தற்பரா வேசங் கால
வலைதனிற் றவறி லாது
நிற்பதா தார சோதி
நிலையமன் னிலையப் பாங்கர்.

---

1055. கண்டிகை-உருத்திராக்கம். அரன்அருச்சனை உறுப்பு-சிவபிரானின் அருச்சனைக்கு அங்கமானவற்றை வழங்கல். குருவினுல் உபதேசம்-தக்க குருவைக் கொண்டு மக்களுக்கு உபதேசம் செய்வித்தல். போனகம் என்பது போனம் என்று வந்துள்ளது. 'போனத்தளவு புசிப்பு'. (ஒழிவில் ஒடுக்கம். சரியைக் கழற்றி). சட்டுவம்-அகப்பை. 'சட்டியிலே பாதிமற்றைச் சட்டுவத்திலேபாதி. (காளமேகம். தனிச்செய்யுட் சிந்தாமணி. 156).

1056. சண்டிகை முதலானவர்கள் உமையம்மையின் பணிப்பெண்கள். பரிவுகூர-அன்பு அதிகரிக்க. பாற்படுத்து-வகைப்படுத்தி. இவரிவர் இது இது செய்யவேண்டும் என்று முறைப்படுத்தி. அருந்தின, அன்றே புனிதம் உற்றன.

1057. ஆனந்தவேதாந்தத்தினில்-ஆனந்த மயமாகவுள்ள உப

1058 தாரகப் பிரம யோகச்
சமாதி சாதனையே மிக்க
காரகத் துருவ மான
கராளமி லுரக ராசன்
பாரகத் தகில காலம்
படிவமா மாயோன் பள்ளிப்
பேரக சயன பாவம்
பிறங்கிய பெரியோ னந்நாள்.

1059 புரிதரு தவத்தின் பேற்றாற்
பொருவரு முமைதன் பாத
மருமலர் வணங்கி யங்க
ணுதிபீ டத்தின் வண்ணந்
திரிவறப் புகலச் சோதிச்
சின்மய வாயி லேழுங்
கருணையி னுருவ மந்நாள்
கடந்தனள் செல்லுங் காலை.

---

நிடதத்தில். தெளிவேயான சொல்-விளக்கமான சொற்கள். பராவிய-புகழ்ந்த. பராகாயம்பலத்துவாரம்- (பர+ஆகாய+அம்பலம்+துவாரம்) மேலான சிற்றம்பலத்தின் வாயிலின்கண். தற்பராவு-தன்னையே புகழ்ந்து. ஏசும்-தன்னையொழிந்த பொருள்களை இகழ்கின்ற. காலவலைதனில் தவறிலாது-காலவலையின் வசப்படாமல். நிற்பது ஆதாரசோதி-நிலைத்து நிற்பதாகிய (அனைத்துக்கும் ஆதாரமான) சோதி. அந்நிலையப் பாங்கர் நிற்பது-அந்த ஏகாம்பரத்தில் ஒரு பக்கத்தில் உள்ளது,

அம்பலத்துவாரத்தில் காலவலைக்கு அகப்படாத சோதி நிலை நிற்பதாகும். என்க. (இப்பாடலின் பொருள் புலனாகவில்லை. சரியான பாடம் வேண்டும். அனுபூதியும் வேண்டும்).

1058. தாரகப்பிரமயோகம்-ஓங்காரத்தையே உபாசிக்கின்ற யோகம். சாதனைமிக்க-சாதித்துப் பெருமைபெற்ற. காரகத் துருவமான கராளம்-மேகம் போலக் கருத்த விஷம். உரகராசன். ஆதிசேடன். விஷமில்லாத ஆதிசேடன். படிவமாம்-தெய்வமான. 'பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்' (பெரும்பாண்-294.) மாயோன்பள்ளி - திருமால் படுத்துக்கொண்டுள்ள. சயனம்-படுக்கை. திருமாலுக்குப் படுக்கையான ஆதிசேடன் என்க.

1059. தவத்தின்பேற்றால்-தவத்தின் இலாபத்தால். ஆதிபீடத்

1060 நிருமலா காய ஞான
நிலைபெறு வளாக மான
விரிவுசே ரிடனை நோக்கி
வியந்தன டியாறு தீதப்
பராபர பரமா னந்தப்
படிவமா யுறைந்தா ளந்தத்
திரிபுரர் சுகசிற் பாவத்
தெரிவினை யுரைக்கற் பாற்றே.

1061 சிலபகல் ஞான யோக
சமாதியிற் சிறந்து நீங்கா
வலகில்பஞ் சாக்கி னிப்பால்
அருந்தவம் புரிந்து பின்னர்
கலைதிகழ் சுருதி வண்ணக்
கன்னியந் தனிமா நீழல்
இலகியே நடனஞ் செய்யு
மிலிங்கத்தி னருமை யெண்ணி.

---

தின் வண்ணம்-பழைய பீடத்தின் தன்மை. திரிவுஅற-மாறுபாடு இல்லாமல். சின்மயவாயில்-அறிவுமயமான வாயில்கள். கடந்தனள்-கடந்து. முற்றெச்சம்.

1060. நிருமல ஆகாயஞான நிலைபெறுவளாகம்-தூய ஆகாயமாய், ஞானம் நிலைபெற்ற பரப்பாக இருக்கின்ற இடம். தியான+அதீத—தியானாதீத. தியானத்துக்கு அப்பாற்பட்ட. பராபரம்-மேலுக்கு மேலாயுள்ள. பரமானந்தப்படிவமாய் - சிவானந்தமயமாய். உறைந்தாள்—தங்கியிருந்தாள். திரிபுரர்-சிவபிரான். உரைக்கற்பாற்றே- சொல்லும் தன்மை உடையதா?

1061. சிலபகல்-சில நாள்கள். சிறந்து-சிறப்புடன் இருந்து. பஞ்சாக்கினிப்பால்-ஐந்து நெருப்புக்கு நடுவில். (சுற்றிலும் மூட்டப்பட்ட அக்கினி நான்கு. மேல் மூட்டப்படாத சூரியனாகிய அக்கினி ஒன்று). கலைதிகிழ்-எல்லாக்கலைகளையும் விளங்கப்பண்ணும். சுருதிவண்ணத் தனிமா நீழல் - வேதமாகிய அழகிய ஒற்றை மாமரத்தின் நிழலில் நடனம் செய்யும்-காப்பு நடனம் புரிகின்ற.

1062 அருச்சனை விதியி னூற்ற
வப்பெருங் கன்ம நீங்கி
யுருப்பொலி கடவுண் மாத
ருவந்தனர் தற்சூழ் போற்ற
திருத்தகு மாட வீதி
சேர்ந்தனள் செய்ய வேகாம்
பரத்தினிற் கோயில் வாயிற்
பணிப்பொற்கோ புரத்துட் சென்றாள்.

1063 தாபர நாட்கோள் சுற்றத்
தமனிய வரைபோ னீண்ட
கோபுர வாயி லுட்போய்க்
குணிக்கரும் பவங்கண் மாற்றிப்
பூபர ணஞ்செய் வாளாய்ப்
புனிதைபொன் மதில்சூ டிஞ்சா
மாபர ணஞ்சென் றுற்று
ளொருபா லுயுத மும்போற்ற.

1064 பரவிய திசைக்காப் பாளர்
பதின்மரும் வணங்கி யேத்த
அரதன மணிப்பொ னன்கா
மாபர ணத்தின் பாலாய்க்
கருணையின் மூன்றாஞ் சூழல்
நந்திமா காளர் தாழ
வருடரு மிரண்டாம் வைப்பி
னந்தாதி யவர்பின் செல்ல.

---

1062. விதியின்-ஆகமம் விதித்தபடி. கன்மம்-(சிவபிரான் கண்களை மூடியதால் உண்டான) தீவினை. கடவுள் மாதர்-தெய்வ மகளிர். பணி-வேலைப்பாடு அமைந்த.

1063. தாபரம்-உறுதியான. தமனியவரை-தங்கமலை-(மேரு) குணிக்கரும்-கணக்கிடமுடியாத. பவங்கள்-பாபங்கள். பூபரணம் செய்வாளாய் - பூமியைத் தாங்குபவளாய். மதில் - மேற்கட்டு. இஞ்சி-கோட்டைச்சுவர். மதில்+சூடு+இஞ்சி. ஆபரணம்-(ஆவரணம்) தடை.

1064. அரதனமணி - இரத்தினமாகியமணி. நந்திமாகாளர்-நந்தி-நந்தி. மாகாளர்-சாத்தனின் பணியாள். அம்தாதி-அழகிய பணிப்பெண்.

1065 பிரிவின்முன் னிலையந் தன்னிற்
பிரமமே யங்க மென்னுந்
தெரிதரு கடவுட் காணாஉச்
சென்றனள் பரிவு கூர்ந்து
வரனுறு மகம ணிப்பொன்
மாளிகை நடுவு நின்று
தருமநற் பூமா னுமா
னென்பவர் தம்மை நோக்கி.

1066 கூவிளை நிழற்கா ரோணங்
குறுகினை தவஞ்செய் பூமான்
காவிரி பலாச நீழற்
கச்சபா லையத்தின் பாங்கர்
நாவியன் மாது நீபோய்
நனிதவம் புரிதி யென்றங்
கேவினள் விடைபெற் றன்னு
ரிருவரும் அகன்று ரன்றே.

1067 மாலயன் மகவா னுதி
வானவர் வைய மாக
மேலியல் கோபு ரப்பொன்
வாயிலின் மேவி யெண்ணிப்
பாலுறு தேனுத் தாரு
நிதியமாம் பலவுங் கூவி
யேலவே யுமையாள் பூசைக்
கேற்றவை புரியு மென்றார்.

1065. பிரமமே-வேதத்தையே. அங்கம் என்னும்-உடம்பு என்று கூறக்கூடிய. காணாஉ-காண்பதற்காக. வரன்உறு-மேன்மைமிக்க. அகம்-உள்ளிடம். மணி-மணிகள் பதிக்கப்பட்ட. பூமான்-திருமகள். நாமான்—கலைமகள்.

1066. கூவிளை-வில்வம். காரோணம் - காயாரோகணம். பூமான் - திருமகளே! (அண்மைவிளி) குறுகினை - அடைந்து. (முற்றெச்சம்). காவிரி - சோலைபோல் விரிந்த. பலாசம் - முள் முருங்கை. புரசமரம் என்றும் கூறலாம். நாவியல்மாது-கலைமகளே. (அண்மைவிளி) அகன்றார்-நீங்கினார்கள்.

1067. வையமாக-விளக்கைப்போல. வாயிலின் - முற்றத்தை.

### வேறு

1068 பெரிது புண்ணிய நலமென வவையுமை பிராட்டி
யருகு சூழ்ந்தன வேவலின் வைகின வதன்பின்
மருவு சீருமா பத்திரை நற்கீர்த்தி மதியென்
றிரும கோதகக் கூவல்மா மனுவினு லியற்றி.

1069 தரும நீருள முழுவது மதனிடைச் சார
விரியு நாளுமா பத்திரை யென்னுமங் நீரான்
மருவி யாடின ணித்திய மங்கலை யென்னும்
பெரிய பேருளா ளாருயிர்த் தொகையெலாம் பிழைக்க.

1070 நித்தி லத்தெயி றிலகிட நிலவுபா லாவி
யொத்து நேரிய வெள்ளிய பட்டினை யுடுத்து
நெய்த்து லாவுமுத் தரிகமு மிட்டுவெண் ணீறும்
பத்தி யாலர னுரைதவா வண்ணமே பரித்தாள்,

---

பாலுறுதேனு-பாலைப் பெற்றபசு. (பால்-பக்கம்) தாரு-கற்பக மரம். நிதி-சங்கநிதி, பதுமநிதி. ஏற்றவை-உரியபொருள்களை. புரியும்-விரும்பித்தாருங்கள்.

1068. அவை, என்றது காமதேனு முதலானவற்றை. வைகின–தங்கின. உமாபத்திரை, நற்கீர்த்தி என்னும் பெயர்களைப் பெற்ற இரண்டு கிணறுகளைத் தேவி மந்திரசக்தியால் அமைத்தாள். மகா + உதகம்+கூவல்—மகோதகக் கூவல். உதகம்–தண்ணீர்.

1069. தருமநீர் - அறத்தன்மையின் பாற்கொண்ட. உளம்-(உள்ளம்) ஊக்கம். 'உள்ளம் உடமை உடைமை' (திருக்குறள். ஊக்கம்) நித்தியமங்கலை-உமாதேவி. 'ஸர்வமங்கள மாங்கல்யே' என்று தொடங்கும் ஸ்லோகத்தைக் கருதுக. உயிர்த்தொகை-ஆன்மக் கூட்டங்கள்.

1070. நித்திலத் தெயிறு-முத்துப்போன்ற பற்கள். பால்ஆவி-பால்காய்ச்சும்போது தோன்றும் ஆவி. 'பாலா ராவிப் பைந்துகில் ஏந்தி' (சிந்தாமணி. 1094) பால் ஆவி என்பதற்குப் பாற்கடலில் தோன்றும் ஆவி என்றும் பொருள் கூறலாம். 'பானீர் நெடுங்கடல் பனிநாள் எழுந்த–மேனீராவியின் மெல்லிதாகிய-கழுமடிக்கலிங்கம்' (பெருங்கதை. 2.7-154–155–156) வெள்ளியபட்டு-வெண்பட்டு. உத்தரிகம்-மேலாடை. 'ஏகஉத்தரியம் இடைச்சுவல் வருத்த' (பெருங்கதை. 2.121) உரைதவாவண்ணம் – சொல்லிய முறை கெடாதபடி, பரித்தாள்-அணிந்தாள்.

1071 மின்னு மாமணி தரளரா சியினுடன் விராவி
மன்னு பேரணி கண்டிகை மாலையின் வடங்கள்
பொன்னு லாந்திரு மார்பிடை வயங்கவே புனைந்து
சன்னி தானமெய்த் தவவடி வுற்றெனுந் தகைத்தாய்.

1072 தரள ராசியின் கடககே யூரமே தயங்க
விரிபொ னூலணிந் தைவன மனுவினை விளம்பிப்
பரனி ராமய நினைந்தர னருச்சனை பரிவாற்
றிரம னோலயத் தடைந்தனள் மாநிமூற் சிவன்முன்.

1073 புரிதொ ழிற்பரி சாரகத் திறத்தினைப் புனிதை
யிருநி திக்கென வீய்ந்துகற் புறுத்தியே யினிய
பரிம ளப்படு களபமும் பனிமலர்ப் படலைத்
தருதி ருச்செயல் கற்பகந் தனக்கெனச் சாற்றி.

1074 அன்ன மாதுள நிவேதனம் புரிந்திடு மாக்கங்
கன்னி தேனுவுக் கென்றருண் மீக்கொடு கற்பித்
தின்ன ருட்கொடு கீர்த்திமா மதிதரு மிருநீர்
பன்னி வாருணி பொற்குட மெடுத்தனள் பராவ.

---

1071. தரளராசி-முத்துக்களின் தொகை. கண்டிகை-உருத்தி ராக்கம். 'சிரத்தின் உரத்தின் திணிதோள் திரண்ட-கரத்தினும் பூணும் கண்டிகை'. (சைவசமயநெறி. பொது. 141)

1072. கடகம்-கங்கணம். கேயூரம்-தோளணி. ஐவ(ன்)னமனு-பஞ்சாட்சரம். பரனாகிய நிராமயன் என்க. இருபெயரொட்டு. மனோலயத்து-மன ஒருமைப்பாட்டுடன். 'மவுன பஞ்சர மனோலய சுகம் தருவாயே' (திருப்புகழ். 385)

1073. புனிதை-உமையம்மை. (எழுவாய்) பரிசாரகப் பணியை இருநிதிக்கு (சங்கநிதி பதுமநிதி) வழங்கினாள். கற்புறுத்தி-கற்பித்து. களபம்-சந்தனம். மலர்ப்படலை-மலரால் தொடுக்கப் பட்ட மாலை. கற்பக மரங்களுக்குச் சந்தனம் மாலை வழங்கும் பணி தரப்பட்டது.

1074 அன்னமாது - அன்னபூரணி. உளநிவேதனம்-மிகுதி யான அமுது. (பிரசாதம்) கன்னிதேனுவுக்கு - இளமையான காம தேனுவுக்கு. வாருணி-வருணன் மகள். 'கடைய ஆங்கு-வாருணி என்னும் மாது வந்தனள்' (பாகவதம், 1852).

1075 அருக்கி யப்பெரும் பொற்கலன் விசையைகொண்டணையத்
தருப்பை நற்பொரி சமித்திவை செயையவ டாங்க
மருக்கு லக்கொடி யேகியே காம்பர வள்ளல்
திருப்ப ரப்பிர மச்சிவ தெரிசனஞ் செய்தாள்.

1076 ஆர ணத்தனி மாநிழ லமர்ந்திடு மமுதைக்
கார ணப்படா தருந்துவார்க் குவட்டுருக் கனியை
வார ணத்திரு வுரிவையில் புழுகுநெய் வழியும்
பூர ணத்தினை விழிகளாற் றிளைத்தனள் புகழ்ந்தாள்.

1077 தற்ப ரச்சிவ தத்துவப் பூரணத் தலைமை
பொற்பு றப்பர மானந்த நிருத்தமே புரிந்து
சிற்ப தப்பொரு ளாயவே காம்பரத் தெய்வ
வற்பு தத்தனி லிங்கத்தின் பெருமையை யறிந்தாள்.

1078 மெய்வி திர்ப்புற மயிர்ப்புறம் பொடிப்புற விழிநீர்
தைவரச் சச்சிதா னந்தத் திருவுருத் தழைப்ப
வவ்வி யத்தலிங் கத்தினை யருச்சனை யமைப்பா
டெய்வ தத்திரு நாயகி யுளத்துறத் திகழ்ந்தாள்.

---

1075. அருக்கியப் பெரும் பொற்கலன் - அர்க்கிய பாத்திரம். சமித்து-யாகாக்கினிக்கு வேண்டிய ஆல் அரசு முதலானவற்றின் சுள்ளிகள். 'புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை' (பெருங்கதை. இலாவாண. 8.14) பரப்பிரமச்சிவம்-பிரம்மமாகிய சிவம்.

1076. அமுதை, கனியை, பூரணத்தினை, விழிகளால் திளைத்தனள். ஆரணத்தனிமா-வேதமாகிய மாமரம். உவட்டுரு-தெவிட்டல் இல்லாத. வாரணத்திருஉரிவை-யானைத்தோல். புழுகு நெய்-புனுகு. திளைத்தனள்-அனுபவித்தாள்.

1077. தற்பர-மேலான. சிவதத்துவ-மங்களம் பெற்ற உண்மையான. பூரணத்தலைமை-குறைவற்ற முதன்மை. பொற்புற-அழகு உண்டாக. ஆனந்த நிருத்தம்-களிப்பால் உண்டான கூத்து. சிற்பதப் பொருளாய-சித் என்னும் சொல்லுக்குப் பொருளாக இருக்கின்ற. இறைவி இலிங்கத்தின் மேன்மையைத் தியானித்தாள்.

1078. விதிர்ப்புற-நடுங்க. மயிர்ப்புறம் பொடிப்புற-புளகம் உண்டாக. தைவர-திருமேனியைச் சார்ந்துவர. அவ்வியத்த-எங்கும் நிறைந்த. உளத்துஉற-உள்ளத்திலே பொருந்த. திகழ்ந்தாள் ஒளி பெற்றாள். பிராட்டி பிரானை அருச்சனை செய்ய நினைத்த போதே அவள் ஒளி மேலும் பெருகிற்று.

1079 தங்க ளுயகர்க் கபேதமே யாயினுந் தலைவி
திங்கண் மாமுடி யோனருச் சனைப்பெருந் திறத்தி
னங்க மாகிய கடவுளர் பூசையு மமைப்பாள்
பொங்கு மாருயிர் வருக்கமீ தறிந்துய் யும்பொருட்டால்

1080 அருக்க ரிற்பொலி தாணுவின் பூசனை யாற்றித்
தருக்கு நீடுசா மானிய வருக்கியஞ் சமைத்துச்
சுருக்க மற்றுயர் கணபதி முதலிய துவாரத்
துருக்கு றித்தன ளவரவர்க் குவகையே யுய்த்தாள்.

1081 ஆதி யிற்பொலி யகிலபூ தத்திற னுன்மா
மேத கைப்படப் புனிதமே புரிந்திடும் விமலை
தாத கித்தனி முடியருச் சனைபுரி தரத்தன்
பூத சுத்தியான் மாவது சுத்தியும் புரிந்தாள்.

1082 பாத்தி யாசம னுர்க்கிய மத்திரம் பலவும்
ஆர்த்த நற்பொருள் சேர்நீரோ தானமென் னைந்து
சீர்த்த தோரருக் கியமவை திருத்தியே சீர்மை
வாய்த்த தானமத் திரவியம் புனிதமே வகுத்தாள்.

---

1079. தேவி இறைவனுடன் அபேதமானவள். என்றாலும் உயிர்கள் உய்யத் தன்னைப் பேதப்படுத்திக் கொண்டு பூசை புரிந்தாள். அபேதம்-வேறுபாடற்ற தன்மை. (அக்கினியும் சூடும் போல) அங்கமாகிய கடவுளர்-பரிவார தேவதைகள்.

1080. அருக்கரிற் பொலிதாணு - சூரியர்களைப் போன்ற சிவ லிங்கம். துவாரத்துஉரு-துவார தேவதைகள். (துவாரம்-வாயில்) உய்த்தாள்-வழங்கினாள்.

1081. ஆதியில்-முற்காலத்தில். பூதத்திறன்-பூத வகைகள். மேதகைப்பட-மேன்மையடைய. புனிதம்-தூய்மை. விமலை-மல மற்றவள். தாதகித்தனிமுடி-ஆத்திமாலையணிந்த சிவபிரான். பூத சுத்தியும், ஆன்மசுத்தியும் விமலை புரிந்தாள்.

பூதசுத்தியாவது, தத்துவம் முப்பத்தாறும் நீங்குவது. ஆன்ம சுத்தியாவது, மயக்கத்தைச் செய்யும் பஞ்சேந்திரியங்கள் முதலான வற்றைச் சிவனருள் என நினைப்பதாம்.

1082. பாத்தியம், ஆசமனம், அர்க்கியம் முதலான பொருள் கள் உள்ள தானத்தையும், திரவியத்தையும் சுத்தப்படுத்தினாள்.

தானசுத்தியாவது, பராசக்தியை ஆசனமாக்குவது. திரவிய

1083 ஆனி னஞ்சமு தத்திற னஞ்சிவை யாதி
யூன மின்றியே நபனமாஞ் செயலெலா முறுத்தி
மோன மாகியே பாரியுட் பூசையு முடித்துத்
தான லிங்கத்தின் புனிதமே புரிந்தனள் தவாமல்.

1084 எண்ணெ கவ்விய மமுதுநெய் யாடியே தினிமை
நண்ணு மஞ்சன மஞ்சளா மலகமே நற்பாற்
பண்ணு லாந்ததி யிக்குநீர் வேரிமுப் பலாதி
தண்ணு லாமிள நீர்நறைச் சந்தனச் செச்சை.

1085 இத்தி றத்தன வாதியாய்ச் சைவநூ லியம்பி
வைத்த வுத்தமப் படியபி டேகமே வகுத்துச்
சுத்த நீர்நப னத்திற மருக்கி யந்தூய
பத்தி நேர்தர வாட்டினண் மனுவெலாம் பகர்ந்தாள்.

---

சுத்தியாவது, தன்பார்வையைச் சிவன் பார்வையாகக் கொண்டு திரவியங்களைப் பார்ப்பதாம்.

1083. ஆனின்அஞ்சு - பஞ்சகவ்வியம். அமுதத்தின் அஞ்சு என்றது, வாழைப்பழம், தேன், சர்க்கரை, நெய், திராட்சைகளை. நபனம்-அபிஷேகப் பொருளைத் தூய்மைசெய்தல். 'சம்புரோக்கணநபம் சிவதீக்கை தருந்தீக்கை யபிடேகங்கள்' (திருவானைக்காப் புராணம். கோச்செங்கணர், 40) பாரி-விரிவான. லிங்கத்தின் புனிதம்-லிங்கசுத்தி.

லிங்கசுத்தியாவது, ஞானமேதிருமேனியாகக் காண்பது. தவாமல்–கெடாமல்.

1084- கவ்வியம்-பசுவழங்கும் ஐந்து பொருள். அமுது-பஞ்சாமிர்தம். ஆமலகம்-நெல்லி. ததி-தயிர். இக்குநீர் – கருப்பஞ்சாறு. வேரி-தேன். முப்பலாதி - திரிபலாதி. (நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய் மூன்றும் சேர்த்துச் செய்யப்பட்ட சூரணம்) சந்தனச் செச்சை-சந்தனக் குழம்பு.

1085. நபனத்திறம்-அபிஷேக வகைகள். 'விழையுமிள நீராடி ஆரக்குழம்பாடி விதியினமை நபனம் ஆடி' (சிவப்பிரகாசர் பிரபந்தம். அபிஷேகமாலை). பத்திநேர்தர-காண்பவர்களுக்குப் பக்தி உண்டாக. மனு–மந்திரம்.

1086 வெள்ளி தாயநுண் மையர்மறு வையிற்றிரு மேனி
கொள்ளு மீரம தொற்றியே தரைமுதற் குடிலை
யுள்ள தாமனுத் தவிசின்மேன் மூர்த்தியை யுறுத்தி
வள்ளி தாங்கலை வித்தியா தேகமும் வரித்தாள்.

1087 அகில பூரணச் சிற்பர நிலையினை யதிலே
விகல மின்றியே நிறுத்துதன் முதலிய வினைகள்
சகல முந்தவா தியற்றினளுமைபுரி தகைமை
புகல வெண்ணிலென் னறிவதற் கெளியதோ புதிதோ.

1088 அய்ய தூயபொற் பட்டுடை சாத்தின ளாற்றின்
மெய்யன் மெய்யினுக் கனுதியா யினிதென விதித்த
செய்ய பூநறைப் புழுகுநெய்க் காப்பிலே திளைக்கப்
பெய்யு மாமுகி லென்னவே சொரிந்தனள் பிராட்டி.

1089 வெள்ள மாகிய புழுகுநெய்க் காப்பெலாம் விராவிக்
கொள்ளு மாறுவெண் பாளிதத் துகள்பெருங் கூவ
லள்ளி யள்ளியே சாத்தினள் கயிலை நேராக
வுள்ள மார்தரு முவகையின் பெருமையா ருரைப்பார்.

---

1086, வெள்ளிதாய-வெட்டவெளியாய் இருக்கின்ற. நுண் மையர்-நுட்பமான சிவபிரான். மறுவையிற்றிருமேனி-களங்க மில்லாத திருமேனி. தரை-மண். (அசுத்தமாயை) குடிலை-சுத்த மாயை. மனுத்தவிசு - மந்திராசனம். வித்தியாதேகம் - மந்திரங் களால் ஆக்கப்பட்ட திருமேனி. வரித்தாள்-தாங்கிக் கொண்டாள்.

1087. சிற்பர நிலையைப் பூசைசெய்யும் இலிங்கத்திலே தேவி தங்கச் செய்தாள். விகலம்-வேறுபாடு. தகைமை-பெருமை. அறி வதற்கு—அறிவுக்கு. எளியதோ-எளிய பொருளா?

1088. அய்ய-நுட்பமான. அனுதியாய்—பழங்காலம் தொட்டு. பூ, நறைப்புழுகு, நெய். இவற்றைக் காப்பாக மேகம் போல் சொரிந் தாள். நறைப்புழுகு-வாசனை வீசும் புனுகு. 'புழுகு நெய்ச் சொக் கர் அபிடேகச் சொக்கர், கற்பூரச் சொக்கர்' (மதுரைக்கலம்பகம்).

1089. வெள்ளம் ஆகிய-மிகுதியான். பாளிதத்தூள் - பச்சைக் கற்பூரத்தூள். 'அடகுபுலால்பாகு பாளிதமும் உண்ணான்' (தொல்-மேற்கோள்) கூவல் – கிணறு. (கற்பூரக்கிணற்றை) கயிலையோ, என்று கூறும்படி கற்பூரத்தை உமை இறைவனுக்குப் பூசினள்.

1090 கரிய மான்மதங் குங்குமங் கற்புரக் கலவை
தெரிய நீடுபன் னீர்விடுத் துரிஞ்சுசெஞ் சாந்தம்
பரிவி னுலெடுத் துய்த்தனள் சிவனது படிவ
முரிய மேருமால் வரையெனப் புரிந்தன ளுமையாள்.

1091 அரத னப்பெருங் கோளகை மகரதோ ரணம்பொன்
கிரத வாரிநற் பட்டிகை கிடைத்திடாத் தரளம்
பரிய மாமணித் தருணமா முரகவா பரணங்
கருணை கூர்தரச் சேர்த்தியே பொலிவுறக் கண்டாள்.

1092 சாதி மாலதி யுற்பலஞ் சண்பக மலரி
கோதி லாதபொன் கூவிளை யந்தளி ரிவையே
யாதி யாய்முன மாதியா கமந்தனில் அறையும்
போது மாலிகைத் திறனெலாம் புனைந்தனள் புகழ்ந்தாள்.

1093 மனத்தி லாவர ணப்படு கடவுளர் வருக்க
மனைத்து மவ்வயி னவ்வயின் மனுவினு லமைத்து
நினைத்து நன்மகா நிவேதன வகையெலா நிரப்பித்
தனித்த றம்புரி கரத்தினு லருத்தியே தணித்தாள்.

---

1090. மான்மதம்-கஸ்தூரி. நீர்விடுத்து உரிஞ்சு-தண்ணீர் விட்டு அரைத்த. உய்த்தனள் - பூசியனுபவித்தாள். சிவனது வடிவத்தை மேருமலை போல் செந்நிறம் உறும்படி செய்தாள்.

1091. கோளகை-சிவலிங்கத்திற்குச் சாத்தப்படும் உறை. பொன்கிரதவாரி-பொன்னுற் செய்யப்பட்ட ஆபரணம். பட்டிகை-அரைக்கச்சை. தரளம்-முத்து. உரகவாபரணம்-பாம்பாகிய ஆபரணம். சேர்த்தி-அணிந்து. பொலிவுற-விளக்கத்துடன் இருக்க.

1092. சாதிமாலதி-சாதிமல்லிகை. உற்பலம்-நீலோற்பலம். அலரி-அரளி, கூவிளையந்தளிர்-வில்வபத்திரம். ஆதியாய்-முன்பு. ஆதியாகமம்-காமிகம். மாலிகைத்திறம்-மாலை வகைகள்.

1093. ஆவரணப்படுகடவுளர்-ஆவரண தேவதைகள் அவ்வயின் அவ்வயின்-அவற்றிற்குரிய அந்த அந்த இடததிலே. மனு-மந்திரம். அருத்தி-இறைவனை உண்ணச் செய்து தணித்தாள்-பசியைப் போக்கினுள்.

1094 நவையி லன்பினர் நீர்நிலை தண்டுல நாடி
யுவகை யிற்புரி பூசையிற் றிருத்தரா மொருவர்
புவன மூன்றுமுண் டுவட்டிட வறம்புரி புனிதை
விவித மாநிவே தனஞ்செயில் வெறுப்பரோ வியந்தார்.

1095 எண்வ கைப்படு தூபமெண் ணிறந்தபல் தீபங்
கண்ணி னுக்கணி யாகவே கவினுறக் காட்டிப்
பண்ணு றுத்துப சாரமாம் பதினறு வகையுந்
தண்ணு றப்பொலிந் தாற்றினள் செபநிவே தனமும்.

1096 அங்கி காரியம் பெலிதினத் திருவிழா வனைத்தும்
பொங்கு நீர்த்தகீ தப்பெரு வாச்சியம் பொலிவி
லெங்க ணுயகி நடத்தின ளட்டசாந் தியினுந்
தங்கு காமிகச் சைவநூல் விதிப்படி தவாமல்.

1097 இன்ன வண்ணமே யம்பிகை யருச்சனை யியற்ற
மன்னு கங்கைமண் டபமெனச் சண்டிகை வகுத்துத்
துன்னி யன்னவ ளருளினுற் பேரறத் தொகுதி
நன்ன யத்தினி னடந்தன சிற்சில நாள்கள்.

---

1094. நீர்நிலை-குளம். தண்டுலம்-மணல். (பொய்கையின் அடியில் உள்ள மணல்) திருத்தரர்-(திருப்திதர) மனநிறைவு கொள்ளும் சிவபிரான். 'திருத்தம் செய்து' (பெரியதிருமொழி. 3. 4. 5) உவட்டிட-தெவிட்ட. விவிதமா-விதம் விதமா. (பலவகையாக) வியந்தார்-ஆச்சரியப்பட்டார்.

1095. எண்வகைப்படுதூபம் - சந்தனம், தேக்கு, அகில். சாம்பிராணி, மட்டிப்பால் முதலியவை.

16. உபசாரம். 1 தவிசினை அளித்தல். 2 கால்கழுவ நீர்தரல். 3 கைகழுவ நீர்தரல். 4 முக்குடி நீர்தரல், 5 நீராட்டல். 6 ஆடை சாத்தல். 7 முப்புரி நூல் அணிதல். 8 தேய்வை பூசல். 9 பூச் சாத்தல். 10 மஞ்சள் அரிசி தூவல். 11 நறும்புகை காட்டல். 12 விளக்கிடல். 13 கருப்பூரம் ஏற்றல். 14 அமுதம் ஏந்தல். 15 அடைக்காய் தருதல். 16 மந்திர மலரால் அருச்சித்தல். (பொருட்டொகை நிகண்டு. 918) செப நிவேதனமும்-ஐந்தெழுத்தை செபித்தலும், அமுதத்தை வழங்கலும்.

1096. பெலி-பலி. நீர்த்த-தன்மைஉடைய. வாச்சியம்-வாத்தியம். அட்டசாந்தி-எட்டுச் சந்தியா காலத்திலும். தேவி, காமிக ஆகம முறைப்படி பூசை செய்தாள்.

1097. அம்பிகை-உமாதேவி. வகுத்து-அமைத்து. பேரறத்

### வேறு

1098 அன்ன போதருச் சனை தவஞ் சமாதி
யாற்று வோர்க்கிடை யூறுவந் தணுகின்
மன்னு மாமன நிலைப்படு மாறு
மருவு மாருயிர்க் குணர்த்துவான் மதித்தோ
கன்னி தன்னிமித் தத்தினில் வருத்தங்
கண்ட திற்பொறு மைப்படு கருத்தோ
பின்னையேவினை யாடலோ வெங்கள்
பிரானி னைத்தவந் நினைவையார் பிறிப்பார்.

---

தொகுதி-பெரிய முப்பத்திரண்டு தருமங்கள். இன்னவண்ணம்-இந்தவிதம். சண்டிகை-சண்டிகேஸ்வரி. நயத்தினில்-அருளுடன். 'நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினும்' (தொல். பொருள். களவியல். 23 நச்சினார்க்கினியர்) 'அங்ஙனம் தோழி கூறிய குறையினை அவள் அருளப்பெற்றவழி அதனைத் தலைவற்குக் கூறு தற்கு விரும்புமிடத்தும்' என்று உரை கூறினர்.

1098. அருச்சனையும், தவமும், சமாதியும் மேற்கொளும் போது இடையூறு வந்தால் (பக்தர்கள்) மனம் படும் பாட்டை ஆன்மாக்களுக்கு உணர்த்தவோ? உணர்த்துவான்-அறிவுறுத்தற்கு. மதித்தோ-கருதியோ? நிமித்தத்தினில்-காரணத்தில். பொறுமை-பொறுமையற்றதன்மை. பிறிப்பார்-சிக்கலை விடுவிப்பவர். (பிதிர் முதலியவற்றை விடுத்தல். இந்தப் பிதிரைப் பிரிக்கவேண்டும்' என்று லெக்ஸிகன் விரிக்கிறது)

பெருமான் தேவியைச் சோதித்த காரணம் யாதோ என்று வியக்கின்றார் ஆசிரியர். 'காதல் மிக்கவோர் திருவிளையாட்டில்' என்பர் சேக்கிழார். (திருக்குறிப்புத்தொண்டர். 62) 'ஒரு திருவிளையாட்டாலே' என்பர் சிவஞான முனிவர். (காஞ்சிப்புராணம், தழுவக். 366) கவிராட்சசர் கச்சியப்பர் இங்குக் கற்பனைத் திறத்தால் தன்னையே வென்றுவிடுகிறார். அழகியபாடல். 'திங்களும் கங்கை யாறும் தண்ணெனச் சென்னி தாங்கும் எங்கள் நாயகரும் அந்நாள் இத்தகு பணியிற்பட்ட-வெங்குளிர்க் குடைந்து செம்பொன் வெற் பரசுயிர்த்த நங்கை - கொங்கையின் வெம்மை மார்பின் ஒற்றிடும் குறிப்போதேரும்' (காஞ்சி. கழுவாய். 377) சேக்கிழார், திருக்கச்சி யின் சிறப்பைப் பேசும் போது மேற்கொண்ட யாப்பையே இவரும் பயன்படுத்தி உள்ளார். 'முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்யாப்பும்-பொன்னேபோல் போல் போற்றும் திறம்' இவர்பால் காணப்படுகிறது.

1099 கங்கை கோமதி யமுனை யிந்திரையே
கவுத மைநிரு மதைபெரு வாணி
சங்க மாருமிவ் வெழுபெரு நதியுந்
தம்பி ரானினைந் தருள்புரி தலுமே
யங்க மாருரு வுடனவை யணைய
வகில முள்ளடக் கியபெரு வெள்ளத்து
உங்கள் நாயகி பூசனைக் கிடையூ
றுஞற்று மென்றன னும்பர்தம் பெருமான்.

1100 வெருவி யந்நதி பிரான்மொழி மறுக்கில்
வெறுக்கு வெறுக்கு மென்றுகம் பைப்பெரு
பரவி வான்புவி பாதலந் தனது [வெள்ளம்
பாற்ப டுத்தொழிப டாமலே யகலாப்
பிரளை யங்குல வியதெனத் தரங்கப்
பெருங்க சத்துவான் பிறைபிடுங் கியபோல்
நுரைபி றங்கொலி கலிப்பி னுல்யாவு
நுண்டு கட்பட நொடியில் வந்தனவால்.

1101 உரக மாமுடி மணிபெயர் தரவே
யுள்ளு றப்புவி கீண்டுமே லோங்கி
விரவி யேககு பப்பெருங் கரியின்
வெண்கு வட்டணி வேறுறப் பறித்துத்
தரணி சேரிர தங்கடற் கடம்போற்
றள்ளு றக்கொடு சதுமுகன் பதியிற்
றெரிவை மார்கர வீணையை மிதவை
செய்கை யாக்கிடச் சென்றதக் கணத்தில்.

1099. கங்கை முதலான ஏழு நதிகளையும் கூவி எம்பிரான் 'அம்பிகை பூசனைக்கு இடையூறு புரிமின்' என்றான். கச்சியப்ப முனிவர் ஏழு நதிகளையும் பிரான் பெருகிவரப் பணித்ததாகக் குறிப்பார். சிவஞான முனிவர் எல்லா விழுமிய அண்டத்துள்ளும் புறத்தினும் விரவும் தீர்த்தம்-முழுவதும் ஒருங்கு நண்ண முன்னியதாகக் குறிப்பார். சேக்கிழார் கம்பைமாநதியையே பெருகச் செய்தார் என்பர். பெருவெள்ளத்து+உங்கள் நாயகி. எனப் பிரிக்கவும். இடையூறு உஞற்றுமின்-விக்கினம் செய்யுங்கள்.

1100. வெருவி-பயந்து தனதுபாற்படுத்து-தன்வசப் படுத்தி. ஒழிபடாமல்-இடையீடில்லாமல். பெருங்கசத்து-பெரியயானையின். நதியின் நுரை யானையின் தந்தம் போன்றுள்ளது. கலிப்பினுல்-உண்டாவதால். 'கரை பாய்ந்து கலித்த பெருநீருவரி' (ஞானாமிர்தம். 44)

1101. உரகம்-ஆதிசேடன், பெயர்தர-பிடுங்கப்பட. கீண்டு-

வேறு

1102 விரைவில்வரு பிரளையமாம் பெருநீத்தந்
தனைக்கண்டு வெருவி நாணு
மரிவையர்நற் குணமதனு லச்சமுறு
தன்மையளா யன்பு மீச்சென்
றுருவுபெற வுயிரனைய பெருமானுர்
திருமேனி யுள்ளா மென்னும்
பரிவுதலை சிறப்பநடு நடுங்குமனத்
தாவலமும் படர நோக்கி.

1103 அரியதிரு மேனியின்மே லிதுவருவா
னென்னென்றே யமைத்த கைகள்
பரனருளின் மருவுதலாற் பெரிதுகடி
துறுசலதி பதறு நிற்ப
வுருகியது பொறுமையுமுட் பெருங்காத
லன்புமுந்தி யுந்தி நூக்கத்
திரிதரலின் றுயவுளம் நெகிழ்ந்துகுழைந்
தொழிவில்சிவ சத்தங்கூர.

---

அகழ்ந்து. 'கீண்டான் நிலம் யோசனை' (கம்பன். ஆரண்ய. இராவணன் சூழ்ச்சி) ககுபம்-திசை. 'ககுபம் முற்றையும் விழுங்கி எப்பொருளினும் கலந்து' (வாசிட்டம்) ககுபப் பெருங்கரி-திக்கில் உள்ள யானைகள். குவட்டணி-கொம்பு வரிசைகளை. கடம்போல்-குடத்தைப் போல. (தேர் முற்றவும் கடலுக்கு அடியில் அமிழ மேலே கலசம்மட்டும் தெரிவதால் (கடலில் நீந்த உதவும்) குடம் போல் தோன்றிற்றென்க), குடம் நீரில் நீந்த உதவுதலை நைடதமும் திருக்குற்றாலப் புராணமும் நகிலைப்பற்றிப் பேசும் பகுதியில் குறித்தன. மிதவை-தெப்பம்.

1102. நீத்தம்-வெள்ளம். வெருவுதலும் நாணுதலும் மகளிர் இயற்கை. மீச்சென்று-அதிகரித்து. உள்ளாம் - வெள்ளத்துக்குட்படும். ஆவலம்-துன்பம். அருவமாகிய அன்பு வடிவத்தையடைய அம்மை அவலம் உற்றாள்.

1103. வருவான் என்-வருவதற்குக் காரணம் யாது? சலதி-வெள்ளம். பதறுநிற்ப-வேகப்பட்டுவர. பொறுமையுறும் பெருங்காதல்-பொறுக்கமுடியாமையால் உற்ற அன்பு. உந்திநூக்க-உந்தித்தள்ள. 'வெஞ்சின வீமன் வீடிடவருத்தி-நாகம் நூக்க'

1104 கடிதுதிரு வுருவில்விழுந் திருதனத்தி
னெருக்கிவளைக் கரத்தாற் சேர்த்தித்
தடநெடிய மார்பகத்து ளடக்கிமுடி
மீதுமுகந் தாழ்த்திக் கண்ணீர்
படவிதுவு மொன்றெனவே திரும்பியுள்ளம்
பதைபதைக்கப் பனிக்கு மன்பில்
வெடவெடன வுடன்மடுத்துத் தழிஇயினளப்
பரிவினையார் விளம்பற் பாலார்.

1105 தாணுவினைச் சுற்றுபசுங் கொடியெனவு
மேருவின்மேற் சான்று நான்று
காணவரு முகிலெனவுந் திருவேகாம்
பரத்தையுமை கலந்த போதங்
காணுருவு பெண்ணுருவு வேறுபடா
தொன்றிமிக வன்பு கூர்ந்து
நீணிலமேன் முதலான புவனமெலாம்
விழையினிமை நிலைய தன்றே.

---

(ஞானாமிர்தம். 89) சிவசத்து-சிவமாகியசத்து. இறைவியின் திருவுள்ளத்தில் அறிவும் அறியாமையும் இருத்தலின் சிவசத்து என்றார். ஊர-அதிகரிக்க. 'இருதிறன் அல்லது சிவசத்தாம் என' (சிவ. போதம். 6) சிவஞானபோதப் பகுதியை சமற்காரமாக ஆசிரியர் மேற்கொண்ட திறம் பாராட்டத்தக்கது.

1104. கடிது-விரைவில். தடம்நெடிய-மிகப்பெரிய. கண்ணீர் பட-கண்ணீர் பெருமான் திருமேனியில் பெருகிவிழ. இதுவும்-இக்கண்ணீரும். ஒன்று-(பெருமானுக்குத் தீங்கிழைக்கும் வெள்ளமும்).ஒரு தன்மை உடையது. திரும்பி-பெருமான் மேனியில் கண்ணீர்படாமல் முகத்தை வேறுபக்கமாக நோக்கி. மடுத்து-ஒன்றுபடுத்தி.

1105. பிராட்டி பெருமானைத் தழுவிய காட்சியை விவரிக்கிறார். தாணு-தூண். (சுற்றி) சான்று-நிரம்பி. நான்று-தொங்கி. உமை கலந்தபோது-தேவி தழுவிய சமயத்தில். வேறுபடாது-பிரிந்து இராமல். நீள்நிலம்-பெரியபூமி. மேல்-மேலே உள்ள: முதலானபுவனம்-தேவலோகம். சக்தியும் சிவனும் கலந்ததால் உலகில் உள்ள ஆண்வர்க்கமும் பெண்வர்க்கமும் இன்பம் உற்றன. விழை இனிமை நிலையது-விரும்புகின்ற இனிய நிலையை உலகம் உற்றது.

1106 மெய்யளவு படுமறையி னளவுபடாச்
சிவனுருவு விமலை செய்ய
கையளவு பட்டதவள் அல்லாம
லளவுபடக் காண்பார் யாரே?
செய்யமலை முலைத்தழும்பங் காண்வடிவைப்
பெண்வடிவு செயமே செய்ய
ஐயன்முதற் றிருமேனி தனிலெழுது
பெருவிருது மனைய தாமே.

1107 அம்மைதழு வக்குழைந்து விழைந்திழைந்து
தழைந்துவியந் தவிர்ந்து சோதி
செம்மைபெறக் கவின்றுபுள கித்திறுமாந்
தினிமைதலை சிறந்து வாழ்ந்து
மெய்ம்மைபடக் குளிர்ந்துயர்ந்து வளர்ந்துதற்ப
ரானந்தம் விளங்கி யோங்க
வெம்மடிமை யுடையபிரான் முலைச்சுவடும்
வளைச்சுவடு மிசைந்தா ரன்றே.

---

'சக்தியும் சிவமும் ஆய தன்மையிவ்வுலகம் எல்லாம்-ஒத்து ஒவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியுமாகி வைத்தனன்' என்று சித்தியார்பகரும்.

1106. மறைக்கும் அளவுபடாத சிவன்திருமேனி அம்மையின் கரங்களுக்குள் அடங்கிவிட்டது. சிவலிங்கத்தில் இருக்கும் முலைத் தழும்பு ஆண்மையைப் பெண்மை வெற்றிகொள்ளும் என்பதை எழுதிவைத்த விருது ஆகும்.

மெய்அளவுபடும்-சத்தியம் கலந்துள்ள. அளவுபடா-அளக்க முடியா. 'தேவரும் மறையும் இன்னமும் காணுச் செஞ்சடைக் கடவுள்' என்பர் வரந்தருவார். (பாரதம். பாயிரம்). கையளவு பட்டது-கரங்களுக்குள் அடங்கியது. முதல் திருமேனி-முதன்மை யான திருமேனி. 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரண மாய்' இருத்தலின் இங்கனம் கூறப்பட்டது, விருது-வெற்றிச் சின்னம்.

1107. அம்மைதழுவிய போது பெருமான் பெற்ற ஆனந் தத்தை விவரிக்கிறார். இறைவர் அம்மை தழுவியதும் முதலில் விழைந்தார். பிறகு அம்மையுடன் இழைந்தார். அதன் பிறகு தழைந்தார் வியந்தார்; அவிர்ந்தார்: கவின்றார்: புளகித்தார்: இறு

1108 தெரிவைமுலைக் கடினமதோ விறைவர்தனி
மென்மையதோ தெரித தேற்றும்
பரமநிரு மலவெளியிற் றழும்புபட
வகிலமெலாம் பாவ நாச
மருவிவளம் பெருகியினி மைத்திறத்து
மல்கியெழில் வாய்த்து ஞானம்
பெருகுநடைப் பரம்பரையி லுயர்ந்திலகி
நாடோறும் பிறங்கிற் றன்றே.

1109 இறையவனு முமையவளா லிங்கனமெய்ப்
பரிவினிமை யெளிது வாய்த்துக்
குறைவறுமவ் வுகமையினிற் றருணநிலைக்
கவினுருவு கொண்டு சோதிப்
பிறையிலக நீலகண்டத் தொளியதனை
யுள்ளடக்கிப் பிறழா நிற்ப
மறையுருவப் பொற்றனிமா மூலலிங்கத்
தெழுகொழுந்தாய் வயங்கி னானே.

---

மாந்தார்: இனிமை சிறக்க வாழ்ந்தார்: குளிர்ந்தார்: உயர்ந் தார்: வளர்ந்தார். முடிவில் ஆனந்தம் விளங்கி முலைச்சுவடும் வளைச்சுவடும் தன் திருமேனியிற்பட இறைவியுடன் ஒன்றுபட் டார்.

அவிர்ந்து-விளங்கி. 'அவிர் ஒளி விளக்கென்று அல்கல் அல் லதை—திரிபும் உண்டோ'. (ஞானமிர்தம். 17)

1108. பெருமான் திருமேனி குழைந்த காரணத்தை ஆராய முற்பட்டு ஐயத்தில் ஆழ்கிறார் ஆசிரியர். தெரிவை-அம்மை. தழு விய பொருளின் கடினத்தாலா, தழுவப்பட்ட பொருளின் மென்மையாலா? தழும்புபட்டது. தெரிதல் தேற்றும்—உணர்ந்து தெளியும் ஆற்றல் பெற்றிலோம். 'யாம் அது தெரிதல் தேற்றும்'. (கம்பன். ஆரண்ய. அயோமுகி. 4). நிருமல வெளியில் தழும்பு பட்டது. அதனால் உலகின் பாவம் நாசம் உற்றது. நடை-ஒழுக்கம். பிறங்கிற்று-விளக்கம் உற்றது. அன்று. ஏ அசைகள்.

1109. ஆலிங்கனம்-தழுவல். மெய்ப்பரிவு - உண்மையான அன்பு. உகமை-மகிழ்ச்சி. தருணம்-இளமை. 'தருணமங்கையை மீட்பதோர் நெறி' (கம்பன். யுத்த. வருணன்). பிறழா நிற்ப-விளங் கித்தோன்ற. 'கிடங்தொளி பிறழும் நெடுஞ்சடைப் பெருமான்' (கல்லாடம் 57) மறை உருவப் பொற்றனிமா-வேதமாகிய ஒற்றை மாமரம். 'ஒற்றைமறைமா' (வண்டுவிடுதூது. 10.11,)

1110 எம்பெருமான் வெளிப்படலு முமையவளுந்
தொழுதுவிழுந் தெழுந்து தாழ்ந்து
செம்பதுமப் பதமொதுங்கிக் கண்ணீர்வார்ந்
தருவிசெயச் சிலிர்ப்ப ரோமம்
பைம்புயலி னுடல்வளைத்துப் பங்கயச்செங்
கைகுவித்து பரிவு கூர்ந்து
கம்பமுறக் கருணைவிழி சிறிதுறுபார்
வைப்பெருநாண் கவின நின்ருள்.

1111 அரிபிரமர் குதுகலித்துப் பேருவகை
துள்ளிவிழுந் தாடிப் பாடிச்
சுருதிநெறிப் படிபுகழ்ந்து முன்பின்முறை
யறியாது தொழுது போற்ற
வுருவுபெறு முனிவரிமை யவர்மலர்மா
மழைசொரிந்தங் குவப்பி னேத்தப்
பரவுகட வுட்பேரி துந்துமியே
முதலியங்கள் பலவு மார்ப்ப.

---

1110. வெளிப்படலும்-காட்சிதருதலும். 'கையிற் சுட்டி காட்ட-ஐயநீ வெளிப்பட்டருளினையாங்கே' (திருக்கழுமலமும் மணிக்கோவை 1) விழுந்து தொழுது எழுந்து தாழ்ந்து என்று கூட்டுக. ஒதுங்கி-ஒருபக்கத்தில் சென்று நின்று. கண்ணீர் வார்ந்து-கண்ணீர் சிந்தி. அருவிசெய - அருவியைப் போல் ஓட. பைம்புயலின்-பச்சை மேகத்தைப்போல. கம்பம்-நடுக்கம். சிறிது பார்வை-கடைக்கண் பார்வையுடன். நாண்கவின-நாணமானது (தேவியைச் சார்ந்தமையால்) அழகுபெற.

1111. குதுகலித்து-மகிழ்ந்து. சுருதி நெறிப்படி – வேதம் விதித்தபடி. உருவுபெறும்-மந்திரங்களைப் பன்முறை ஜெபிக்கும் பேறுபெற்ற. 'உருஏறத்திரு ஏறும்'. என்ற வழக்கை நோக்குக. பரவு–புகழப்படுகின்ற. கடவுள் பேரி - தெய்வத்தன்மை பொருந்திய பேரிகை.

1112 தெய்வமடவா ரறுபத் தாறெனுமா
யிரவரவர் திரண்டு சூழ்ந்து
கவ்வையறு மாடலொடு பாடல்பர
தப்படியே காட்டா நிற்ப
எவ்வயினு மெவ்வெவரு மிப்பெருங்கோ
லங்காண்பான் எழுந்து நாட
மெய்விரவு கணநாத ரிடைப்படச்சன்
னிதிமிகவும் விளங்கிற் றன்றே.

வேறு

1113 ஐயனது காலைசிறு நகையிற் றுன்செ
யாடல்விளங் கிடக்காட்ட வம்மை நோக்க
மையிலகு காளவிட மனையாள் கோடி
வதனமுன்னங் கீர்த்திமதி வயின்வந் துற்றாள்
பையரவக் கங்கணத்தாள் கபாலஞ் சூலம்
படருமிரு கோடிகரம் படைத்தா ளுன்னின்
நொய்யகணத் தவனியெலா முண்பாண் மிக்க
நோன்மையுளாள் தனைக்குறிப்பி னோக்கி நின்றாள்

---

1112. கவ்வை-துன்பம். எவ்வயினும்-எந்த இடத்திலும். இடைப்பட-இடையிலிருக்க. சன்னிதி-தெய்வக்காட்சி. சன்னிதியை மறைக்காதே என்று கூறும் வழக்கை நோக்குக.

1113. அதுகாலை-அப்போது. இறைவன் புன்னகையால் தன் விளையாட்டைக் காண்பித்தான். இதை அறிந்த அம்மை நோக்கக் கீர்த்திமதி அங்கு வந்தாள். அவள், கங்கணத்தால்: கோடிகரம் படைத்தாள்: கணத்தில் அவனி உண்பாள்: அவளைத் தேவி பார்த்தாள்.

காளவிடம்-கரியநஞ்சு. வயின்-அவ்விடத்தில். அரவக்கங்கணத்தாள்-பாம்பையே கங்கணமாகவுடையவள். நொய்யகணத்து-மிகச்சிறு விநாடிக்குள். நோன்மை-வன்மை.

1114 அன்னையுளக் குறிப்பறிந்தா ழித்தீ யன்னு
ளவள்குறிய முனிமடி னுக்க பாலத்
தின்னிடையேற் றச்சலதி வெள்ளம் யாவு
மிருவிழியிற் கனல்கொளுவ வெரிந்துகாய்ந்து
கன்னிநன்னீர் சுவறியது பாதி பாதி
கன்றுவெம்மை பொறுமையினற் கலித்துக் கூவிப்
பன்னியதங் குமைதிருப்பே ரனைத்து மன்ன
பரிசுகண்டெம் பிராட்டிசில பகர்வ தானுள்.

1115 நீவிர்தல மிதனையடை பெறுதி யாலே
நிகரில்குறை தீர்ந்துயர்ந்தீர் நிமல மாகப்
பாவனைசெய் தித்தலத்திற் றரும நன்னீர்
படிந்துபடிந் துய்ம்மினெனப் பாவைகூற
வேவல்புரிந் தெழுநதியும் புனித மாகி
யிலக்கிலர தீர்த்தத்தி லெம்மான் றன்னைத்
தாவிலருச் சனைபுரிந்த தலப்பாற் பொய்கை
தமதுநீ ரானிரப்பித் தணந்த வன்றே.

1116 அப்பரிசு கண்டுசிவ னுமையை யாரா
வன்பினெடு தழீஇக்கொண்டங் கன்பு கூடச்
செப்பரிய முகமனுரை சொற்றுக் கையாற்
சேரவணைத் தாளுதலுஞ் சிவஞா னத்தின்
வைப்பெனவே தாந்தநெறி மரபே யென்ன
வடிவுபெருச் சிற்பரம வாய்மை யென்ன
வொப்பிலுயர் பரமவுப தேச மாக
வும்பர்பிரா னைத்துதிக்க லுற்று ளம்மை.

---

1114. 'அவள்குறிய முனிமடி னுக்க பாலத்' என்று உள்ளது. சரியான பாடம் அன்று. கபாலத்தின்னிடையேற்று - வெள்ளத்தைக் (கீர்த்திமதி) கபாலத்திலே வாங்கி. சலதி வெள்ளம்- கடல்போன்ற நீர்ப்பெருக்கு. கொளுவ-கொளுத்த. பார்வையினற் கொடுத்த தீர்த்தங்கள் உமாதேவியின் பெயர்களைக் கூறின. பரிசு-தன்மை,

1115. பெறுதியால்-பாக்கியத்தால். நிமலம் ஆக-நீராடிய மக்கள் தூய்மையடைய. பாவனை செய்து-பாவித்து. (கருதி) உய்ம்மின்-பிழையுங்கள். இலக்கில் அரதீர்த்தத்தில்—அளவற்ற சிவதீர்த்தத்தில். தீர்த்தத்தில் புனிதம் ஆகி எனமாற்றுக. தணந்த-நீங்கின.

1116. ஆராவன்பினெடு - அடங்காத அன்பினுடன். அன்பு கூட-அன்பானது அதிகரிக்க. சேரவணைத்து-பொருந்த அணைத்துக்கொண்டு.

1117 அருவுருவ மன்றியவை யாவாய் போற்றி
யனைத்துமறி யாதறியு மறிவ போற்றி
நிருமலசச் சிதானந்தங் கடந்தாய் போற்றி
நிராதார பராதார நிறைவே போற்றி
பரமகலி யாணசுகா தீதா போற்றி
பத்திபுரி வோர்க்கெளிமைப் பாலாய் போற்றி
திருமறையா மொருதனிமா நிழலாய் போற்றி
திருவேகம் பரத்துறையுந் தேவே போற்றி.

1118 அறியுமள வெவ்வளவவ் வளவே யாய
வற்புதச்சிற் பதப்பொருளே யரனே போற்றி
குறிகுணந்தத் துவசாலங் கடந்து ஞானக்
கோளினருள் ளருளினறி குறியே போற்றி
பொறிபுலன்க ளன்றியன்பின் அடியா ராற்றும்
போகமெலாம் மினிதுநுகர் புராண போற்றி
எறிதரங்க வெள்ளவருட் கண்ணு போற்றி
யேகம்பத் தமர்ந்துறையு மெந்தாய் போற்றி.

---

தேவி, உம்பர்பிரானை சிவஞானத்தின் வைப்பென்ன, வேதாந்த மரபே என்ன, துதித்தல் உற்றாள். வைப்பு-க்ஷேமநிதி. சிற்பரம் வாய்மை-அறிவுக்கு மேலே இருக்கும் பரம் பொருளின் பெருமையைப் பேசும் வேதம்.

1117. சத்+சித்+ஆனந்தம்—சச்சிதானந்தம்- சத்-உண்மை. சித்-அறிவு. ஆனந்தம்-இன்பம். நிராதார-ஆதாரம் அற்ற. பராதார-மேலான (அனைத்திற்கும்) ஆதாரமான. சுகாதீதா-சுகத்திற்கு அப்பாற்பட்டவனே.

1118. மனத்தின் அளவுக்குத் தக்கபடி இறைவன் தோன்றுவான். சித்பதப் பொருளே-அறிவு என்று கூறப்படும் சொல்லுக்குப் பொருளாக இருப்பவனே. தத்துவசாலம்-தத்துவக்கூட்டம். ஞானக்கோளினர்-ஞானக்கொள்கை உடையவர்கள். அருளின் அறி-திருவருளால் அறியப்படுகின்ற. இறைவன் அருளாலே அறியத் தக்கவன். 'அருளாலேபார் என்று சொன்னான்' என்பர் சிவஞானி—தாயுமான சுவாமிகள். அருள்வெள்ளக்கண்ணு-திருவருளை ஆற்று வெள்ளம் போல் வழங்குகின்ற கண்ணை யுடையவனே. 'கருணை நிறைந்து அகம்புறமும் துளும்பி வழிந்து' (திருவருட்பா.) 'ஏகம்பத்துறை எந்தாய் போற்றி' என்று மணிவாசகர் கூறுவர். அத்தொடர் இப் பாடலுக்கு மணிமுடியாக அமைந்துள்ளது.

1119 என்றுபல துதிசெய்யத் திருவே கம்பத்
தெந்தைதிரு வுளமகிழ்ந்தங் கிமையப் பாவை
பொன்றிகழ்பங் கயத்திருச்சூ டகக்கை பற்றிப்
பொற்பினுட னணைத்துவகை புகன்று நோக்கி
நன்றுளநீ யபேதநமக் கிருவோர் தன்மை
நகைமதியங் கிரணமலர் நறைபொன் மாற்று
நின்றருமச் செயன்முழுது மகார்க ளாகி
நிலவுமுயிர்த் தொகைபிழைக்கு நிலைமை யேயாம்.

1120 காரணகா ரியமுவப்பு வெறுப்பு யாவுங்
கடந்தவணி யுலகவுப கார மாகப்
பேரிசைசேர் வரங்கள்பல வேண்டி நீயே
பெறுதியென வுமையாளும் பிரானை நோக்கிப்
பாரிடையே குலவுயிர்க்குப் புத்தி முத்தி
பலிக்குமுண்மை தேசிகனிப் பதியங் குள்ளோர்
சீரியரெல் லாமுடையர் குறையொன் றில்லோர்
சிவசிவவுன் னருளவர்பாற் செறித லாலே.

---

1119. இமயப்பாவை - இமயமலை பெற்றெடுத்த உமை. உவகைபுகன்று-சிருங்காரத்தைக் கொண்டாடி. அபேதம் - வேறுபாடற்ற தன்மை. இருவோர்தன்மை-நம் இருவருக்கும் உள்ள பண்பு. மதியமும் கிரணமும், மலரும், நறையும், பொன்னு மாற்றும். மகார்களாகி-மக்களாகி. நின்செயல் ஆன்மவர்க்கம் ஈடேறுவதற்கே.

1120. காரணம், காரியம், உவப்பு, வெறுப்பு, முதலான இருமைக்கு அப்பாற்பட்டவள் பராசக்தி. பேரிசை-பெரும்புகழ். பெறுதி-பெறுவாயாக. இப்பதி, உயிர்க்கு புத்திமுத்தி பாலிக்கும் தேசிகன் எனக் கூட்டுக. இந்தத் தலமே புத்தியையும் முத்தியையும் வழங்கும் தலம். உன் அருள் அவர்பால் செறிதலால், அங்கு உள்ளார், சீரியர்: எல்லாம் உடையர்: குறை ஒன்று இல்லார் எனக் கொண்டு கூட்டுக.

1121 ஆயினுமித் தலத்தணுக்க ளறிவு கூர்ந்து
மறியாதும் புரிபவங்க ளனைத்துந் தீயின்
மேயபொருளொனநசிக்க வேண்டு நன்கு
விதிப்படியி னாற்றினது விவித கோடித்
தூயதெனப் பலித்திடவும் வேண்டு மூன்றன்
றுணைப்பதத்துப் பிழையலது துரிசு யாவு
நீயவர்பாற் புரியாமை வேண்டு மென்று
நிமலமதாய் நீயுறையு நிலைமை யாலே.

1122 என்னவிறை நீவேண்டும் வரங்கள் யாவு
மெமதருளா னீயே பெற் றிடுதி யென்று
மன்னினனத் திருவேகாம் பரத்தின் பாலாய்
மலைமகளும் பெரிதுவந்து வனப்பு மேவி
யுன்னியது முடிந்ததுயி ரனைத்தும் தீமை
யொழிந்ததெனப் பராம்பரத் தினூடு போகிச்
சென்னிலையி லறம்பலவும் புரிந்து வைக
திருந்தவனி முழுதுமின்பஞ் சேர்ந்த வன்றே.

---

1121. கூர்ந்தும் - நிரம்பியிருந்தும். பவங்கள் - பாபங்கள். நசிக்கவேண்டும்-அழியவேண்டும். ஆற்றியது-செய்த புண்ணியங்கள். துரிசு-குற்றம். 'துரிசுகளுக்குடனாகி' (சுந்தரர் தேவாரம்) புரியாமை வேண்டும்-மனத்தில் தோன்றாமல் இருக்கவேண்டும். நீ உறையும் நிலைமையால் இவையனைத்தும் வழங்கவேண்டும் என்று அம்மை வரம் கேட்டாள்.

1122. கேட்டபடி கேட்டவை பெற்றதால் அம்மையின் பொலிவு அதிகரித்தது. ஆதலால் ஆசிரியர், பெரிதுவந்து வனப்பு மேவி என்றார். பராம்பரம்-அம்பிகை தங்கியிருக்கும் இடம். செல்நிலை, இல் அறம்-அழிந்து போகாத தருமங்கள். 'திறம்புகாலத்து யாவையும் சிதையிலும் சிதையா அறம்' என்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் கல்வெட்டாக்கி உள்ளான்.

## 11. திருவிழாச் சருக்கம்

1123 இன்ன வண்ணமே யறந்தவம் பூசனை யாவுங்
கன்னி யாற்றிடு மாறுகண் டின்புறுங் கடவுட்
பொன்னு லாந்திரு மார்பின னுன்முகன் புவன
வன்ன நாயகர் யாவரு மற்புத மருவி.

1124 ஈறின் மாதவம் யாவது புரிந்தன மின்ன
பேறு காணுதல் கேவலத் தியல்வதோ பெரிதும்
ஊறி லாநல மடைந்தன மென்றன ருவந்தார்
தேறி மாநிழற் பிரானது திருமுன்னஞ் செறிந்தார்.

1125 அத்த னேயெம தாருயிர்த் தலைவனே யழியா
நித்த னேபர மானந்த நிருத்தனே நிமலச்
சுத்த னேதனி மாநிழ லிறைவனே சுருதிச்
சித்த னேயெனப் போற்றின ரன்பிலே திகழ்ந்தார்.

---

1123. இன்னவண்ணம் - இவ்விதமாக. கன்னி - உமாதேவி. கடவுட்பொன்-தெய்வத் தன்மை உடைய பொலிவு. 'பொன்னுர் முற்றம் புகுந்துடன் துவன்ற' (பெருங்கதை. 3.19.182) வன்னபுவன நாயகர் என மாற்றுக. புவனநாயகர்-அரசர். உலகபாலர் உருவாய் நின்று உலகம் காத்தலின் 'இறை' என்றுர் என்று பரிமேலழகர் வரைந்த விளக்கம் காண்க. (இறைமாட்சி. அவதாரிகை)

1124. பேறுகாணுதல்-புருஷார்த்தம் பெறுதல். 'அடியார்க்கு அருள்பேறே' (திருவாய்மொழி. 1047) கேவலத்து-சாதாரணமான புண்ணியச் செயலால். இயல்வதோ-கிட்டுவதோ. விளைவைக் கொண்டு முயற்சியை ஆராய்வது போல் பலனைக்கொண்டு அன்பர்கள் தாங்கள் செய்த தவம்யாதோ என்று வியக்கின்றனர். 'என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே' என்பர் வாகீசர். ஊறு-துன்பம். 'எண்ணற்ற இன்பத்தின் தலைமேலே துன்பங்கள் இருக்கும்' என்று ஞானவாசிட்டம் கூறும். இவ்வின்பம் அதனின் வேறுபட்டது, ஆதலின் ஊறிலா நலம் என்றுர். நலம்-இன்பம். சிறந்த நன்னலம் என்பர் தேவர். (சிந்தாமணி. சுரமஞ்சரி. 73)

1125. அத்தனே - சுவாமியே. உயிர்த்தலைவனே - பசுபதியே தட்சணாமூர்த்தியாக இருந்து அடைந்த ஆனந்தத்தால் பெருமான் ஆடுகின்றுன் ஆதலால் ஆனந்த நிருத்தன் என்கிறுர். 'ஆனந்தம் ஆடு அரங்கு: ஆனந்தம் பாடல்கள்:—ஆனந்தம் வல்லியம்: ஆனந்தம் வாச்சியம்-ஆனந்தம் ஆக அகில சராசரம்-ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந்தானுக்கே' (திருமந்திரம். 2725)

1126 அன்ப ரன்பினுக் கெளிவரு விருதுடை யமலன்
பொன்பி றங்குமே காம்பரத் தமர்தரு புனிதன்
முன்பு நின்றிடு முராரியே யாதியா முனிவர்க்
கின்ப வாரருள் புரியமுன் னின்றன னினிதின்.

1127 போற்றி நான்முக னைந்தொழில் புரிதரு பொருட்டா
லேற்றி னன்னது விழாப்பொலி திருவிழா வெழுச்சி
நீற்று மேனியா யுமையவள் மணம்புரி நிலைமை
வீற்று வீற்றுயர்ந் தெழுதர விழைவினை மிக்கோம்.

1128 அய்ய வென்றலு மெம்பிரான் மகிழ்சிறந் தருளி
வைய முய்திறத் துரைத்தனிர் தமிழ்முனி வரத்தாற்
செய்ய தோருமை திருமணப் பெருவிழாச் சிறப்புப்
பொய்யி லாதிவண் புரிந்திட முன்னமே புகன்றும்.

1129 இந்ந கர்க்குயா மரசிருந் தனமுன மிப்பா
லுன்னி யேயெம தருட்டிரு விழாநடத் துதற்கு
மன்ன னாதிமா னான்முகன் மந்திரத் தலைமை
தன்னை யாற்றுதி பொன்புரோ கிதனெனச் சார்வாய்.

---

1126. எளிவரும்-சுலபமாகக் காட்சிதரும். 'எளிவந்த எந்தை பிரான்' (திருவாசகம். நீத்தல். 15) பொன்-பொலிவு. முராரி-திருமால். (முரனை அழித்தவன்) 'பிரான் எனச் சொல் முராரி புராரி நீ' (அழகர் கலம்பகம். 7) ஆர் அருள்-மிக்க அருள்.

1127. நான்முகன் வேண்டுகோள். புரிதருபொருட்டா-விளங்க வேண்டி. 'போய்முகில் அகலச் சோதி புரிந்திடும் அதுவே போல' (சித்தியார் 172) ஏற்றினன் - சுமந்துகொண்டேன். அதுவிழா ஏற்றினன் என மாற்றுக. திருவிழா எழுச்சி, உமையவள் மணம் புரி நிலைமை உயர்ந்து எழுதர. விழை வினைமிக்கோம் எனப் பிரிக்க. விழை-வினைமிக்கோம் - விரும்புகின்ற செயலை மிகுதியாகப் பெற்றுள்ளோம்.

1128. மகிழ்சிறந்தருளி-மகிழ்ச்சி நிரம்பி. உய்திறத்து-பிழைக்கும் வழி. தமிழ்முனி-அகத்தியர். இவண்-இங்கே. (காஞ்சிபுரம்) அகத்திய முனிவர்பால் யாம் காஞ்சியில் திருமணக் காட்சிவழங்குவதாகக் கூறினோம் என்று இறைவன் கூறினான்.

1129. நகர்க்கு - நகரின்கண். 'இந்நகர்க்கே வாழ்கின்றோம்' (நளவெண்பா. கலிநீங்கு) முனம் அரசு இருந்தனம்-முன்னர் அரசாட்சி புரிந்தோம். மன்அனாதிமால் நான்முகன் மந்திரத்தலைமை

1130 திருவி ழாவது வைப்பெரு மணமிவை செறியப்
புரிவு கூர்தரப் புரிமினென் றரன்வரப் பணிப்பக்
கருணை கூர்ந்தன னெம்பிரா னெனவெழு காதற்
புரிவி னோர்பரந் தாமனே முதலினோர் புகல்வார்.

1131 பஞ்ச வன்னமா மிரவியின் பேர்படு பட்டை
விஞ்சு பொன்னெழு திப்பணிப் பட்டினுள் விசேடம்
புஞ்ச மாகிய நவமணிச் சேர்வைமேற் பொதிந்து
செஞ்ச வேபுரி குடைகொடி தொங்கல்சே ருடி.

1132 வருண மாகிய விடக்கயஞ் சந்திர வட்டம்
புரண மாயவிவ் வருக்கங்கள் பொற்புறப் புரிமின்
றருண மாகவிவ் வுலகெலாம் வியப்புறத் தருக்காற்
பருதி வாசவன் விதுவென வவர்க்கது பணித்தார்.

---

தன்னை ஆற்றுதி. புரோகிதன் எனச் சார்வாய் என்று பிரஹஸ்பதியை அழைத்துச் சிவபிரான் கூறினன். திருமால் சிவபிரான் மேற்கொண்ட நவந்தரு பேதங்களைச் சார்ந்தவர்கள் ஆதலின் அறுதிமால், பிரமன் என்றார் ஆசிரியர்.

1130. வதுவைப் பெருமணம்-திருமணம். 'வதுவைப் பெரு மணம்' என்ற தொடருக்குப் பெரியவாச்சான் பிள்ளை, விவாஹ மஹோத்சவம் என்று விளக்குகிறார். (நாச்சியார் திருமொழி. 6 ஆம் திருமொழி. 2) அரும்பதக்குறிப்பு, 'வதுவை - கந்நிகை' மணம்-விவாஹம் என்று தெளிவுபடுத்துகிறது. பரிவுகூர்தர-அன்பு மிகுதியாக. வரம்பணிப்ப வரங்கொடுக்க. பரந்தாமன்-திருமால்.

1131. பஞ்சவன்னம்-ஐந்து நிறம் பெற்ற. இரவியின்பேர்படு பட்டு–சூரியகாந்திப்பட்டு. பொன் எழுதி - அழகாகச் சித்திரம் வரைந்து. புஞ்சம்-தொகுதி. 'புட்குல புஞ்சம் நெடுங்–கொல்லி யிசைத்திடு குந்தள ஓதியர்' (ரகுவம்சம். திக்குவிசயம் 266) குடையும், கொடியும், தொங்கலும், சேருடியும்-விருதுகள். விருதுகள் யாவும் சூரியகாந்திப் பட்டாற் செய்யப்பட்டன. 'பொன் எழுத்து எழுதுசேருடி' (திருக்காளத்திப் புராணம்)

1132. இடக்கயம்-டக்கயம் (தேர்க்கொடி) சந்திரவட்டம்-சந்திரவட்டக் குடை. வருக்கங்கள் - வகைகள். சூரியனுக்கும், இந்திரனுக்கும், சந்திரனுக்கும். குடை, கொடி, தொங்கல், சேருடி, இடக்கயம், சந்திரவட்டம் முதலான விருதுகளை அமைக்கும் பணியைச் செய்மின் என்று பரந்தாமன் முதலானவர்கள் கூறினர். பருதி-சூரியன். வாசவன்–இந்திரன். விது-சந்திரன்.

1133 தீப கோடியின் விசித்திர வகையெலாஞ் சிவன்றன்
சாப மால்வரை கொடுமுடி யளவெனச் சமைத்துத்
தாபி நீயழல் பாவக விளக்கமே தயங்கச்
சோபி யாவிடில் வருதுரி சுளதெனச் சொற்றார்.

1134 வன்பு முற்றிய பேரிமா முரசுவண் பாண்டி
லின்ப முற்றிய முழவுசல் லரிமுத லியங்கள்
மின்ப ணிக்குழல் வீணையாழ் விரகினிற் பணித்தி
தென்பு லத்தவன் கடிதென விரைவினிற்றெழித்தார்.

1135 விரிதி ருப்பெரு விழாவினுக் கியாவரும் விரைவின்
வருதி ரென்றுமுப் புவனத்து ளோரெலாம் வரவே
புரிதி நிற்றியோ போவெனப் பலபல புகன்று
நிருதி தன்னைமுன் னேவின ரங்ஙன நீங்க.

---

1133. அழல்-அக்கினிதேவனே :–(அண்மைவிளி). தீபகோடி-விளக்கு வரிசை. சாபமால்வரை-சிவபிரானுக்கு வில்லாக இருந்த மேருமலை. 'தங்கமகா மேருவினில் தண்குடிசை தொடுத்தோம், சாபமலை என்றுரைத்தார்: தாபமொடு விடுத்தோம்'. (சரபேந்திரர் குறவஞ்சி. 40) நீதாபி-நீநிலைநிறுத்து. விளக்கம்-விளக்கு "தாமரை விளக்கம் தாங்க" (கம்ப-பால. செய், 36) சோபியாவிடில்-பிரகாசிக்காமல் இருந்தால். துரிசு-குற்றம். 'யான்செய்யும் துருசுகளுக்குடனாகி' என்பர் சுந்தரர்.

1134. வன்பு-வலிமை. பேரியும் முரசும் வன்மைக் கருவிகள் பதினைந்துள் அடங்குமாகலின் வன்பு முற்றிய என்றார். பாண்டில்-கஞ்சதாளம். 'இடிக்குரல் முரசம் இழும் என் பாண்டில்' (சிலம்பு கால்கோள் 194). முழவு-மத்தளம். சல்லரி-சல் என ஒலிக்கும் ஒருவகையான தோற்கருவி. கூத்தப்பிரான் ஆடியபோது இது முழக்கப்பட்டதாகப் பஞ்ச மரபு கூறும். (தமிழர் தோற்கருவிகள் என்ற நூலில் திரு. ஆர். ஆளவந்தார் அவர்கள் இக்கருவிகள் பற்றி ஆய்ந்துள்ளார்)

பணிக்குழல்–நாகசுரம். பணித்தி-கட்டளையிடு. தென்புலத்தவன்-தருமனே (அண்மைவிளி). தெழித்தனர்-முழக்கினர்.

1135. நிருதியை யாவரையும் அழைக்கும் பணியைச் செய்க என்றனர். நிற்றியோ-நிற்கிறாயா. இங்ஙனம் தேவர்கள் ஏவியது விழாவின்பால் அவர்கள் கொண்ட வேட்கையை உணர்த்துகிறது.

1136 தருண சூரிய னெனவொளி தயங்குசெஞ் சாந்தம்
வருண மாநறைக் குலப்பெருங் கலன்வயின் வருக்கம்
பூரண மாகவே நிறைதரப் போற்றினை புரிதி
திரணி லாவுவ பலபல வருணநீ தெரிவாய்.

1137 இனைவ வென்றள விற்படா மணிமறு கியாவும்
புனைய லாவணப் புதுமலர் மலையினைப் பொருவ
வினைய மாகவே கொணருதி மங்கல வினைக்கிங்
கனில ராசமுற் படுபொரு ளாவன வன்றே.

1138 முத்தி ருத்திரன் மணிநடு திருத்திவான் முகில்போய்
நித்த ரித்திடு பித்திகைப் பத்திநீண் மறுகு
சித்தி ரித்தணி புதுக்குவ கண்ணுறீஇத் திருதி
வித்த கத்தள கைக்கிறை புத்தியின் விரகால்.

1139 பாச முற்றுமீ சனுக்கெனும் நேசமெய்ப் படிவ
மாச னத்தவர் வரின்முக மன்னுரை வழங்கி
யாச னத்தில்வைத் துணவுநல் லாதிய வளிக்கத்
தேசு முற்றுமீ சானமெய்க் கடவுளைச் செறித்தார்.

---

1136. தருண சூரியன்-இளஞ்சூரியன். நறைக்குலம்-தேன் வகைகள். பெருங்கலன்வயின்-பெரிய பாத்திர மிகுதி. போற்றினை-பாதுகாத்து. (வருணனனுக்கு மது வகைகளை அமைக்கும் பணி வழங்கப்பட்டது) வாருணி என்ற சொல் மதுவைக் குறிக்கும். பெயர் ஒற்றுமை கருதி இப்பணி இடப்பட்டது போலும். (வாருணி-மது. நாநார்த்த தீபிகை 773). திரள் நிலாவுவ எனப் பிரிக்கவும். திரள்-கூட்டம்.

1137. அனிலராச-வாயுதேவனே. இனைய-இவ்வளவின. மறுகு-தெரு. வணப்புதுமலர்-பல நிறங்களுடன் கூடிய பூக்கள். மங்கல வினைக்குப் பூ முதற்பொருள் அல்லவா?

1138. நித்தரித்திடும்-மிகுதியாகத் தங்கும். பித்திகை-சுவர். பத்தி-வரிசை. கண்ணுறீஇ-கண்டு.

1139. பாசம்-பக்தி. 'பாசம் பரஞ்சோதிக் கென்பாய் (திருவெம்பாவை) படிவமாசனத்தவர்-விரதம் மேற்கொண்ட சான்றோர்கள். முகமன் உரை-உபசார வார்த்தை. ஏகாதச உருத்திரருள் ஒருவர் ஈசானர்.

1140 தத்த மக்கியல் பதத்தின ருத்தமத் தனவா
மெய்த்தி ருப்பணி மணியறு வைத்திறன் விரிபூங்
கொத்து நல்லுண வாதிய கொணர்ந்தனர் குவித்தார்
பத்தி மைப்படத் திருத்துவோர் யாவது பணியார்.

1141 முற்படச் சித்திர முழுது முற்றுறக்
கற்பனைப் படுத்திய கடிகொண் மாநகர்
அற்புறு மிகுதியி னங்கண் மேயினோர்
சிற்பரிற் புதுக்கினர் தெளிவில் நாடியே.

1142 மாளிகை சூளிகை மன்றம் மண்டபங்
கோளியற் பெருநிலைக் கோபு ரக்குழாஞ்
சாளர மேடைபொற் சாலை கூடநற்
பாளிதச் சவியுறப் பணிப டுத்தினர்.

---

1140. இயல்பதத்தினர்-தகுதியான பதவியில் இருப்பவர். உத்தமத்தனவாம்-மேன்மை மிக்க. திருப்பணி-சிறந்த ஆபரணம். அறுவைத் திறன்-ஆடைவகைகள். (சிலப்பதிகாரம். ஊர்காண் காதை 106-12. உரையைப் பார்க்கவும்). பத்திமைப்பட-பக்தி பெருக. 'பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்' (சுந்தரர் 51ஆம் பதிகம் 1). யாவது பணியார்-எதைச் செய்யா மாட்டார்கள்.

1141. கற்பனைப்படுத்திய-கற்பனைகளைக் கிழாக்கின. அற்பு-அன்பு. 'அற்புத்தனையும் அவிழ்ந்தன'. (நாலடியார்). சிற்பரின்-சிற்பாசாரியர்களைக் கொண்டு. புதுக்கினர்-அலங்கரித்தார்கள். 'புதுக்கினர் எனத் தருண மங்கையர் பொலிந்தார்' (கம்பன். பால. சந்திர சைலம் 16).

1142. சூளிகை-செய்குன்று. மன்றம்-மரத்தின் அடியில் உள்ள இடம். கோளியல்-கோள்களின் தன்மையைப் பெற்ற (ஒன்பது நிலைகளைப் பெற்ற) மேடை-மாடி. கூடம்-யானைச்சாலை. 'ஏழுயர் இரட்டி மதலைநட்டு அமைத்த-தன்பழங்கூடம் தனிநிலை அன்றி உடுநிறை வானப் பெருமுக டுயரச் செய்யுமோர் கூடம் புணர்த்தின் நெய்ம்மிதி உண்ணு து அவன் கடகளிறே' (கல்லாடம் 60). பாளிதச்சவி-கற்பூரம் போன்ற வெண்மையான ஒளி.

1143 தீவண மணிப்படு செய்ய கால்நிறீஇப்
பூவணப் படிகவெண் பலகை போர்த்தனர்
ஆவண மறுகிடை யவனி தாழ்வுறக்
காவண மிட்டனர் கனியு மன்பினுர்.

1144 கோசிகக் கேதனங் குணிப்பி லாதன
வாசறு கம்பல மலரப் பண்ணுறீஇக்
காசணி கோவைகள் கனக மாலிகை
தூசணி கவரிபூந் தொடையல் தூக்கினுர்.

1145 மட்டிலாத் தோரண மறுகு தோறுமங்
கிட்டஞான் றெழுதரு மிக்கு வாழைவான்
றெட்டுநீள் கமுகிளஞ் சோலை யேமுதற்
றட்டுறு வகைபுரி தந்து மேவினுர்.

1146 செழிதரு வாயில்கீழ் திண்ணை தெற்றிகள்
கழுமிய சவாதுசெங் கலவைச் சாந்துநற்
புழுகுகுங் குமங்கொடு புனித மங்கையர்
மெழுகினர் வீசினர் வீதி யெங்கணும்.

---

1143. தீவணமணி-செம்மணி. கால்-பந்தற்கால். படிக வெண்பலகை-வெண்மையான பளிங்குப் பலகை. 'பொத்தகம் படிகமாலை' (கம்பன்-தனியன்). போர்த்தனர்-மூடினுர்கள். காவணம்-பந்தல். 'அந்தணுளன் காவணத்திடையே ஓட' (பெரிய புராணம். தடுத்தாட்கொண்ட 44)

1144. கோசிகம் பட்டு. 'பைங்கூன் பாதிரி போதுபிரித் தன்ன-அங்கோசிகமும்' (பெருங்கதை. உஞ்சைக். 42. 204-205). கேதனம்-கொடி. 'முரசகேதன திருமுகம் வரவிடுக, (வில்லிபாரதம் உலூகன் தூது 5). கோசிக கேதனம்-பட்டுக்கொடி. குணிப்பிலாதன-அளவிட முடியாதவை. ஆசறுகம்பலம்-குற்றம் இல்லாத மேற்கட்டி. காசுஅணி கோவைகள்-காசுகள் கோக்கப்பட்ட வடங்கள். கனகமாலிகை-பொன்மாலை. பூந்தொடையல்-பூமாலை.

1145. இக்கு-கரும்பு. 'இக்கு அரை எந்திரத்துட்பட்ட தென்ன' (அஷ்டப்பிரபந்தம். தனியன்). தட்டுறுவகை-வெல்ல முடியாதபடி. கரும்பு, வாழை முதலானவை சோலையினும் சிறந்திருந்தன என்பதைச் சமற்காரமாகக் கூறி உள்ளார்.

1146. வாயில்-வாசல். தெற்றி-அம்பலம். (மேடான இடம்) திருத்தெற்றி அம்பலம் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று.

1147 தெற்றியின் முத்தொகை செம்மணித் தொகை
முற்றுறுக் குவைசெய்து முழுது மாநறை
நிற்புறு சொற்பணி நீர்நி றைத்திடு
பொற்குட மிருத்தினர் தருப்பை பொற்புற.

1148 அற்கரி நிலத்திடு மணிம ணிப்பணி
விற்குதை பற்பல வித்தி யன்னதிற்
பொற்கெனு மங்குரம் பொலியத் தத்தம
விற்கொரு புறனெலா மிசையப் பண்ணினார்.

1149 அளகையர் கோமக னுய்ந்து காணிய
வளமலி யந்நகர் வனப்பி யாவையு
முளனிடை நினைதர வொணாத வெம்மனோ
ரிளநிலை மொழியினா லிசைக்கற் பாலதோ.

1150 கீணிலத் தெற்றியிற் கிடைத்தி டாதன
வாணிநித் திலமணி யரத னப்பொடி
காணியற் கற்புரங் கத்து ரித்துகள்
கோணிலைப் படுவன கோலஞ் செய்தனர்.

---

சவாது—வாசனைத் திரவியம். கலவை சாந்து-வாசனைப் பொருள் கலந்த சந்தனம். வீசினர்-தெளித்தார்கள்.

1147. தெற்றியில்—திண்ணையில். நறைநிற்புறு-நறுமணம் நிலைத்துள்ள. தருப்பை பொற்புற, குடம் இருத்தினர்.

1148. முதல் இரண்டு அடிகட்கும் பொருள் புலனாகவில்லை. குதை என்ற சொல் புதிராகவுள்ளது. குதை என்ற சொல் விதையை உணர்த்துவதாக மேற்கோள் கிட்டின் நன்று. இப் பாடல் பாலிகையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

1149. காணிய-காண்பதற்காக. நினைதர ஒணாத-நினைக்கவே முடியாதன. இளநிலைமொழி-பக்குவப்படாத வார்த்தைகள்.

1150. கீழ்நிலைத் தெற்றியில்-கோலம் செய்தனர். தெற்றியில்-சித்திரகூடத்தில். ஆணிநித்தலம்-ஆணிமுத்து. அரதனப்பொடி-இரத்தினப் பொடி. கோள்நிலைப்படுவன - நவக்கிரகங்களையும் நல்ல நிலையில் இருக்கச் செய்கின்ற. கோலம் செய்தனர்-அலங்காரம் செய்தார்கள்.

1151 இவ்வகை மண்ணுறுத் தியாணர் முற்றுறச்
செவ்விதி னமைத்தபின் றெளிவி னுடியே
யவ்வயி னோரரி பிரம னாதியோர்
தெய்வதச் சூதநன் னீழற் சேர்ந்தனர்.

1152 கடவுளே திருவிழாக் காட்சி தந்திட
இடனிது காலமீ தென்று போற்றலுஞ்
சுடர்விடு சின்மயச் சோதிலிங் கத்தின்
நடுவுற வெழுந்ததோர் வடிவ நன்குற,

1153 மழுமறி யபையமே வரத நாற்புயங்
குழுமிய வருளுமை குமரன் வாசிகை
பொழிதரு கருணையின் பொலிவு சேர்தர
வெழுதரு திருவழ கினிதி னோங்குற.

1154 மணிதிக ழவிரொளி வனப்பு மீப்படு
பணிபல பலவகைப் படுப யாவையுந்
தணிபெற வயங்குறத் தமனி யப்படத்
தணிநில விடவெழுந் தணைந்த தவ்வயின்.

---

1151. மண்ணுறுத்து-அலங்கரித்து. யாணர்-புதிய ஒப்பனை. அவ்வயினோர்-அவ்விடத்தில் இருந்த. (குறிப்புமுற்று, பெயரெச்சமாக வந்தது). நீழல்-நிழல்.

1152. 'சிவலிங்கம், மால் நான்முகனும் காண, தழற்பிழம்பாய்த் தோன்றியது' என்று பெரிய புராணம் கூறுதலின் ஆசிரியர், சின்மயச் சோதிலிங்கம் என்றார். உருவினுக்கும் அருவினுக்கும் காரணமாய் அது உள்ளது. இப்போது அது உருவாக வெளிப்பட்டது.

1153. மழு, மறி ஏந்திய புயம். அபயம் வரதம் காட்டும் புயம். புயம்-தோள். அபயம்—அஞ்சாதே என்பதைக் குறிக்கின்ற கை. வரதம்-வரம் கொடுப்பதைக் குறிக்கின்ற கை. அருள்உமை-திருவருள் வடிவமாகிய பராசக்தி. 'அருளது சத்தியாகும்; அரன் தனக்கு: (சிவ. சித்தி 239). வாசிகை-திருவாசிகை. 'ஓங்காரமே நல் திருவாசி' (உண்மை விளக்கம் 34).

1154. வனப்பு மீப்படும்-அழகை மிகுதியாகப் பெற்ற. பலபல வகைப்படு பணி எனக் கூட்டுக. பணி-ஆபரணம். தமனியப் படத்து-பொன்மயமான உடலுடன். படம்-உடல். 'படங் கொடு நின்ற இப் பல் உயிர்க்கு எலாம்-அடங்கலும் தாமாய் நின்று ஆடு

1155 கண்டனர் வியந்தனர் கரையில் காதலுட்
கொண்டன ரிமையவர் குறித்து நோக்குறீஇ
யண்டினர் தேவர்க ளைய ராமெனத்
தண்டரு மழகிய நாமஞ் சாத்தினார்.

1156 நிருமிதப் படாதெழு நிமல வண்ணமாந்
திருவுருத் தேவர்க ளைய கர்ப்பதம்
பரிவுற வருச்சனை பரவி யாற்றியே
கருணையுந் றிரீஇயினர் கனக வைப்பினுள்.

1157 பின்னுறப் பராம்பரப் பெலத்து வாயினுட்
டுன்னியே யுமையவள் சுடர்ப்பொன் மேனியை
யுன்னிநிற் றலுமவ ணுற்ற தென்பராற்
பன்னரி தானபொற் படிவ மொன்றரோ.

1158 தெரிதர லரியபொற் சிற்ப ராபரைக்
கருணையி னுருவவண் கலந்த காலையிற்
பெரிதினி துவந்தனர் பெற்றி மேயின
ரொருதனி மண்டபத் துய்த்து நோக்கினார்.

1159 சென்னிறங் கதுவிய தெய்வ நாயகி
யென்னுமோர் நாமமங் கிசைத்துப் போற்றியே
பன்னரு மருச்சனை பலவு முற்றினா
ருன்னரு முவகையி லோங்கு நெஞ்சினார்.

---

கின்றாரே' (திருமந்திரம். அற்புதக்கூத்து 17). அணிநிலவிட-அழகு நிலா வீச.

1155. கரையில்-எல்லையில்லாத. சிவலிங்கத்திலிருந்து தோன்றிய பெருமானுக்குத் 'தேவர்கள் நாயகர்' என்ற பெயரைச் சாத்தினார்கள். தண்டரும்-நீங்காத.

1156. நிருமிதப்படாது-செய்யப்படாமல். கனகவைப்பினுள் இரீஇயினர்-பொன்மயமான கோவிலுள் எழுந்தருளப்பண்ணினார்.

1157. பராம்பரம்-தேவி இருக்கும் இடம். பெலத்துவாயின் உள்-பிலத்துவாரத்தில். உன்னி-தியானித்து. பன்னரிதான பொற்படிவம் அவண் உற்றது என்பர்.

1158. சிற்பராபரை-பராசக்தி. பெற்றி-பாக்கியம். 'பின் அவள் உழந்து பெற்றயோகத்தின் பெற்றி' (கம்பன். ஆரண்ய. சபரி 8).

1159. பராசக்திக்குத் தெய்வநாயகி என்ற பெயரை அமைத்தனர்.

1160 உலகினி னிருமியா துற்ற பேரமர்
நலனுறு தேவர்க ணுயகர் மேனியு
மலினமற் றிலகுதெய் வங்க ணுயகி
விலகுறு பேரமு மன்றிவே றுண்டோ.

1161 ஆருயி ருய்யுமா றஞ்சு காரியப்
பாரிய திருவிழா நடத்தும் பான்மையாற்
பேரிசைப் பொன்னெனும் பேரி ஞென்றனை
யேரியன் முகூர்த்தமொன் றிசைத்தி யென்றனர்.

1162 மேன்மையி னெண்ணியே மீனநா யிற்றிற்
பான்மதி வளர்தரு பக்க பஞ்சமி
யீனமி லாரனுட் டுவச மேற்றியே
மானமா முத்திற மருவச் சொற்றனன்.

1163 நன்றெனா முகிழ்த்தனர் நான்மு கத்தன்மால்
பொன்றிகழ் நாட்டினர் புவன நாயகர்
சென்றன ரெம்பிரான் றிருவு றுப்பினி
லன்றுபற் பலமுர சறைவித் தாரரோ.

1164 தந்திரக் காமிகச் சைவ வேதியர்
சுந்தர வடிவின ரிரவி தோன்றுமுன்
முந்திய நித்திய முதல ருச்சனை
மந்திர வைதிக மரபி லாற்றினர்.

---

1160. நிருமியாது-செய்யப்படாமல். மலினம் அற்று-அழுக்கு இல்லாமல். பேரம்-விக்ரஹம் (வைணவ வழக்கு).

1161. அஞ்சுகாரியம்-ஐந்து தொழில். பாரிய-விரிவுபடுத்துகின்ற. பொன்னெனும் பேரினோன்-பிரஹஸ்பதி. ஏர் இயல்-சிறப்பு மிக்க.

1162. மீனஞாயிறு-பங்குனி, வளர்தருபக்கம்-வளர்பிறை. (சுக்லபக்ஷம்). ஆரல் நாள்-கார்த்திகை நட்சத்திரம். துவசம்-கொடி. முத்திறம், மாதம், பக்கம், நாள். சொற்றனன்-கூறினன்.

1163. எம்பிரான் திருவுறுப்பினில்-சிவபெருமானின் திருமேனியாகவுள்ள உலகத்தில்.

1164. காமிகச் சைவ வேதியர்-காமிகம் என்னும் ஆகமத்தை உணர்ந்த சிவாசாரியர். வைதிகமரபின்-வேதமுறைப்படி.

வேறு

1165 நித்திய முடிந்த பின்னர்
நீலமே னியனே முன்னு
வித்தகக் கடவு ளானோர்
கணிதநூல் விரிக்கும் பொன்னோ
னுத்தமச் சைவ வேதர்
தம்மைமுன் னிட்டங் குள்ள
பத்தியிற் றிருவி ழாச்சங்
கற்பனை பரிவிற் செய்தார்.

1166 அங்குர விதியை முற்றிப்
பேரிதா டனமே யாதி
மங்கலக் கிரியை யாவும்
வழுவறப் புரிந்த பின்னர்
எங்கணு யகனுர் தேவ
நாயகர்க் கினிய தான
செங்கன கப்பொன் னுடை
மணிப்பணி திருத்திச் சூழ்ந்தார்.

1167 அரதனச் செம்பொன் மஞ்சத்
தரியணை மீதி னேற்றிப்
பரிவுட னடைப்பை கெண்டி
பொன்மணிக் களாசி தட்டை
உரியசாந் தாற்றி யால
வட்டமே யுள்ள யாவும்
பெரியமா தவத்தின் பேறு
பெற்றவ ரேந்திச் செல்ல.

---

1165. சைவவேதர்-சிவாசாரியர். சங்கற்பனை—சங்கல்பம்.

1166 அங்குரவிதி-அங்குரார்ப்பணம். தாடனம்-தட்டுதல் மங்கலக்கிரியை—மங்களகரமான செயல்கள். திருத்தி—அணிந்து.

1167. அரதனம்-இரத்தினம். மஞ்சத்தரியணை—மஞ்சமாகிய சிம்மாசனம். (இருபெயர் ஒட்டு). அடைப்பை-வெற்றிலைப்பை. 'மன்பெரு வாசமொடு நன்பல வடக்கிய, பயில்வினை அடைப்பை. (பெருங்கதை 3, 14, 87, 88). கெண்டி-கமண்டலம். களாசி-தாம்பூலந் துப்பும் கலசம். 'கைக்களாசியிவை கொண்டுலாவி கன்னி மங்கையர்கள்' (வில்லி. கிருட்டினன் தூது). தட்டை—

1168 இனிமைசே ரறுபத் தாறு
யிரமெனுங் கடவுண் மாதர்
அனைவரும் புனித ராகி
அணிமணிக் கவரி வீசப்
பனிமதித் தரள ராசிப்
பணிபடு கவிகை முற்றுஞ்
சனகரே யென்ன முன்னந்
தவம்செய்தோர் நிழற்றிச் செல்ல.

1169 கனம்படு முருமுப் போலுங்
கட்டியத் தலைவ ரார்ப்ப
முன்படு வரிசை மேவும்
மகேசரே முதல தாக
இனம்படு தலத்தி லுள்ளோர்
இயாவரு மிருபாற் சேர
வனம்படு வீணை யாழ்பொன்
மணிக்குழ லோசை செய்ய.

1170 பேரிகொக் கரைத டாரி
சல்லிகை பெருவாய்ப் பீலி
சாரி கைகுட முழாநற்
கரடிகை தண்ணு மைப்பேர்
வாரிகை காளஞ் சின்னங்
காகளம் வயிரே யென்னுப்
பாரிய தாள மேளம்
பரவையி னொலியைத் தள்ள.

---

நட்டு. சாந்தாற்றி, ஆலவட்டம், விசிறி வகைகள். 'ஆலவட்டமும் அணிசாந் தாற்றியும்' (பெருங்கதை 1, 57, 45). பூசிய சந்தனம் புலர வீசப்படுதலின் சாந்தாற்றி எனப் பெயர் பெற்றது. தவத்தின் பேறு-தவத்தால் கிடைத்த பாக்கியம்.

1168. தரளராசிப் பணிபடு-முத்துக்களின் கூட்டங்களின் வேலைப்பாடமைந்த. பனிமதிக்கவிகை-குளிர்ந்த சந்திரனைப் போன்ற குடை. நிழற்றி-நிழலை உண்டாக்கிக்கொண்டு. 'தண்மைத் திங்களிற் றகைக்குடை நிழற்ற. (பெருங்கதை 1-58. 22).

1169. கனம்படும் உருமு-மேகத்தில் தோன்றிய இடி. கட்டியத் தலைவர்-புகழ்மொழி கூறுவோர். மகேசர்-சிவனடியார். மாகேசர் என்னும் சொல் மகேசர் என்று குறுகி வந்தது.

1170. பெருமான் திருவிழாவில் முழங்கிய வாத்தியங்களின்

1171 முற்பெரும் பூசை கொள்ளும்
முதற்கரி முகத்தோன் வேலால்
அற்புத வெஞ்சூர் செற்ற
அறுமுகக் கடவுட் பெம்மான்
சிற்பர நந்தி தேவர்
செழுமணி விமான மீதிற்
பொற்புட னேகி முன்னம்
பொருவரு கனிவாற் போற்ற.

1172 எம்மையா ளுடையா ளெங்கள்
ஏலவார் குழற்ற யான
வம்மைமா மணிப்பொற் பீடத்
தருக்குலாப் போதப் பின்னர்
செம்மைசேர் சேனை காவற்
சண்டேசர் சிவநே யத்தான்
மும்மைசேர் புவனி யுள்ளோர்
அன்பினை முகந்து செல்ல.

1173 புரந்தரன் பொற்றண் டேந்திப்
புனிதமாஞ் சமுகஞ் செய்ய
வரந்தரு மமுத வூணின்
வலியரே யெம்பி ரானைப்
பரிந்தனர் தாங்கி யின்ன
பான்மையா லயஞ்சூழ் போகித்
திரந்தரு பெலிப்பொற் பீடத்
திருமணி வாயில் சேர.

---

பெயர்கள் பேசப்படுகின்றன. இவற்றின் விளக்கங்களைப் பஞ்ச மரபு நன்கு கூறுகிறது. கண்டு தெளிக. பரவை-கடல். தள்ள-தோற்கச் செய்ய.

1171. கரிமுகத்தோன் - விநாயகப்பிரான். சூர் - சூரபத்மன். செற்ற—அழித்த.

1172. ஏலம்-மயிர்ச்சாந்து. 'ஏலவார் குழலாள் நங்கையோடு இடபவாகனனாய்த் தோன்றி' (பெரிய. இளையான்குடி 25). 'ஏலவார் குழலாள் உமைநங்கை' (சு. தே.).

1173. புரந்தரன்-இந்திரன். சமுகம் செய்ய-கூட்டத்தைக் கட்டுப்படுத்த. அமுதஊணின் வலியர்-அமுதமாகிய உணவினால் வலிமை பெற்ற தேவர்கள்.

1174 கண்டனர் நாற்பத் தெண்ணு
யிரமுனி கணத்தோர் மற்ற
வண்டர்முப் பான்முக் கோடி
யாயினோ ரேனை யோர்தந்
திண்டிறல் வலியா லோடிச்
சித்திரித் தமைத்த கூவற்
கொண்டபொற் கவிகைப் பட்டுக்
கொடியிடக் கயத்தின் கூட்டம்.

1175 எடுத்தனர் பரிவி னுலே
யெனக்குனக் கென்று கூவி
மடுத்தன ரிகலித் தாங்கி
வரிசையிற் சேவை செய்தார்
கொடிக்குவை கவிகை ராசி
குணித்ததின் பாலாந் தேவர்
படித்தவர் அவர்தம் மாலே
முடிவுறும் பான்மைப் பாற்றே.

1176 அன்னதோ ரமைதி யின்ன
பதியுறைந் தளவில் காலம்
என்னையா ளுடையாற் கேற்ற
பணிவிடை யேற்கு மன்பர்
தன்னிக ரில்லார் வந்து
தாக்கினுர் முனிவர் தேவர்
முன்னவ ரச்சுற் றேங்க
மொழிசில பகர்வ தானுர்.

---

1174. கூவல் என்ற சொல் எப்பொருளில் ஆளப்பட்டது என்பது புலனுகவில்லை. தூவல் என்ற பாடம் இருப்பின் சித்தரிக்கப்பட்ட கோலைக் குறிக்கும். (காம்பு) அது குடையின் கோலை உணர்த்தும். டக்கயம், ஒருவகை விருது.

1175. இகலி-மாறுபட்டு. சேவை செய்தார்-தொண்டு செய்தார்கள்.

1176. அமைதி-சந்தர்ப்பத்தில். 'இன்னபதி-இவ்வூர். (காஞ்சிபுரம்). தாக்கினுர்-எதிர்த்தார்கள். பரம்பரையாகப் பெருமானுக்குப் பணி செய்பவர்கள் தங்களுக்கு உரிய பணியைப் பிறர் செய்வது பொறுது தாக்கிப் பேசினுர்கள்.

1177 எனையரிப் பதிக்கு யாவர்
எப்பதி யுறைவிர் நீவிர்
பனவர்கள் கடவு ளானீர்
பரம்பரை யெமக்கே யான
தனிதரு முதன்மை நீரே
யிங்ஙனம் செயத்த காதால்
அனுசித மென்றார் காணி
யாசைபே ராசை யன்றோ.

1178 இப்படி யிகலுங் காலை
யிந்திர னங்க ணெய்தித்
தப்பில தனையர்க் கேற்ற
தகைமையின் நெறிவ ழாமல்
ஒப்புறப் பெருவி ழாவீ
துரிமையி னடங்கற் பாற்றோ
செப்பிய தினிய தன்றென்
றுரிமையிற் றிருத்தி நேர்ந்தான்.

1179 பெருந்திருக் கோபு ரத்திற்
பிறங்குமா மணிப்பொன் வாயில்
அருந்தவர் போற்ற வெம்மான்
அணைந்தெழுந் தருளுங் காலை
திருந்துபொன் னேமி யோனோர்
பால்வளந் திருத்தி யேகப்
பரிந்துநான் முகப்பி ரானோர்
பானயம் புகழ்ந்து சூழ.

---

1177. இப்பதிக்கு எனையர்-இந்த ஊருடன் எத்தகைய தொடர்பு உள்ளவர்? எப்பதி உறைவீர்-எந்த நகரிலே தங்கியிருப்பவர். அனுசிதம்-உசிதம் அற்றது. (செய்யத் தகாதது) 'சென்ற யானை அநுசிதம் என்று அதனைச் சிதைக்க'. (பெரிய. கோச் செங்கட் சோழர் 4). காணி-பரம்பரை உரிமை. காணிக்கு வந்துள் ளான் காண். (காளமேகப் புலவர் பாடல்).

1178. இகலுங்காலை-போராடும் சமயத்தில். தகைமையின்-பெருந்தன்மையுடன். ஈது பெருவிழா: உரிமையின் அடங்கற் பாற்றோ. இனியது அன்று என்று திருத்தி நேர்ந்தான். இது பெரிய திருநாள். ஆதலின் இது பரம்பரை உரிமைக்கு அப்பாற்பட்டது என்று கூறி (இந்திரன்) பரம்பரை உரிமையில் ஒரு திருத்தம் செய்தான்.

1179. நேமியோன்-திருமால் நான்முகப்பிரான்-பிரமன். நயம்புகழ்ந்து-பக்தியைப் புகழ்ந்து.

1180 மகபதி நடுவு லாவி
மரபுளி வழாம லாற்றித்
தகுதியி னிறுவி யாரும்
ஒலிதரு தன்மை மாற்றிப்
பகுதிசே ராடல் பாடல்
பண்ணுறப் புரிமி னென்று
புகுமவர் முன்பின் னுய்ந்து
போந்தனன் மகிழ்ச்சி கூர.

1181 அளவறு வெள்ள மான
வைவணக் கவிகை தொங்கல்
ஒளிர்கத லிகைவெள் ளேற்றுத்
துவசமிக் கோங்கு வானில்
வளரிடக் கயஞ்சே ருடி
மாமதி வட்ட மற்றும்
வெளிபுரி யிரவி நாண
நிழறனை விளைத்த தன்றே.

1182 தழுவுபன் னிருகோ டிப்பேர்த்
தரணிய ரொருகா லத்தில்
வழுவிலா துதித்தா லென்ன
வயங்கிய தீப ராசி
பழுதிலா வண்ட கூடப்
பரப்பெலா நிமிர்ந்த தாமால்
அழலவ னுருக்கொண் டாற்றில்
அவ்வினை புகலற் பாற்றே.

---

1180. மகபதி-இந்திரன். (நூறு அஸ்வமேத யாகம் செய்த பின் பெற்ற பதவியை உடையவன் ஆகையால் இந்திரனைச் சதக்கிரது என்பர்). தகுதியில் நிறுவி-பதவிக்குத் தக்கபடி நிறுத்தி. ஒலிதரு தன்மை-கூச்சல் இடுதலை. ஆடல் பாடல் புரிவதற்கு இடையூறாக இருக்கும் ஒலியை அடக்கி ஆடல் பாடல் புரிமின் என்றான் என்க.

1181. ஐவணக் கவிகை-பஞ்சவர்ணக் குடை. கதலிகை-துகிற் கொடி. 'வடிபட இயங்கும் வண்ணக் கதலிகை' (பெருங்கதை 3. 3 36). டக்கயம், சேருடி-விருது வகைகள். 'பொன்எழுத்து எழுது சேருடி பொற்புற. (திருக்காளத்திப் புராணம்).

1182. தரணியர்-சூரியர்கள். 'தரணி என இருள் அகல அறிவு

வேறு

1183 கோடி கோடியா பாற்படு விளக்கினக் கூட்ட
நீடு மேருவின் கொடுமுடி போலவே நிலாவும்
ஆடு தேரென விமானம தென்னவே யமைந்து
மாடு சண்டவங் கூழ் னுக் கெதிர்நிறீஇ வயங்கும்.

1184 எல்லை யில்லவ ரரியயன் முதலினோ ரிமையோர்
வல்ல வாறியற் றியபெருந் திருவிழா வளமை
யல்ல றீர்தராச் சிற்றறி யுடையயா னமையச்
சொல்ல வல்லனோ பித்தனென் னூர்களோ சொல்லில்.

1185 கயிலை மேவரு முருத்திர கணிகையர் கடவுட்
புயலின் மேனிய னுலகிடை மடந்தையர் புனிதத்
தயனி லாவிய பதிவரு மரிவையர் யாருஞ்
செயநி லாவிய வாடலிற் பாடலிற் றிகழ்ந்தார்.

1186 ஒப்பி லாத்திரு மறுகின திமையிடை யுலாப்போந்
தப்பு மாரிபெய் தனங்கவேள் மனங்கனிந் தணையுங்
கொப்பு லாவிழி மடந்தையர் குழாத்திடைக் குலாவ
எப்பி ரான்களும் போற்றிடச் சினகரத் தெய்தி.

---

தரு சமரபுரி' (திருப்போரூர்ச் சந்நிதி முறை பெரிய. 2) தீபராசி-விளக்குத்தொகை. நிமிர்ந்தது-வளர்ந்தது. ஓங்கி யழலாய் நிமிர்ந் தாய் போற்றி (தேவாரம்).

1183. கோடி கோடியா-அளவில்லாமல் பாற்படு-பலவகைப் பட்ட. விளக்குக் கூட்டம் மேருமலைபோல் இருக்கும். சண்டவங் கூழ்-பெருங்காற்று. 'விரை செலல் இயற்கை வங்கூழ் ஆட்ட' (அகம் 255) எதிர்நிறீஇ எதிர்த்து நின்று.

1184. எல்லையில்லவர்-அழிவற்ற. (குறிப்பு முற்று, பெயரெச் சப் பொருளில் வந்தது. குறிப்புமுற்று ஈரெச்சம் கொள்ளும் என்பது விதியாகலின்). அமைய-அடங்க.

1185. கடவுள்-தெய்வத் தன்மை. புயலின் மேனியன்-மேகம் போன்ற நிறமுடைய திருமால்.

1186. மறுகு-தெரு. மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின், வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்" (அகம். 122.) அப்பு மாரி-அம்புமழை. அப்புமாரி அழுந்திய மார்பை (கம்பன். யுத்த. இராவணன் சோகம். 31) கொப்பு-மகளிர் காதணி. காரைக்குடி

1187 மின்னு மாமணி மண்டபத் திருக்கையின் மேவ
மன்னு காமிகத் தந்திரச் சைவமா மறையோர்
பன்ன காபர ணத்தவ ரைந்தொழிற் பராவிச்
சொன்ன நூன்முறை யேற்றினர் விடைப்பெருந் துவசம்.

1188 ஏற்ற வங்குரம் பேரிதா டனங்கொடி யேற்றம்
போற்று காப்புநா ணிவையெலாஞ் சிருட்டியின் பொருட்டா
மாற்றி டும்பெலி யோமமே வாகன மாதி
யூற்ற மாகிய பெருந்திதி நிமித்தமா மொழுக்கம்.

1189 அரிச னத்திரு விழாவிர தத்தின்மே லார்தல்
பெரிது சாந்தணி யாதிசங் காரத்தின் போத
முரிய தாகிய மவுனமே மறைத்திடு மொழுக்கங்
கிரிகை தன்விழா வணுக்களுக் கரனனுக் கிரகம்.

---

யில் கோவில் கொண்டுள்ள அம்மையின் பெயர் கொப்புடையம்மை. மகளிர் கண்கள் காதணி வரை செல்வதாகக் கூறுவது கவிமரபு. களிக்கும் 'கயல்போற் குழைதடவுங் கண்ணி'. (கூர்ம புராணம். திருக்கல்யாணம். 47).

1187. இருக்கை-ஆசனம். சைவமாமறையோர்-சிவாசாரியார்கள். பன்னகாபரணத்தவர்-பாம்புகளை ஆபரணமாக அணிந்த சிவபிரான். நூல் முறை-ஆகம முறைப்படி.

1188. பாடல்கள் திருவிழாச் சடங்குகள் சிவபிரான் புரியும் ஐந்து தொழில்களின் அடையாளம் என்பதைக் கூறுகின்றன.

1. அங்குலம், பேரிதாடனம், கொடியேற்றம், காப்புக்கட்டுதல், சிருஷ்டியையும், 2. பலி, ஓமம், வாகனம் முதலானவை ஸ்திதியையும், 3. அரிசனத்திருவிழா, இரதத்தின் மேல் ஆர்தல், சாந்து அணிதல், முதலானவைகள் சங்காரத்தையும், 4. மவுனம், மறைத்தலையும். 5. கிரிகை-அனுக்கிரகத்தையும் உணர்த்தும்.

அங்குரம்-முளைப்பாலிகை. பேரிதாடனம் வாத்திய முழக்கம் பொருட்டாம்-கருத்தை உள்ளீடாகக் கொண்டதாகும். ஊற்றம்-உறுதி.

1189. அரிசனத் திருவிழா-மஞ்சள் நீராடுதல். இரதத்தின் மேல் ஆர்தல்-திருத்தேர்பவனி. சங்காரத்தின் போதம்-சங்காரத்தை உணர்த்துவது. மவுனம்-மௌனத் திருநாள். கிரிகை-வழிபாடு.

1190 ஆத லால்முதற் றிருவிழா வரசரே யாதி
நீதி யாகிய புதல்வரைப் பெற்றுயர் நிமித்தத்
தோது சீர்பெறு மரதன மஞ்சத்தி னுலாவக்
காத லார்தர நடத்தினர் கடவுளர் கருதி.

1191 இருதி னத்தினிற் பூதவா கனத்திடை யேற்றிப்
பரிவு சேருமுப் புரியுளோர் திருவுறும் பாலால்
உரவு சேர்தன முன்னையிற் பேரொளி யோங்கக்
கருணை யேபெற நடத்தினர் திருவுலாக் காட்சி.

1192 முத்தி னத்தினில் வான்முகில் வழாமலே மூடி
யெத்தி னத்தினும் பெய்திட மடங்கலி னிடையே
யுய்த்து நித்தலு நித்தலு மிருதிறத் தோங்கப்
பத்தி யிற்புரிந் தியற்றினர் யாவரும் பணிய.

1193 நான்கு சேர்தின மரசர்தம் மருவலர் நசிக்கத்
தேன்கு லாமலர்ப் பந்தியா னத்தினிற் செறித்து
வான்கு லாவிய திருப்பவ னிப்பெரு வளமை
கான்கு லாவிய களபமே செறிதரக் கண்டார்.

---

1190. முதல் திருவிழா–முதல் நாள் நடத்தும் விழா. அரதன மஞ்சம்-சிவிகை. உலாவ-ஊர்வலம் செய்ய காதல்-அன்பு. ஆர்தர-நிரம்ப.

1191. இருதினத்தில் - இரண்டாம் நாள். முப்புரியுளோர்-மூன்று உலகத்தில் இருப்பவர்களும். உரவு சேர்தனம்-வலிமையை உண்டாக்கும் செல்வம். உரவுசேர் என்ற அடைமொழியால் இங்குத் தனம் என்றது பக்தியை. காலாவுன்னைப் புல்லென மதிக்கிறேன். என்று கூறச் செய்வது பக்தி ஆதலின் பக்தி உரவு சேர்தனம் என்று கூறப்பட்டது. பயன் செல்வச் செழிப்பு.

1192. என்றும் மழை பொழியவேண்டி இறைவனைச் சிங்க வாகனத்தில் உலாவச் செய்தனர். மடங்கல் சிங்கம். 'மடங்கல் அனைய பேராற்றல் மடங்கி. (பாகவதம். 10. 41. 18) பயன்-மழை வளம்.

1193. மருவலர் - பகைவர்கள். மலர்ப்பந்தியானம் - புஷ்பப் பல்லாக்கு. யானம்-பல்லாக்கு. 'உயர்ந்த வாகன யானங்கள் மிசைக்கொண்டார் உழையரானூர். (பெரிய. தடுத்தாட்கொண்ட. 20) பயன், அரசரின் பகைவர் அழிதல்.

1194 அஞ்செ னுந்தின மணிவிடை விமானமே யாக்கி
வஞ்ச மேபுரி நிசாசரர் முதலினோர் மாள
விஞ்சு மாயவர்க் குவகையிற் பெருந்திறல் விளங்கத்
தஞ்ச முன்னையி னுன்மடங் கதிகமாய்ச் சமைத்தார்.

1195 அறுதி னத்தரி சனப்பெருந் திருவிழா வயர
வெறுழ்வ லிப்பெருங் கிரியெனுங் கரிமிசை யேற்றி
மறுவில் கொற்றமே மன்னவர் மருவிடு வகையால்
உறுதி யுற்றனர் நடத்தினர் மிக்குயர்ந் தோங்க.

1196 எழுதி னத்தினி லுலகநல் லொழுக்கமே யிலகத்
துழனி யிற்பொலி மணிப்பணித் தேர்பல சூழ
வழுகி னிற்பெருங் கிரியென வணிமணிப் பணிசேர்ந்
தொழுகு தேர்மிசை யேற்றியக் காட்சியி னுவந்தார்.

1197 எண்டி னத்தினின் மணிப்பணி யிட்டிழைத் திலகுஞ்
சண்ட வொண்பதக் குரகதத் தேற்றியே தருக்கான்
மண்டி யண்டர்முன் னைமணுத் தொகையெலா மலத்தை
விண்டு நித்திய வீடுறத் திருவுலா வியந்தார்.

1198 மீக்கொ ளொன்பதாந் தினத்தினிற் பேரணி விளங்கக்
கோக்கு லாம்புவ னித்திறம் வருத்தனை குலாவ
நீக்க மின்றியே தீபகோ டிகண்மிக நெருங்கக்
காக்கு நாயகர் சாந்தணி திருவிழாக் கண்டார்.

---

1194. விடைவிமானம் - விடையாகிய விமானம். (ரிஷப வாகனம்) நிசாசரர்-அரக்கர். 'பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற பெய்கழல்-நிசாசரன்' (கம்பன். யுத்த. 42) பயன், அரக்கர் அழிவு.

1195. அரிசனம்-மஞ்சள். இப்பாடலில் மஞ்சள் நீராட்டு விழா கூறப்பட்டுள்ளது. எறுழ்வலி-மிக்கவலிமை. 'ஏழ்விடை தழுவும் எறுழ்வலி படைத்தாற்கு ஈகுவன். (பாகவதம், 10. 29. 2). பலன்—அரசர் வெற்றி.

1196. துழனி—ஒலி. பலன்—உலக ஒழுக்கம் சிறத்தல்.

1197. சண்டம்—வேகம். குரகதம்-குதிரை. 'இந்தக் குரகதம் கொண்டல் சூழ் குருக்கேத்திரம்' (திருவிளையாடல். நரிபரி. 107). கோ-அரசர்கள். பலன்-வீடுறுதல்.

1198. புவனித்திறம்—உலக வகைகள். வருத்தனை—தொழில்.

1199 இத்தி றத்தினிற் றிருவிழாப் பொலிவெலா மியற்றி
யத்த னெம்பிரா னுமையவ டிருமண மாற்று
முத்த மப்பெருஞ் சேர்வையி னுதர வூக்க
மெத்தி யத்திரு மணத்தினுக் காவன விரித்தார்.

1200 சீரி தாகவுத் திரம்பெறு மொருபதாந் தினத்தின்
காரு லாவிய மணவினை மண்டபங் கவினப்
பூரி தானமே முதலிய பொற்புறப் புரிந்தூங்
கேரு லாவிய வகிலசோ பனத்துட னிறைவன்.

1201 எற்றை ஞான்றினுங் கொடிக்குடை யிடக்கய மிரவி
முற்று நேர்தரு பெருஞ்சிகைத் தீபிகை முடிவு
பெற்றி டாவியந் தாளமே ளங்களின் பெருக்கஞ்
சுற்று மேவிட வேறரித் தண்டது சுடர.

1202 ஆரு யிர்க்கெலா மிகபரத் துறுதியே யயருங்
கார ணத்தினு லெம்பிரான் றரும்பெருங் கருணைப்
பூர ணத்துநல் னெல்லிரு நாழியும் புணர்த்து
வார முற்றிடுஞ் சண்டிகை பிங்களை மருவ.

---

சாந்தணிதிருவிழா - சந்தனமணியும் திருநாள். பலன் - உலகத் தொழில் சிறத்தல்.

1199. சேர்வை – சேவை. (தொண்டு) பார்வை என்பது பாவை எனத்திரிந்தாற்போலச் சேர்வை என்பது சேவை என வந்தது. ஆதரவு, ஊக்கம், மெத்தி-ஆதரித்தலும் ஊக்கமும் மிகுந்து. மெத்தி-மிகுந்து. மெத்துபே ரொளியால் மேலை மெய்ப் பொருளாகி நிற்கும்-அத்தனே. (சேதுபுராணம். தோத்திரம் 66)

1200. பூரிதானம் - பொன்னைத்தானமாக வழங்கல். 'பொலி பசும் பூரிசேர்த்தி. (கம்பன். யுத்த. விடைகொடுத்த. 1) புரிந்த ஊங்கு - செய்தபிறகு. சோபனம் - மங்களம். 'ஏழைசோபனம்: ஏந்திழை சோபனம் (கம்பன். யுத்த. மீனுட்சி. 16.)

1201. சிகைத்தீபிகை-சுடரைப் பெற்ற விளக்கு, முடிவுபெற் றிடா இயம்-எண்ணி முடிவு பெருத வாத்தியம். வேறு-பலவகைப் பட்ட. அரித்தண்டு-பரல் இடப்பட்ட சிலம்பு. (திருவிழாவில் சிலம்பை அசைத்து ஒலியெழுப்புதல் மரபு), சுடர்-ஒளி வீச.

1202. இகபரத்து–இம்மையிலும் மறுமையிலும். புணர்த்து– ஒன்று சேர்த்து. வாரம் முற்றிடும்-அன்பு முதிர்ந்த.

1203 அருப்ப மல்லனன் மலர்பொரி பொற்சுண்ண மரிசி
விரைப்ப டுங்கள பக்குழம் பாதிய வீசிப்
பரப்பி யன்றவா ரணங்கினர் மங்கலப் பாடல்
உரப்பி நின்றன ரிருபுற மருங்கெலா மோங்க.

1204 வருந்த வத்தினர் நாரதர் அகத்தியர் வசிட்டர்
அருந்த திப்பெணே யாதியா மாரிட மடவார்
பெருந்தி ருக்கடி மணங்தொழு மாதரம் பெருக
விரிந்த வப்பெருங் குழுநெருக் கென்றிடார் விரவ.

1205 மணவி னைக்குரி யாகிய தலத்துளோர் மகேசர்
கணித மற்றவ ரிறையவ ரதுகயிங் கரிய
வுணர்வு முற்றியே முனிவரை யமரரை யுறுத்தி
யணிமி குத்துளா ரூழியம் புரிந்தவ ரணைய.

1206 ஏற்பு ரத்திருக் கோபுர வாயில்நின் றிழிந்து
மாற்பு றுத்தியஞ் சித்திர மண்டபத் தணைந்து
தாற்பி றங்கவே புரிதரு தண்டுலத் திடையின்
பாற்ப ரிந்திடு மரியணை மீமிசைப் பாலாய்.

1207 இனிதி ருந்தவர் தருமருக் கியமுத லேற்றுப்
புனித மாமுடை யுத்தரி கத்தினைப் புனைந்து
தனித ரும்வது வைக்கலன் யாவையுந் தரித்து
நனிவி ளங்கிய பராம்பர முன்னரே நணுகி.

---

1203. அருப்பம்-தேன், மல்லல்-வளம். விரைப்படும் களபக் குழம்பு-வாசனை மிக்க சந்தனக் குழம்பு. பரப்பு இயன்ற-நிரம்பி யிருந்த. உரப்பி நின்றனர்-உரத்த குரலில் பாடினார்கள்.

1204. ஆரிடமடவார்-முனிவர்களின் பத்தினிமார்கள். கடி மணம்-இன்பம் வழங்கும் திருமணம். ஆதரம்-விருப்பம். நெருக்கு என்றிடா-நெருக்கமாக இருக்கிறது என்று கூறாமல்.

1205. தலத்துளோர்-நகர மக்கள். மகேசர்-சிவபக்தர்கள். கணிதம் அற்றவர்-கணக்கில்லாதவர்கள். இறையவர்-அரசர். கயிங்கரியவுணர்வு-பணி செய்ய வேண்டும் என்ற உணர்ச்சி. உறுத்தி-நெருக்கி. அணைய-அடைய.

1206. கோபுர வாயில்-கோபுர வாசல். மாற்புறுத்தி-மயக்கத்தை உண்டுபண்ணி. தால்பிறங்க-தரை விளக்கம் அடைய. தண்டுலம்-அரிசி. அரியணையின்பாலால்-சிம்மாசனத்திலே.

1207. அருக்கியம்-நீர்த்தத்தால் செய்யும் உபசாரம், உடை

1208 அவ்வி யக்கிழக் கேமுக மாகமுன் னமைத்த
திவ்வி யத்தவி சிருந்திரு புறத்தினுஞ் சேர
மெய்வ குத்திடு மணியராய் மாலயன் விரவச்
சைவ முற்றிய வங்கியின் காரியந் தயங்க.

1209 அரும ணத்தெழி லுமைதிரு மகளுட னணையக்
கருணை முற்றிய பிரானரு கிருத்தியே கடிதின்
மருவு பொற்றிரு மங்கல நாணினை மனுவின்
புரிதொ ழிற்புரிந் தியாவரும் யாவையும் புகழ.

1210 கன்னி யாமுமை யவள்கவின் பெருதிருக் களத்தில்
என்னை யாளுடை யெம்பிரான் சாத்தின னினிதின்
அன்ன காலையி லருந்ததி முதலினோ யாரும்
இன்ன மங்கலஞ் சிக்கென வாழியென் றிசைத்தார்.

---

உத்தரிகம்-அரையில் தரிக்கும் உடையையும் திருமேனியில் இட்டுக்கொள்ளும் அங்கவஸ்திரத்தையும். வதுவைக்கலன்-திருமண ஆபரணம். பராம்பரம்-தேவியிருக்கும் இடம். சிவபிரான் தேவியிருக்கும் இடம் நோக்கி எழுந்தருளினன். முன்னரே, ஏகாரம் அசை-

1208. மற்றைய திசைகள் நமக்கு இதன் சிறப்பு இல்லையே என்று பெருமைப்படுதலின் கிழக்குத் திசையை அவ்வியக் கிழக்கு என்றார் போலும். உண்மை புலப்பட்டிலது. அ, வியக்கிழக்கு என்று பிரித்து, அந்த, (உலக மக்களைத் தங்கள் தங்கள்பணியைச் செய்ய) ஏவுகின்ற கிழக்கு என்றும் பொருள் கொள்ளலாம். கிழக்கில் சூரியன் உதித்தபின் மக்கள் தங்கள் தங்கள் பணி செய்வதைக் கருதுக. வியம்-ஏவல். 'வினைகடை கூட்ட வியங்கொண்டான்' (சிலம்பு. கனுத்திறம். வெண்பா). மெய்வகுத்திடும்-அணியராய்-மெய்க்காப்பாளராக. சைவம் முற்றிய அங்கி-சிவாக்கினி. 'எரிபெருக்குவர் எரியவ் வீசனது-உருவம் ஆவது யாரும் உணர்கிலார்' (அப்பர். தேவாரம்).

1209—1210. குளகம். உமை திருமகளுடன் அணைய (அவளை) எம்பிரான் அங்கு இருத்தி மனுவின் தொழில் புரிந்து யாவரும் யாவையும் புகழ மங்கல நாணினை உமையவள் கழுத்தில் எம்பிரான் சாத்தினன். அன்னகாலையில் அருந்ததி முதலினோர் மங்களம் சிக்கென வாழி என்று இசைத்தார்,

மணத்து எழில் உமை - திருமண அலங்காரம் பெற்ற உமாதேவி. கடிதின்-விரைவாக, சாத்தி-அணிந்து. சிக்கென

1211 சங்க ரன்னுமை யங்கையிற் காப்புநாண் டரித்துப்
பொங்கு சீர்வடி வுத்தரீ கம்புது வளமாய்
மங்கை நாயகிக் கன்புறச் சாத்தியே மணிநீர்
துங்க மார்தரு மருக்கிய முதவியே தொழுதார்.

1212 ஆய காலையின் மாயவ னெழுந்தவை நடுவுள்
நாய கன்கரத் துமைகர மிருத்தியே நலத்தாற்
றுயை யையருக் குதகமே செய்தனன் றவத்தாற்
றூய ராமவர் மாயையை யாவரே துணிவார்.

1213 நெய்யு லாவிய சருக்கரை பானறை நிமிரல்
ஐய னெம்பிராற் கமுதுசெய் வித்திடு மதன்பின்
செய்ய தாகிய மகாநிவே தனம்பல திருத்திக்
உய்யு மாறரன் பரிகல சேடந்துய்ந் துயர்ந்தார்.

1214 உலக பாவனை பேணியோ வன்பினி லுயர்வோ
திலக வா ணுத லுமைபதாம் புயத்தினைச் செம்மை
யிலக முயமுறை யம்மியி லெடுத்தெடுத் திருத்திக்
கலனு லாந்திருக் கரப்பயன் அடைந்தனர் கம்பர்.

---

வாழி-உறுதியாக வாழ்க. 'சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவதினியே' (திருவாசகம்).

1211. வடிவு-அழகு. உத்தரீகம்-மேலாடை.

1212. இருத்தி-சேர்த்து. ஐயருக்கு-சிவபிரானுக்கு. உதகமே செய்தனன்-தாரைவார்த்துக் கொடுத்தனன்.

1213. நிமிரல்-சோறு. 'கொக்கு உகிர் நிமிரல் மாந்தி' (நற்றிணை). கொக்குகிர் நிமிரல் வெண்சோறு. (சிந்தாமணி முத்தி 374). பரிகலம்-பாத்திரம். சேடம்-பிரசாதம். 'அறிதுயில் அமர்ந் தோன் சேடம்' (சிலம்பு, வஞ்சிக்காண்டம்). வன்தொண்டர் அருளிச் செய்யப் பரிகலங்கள்-ஏரின் விளங்கத் திருத்தி. (பெரிய. கழறிற்றறிவார் 74).

1214. உலக பாவனை-உலக வழக்கம். பேணியோ-மதித்தோ. 'பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும்' (திரிகடுகம் 6). பதாம் புயத்தை-திருவடித் தாமரைகளை.

1215 அரிமகிழ்ந்திருக் கரத்திஞற் பொரியினை யள்ளி
யுருகு மன்பினி லுதவிட வுமைசிவ னுவந்தே
விரவு தம்பெய ரங்கியி லிறைத்தனர் வியந்தார்
தரையி லன்னது சேர்வைசெய் தார்தவஞ் சற்ரே.

1216 மாய ஞன்முகற் சினந்தனன் நான்முகன் வலிதின்
ஆயி ரங்கண்ணி ஞன்றனை வெறுத்தனன் அவனுந்
தூய சேடனைப் பிணங்கினன் இப்பெருஞ் சுகத்தை
யாய கண்களா லுய்த்தனி ரென்றழுக் காற்றி.

வேறு

1217 சேஞுடர் பெருமுனிவ ரிவ்விடையோர்
யாவருந்தஞ் சிறப்பி ஞலே
நாஞுமற் றம்மைமுன்னம் பெற்றதந்தை
தாயெனும்பேர் நண்பு மேவிப்
பூஞரம் புனைந்திரு வதுவைசெயக்
கண்டுகண்டு புகழ்ந்தார் நின்ருர்
காஞது காணலாங் காஞ்சியிலென்
பழமையிந்தக் கருத்தே யன்ரே.

---

1215. அரி பொரி உதவ உமையும் சிவபிரானும் அதை அக்கினியிலிட்டனர். தம் பெயர் அங்கி-சிவாக்கினி. (லாஜ ஹோமம் கூறப்பட்டது. சிந்தாமணி 2464ஆம் பாடல் உரையைக் காண்க). 'பொற்பெழ வில்லிடு பூந்திரு வோடே-நெற்பொரி யோமம் நிறைத்து மகிழ்ந்தான்' (ஸ்ரீமஹாபாகவதம். உருக்குமிணி 251).

1216. அதிகமான கண்களைப் பெற்றிருந்தவரைக் கண்டு குறைந்த கண்களைப் பெற்றிருந்த தேவர்கள் சினமும் பொருமையும் கொண்டனர். மாயவன் நான்முகனையும், நான்முகன் இந்திரனையும், இந்திரன் ஆதிசேடனையும் கண்டு அழுக்காறு கொண்டனர்.

நான்முகற் சினந்தனன்-பிரமனைக் கோபித்தான். ஆயிரங் க(ண்)ணிஞன்-இந்திரன். பிணங்கினன்-வெறுத்தனன். ஆய-மிகுதியான. உய்த்தனிர்-அனுபவித்தீர். 'பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான் பெரியதோர் இடும்பை பூண்டு' (திருமாலை 5).

1217. தாயும் தந்தையும் திருமணம் செய்து கொள்வதைத் தேவர்கள் முனிவர்கள் இவர்களுக்கு இடையில் இருக்கும் மற்ற

1218 அந்நாளிற் றிருமணஞ்சே விக்கவந்த
குறுமுனியு மமரர் யாரு
மன்னுன திருவேகம் பத்திறையை
வணங்கியவர் வழுத்தா நின்ருர்
எந்நாளு மிவ்வதுவை யாண்டுதொறும்
விளங்குறவே யிலக வேண்டும்
பொன்னுன திருமுகத்திற் குறுவேர்வு
மற்புதத்திற் பொலிய வேண்டும்.

1219 இவ்வதுவை சேவித்தோர் பெருந்திருவுந்
தனயரும்பெற் றிகத்தின் மேவிக்
கவ்வையற வத்துவித சிந்தாந்தப்
பெருவாழ்வுங் காண வேண்டும்
அவ்வரமங் கவர்வினவிப் பெற்றனரெம்
மானருளி னதனு லன்றே
தெய்வதப்பே ரந்தனிலே யின்னுளு
மவ்வியாவு திகழு மாறே.

1220 நாலாநாள் மங்கலநீ ராடுவதன்
பொருட்டந்த நன்னு டன்னில்
மேலான பிரானுமற்ருேர் மண்டபத்தி
னிடைமேவி விபவத் தெய்வப்
பாலான வபிடேக விசேடமெலாம்
புரிந்தருளிப் பரிவு கட்கு
மூலாக மத்தியல்பே நீர்த்தமுத
விப்பூசை முழுதும் கொண்டார்.

---

வர்கள் கண்டனர். காணுதது காணலாம் காஞ்சியில் என்ற பழமொழி உண்மையாயிற்று. சேணுடர்-தேவர். பூணுரம்-மங்கல நாள். வதுவை-திருமணம். பழமை- பழமொழி.

1218. குறுமுனி-அகத்தியர். திருமணத்தில் மணமக்கள் முகத்தில் அரும்பும் வேர்வையைக் காண்பதில் மக்கள் விரும்பினர் என்று தெரிகிறது.

1219. வதுவை சேவித்தோர்-திருமணத்தைக் கண்டவர்கள். கவ்வை அற-துன்பம் நீங்க. அத்துவித சித்தாந்தம்—அத்துவிதத்தின் சாரமாகிய சைவ சித்தாந்தம். வினவப்பெற்றனர்-கேட்டுப் பெற்ருர்கள். பேரம்-விக்ரகம்.

1220. விபவம்-சிறந்த.

1221 பெருமாளங் கடுபூத வரத்தினுருத்
திகழும்நர பலியை யீய்வா
னுருமான வொலியிந்நா ளொருபுருட
ருலகாணி யுகந்து பாயுந்
தருமாரி யெனும்பூதக் கருமாரி
யாகவது தனது பேருங்
கருமாரி யென்பரது திருமாலி
னருளெனவே கழறு வாரே.

1222 அன்னைபராம் பரத்திடையே மங்கலநீ
ராடுவதற் காதி யாக
மன்னுநலங் குறுப்புமற்று மவிடேக
விசேடமென வகுத்த யாவு
முன்னியவை செயைவிசையை கொடுபோகி
யஞ்சுவய துற்ற தான
கன்னிகவு ரிப்பெயரே பெற்றுடையாள்
உறுப்பிலகு கவின முற்றும்.

1223 ஆயதொரு பேதைதன்பா லளித்துவிட
வப்பேதை யணுகும் போதிற்
றாயதுமூ வுலகெங்கும் விளங்கியிடுந்
தீபமொன்று சுடரா நிற்குஞ்
சேயபல வுற்பலமுந் திருவடியில்
வாடாமற் றிகழா நிற்குந்
தாயவளங் குறைதருமப் பராம்பரத்தி
னிலைமையெவர் சாற்றற் பாலார்.

---

1221. பெருமாள் அடுபூதம்-திருமாலால் அழிக்கப்பட்ட பூதம். பூதம் திருமாலிடம் வரம் பெற்றதை (காஞ்சிப்புராணம்) வீராட்டகாசப் படலத்தின் இறுதியில் காண்க. இப்புராணத்திலும் காணலாம். ஈய்வான்-கொடுப்பதற்காக. பூதத்திற்கு நரபலியைக் கொடுத்ததற்கு அடையாளமாக இன்னும் ஒருவர் உலகாணி தீர்த்தத்திற் பாய்வது வழக்கம். அதனைக் கருமாறிப் பாய்தல் என்பர்.

1122-1223-1224. பராம் பரத்திடை-காமகோட்டத்தில். அவிடேக விசேடம்-அபிஷேகத்துக்கு உரிய உபகரண வகைகள். செயையையும் விசயையும் அபிடேகப் பொருளை ஐந்து வயதுடைய

1224 எவ்வுலகி லெப்பதியி லிப்புதுமை
யுளதுலகி லெந்த நாளுஞ்
செவ்விதினப் பராம்பரமுன் யாண்டுதொறும்
பரப்புபொருட் டிறனி யாவு
மவ்விடைத்தெய் வதச்செயலா லுமையவளற்
புதமாகு மையாண் டுற்ற
கொவ்வையிதழ்ப் பேதையவண் டனித்திரவு
முழுதுமென்றே குலவா நிற்கும்.

1225 மற்றைநா ளம்மையப்பர் திருவுலாப்
புறம்போந்து மறுகி னூடே
யுற்றதொரு திருவூடல் செயல்விளைத்தே
காம்பரத்தி னுறைந்து மேவும்
பெற்றிமைசேர் திருச்சேர்வை சேவித்தார்
தேவரெலாம் பெரிது வாழ்ந்தார்
அற்றைவிழாப் பொலிவினுக்கு மப்பதிக்கு
மளவிலையென் றறிவு கூர்ந்தார்.

---

கௌரியிடம் வழங்கிவிட்டுப் புறத்தே நிற்பர். பேதை அணுகும் போதில்-ஐந்து வயதுடைய கௌரி வருகின்ற சமயத்தில். மூவுலகும் தூயது விளங்கும்: ஒற்றைத் தீபம் எரியும். நீலோற்பல மரங்கள் அவள் திருவடியில் மலரும். தாய் அவள் அங்கு உறை தரும் அப்பராம்பரம் எனப்பிரிக்க. குலாவி நிற்கும்-மகிழ்ச்சியுடன் இருப்பாள்.

1225. புறம் திருவுலாப் போந்து-நகர்வலம் செய்து. உலாப் பிரபந்தத்தைத் திருவுலாப்புறம் என்பர். 'உலை அன்பால் திரு வுலாப்புறம் பாடினேன்' (பெரியபுராணம். வெள்ளானை. 47) திருச் சேர்வை-திருத்தொண்டர் கூட்டத்தை. அளவு இலை-எல்லை கிடை யாது.

திருவிழாச் சருக்கம் முற்றும் ஆகச் சறுக்கம் 11. திருவிருத் தம் 1225.

---

1226 எந்தையெம தாசானீ யுரைத்தமொழிக்
கையமிலை யாவு முண்மை
மந்தணமெய்ச் சுருதிபுரா ணம்பலவு
மொழிபவர்தம் வாய்மையாக
முந்திய நூல் சொற்றவுரைக் கையமொடு
விபரீத முன்னி ேனோர்கள்
சந்ததம்வெந் நிறையமிடைப் படுவருன
தருளிலவை சார்ந்தி லோமால்.

1227 அப்பெரிய தலத்திணிடை யேதுசெயல்
புரியினுநன் றாமே யேனும்
மெய்ப்பொருளாம் வைதிகசை வம்புகலும்
நெறிபுரியில் விளம்பற் பாற்றோ
விப்படியே யாயிடினு மங்நனேழு
கொழுக்கநெறி யியற்று நின்ற
தப்பில்பெருந் தருமவிசே டத்துமுறை
தெரிதரவே சாற்று கென்றார்.

1228 நூலினிய றனைத்தெளிந்து சொலற்குரிய
குறியுடையோர் நுவல்வ ரேனுங்
காலநிலைப் பருவமுளோர்க் கன்றியது
நிலைப்படவே கருத்துக் கேறாச்
சீலமுறு மாதவத்தி ரும்மனையோர்க்
குரைப்பதுநற் செயற்பா லன்றோ
வாலிதெனச் சூதமுனி முதுகுரவன்
உரைத்தபடி மகிழ்ந்து கூறும்.

---

1226. ஆசான்-ஆசிரியன். மந்தணம்-ரகசியம். விபரீதம்-மாறுபாடாகப் பொருள் கொள்ளல். முன்னிேனோர்கள் – நினைத்தவர்கள் சந்ததம் - எப்போதும், நிரயம்-நரகம். அவை என்றது ஐய விபரீதங்களை.

1227. ஏதுசெயல் - எந்தநல்லசெயலை. வைதிகம் - வேதம். சைவம்-ஆகமம் . வைதிக சைவம்புகலும் நெறி–வேதமும் ஆகமும் முரண்பாடில்லாமல் கூறும் வழி. தருமவிசேடம்-தரும வகைகள்.

1228. நூலின் இயல்-ஆகம இயற்கை. குறி உடையோர்

1229 இத்தகைய தலமதனி லுற்பவிப்போர்
உறைந்திடுவோ ரெவரு முண்மைச்
சத்திபதி பாகரன்றி மற்றையோ
ருக்குவருந் தன்மைப் பாற்றே
பத்திமைசேர் நான்குவரு ணத்திலுளோர்
தத்தமக்குப் பகர்ந்த வாறே
சித்தமொரு மித்தநடை வழுவாம
லேதிகழ்வர் திரியா ரொன்றும்.

1230 அன்னபுரி நெறிமறையி னைறநெறியா
மவர்கலப்பி ஞன தாக
மன்னுவரு ணத்தவருந் தமக்குரைத்த
வரம்பிகவார் வரிசை மாறூர்
இன்னநெறி யாலகில தேசிகரு
மொழுக்கநெறி யியல்பா லைய
மன்னுமிலித் தலத்தினிடை மருவியைய
மதுதீர்ந்து வரம்பில் வாழ்வார்.

---

இலக்கணமுடையவர்கள். 'கொள்ளும் என்ப குறியறிந்தோரே. தொல். அகம். 47).

காலம், நிலை, பருவம் உளோர்-நல்ல காலமும், நல்ல நிலையும், நல்ல பக்குவமும் பெற்றவர்கள். நிலைப்பட - உறுதிஉண்டாக. வாலிது-தூய்மையானது. முதுகுரவன் உரைத்தபடி - வியாச முனிவர் கூறியபடி.

1229. சத்திபதிபாகர்-சத்திநிபாதம் பெற்ற பக்குவிகள். பக்குவிகளே இவ்வூரில் பிறப்பர் என்பது கருத்து. நடைவழு வாமல்-ஒழுக்கம் தவறாமல். 'அன்ன நடையும் அன்னமிலா ஐயர் நடையும் (பிரபுலிங்க லீலை. மாயை 57) திரியார் - மாறுபடார். ஒன்றும்-சிறிதும். 'ஒன்று—கொடாதவனைக் கோவென்றும் காவென்றும் கூறில்-இடாகோ நமக்கவிவிடர். இரட்டையர். (தனிச்செய்யுட் சிந்தாமணி. 18)

1230. கலப்பின் ஆனதாக மன்னுவருணத்தவர்-அநுலோமர் பிரதிலோமர், முதலானவர்கள். வரம்பு இகவார்-எல்லை கடக்க மாட்டார்கள். வரிசை-கிரமம். மற்றைய நாட்டில் உள்ள தேசிகர் கள் தங்கட்கு உண்டான ஆசாரத்தொடர்பான ஐயங்கள் யாவும் (அவர்கள்) இத்தலத்தை அடையில் (ஐயம்) நீங்கித் தெளிவு பெறுவர். அகில தேசிகரும்—எல்லா ஆசாரியர்களும். ஐயம்

1231 இப்பதிக்கு மாகந்த மூலலிங்கந்
தனக்குநிகர் வேற்றம் யாரே
செப்பியவர் நீநரகக் காணியுளோ
ரவர்க்கதுவே திரம தாகும்:
மெய்ப்படவே சிவன்புரியும் லீலைபல
பலவீற்று வீற்ற தாக
வப்படியாந் திருவுருவி லோருருவ
மிப்பதியி லமைப்பா ராஞல்.

1232 கோடியிர விக்கிரண மணிகுயின்ற
விமானமது குலாவி யேறி
யாடலொடு பாடல்பயி லரம்பையர்தற்
சூழ்போத வயனு மாலுந்
தேடவரி தானசிவ னுலகுதனிற்
பதுமமெனச் சிறந்த வெண்ணி
னீடுமுக மிருந்துபின்ன ருண்மைநெறி
கூடிமுத்தி நிலவு வாரே.

---

மன்னுகில்–சந்தேகம் (உள்ளத்தில்) நிலைத்து நின்ருல். வரம்பில்–தங்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட எல்லையில்.

1231, 1232. நிகர்வு ஏற்றம்-நிகரான தெய்வத்தையோ மேலான தெய்வத்தையோ. நரகக்காணியுளோர் - நரகத்தையே பரம்பரை உரிமையாகப் பெறுவர். திரமதாகும்-நிலையான இடமாகும். [சிவபிரானின் லீலையைத் திருவுருவில் அமைப்போர் முத்தி அடைவர்.] லீலை - விளையாட்டு. வீற்று வீற்றது–தனித் தனியாக இருப்பது. பதுமம்-பேரண். (பல்கோடி) பேரண்களை (பெரும்பாலும்) மலர்களின் பெயராற் குறிப்பது பண்டைய மரபு. 'நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் மையில் கமலமும் வெள்ளமும். (பரிபாடல். 2. 13. 14) கவிச்சக்கரவர்த்தியும் இராமாவதாரத்தில் (யுத்த. இலங்கை. 457) தாமம் நாட்டிய கொடிப்படைப் பதுமத்தின் தலைவன், எனக் குறிப்பிட்டுள்ளார். உகம்-யுகம்.

1233 மற்றொருபுண் ணியத்தலத்தி லயுதமெனும்
புரிசைமணி மாட கூடம்
பொற்றிருவால யஞ்சிகரங் கோபுரமா
மனைத்துமன்பிற் புரிந்த மேன்மை
யுற்றிடுவ ரித்தலத்தி லாடலினிற்
சிறுகையினாற் றுஞ்சி றூர்கள்
பற்றியர னுக்கெனவே யவைபோலப்
புரிந்தாலும் பகரற் பாற்றோ.

1234 காசிகுருக் கேத்திரங்கே தாரமவை
முதற்பரம கடவுட் டானத்
தாசில்பல நியுதலிங்கம் பதித்தபலன்
காஞ்சிநகர் தன்பால் வண்மைத்
தேசுலிங்க மொன்றுபதித் திடிலதனி
லயுதமந்தத் திருத்தா னத்தில்
வாசபுரா தனலிங்க மாளிகைசூ
ளிகைபுதுக்கி வளமே செய்யின்.

1235 சேயபுரா தனலிங்க மூர்த்திவிசே
டங்களுண்டத் திறத்தி னாலே
ஆயபலன் அதிகமென்பர் அத்தலத்திற்
றடம்பெரிய தமைக்கில் முன்பின்
மேயவவர் வருக்கமிரு பானொருகூற்
றளவுதெய்வ விமான மேறித்
தூயபல பரார்த்தமெலாஞ் சிவகதியின்
மேவுமவர் சுத்த ராவார்.

---

1233. அயுதம்-பதினாயிரம். புரிசை—மதில். மற்றைய தலத்திற் செய்யும் பெரிய திருப்பணியின் பயனை இத்தலத்திற் சிறுவர்கள் வீதியில் விளையாட்டாக மண்ணில் கோவில் முதலானவற்றைச் செய்து பெறுவார்கள்.

மற்றொரு புண்ணிய தலத்தில் புரிசை...கோபுரம் ஆம் அனைத்தும் அன்பிற் புரிந்த மேன்மையை) இத்தலத்தில் ஆடலின் ஆற்றும் சிறூர்கள் அவை போலப் புரிந்தாலும் உற்றிடுவர். மேன்மைஉற்றிடுவர்.

1234. குருக்கேத்திரம் - குருக்ஷேத்திரம். கடவுள்தானத்து- தெய்வத் தன்மையுடன் கூடிய இடத்தில். நியுதம் - லட்சம். 'அல் லாற் சுலோகம் ஒருநியுதம் ஆராய-வல்லானும் தேசிகனாவான். (சைவசமயநெறி. பொது. 3) சூளிகை-செய்குன்று.

1235. தடம்-தடாகம். (குளம்) இருபான் ஒரு கூற்றளவு

வேறு

1236 பேர யோத்தியே முதலதாம் பதிமிகப் பெரிது
மேர தாய்த்தரு மந்தழைத் தோங்கிடு மிடங்க
ளார வவ்விடை யொருவெள்ளம் பனவருக் கன்ன
நேரு மப்பய னிப்பதி யொருவர்க்கு நேரில்.

1237 அறவு முத்தமத் தலங்களி லிரவியை யரவ
முறுநன் னுட்டுலா பாரமாந் தானத்தை யுவந்து
திறனி னுஞுத விடும்பல னித்தலத் திசையிற்
பெறவோ ராமல கக்கனி யளவிடும் பிச்சை.

1238 தரும சூக்கும விசேடமுண் டித்தலந் தன்னிற்
கரிதி யத்திறப் பாலதாம் புராதனக் கதையும்
பெரிது மேவிடு மவைதனிற் சிற்சில பேசக்
கிருது வேபுரி முனிவரர் பரிவுடன் கேண்மின்.

1239 மன்பு ரூருவா வென்னுமோர் மன்னவன் மரீசி
தன்பு ராதன வனத்திடை வனசரஞ் சாலத்
துன்பு கூர்தர வேட்டைபோ யடுதலிற் றுவண்டு
முன்பின் மன்னனை மடங்கலா கென்றனன் முனிவன்.

---

வருக்கம் - இருபத்தொரு தலைமுறை. பரார்த்தம் - பிரம்மனது ஆயுள் நாளின் பாதி.

1236. வெள்ளம் பனவருக்கு- அளவுகடந்த அந்தணர்களுக்கு. வெள்ளம்-பேரெண். 'ஆயிரவெள்ளம் வாழியபலவே' (பதிற்றுப் பத்து 21) பிறதலங்களில் கணக்கற்ற அந்தணருக்கு உண்டி வழங்கிய பயன் இந்நகரில் ஒரு அந்தணனுக்கு உணவு கொடுக்க உடன்பட்டால் உண்டாகும். நேரில்-உடன்பட்டால். 'நிறைய ருந்தானை வேந்தனும் நேர்ந்து. (சிலம்பு. காட்சி. 178)

1237. இரவியை அரவம் உறுநாள்-சூரியகிரஹணம். நன்னுள் துலாபாரமாம் தானம் எனப் பிரிக்க. மற்றைய தலத்தில் துலா பாரதானப் பயனை இத்தலத்தில் நெல்லிக்கனியின் தானம் வழங் கும். ஆமலகம்–நெல்லி. 'விண்ணுளார் தந்தம், ஆமலகக்கனியே ஆமலகக்கனியே என்று அகத்துள்வைக்கும். (சங்கர நயினர் கோவில் அந்தாதி. 1) தானத்தை, பிச்சை அளவிடும்' என்க.

1238. சூக்குமவிசேடம்-நுட்பமான சிறப்பு. கிருது-யாகம். முனிவரர்–முனிவர்களே. அண்மைவிளி.

1239. புராதனவனம்-பழையவனம். வனசரம்-காட்டில்

1240 அரச னவ்வனத் திருந்துழி வணிகனோ ரனாதன்
தரும காரகன் சூதினா லிளைத்தவன் றனாது
விரத மாதரு மந்தனை விற்றனன் விடுத்தா
னுரிய மால்கரி யாய்மற்றைப் பவத்தினி லுதித்தான்.

1241 அடங்க லாக்களி றாகியே திரிந்துழி யந்த
மடங்கல் கண்டது பின்றுடர்ந் தேகியே வரலுங்
கடங்க லுழ்ந்திடு மால்கரி நடுங்கியே காஞ்சி
யிடங்கொ ளெல்லையிற் றருமநீர்த் தடத்தில்வந் திறங்கி

1242 வேனி லால்வறந் திடுதட மிளமணல் விராவு
பான டந்தது விழுந்தது மணலினுட் படிய
வான சீயமுங் காண்குறா தகன்றதக் கரியுந்
தானி லாதவண் பயப்பய வெழுந்தது தாவி.

1243 தடத்த வற்சுழி சுளைந்துநீர் தெளிந்தது தருமம்
நடத்து மோர்சைவ வேதிய னவ்வயி னடந்தான்
கடுத்த வேனிலின் வந்தன னன்னநீர் கண்டே
யடுத்து மூழ்கினன் சிவார்ச்சனை முடித்தன னகன்றான்

---

வாழும் விலங்குகள். முன்பின்–(தவ) வன்மையால். 'முன்பு அடு குவித்தாரை. (சிந்தாமணி, முத்தி 66). மடங்கல்-சிங்கம். 'வெம் மடங்கல் வெகுண்டனைய சினம்' (கம்பன் யுத்த).

1240. அனாதன்-திக்கற்றவன். 'அனாதர்களாய் உனை அடையும் அவர்தம்பால் ஓம்படை செய்' (சேதுபுராணம், கவிசம்பு 67) இளைத்தவன்-ஏழையானவன். பவத்தினில்-பிறப்பில்.

1241. அடங்கலா-பிறருக்குக் கட்டுப்படாத. துடர்ந்து-தொடர்ந்து. கடம்கலுழ்ந்திடும்-மதம் சிந்தும்.

1242. வேனிலால்-வெப்பத்தால். 'வேனில் ஆயினும் தண் புனல் ஒழுகும்-தேனூர் அன்ன இவள்' (ஐங்குறு நூறு 54) இளமணல்-புதை மணல். விராவுபால்-கலந்த இடத்தில். படிய-புதைய. சீயம்-சிங்கம், 'சீயம் அன்ன செழுநிலவேந்து' (பாகவதம் பிருது 21). அவண்–அவ்விடத்தில். பயப்பய-மெல்ல மெல்ல.

1243. அவல்-பள்ளம். சுழிசுளைந்து-சுழிகளைப் பெற்றுக் கலங்கி சைவவேதியன்-சிவாசாரியர். கடுத்த-கோபங்கொண்ட (கடுமையான).

1244 கால மொன்றிலக் கரிகரிப் பகையுயிர் கழலும்
வேலே யென்றியே யமபடர் வந்தவை விளைத்த
மூல மாகிய தீங்குரைத் துரப்பியே முனியச்
சூல பாணிதன் கணுதிபர் புகுந்தவண் சொல்வார்.

1245 இளைய சீயமெங் காஞ்சியி னீர்நிலே யானை
வளைய வெதுவா யினதது வளைந்தது மதிக்கில்
அளைய நன்மைகே வலமல விவ்வதி கார
நினையி லும்மதன் றெம்மதென் றவர்தமை நீத்தார்.

1246 அன்ன காலேயிற் கரியரி யாருரி யுடுத்தும்
புன்மை தீர்ந்தரி கரியின தீருரி போர்த்து
மன்னி யேயுருத் திரகண மாயின மலேயக்
கன்னி யேதவம் புரிதல விசேடமார் கணிப்பார்.

---

1244. கரி-யானை. கரிப்பகை-சிங்கம். உயிர் கழலும் வேலே-உயிர் நீங்கும் சமயத்தில். யமபடர்-எமன் விடுத்த தூதுவர். 'கொங்கவிழ் தாம வீரனே யாங்கள் யமபடர்' (திருவால வாயுடையார் திருவிளையாடல். பழியஞ்சின). உரப்பி-அதட்டி. சூலபாணி-சிவபிரான்.

1245. யானைவளைய-யானையானது தலேயிலே அணிய. அது அந்தச் சிங்கமும். (வளைதல் என்ற சொல் குறிப்பால் நீராடுதலேக் குறிக்கிறது). கேவலம் அல-சாதாரணம் அன்று, உம்மது அன்று-உம்முடைய அதிகாரத்திற்குட்பட்டதன்று. நீத்தார்-விலக்கினுர்கள்.

1246. யானையும் சிங்கமும் சிவசாரூப்யம் பெற்றதை நயம்படக் கூறுகிருர். சிவபிரானைப் போலவே யானை சிங்கத்தின் தோலே உடுத்துக்கொண்டது. சிங்கம் யானையின் தோலேப் போர்த்துக்கொண்டது. கரி, அரி ஆர்உரி உடுத்தும், அரி, கரியினது ஈருரி போர்த்தும் உருத்திரகணம் ஆயின. கரி-யானை. அரிஆர்உரி-சிங்கத்தின் தோல். ஈர்உரி-கிழிக்கப்பட்ட தோல். இமயக்கன்னி-உமாதேவி. இங்கு, 'கைந்நாகம் பைந்நாக கங்கணம் பூணப் பொரும்ப—பைந்நாகங் கைந்நாகப் பட்டுடுக்க' எனத் திருக்காளத்திநாதர் உலா கூறுவது நினைவுக்கு வருகிறது.

1247 பெரிய வற்புத மின்னுமொன் றவண றம் பிழைத்த
தருண கோமளை யென்றொரு கணிகைதன் றனந்தைக்
குரிய நோயவர் மனுவலா னொருதனை யுற்று
விரகி லின்னநோ யாற்றுமா றுரையென விளம்பும்.

1248 உருந்த ளாவுநெய்த் தண்டுலத் தொருபடி புழுக்கல்
வளர்ந்த மானிசி காளிகோட் டத்திடை வைக்கிற்
றெளிந்தி டாக்குத லைக்குழ விப்பிணி தீருந்
துளங்கி டேலென மனுவலா னுன்முறை சொற்றான்.

1249 அதுக டைப்பிடித் தறனிலாக் கணிகையவ் வாறு
கதுமெ னச்செயப் புலானுண வினனொரு கணுளன்
புதிய லீலையிற் பிவார்ச்சனை யொருதினம் புரிந்தான்
பதியி திற்பசா செனப்பிறந் தழிந்தனன் பசியால்.

1250 அப்ப சாசவள் வைத்திடு பலியினை யவாவிக்
குப்பு றுக்கரத் தள்ளியே யயின்றது குலாவத்
தப்பி யேபித றியவடி சிலையவண் சார்ந்தே
யெய்ப்பு நீடுமோர் ஞாளிதின் றுவந்துபோ யினதால்.

---

1247. அறம் பிழைத்த-தருமத்திலிருந்து தவறிய. தருணம்-இளமை. கணிகை-பரத்தை. தனந்தைக்கு-பால் குடிக்கும் குழந்தைக்கு. மனுவலான்-மந்திரத்தில் வல்லவன். விரகில்-தந்திரத்தால், நோய் ஆற்றும் ஆறு-நோய் போக்கும் விதத்தை.

1248. தண்டுலத்து ஒருபடி-ஒரு படி அரிசி. புழுக்கல்-அவரை துவரை முதலியன. 'புழுக்கலும் நோலையும்' என்னும் சிலம்புப் பகுதிக்கு (இந்திரவிழவூர் 68). அடியார்க்கு நல்லார் விரித்த விவரம் காண்க. 'புழுக்கல்-முதிரைப் பண்டம். புழுக்குவ புழுக்கல் என்றார் ஆதலின்' என்று விளக்கியுள்ளார். மால்நிசி-கரிய இரவு. காளிகோட்டம்-காளி கோவில். தெளிந்திடா-தெளிந்து. (தேறி) குதலைக் குழவி-மழலைச் சொல் பேசுங் குழந்தை. 'குறுதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்' (சிலம்பு 22. 129). துளங்கிடேல்-வருந்தாதே.

1249. கணுளன், என்ற சொல் புதியதாகவுள்ளது. கண் போன்றவன் என்று பொருள் கொள்ளலாம். அக்கணிகையின் காதலன் என்று வலிந்து கூறுவது முறையன்று. லீலையில்-விளையாட்டாக. பசியால் அழிந்தனன்-பசியினால் நிலைகுலைந்தான்.

1250. அவாவி-விரும்பி. குப்புறு-குனிந்து. அயின்று அது குலாவ எனப் பிரிக்க. உண்டு அப்பேய் மகிழ என்பது அதன் பொருள். அடிசில்-உணவு. ஞாளி-நாய்.

1251 தலவி சேடத்தி லதுபெருந் தானமாய்த் தழைத்த
பலனி லேவிய மனுவலான் புரிந்தவள் பகிர்ந்த
வலகை யாவரும் பெருங்கயி லைத்தல மடைந்தார்
இலைய மின்றியோர் பிரமகற் பம்படு மெல்லை.

1252 சாற்ற வின்னுமொன் றுணர்மினப் பதிபுரா தனத்தே
யாற்று மாலைய மொன்றுளத தன்சரக் கறையில்
காற்றி கழ்ந்துள குளஞ்சிறி தொருபல்லி கவ்விப்
போற்றி யப்புரி சைப்பழம் புரையிடைப் புகுத.

1253 அப்பு ரைக்கயற் புரைதனி லிருக்குமோ ராவம்
வெப்பி லப்பல்லி வாலினைப் பற்றியே விசித்துத்
துய்ப்ப வப்புரைப் படுங்குள மங்ஙனே துன்னி
யொப்ப மிட்டெனத் திகழ்ந்தன வெயிலினு லுருகி.

1254 இத்த கைப்பட நிகழ்ந்துழி வினையமீ தெண்ணிக்
குத்த ரென்பவ ரிப்பல்லி சிவாலயக் குளமா
மத்தை யேகவர் பவத்தையு மிதுதனை யடவே
புத்தி செய்யரர் நலத்தையுந் தெரிந்தனர் பொதிந்தார்.

---

1251. தழைத்த பலனில்-மிகுதியான பலனுல். (தானத்தின் பலனுல்). மந்திரத்தில் வல்லவனும், கணிகையும், பகிர்ந்து கொடுத்த பேயும் கயிலையை அடைந்தனர். பிரமகற்பம்-பிரமனுக்கு விதிக்கப்பட்ட வாழ்நாள். பிரம்மகற்பத்தில் எல்லாவுயிர்களும் பிரம்மனிடம் லயம் அடையும். கணிகை முதலானவர்கள் பிரம்ம னுடன் லயம் அடையாமல் கயிலை உற்றனர். இலையம்-லயம்.

1252. அப்பதி-அந்தத் தலத்தில். புராதனத்தே ஆற்றும் ஆலயம்-பழங்காலத்தில் கட்டப்பட்ட கோவில். சரக்கரை-களஞ் சியம், குளம்-வெல்லம். 'உள்ளக் குளத்தேனை ஒத்து' (நூற்றெட் டுத் திருப்பதி அந்தாதி). புரிசை-மதில். புரை-வளை.

1253. அயல்புரை-பக்கத்தில் உள்ள வளை. விசித்துத் துய்ப்ப-இழுத்து உண்ண. அங்ஙனே-அவ்விடத்தில். ஒப்பம் இட்டென-காரையைப் பூசினுற்போல. வெல்லம் வெய்யிலால் உருகிச் சுவரில் கரை பூசினுற்போல் தோன்றியது.

1254. ஈதுவினையம்-இச்செயலை. குத்தர்-சித்திரகுப்தர். (யம னுக்குக் கணக்கு எழுதுகின்றவன்). சித்திரகுப்தன் எழுத்தால் (திருமாலை) பவத்தையும்-பாபத்தையும். நலத்தையும்-புண்ணியத் தையும். பொதிந்தார்-எழுதி வைத்தார்.

1255 புகழ்ந்து சித்திரர் புராதனக் திருத்தளி புதுக்கித்
திகழ்ந்த நன்மையு நலஞ்செயு முயிரினைச் சிதைத்து
மகிழ்ந்த பவ்வமும் வரைந்தன ரிப்படி மயக்க
நிகழ்ந்த வெல்லையிற் றருமன் இக் கணக்கினை நினைத்தான்.

1256 மாறு பட்டிடு கணக்கினைப் புந்தியான் மதித்துத்
தேறி யேயரன் பொருள்கவர்ந் திடுவதுந் தீமை
வீறு மாலயப் புராதனம் புதுக்கலு மேன்மை
கூறு மிவ்விரு பயனையு மருந்தவே கூடும்.

1257 தரும மென்றனள் றருமனப் படியவை தவாமற்
புரிவு மேயின தாதலி லப்பெரும் புவியில்
அருமை யாம்பெருங் குளம்பெரி தாமன்ன தானந்
திரிவி லாமலே புராதனம் புதுவதாய்த் திருத்தல்.

1258 அருளி னுற்புரி வோர்பெறும் பலத்தினுக் களவு
தெரிய வொண்ணுமோ புந்தியிற் கூறிய செல்வர்
தருமம் யாவையு மிப்பெருந் தலத்திலே தவாமற்
புரிய வேகட னல்லவோ கிடைக்குமோ புவியில்.

---

1255. *சித்திரர்-சித்திரகுப்தர்.* (நாமைகதேசம். ஒருவருடைய பெயரில் ஒரு பகுதியை மாத்திரம் கூறுதல்). *திருத்தளி-திருக்கோயில்.* 'மையல்அமணர் மறைத்தவட தளியில் மன்னும் சிவனுரை' (பெரிய புராணம். திருநாவுக்கரசர் 294). *எல்லையில்-சமயத்தில். தருமன்-யமன். கணக்கு-வழக்கு.* 'இக்கணக்கு இப்படிக்கு ஆர் வெல்லுவார்' (பழைய திருவிளையாடல். மாமனாக 28). *நினைத்தான்-ஆராய்ந்தான்.* 'வினை வேறு படாஅப் பல பொருள் ஒருசொல்-நினையுங்காலைக் கிளந்தாங் கியலும்' (தொல். சொல். கிளவி 55). கல்லாடனார் நினையுங்காலை என்ற சொல்லுக்கு ஆராயுங்காலத்து என்று உரை கூறினார்.

1256. *மாறுபட்டிடு கணக்கு-முரண்பாட்டைத் தருகின்ற வழக்கு. புராதனம் புதுக்கல்-பழைய (சிதைந்த) பகுதியைத் திருத்துதல். அருந்தவே கூடும்-அனுபவித்தலே பொருந்தும்.*

1257—1258. *தவாமல்-கெடாமல்.* பெருங்குளம் அமைத்தல் அருமை. அதனினும் அன்னதானம் பெரிது. புராதனம் திருத்தல் புரிவோர் பெறும் பதத்தினுக்கு அளவு-புந்தியில் தெரிய எண்ணுமோ? தருமம் யாவையும் புரிதலே கடன் அல்லவோ? புவியில் கிடைக்குமோ' என்று இரண்டு பாடல்களையும் இணைக்க. *கடன்-கடமை,*

1259 அன்ன தாதலிற் பதியிதிற் பனவருக் கஞ்சீர்
வன்ன மார்தரு மகேசருக் கணிபெறு மடங்க
ளெண்ணி லாதுண்மை யுணர்வின ருறைகுகை யிருக்கை
யுன்னு ஞானதே சிகருறை யாலைய வுறையுள்

1260 மண்ணி லிட்டிகை தன்னிலச் சிலையினில் வகுப்பித்
தெண்ணில் வைபவ முபகர ணத்துட னியற்றிப்
பண்ணி லொன்றினுக் கொன்றொரு சதபலன் பலிக்குந்
தண்ணி லிப்பரை புரிதரு தருமமே சான்றால்

1261 தயில நெய்பஞ்ச கவ்வியங் கருப்பநீர் ததிபா
லுயரு மாநறை நறைநனீ ரொன்றினுக் கொன்று
வியன தாயபி டேகமே செயிற்பரி மேதப்
பயன தாமிது தலத்தினி லயுதமாய்ப் பரவும்

1262 வாலி தாயநுண் ணறுவைபட் டுப்பல வருக்கங்
கோலி யேபுனைந் திடிலிழைக் கயன்கற்ப கோடி
கால மன்னுவர் சிவபுரம் நறைமலர் கலந்த
மாலை சாத்திடின் முன்னையிற் சதபலன் மலியும்

---

1259. பனவர்-அந்தணர். மகேசர்-சிவபக்தர்கள். உண்மை யுணர்வினர்-ஞானிகள். குகையிருக்கை-மடங்கள். (திரு.மு. அருணசலம் அவர்கள் அந்தணர் அல்லாத துறவிகள் தங்கும் இடம் குகை என்று குகை நவச்சிவாயரைப்பற்றி எழுதும்போது விளக்கி உள்ளார்). மாயாப்பிரலாபம் (பாயிரம்) 'திசைமிகு கீர்த்திக் குகைமடத் தலைவன்' என்று காழிக் கண்ணுடை வள்ளலைப் புகழ்கிறது. ஞானதேசிகர்-ஞானாசிரியர். ஆலைய உறையுள்-கோயிலைப் போன்ற வீடு.

1260. இட்டிகை-செங்கல். செம்பொன் இட்டிகைத் திண் சுவர் அமைத்து. (பெருங்கதை. 2. 6. 43. சிலை-கல். வகுப்பித்து-கட்டச் செய்து. உபகரணம்-வாழ்வுக்கு வேண்டிய பொருள்கள். சதபலன்-நூறுமடங்கு பயன். பரை-பராசக்தி. சான்று-சாட்சி.

1261. பஞ்சகவ்வியம்-பசு வழங்கும் ஐந்து பொருள்கள். கருப்பநீர்-கரும்பின்சாறு. நறை-தேன். நறைநன்னீர் - வாசனைப் பொருள் கலந்த நன்னீர். வியனதாய்-விரிவாக. பரிமேதம்-அஸ்வ மேதயாகம். அயுதமாய்-பத்தாயிரமாக. பரவும்-மிகும்.

1262. வாலிதாய-தூய்மையான. 'காலமும் இடமும் வாலிதின் நோக்கி.' நன்னூல்-பாயிரம். (36) பட்டு அறுவை என

1263 சாலி யன்னமன் னுங்கமோ டினிமையிற் சமைத்து
வால சூதமூ லேசனுக் கேற்றிடின் மலிந்தே
சால முன்னையிற் சதகுண மதிகமாய்த் தழைக்கு
மேல தூபதீ பப்பல னதனிலு மேற்றம்.

1264 கவிகை சாமரை பொன்முதற் புரியியக் கலன்கள்
விவித மாயதில் மிகும்பலன் வாகன விசேட
மவைய திற்பலன் மணிப்பணி யதனிலு மதிகம்
நவந டம்புரி வனிதையை விடிலதி னலமாம்

**வேறு**

1265 தழுவவெளிப் படுகடவு ளனுந்தனிமா
மூலலிங்கந் தன்னிலத் தட்டுப்
புழுகுநெய்காப் பொருதுடியி னளவுபளி
தத்தளவிப் புனைவிப் பாரேல்
அழிவிலவர் சீவன்முத் தரையமில்லை
யுண்மைநெறி யவரை யன்பாற்
றொழுமவரே சிவசாமி பத்தரென்றான்
பேரறிவிற் சுருதி யாய்ந்தோன்.

---

மாற்றுக. பட்டுஅறுவை-பட்டாடை. இழைக்கு - ஒருநூலுக்கு. 'பனுவல் இழையாக' (நன்னூல். பாயிரம். 24) அயன்கற்பகோடி காலம் சிவபுரம் மன்னுவர். முன்னையின்-பட்டாடையினால் வரும் பலனைவிட. சதபலன்-நூறு மடங்கு பயன்.

1263. அன்னம், அன்னுங்கம் என்றது சோறும் குழம்பமுது சாற்றமுது முதலானவைகளை. வால்-இளமையான. சூதமூலேசன்-மாமரத்தின் அடியில் இருக்கும் சிவபிரான். ஏற்றம் - உயர்வுடையது.

1264. கவிகை-குடை. இயக்கலன் - வாத்தியங்கள். விவிதமாய்-பலவிதமாக. வாகனவிசேடம்-வாகன வகைகள். வனிதை விடில்-மகளிரைத் தொண்டுபுரிய விட்டால்.

1265. தழுவ-உமையம்மை தழுவ. தட்டுப்புழுகு-ஒருவகைப் புனுகு. துடியின் அளவு-ஏலத்தின் அளவாக. பளிதம்-கற்பூரம். தட்டுப்புழுகை-ஏல அளவான கற்பூரத்துடன் கலந்து ஏகாம்பர நாதருக்குச் சாத்துபவர் ஜீவன்முத்தராவர். சுருதி ஆய்ந்தோன்-வியாசன்.

1266 இத்தருமஞ் சிவதரும முத்தமோத்
தம்மென்றே யியம்பும் நூல்கள்
அத்தருமந் தனைச்செய்தோர் செய்யென்ஞோர்
துணைச்செய்தோர் அவரை யுற்ஞோர்
முத்திமுத னான்கினுக்கு முதலாவ
ராதலினுன் முதன்மை யான
புத்தியுள்ளோ ரித்தலத்திற் றருமமெலாம்
புரப்பதுவே புலமைத் தாமால்.

1267 பதியிதுவு மிப்பதியிற் றருமம்நன்னி
ராமனைத்தும் பரம மான
முதியபுரா தனலிங்கம் பற்பலவு
மொவ்வொன்றே முத்திக் கேது
சதிர்பெறவே யிவையாற்றிற் சிலவேனும்
பலவேனுஞ் சார்ந்து ளோர்கள்
விதிபெறவே பெறுவதெவ னெனிலையந்
திரிவறவே விளம்பக் கேண்மின்.

---

1266. உத்தமோத்தமம் - மேன்மைகளுக்குள் மேன்மை யானது. செய்தவர், ஏவியவர், உதவி செய்தவர். இவர்களைச் சேர்ந்தவர்கள் முத்தி முதல் நான்கினுக்கும் முதலாவார்கள். தருமம் செய்தவர் முத்திபெறுவர். (சாயுச்சியம்) செய் என்ஞோர், சாரூபம் பெறுவர். துணை செய்தோர் சாலோகம் பெறுவர். உற்ஞோர். சாலோகம் பெறுவர். புரப்பது-பாதுகாப்பது.

1267- முதல் அடிக்குச் சரியான பாடல் கிடைக்கவில்லை. 'பதியிதுவும் இப்பதியிற் றிகழ்கின்ற மணவனைத்தும் பரமமான' என்று பாடம் கிடைப்பின் பொருந்தும்.

சதிர்பெற-திறமை உண்டாக. சார்ந்துளோர்கள்-தியானிக்கும் பக்தர்கள், ஐயம், அதுவோ இதுவோ என்று உறுதி கொள்ளாமல் இருத்தல். திரிவு. ஒன்றை மற்றென்ருக எண்ணுதல்.

1268 தலமதனி லுறைவோர்கள் பரிபாக
ராதலினுற் றலைமை சான்ற
புலனுடையோர் செயலனைத்துஞ் சிவன்செயலாய்த்
தமதறவே பொருந்தி வாழ்வர்
பலபயனு மாகந்த மூலவிறை
கைக்கொண்டப் பயனுக் கொன்றுக்
கிலகுமுத்தி யளிக்குமற்ற தவரிடத்திற்
கடனுக விருக்கு மன்றே.

1269 இப்பதியின் பெருமைதனை யலர்த்தவிசோ
னுரைக்கவல்ல னெம்ம தாசான்
செப்பிடவு முரியனன்றி யெம்மனையோர்
புகலுநெறி தெளிதற் பாற்றே
வப்பரிசு யானறிந்த படியுரைத்தேன்
செவிப்புலனி லமைத்தீர் நீவிர்
ஒப்பில்பெரு முனிவீரென் றுரை முடித்தான்
சூதமுனி யுவந்து தானே.

---

1268. பரிபாகர்-பக்குவம் அடைந்தவர்கள். புலன் உடையோர்-ஞானிகள். எல்லாம் சிவன் செயல்-நிகழ்கின்றவை முற்றும் இறைவன் திருவருள் என்று அறிந்து அவற்றால் களிப்பும் கவலையும் அற்றிருத்தல். 'அவனன்றியோரணுவும் அசையாதெனும் பெரிய ஆப்தர் மொழி' (தாயுமானவர்-எங்கு நிறைகின்ற பொருள் 1.) தமதுஅற-மமகாரம் நீங்க. பயனும் ஆகு அந்த மூல இறை-செயல்களின் பலனாக இருக்கின்ற சிவபிரான். கைக்கொண்டு-ஏற்றுக்கொண்டு. இறைவன், பக்தர்கள் தன்பால் வழங்கும் செயல்களை ஏற்றுக்கொள்வான். அவன், ஒரு செயலுக்கு முத்தி வழங்குவான். மற்றைய செயல்களைக் கடனாக வைத்திருப்பவன். இங்குச் 'சந்ததமும் எனது செயல் நினது செயல் யான் எனும் தன்மை நினையன்றி நில்லாத் தன்மையேல் வேறலேன்' எனத் தாயுமானவர் கூறியதைக் கருதுக.

1269. அலர்த்தவிசோன்-மலராகிய ஆசனத்தில் இருக்கும் பிரமன். எம்மது ஆசான்-எம் ஆசிரியராகிய வியாசர், தெளிதல் பாற்றே-தெளியும் தன்மை உடையதா. பரிசு-பெருமை. 'பங்கம் இல்தக்கனும், எச்சனும், தம்பரிசு அழிய பொங்கியசீர்பாடி. (திருவாசகம்-13. திருப்பூவல்லி. 15. பாட்டு)

வேறு

1270 வினவி யோர்புரா ணத் திறை யாமுனி
விரை மலர்த்தாள் போற்றி
யனக மாக்கதை யறிவு றுத்தினையென
வவனரு ளதனாலே
பனவர் யாவரு மிணையிலாக் காஞ்சியம்
பதியினை யணைந்தன்பா
லினிமை யாகிய பரமவீ டடைந்தன
ரெளிதினில வர்தாமே.

1271 இனைய மாக்கதை யிசைப்பவர் வினவுவோ
ரெழுதுவோ ரவர்யாருந்
தினம னோலயப் பரமவீ டடைவது
திண்ணமே புகழ்ப் பாலன்
றனக மாகிய பதியிது சொல்லினு
மணுகினு மன்பாக
வினவி னும்முத்தி யென்றுமைக் கரன்முனம்
விளம்பிய வதனாலே.

---

1270. புராணம் கேட்டவர்கள் காஞ்சிமாநகரை அடைந்து இறைவழிபட்டார்கள். திருவிளையாடற்புராணம் கேட்ட முனிவர்கள் மதுரை அடைந்து வழிபட்டதாகக் கவியரசர் பரஞ்சோதி முனிவர் பகர்வர். அருச்சனைப்படலம் காண்க.

வினவியோர்-புராணம் கேட்டவர்கள். மாக்கதை - சிறந்த கதை. சேக்கிழார், கச்சியப்பசிவாச்சாரியார், முதலான சான்றோர்கள் மாக்கதை என்றே கூறுகின்றனர் 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்னும் திருவாசகத் தொடர் இங்குக்கோயில் கொண்டுள்ளது. பரமவீடு-மேலானமுத்தி. குமரகுருபரர் 'திருமாலைப் பரமவீட்டத்தன்' என்பர். (மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ். 34) தவம்புரியாமல் கதை கேட்டே முத்திபெறுதலின் எளிதே என்றார்.

1271. இசைப்பவர் - கூறுபவர்கள். வினவுவோர்-கேட்பவர்கள். மனோலயப்பரம வீடு-மனம் லயம் அடைந்தால் கிடைக்கின்ற முத்தி.

1272 வாழி காஞ்சியம் பதிதனி லுறைபவர்
வளமிகு திறனுலே
வாழி யோர்தனி மாநிழ லாளர்தம்
மந்திர நெறி சொல்வோர்
வாழி யிப்பெரும் புராணமே வினவுவோர்
வையகந் தனிலென்றும்
வாழி வைதிக சைவமே யாவரு
மகிழ்சிறந் திடுமாறே.

தர்மச் சருக்க முற்றும்

ஆகச் சருக்கம் 12-க்கு விருத்தம் 1272
ஏகாம்பரநாதர் காமாட்சியம்மை பாதமே துணை.
காஞ்சிப் புராணம் முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

---

1272. வளம்-செல்வச் செழிப்பு. வளம்மிகு திறனுலே காஞ்சியம் பதிதனில் உறைபவர்வாழி எனமாற்றுக. தனிமா நிழலாளர்-ஏகாம்பரநாதர். மந்திரநெறி-பஞ்சாட்சர வழி. வைதிக சைவம் வேத நெறியைப் பின்பற்றும் சைவம். வேதத்தைப் பின்பற்ருத சமயங்களை விலக்கிக் கூறினுர். யாவரும் மகிழ்ந்திடுமாறு சைவம் வாழ்க என்று சேர்க்க.

## கலித்துறை

காமாட்சி யேகம்ப வாணர்
    புராணங் கழறி யென்றுங்
பூமா திருக்குந் தென்கச்
    சியிலே நின்புகழ் வளர்த்தாய்
சோமா னனத்தன் தென்காழி
    வள்ளற்குத் தொழும்பிவனே
யாமா மெனத்திகழ் கச்சாலை
    யென்னு மகளங்கனே.

பாரதமுங் கச்சிக் கோவையும்
    பாடப் பரிந்து தித்தாய்
நாரதன் பாடுமி சைக்கே
    யுருகிய நம்ப ரிம்ப
ரூரர்தம் பாட லெனவேயுன்
    பாட்டு முவந்து கொள்ளப்
பூரண லட்சணக் கச்சாலை
    யென் னும்நற் போதத்தனே.

மூவர்க ளோதுந் தமிழுமெய்ப்
    போது முனிவின் றியே
நாவினி லோதுந் திருப்பாட்டு
    நாய னகரத்திலே
யாவரு மிக்கதென் றோதுந்தென்
    கச்சிக்கச் சாலையென்னும்
பாவலன் கம்பர் புராணத்தை
    யோதிய பண்பினனே.

---

1. சோமானனத்தன்-நூலாசிரியரின் ஆசிரியர் பெயர் போலும். இவர் காழிக் கண்ணுடை வள்ளல் மரபினர். காஞ்சி புரத்தில் காழி வள்ளல் மரபினர் சிலர் இருந்ததாகக் கூறு கின்றனர். தொழும்பு-தொண்டன். நூலாசிரியரின் பெயர் கச்சாலை என்பது. கச்சாலைத் தேசிகர் என்று வழங்கியிருக்கலாம்.

2. இப்பாடலால் கச்சாலை என்பவர் பாரதமும் கச்சிக் கோவையும் பாடியுள்ளார் என்று தெரிகிறது. ஊரர் - சுந்தர மூர்த்தி நாயனர். 'பாடும் இடத்து அடியான் புகழ் ஊரன் உரைத்த இம்மாலைகள் பத்தும்வல்லார்-கூடும் இடம் சிவலோ கன் இடம் களிக்கச்சி அனேகதங்காவதமே' (சுந்தரர். 10. ஆம் பாட்டு) போதத்தன்-போதிப்பவன்.

3. மூவர்கள், என்றது தேவாரம் பாடிய மூவர்களை. கம்பர் புராணம். என்பதே இந்நூலின் பெயர் போலும். லட்சணக் கச்சாலை' என்ற தொடர் இப்பாயிரத்தில் இரண்டு முறை உபயோகப்படுத்தப்பட்டுள்ளது.

வளங்கெழு காழி வள்ளன்
　　மலரடிக் கடிமை யாகி
விளங்குலட் சணக்கச் சாலே
　　யென்பவன் விரிநீர் வேலிக்
களங்க மிலுலகின் மாந்தர்
　　கைக்கொளக் காஞ்சி மேவி
அளந்தறி யொண்ணு ஏகம்
　　பர்க்கொரு புராணம் சொன்ஞன்.

**சருக்கப் பெயர்கள்**

முந்து பாயி ரஞ்சிவா லய
　　மரிதிரு முற்ற
மெங்கை தீர்த்த மேயபி
　　தானங் கயிலையெம் பிராட்டி
வந்து மேவு நன்மா
　　நகர்பு ரம்புகன் மாது
தந்த பூசனை திருவி
　　மூாத்தரும் மீத ரத்தால்.

சிவசண்முக மெஞ்ஞான தேசிகறிருவடி வாழ்க. எழுதி நிறைவேறியது—காமக்க நல்லூர் கணக்குச்சோலேயப் பிள்ளை குமாரன் கந்தப்பன் எழுதின காஞ்சிபுரப் புராணம்—இந்தத்திருமறை சுபயோக சுபகரணத்தில் (சுக்கிர) வாரத்தி லெழுதி நிறைவேறினது.

---

## செய்யுண் முதற்குறிப்பகராதி

எண் செய்யுளெண்.

# காஞ்சிப்புராணம்—பாடல் பிழைதிருத்தம்

| பாடல். | அடி. | பிழை. | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 2 | 3 | யடியவர்க்கட்குதவி | ... | யடியவர்க்குதவி |
| 3 | 2 | கனற்பால் | ... | கனற்பால |
| 4 | 1 | வோவும் | ... | வோர்வும் |
| 4 | 4 | இன்னிலே | ... | அன்னிலே |
| 5 | 3 | பொற்பாலிப்போ | ... | பொற்பாலிப்பேர் |
| 6 | 3 | லென்னுளுங் | ... | லெங்நாளுங் |
| 7 | 1 | னிலேமைறு | ... | னிலேமைபெறு |
| 11 | 3 | பலிக்குமாற்ரு | ... | பலிக்குமாற்ருல் |
| 17 | 4 | கக்சி | ... | கச்சி |
| 18 | 2 | தீர்த்தமெயபிதானங் | ... | தீர்த்தமேயபிதானங் |
| 19 | 4 | விரிக்கலுற்றன்ன | ... | விரிக்கலுற்றனன் |
| 20 | 3 | காந்தஞ் | ... | காந்தங் |
| 23 | 3 | முனிவங் | ... | முனிவர் |
| 25 | 2 | வீரியத் | ... | விரியத் |
| 26 | 2 | மென்றனர் | ... | மென்றனர் |
| 37 | 4 | முனிவீர் | ... | முனிவிர் |
| 47 | 1 | தன்னீற் | ... | தன்னிற் |
| 53 | 1 | ஒருமித்துகாஞ்சி | ... | ஒருமித்துக்காஞ்சி |
| 58 | 2 | வரம்பிலக் | ... | வரம்பிலாக் |
| 68 | 2 | துயளுது | ... | துவளுறு |
| 76 | 3 | தமைதன் | ... | தடமதன் |
| 79 | 4 | பட்டீதன்றே | ... | பட்டதன்றே |
| 80 | 1 | விவன்னென் | ... | வென்னென் |
| 82 | 1 | தடநீராடீ | ... | தடநீராடி |
| 100 | 2 | யின்னகிரி | ... | யின்னகரி |
| 101 | 1 | முறையறிங்கே | ... | முறையறிந்து |
| 101 | 4 | ஞனதநன் | ... | ஞயினனத் |
| 102 | 1 | மிழுக்ககிலாத் | ... | மிழுக்கிலாத் |
| 103 | 3 | பிரத | ... | மிரத |
| 107 | 3 | வவனகரத் | ... | வவன்கரத் |
| 108 | 3 | லணேந்தனன் | ... | ணேந்தனன் |
| 108 | 4 | முனிவர் | ... | முனிவர |
| 108 | 4 | சினத்து | ... | சினந்து |
| 109 | 2 | குழலே | ... | குடிலே |

| பாடல். | அடி. | பிழை. | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 113 | 2 | துருவமால்அதற் | ... | துருவமால்அவற் |
| 115 | 1 | சிதைந்தனல் | ... | சினந்தனன் |
| 123 | 2 | யளியனை | ... | றளியனை |
| 124 | 4 | மீந்ததனுல் | ... | மீததனுல் |
| 126 | 3 | யேனத்தின | ... | யேனத்தின் |
| 132 | 3 | முகவனறு | ... | முகனறு |
| 132 | 4 | தத்தம் | ... | தத்தம |
| 135 | 1 | தேவல்செய | ... | தேவல்செய் |
| 149 | 3 | கனம் | ... | கமை |
| 149 | 4 | கமையமுட னுவங்தெழுந்து | ... | சமையமுடனுவங் தெழுந்து |
| 153 | 1 | தருமம் | ... | கரும |
| 153 | 1 | வரனுறைதா | ... | லரனுறைதா |
| 154 | 4 | அடைந்தனமென்ற | ... | அடைந்தேமென்ற |
| 158 | 3 | மகதவர் | ... | மாதவர் |
| 164 | 1 | றனன்கரத்தால் | ... | றனட்கரத்தால் |
| 172 | 2 | முடித்தியென்ருன் | ... | முடித்தியென |
| 172 | 4 | பராசரனருன் | ... | பராசரப்பேர் |
| | | றலமதனையது | ... | தந்தைதலமது |
| 174 | 3 | டாற்றினன் | ... | லாற்றினன் |
| 175 | 4 | றங்ககன்ருன் | ... | றங்கன்ருன் |
| 180 | 2 | சுபத்தை | ... | சுபத்தையெனு |
| 180 | 4 | றேர்ந்தவரை | ... | றேற்றவரை |
| 183 | 2 | தொழுதுவனப் | ... | தொழுதுவணப் |
| 194 | 2 | னினைத்தோரைப் | ... | னினைத்தோரைப் |
| 205 | 1 | அத்தருரை | ... | அத்தருறை |
| 208 | 2 | காத | ... | கால |
| 262 | 4 | தன்பர | ... | தன்பர் |
| 267 | 4 | பாலதோ | ... | பாலரோ |
| 293 | 3 | பஞ்சாத்தடா | ... | பஞ்சாத்தரத் |
| 294 | 4 | மெத்து | ... | எத்து |
| 295 | 3 | அலந்த | ... | நலந்த |
| 305 | 3 | சுரார்கட்டில் | ... | சுரரகட்டில் |
| 312 | 2 | மன்னனனேன் | ... | மன்னனுனேன் |
| 330 | 3 | கண்களினும் | ... | காண்டலினும் |
| 340 | 2 | கன்றோர் | ... | கனன்றோர் |
| 345 | 1 | பொறுப்பா | ... | போருறுப்பா |

| பாடல். | அடி. | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|---|
| 346 | 2 | தானவர | ... | தானவர் |
| 349 | 4 | லமைவதுவும் | ... | லடைவதுவும் |
| 351 | 4 | நீமுலின் | ... | நீமுன் |
| 370 | 4 | பிரான்கைத் | ... | பிரானகைத் |
| 375 | 2 | ஞுஞ்சுதமைக்குநீ | ... | ஞுஞ்சுதன் நமக்குநீ |
| 424 | 3 | பெரிதாகப் | ... | பேரிதாகப் |
| 432 | 2 | காருகம் | ... | காருகப் |
| 442 | 3 | பொருந்திடத் | ... | பெருந்திடத் |
| 444 | 3 | னலகில | ... | னலகில் |
| 482 | 2 | யடலான் | ... | யடலான |
| 490 | 1 | குளீசாதீ | ... | குளீசரீறு |
| 495 | 4 | மாலிதறுற் | ... | மேரதறுற் |
| 503 | 1 | மெனுதல | ... | மெனுந்தல |
| 503 | 3 | ரனவனை | ... | னவனை |
| 508 | 3 | னனவன் | ... | னன்னவன் |
| 518 | 3 | நின்றதத | ... | நின்றவத |
| 521 | 1 | திரண்டுகதை | ... | திரண்டு சுதை |
| 524 | 2 | சேசலீசஞ்சே | ... | சேலீசஞ்சே |
| 526 | 3 | நீராம | ... | நீராடி |
| 538 | 2 | காலத் | ... | மாவ |
| 538 | 3 | மூன்றும் | ... | நான்கும் |
| 555 | 2 | மாக்காதை | ... | மிக்காதை |
| 573 | 2 | தனியநன் | ... | தனிநன் |
| 597 | 3 | மலையாய | ... | மலையையாய் |
| 607 | 3 | உலகத்தில் ஆராதனை பரிவால் | | உகத்தில் அரன்தனைப் பராவி |
| 609 | 2 | வுளையெண்ணுப் | ... | வுளையே |
| 617 | 4 | வரடிக் | ... | வரனடிக் |
| 621 | 3 | யெற்றென | ... | பெற்கென |
| 622 | 3 | யணிபவனர் | ... | யணிபவர் |
| 623 | 1 | ஈய | ... | ஆய |
| 633 | 3 | தாமொன் | ... | தானமொன் |
| 637 | 1 | கரளத் | ... | கராளத் |
| 638 | 4 | தானே | ... | தான் |
| 640 | 1 | காண்டலுமவன்முனம் | | காண்டலும் வர்முனப் |
| 720 | 4 | விமலன் | ... | விமலம் |
| 738 | 1 | மேலோன் | ... | மேயோன் |

D

| பாடல். | அடி. | பிழை. | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 742 | 3 | டேயாண் | ... | டோர்யாண் |
| 756 | 3 | செய்தான் | ... | செய்வான் |
| 767 | 4 | மண்டவமா | ... | மண்டலமா |
| 772 | 2 | ளாரித | ... | ளார்தம் |
| 773 | 4 | ளிணைபரவி | ... | ளிணைபரவி |
| 775 | 1 | ராசன் | ... | ராசன |
| 781 | 4 | ன்னெறி | ... | னன்றி |
| 794 | 4 | சேர்ரவி | ... | சேரவி |
| 798 | 1 | பராபர | ... | பராம்பர |
| 798 | 4 | மார்நலம் | ... | மார்தல் |
| 815 | 4 | பூவினனன் | ... | பூவினனம் |
| 820 | 3 | தவமா | ... | தவமி |
| 829 | 1 | சூளறவால் | ... | சூளுறவால் |
| 833 | 4 | டனேடுங் | ... | டன்னேடுங் |
| 846 | 2 | நீசன் | ... | தேசன் |
| 847 | 4 | பேதையினீ | ... | பேதையினி |
| 851 | 2 | னுருகுதிருக் | ... | னுரகதிருக் |
| 885 | 3 | கடனே | ... | மகடனே |
| 902 | 1 | னீயென்கையெக் | ... | னீயனகையக் |
| 909 | 1 | ரேமுண் | ... | ரேழுண் |
| 911 | 4 | மற்தித | ... | மற்றிது |
| 919 | 2 | ணிமுங்தெம் | ... | ணிழிங்தெம் |
| 931 | 2 | யயிலபற்று | ... | யயில்பற்று |
| 1009 | 3 | யுத்தி | ... | யுததி |
| 1084 | 1 | தினிமை | ... | இனிமை |
| 1120 | 1 | கடந்தவணி | ... | கடந்தவணீ |
| 1172 | 2 | தருக்குலாப் | ... | தருகுலாப் |
| 1217 | 3 | புனேந்திரு | ... | புனேந்ததிரு |
| 1226 | 4 | நிறையமிடை | ... | நிரயமிடை |
| 1245 | 2 | வனேயவெதுவா | ... | வனேயவேதுவா |
| 1250 | 4 | றுவந்நு | ... | றுவந்து |
| 1255 | 1 | புராதனக் | ... | புராதனத் |
| 1257 | 1 | தருமமென்றனள் | ... | தருமமென்றனன் |

